உ

சிவமயம்

தஞ்சை ஸ்ரீ சரசுவதிமால் நூல் நிலைய வெளியீடு

அதிவீர ராம பாண்டியர் இயற்றிய

# கூர்ம புராண மூலம்

பூருவகாண்டம்

இஃது

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதித்துப் பதித்தவர்

பண்டித வித்துவான் திரு. இராம. கோவிந்தசாமி பிள்ளை,

சரசுவதிமால் நூல்நிலையத் தமிழாராய்ச்சியாளர்

பதிப்பித்தவர்

ஷை நூல்நிலையக் கௌரவ காரியதரிசி

கனம் உயர்திரு S. கோபாலையரவர்கள் B.A. B.L.,

பதிப்பகம்

வெற்றிவேல் அச்சகம் தஞ்சாவூர்.

விலை. கலிகோ ரூ. 12

1961.

உ

# கூர்ம புராணம் பூருவகாண்டம்.

---

## உள்ளுறை





உ
சிவமயம்

கூர்ம புராணம்

# முகவுரை.

## காப்பு

வெண்ணிலாக் கற்றை கான்று விளங்குமோர் பிறைக்கோ டின்றி
யெண்ணிலோர் பாகங் கூ.ந்தற் பிடியென விருந்த வாற்ருற்
பெண்ணெரு பாகம் வைத்த பிஞ்ஞக னுருவு காட்டும்
அண்ணலங் களிநல் யானை யடிமலர் சென்னி வைப்பாம்.

## நடராசப்பெருமான்

சீர்பூத்த குழவிமதி யமுதிறைப்பக் கங்கையெழுந் திவலை தூற்ற
வார்பூத்த பொம்மன்முலைக் கௌரியிரு கண்களிப்ப வானோர் போற்ற
வேர்பூத்த மணிமன்றத் தானந்த நடம்புரியு மெண்டோண் முக்கட்
கார்பூத்த மணிமிடற்ரேன் கமலமலர்ச் சேவடியெங் கருத்துள் வைப்பாம்

## பேறிவு படைத்த செந்தமிழ்ப் பெருமக்களே!

கடல்புடை சூழும் இந்நிலவுகின்கண், நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுள், மக்கட் பிறப்பே தக்க சிறப்புடைத்தெனல், அனைத்துநாட்டினரும் ஒப்புக்கொண்ட வுறுதிப்பாடாகும். இம்மக்கட் பிறப்பினர் கடவுள் உண்டு இல்லை, உண்டில்லை யென்று கொள்ளுங்கொள்கை வகையான் மூவகைப் படுவர்.

இவருள் கடவுள் உண்டென்ற கொள்கையராய ஆத்திகர்தமக்கே மறை, அங்கம். ஆகமம், புராணம், இதிகா

சம், காவியம், இலக்கணம் இலக்கியமாகியநூல்கள் பயன் படுவனவாம். இந்நூல்கள் இயம்புவன அறனும் பொருளும் இன்பமும் விடும் ஆகிய நான்குமேயாம்.

இவ்வுறுதிப் பொருளை யெய்துதற்குரிய நெறிகள் இரண் டேயாகும். ஒன்று இல்லறநெறி, மற்றொன்று துறவறநெறி இவற்றின் பிரிவு பிரமசரியம், கிரகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்னவாம்.

''நரர்பயில் தேயந் தன்னில் நான்மறை பயிலா நாட்டில்
விரவுத லொழிந்து தோன்றல் மிக்கபுண் ணியந்தா னுகும்
தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
பரசம யங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணெ ணுதே''

என்பது சிவஞான சித்தியார்

நல்லோர்கள் பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சித்த பண் டைநற்றவத்தால் மேலே கண்டசெய்யுளின்படி, வேதாகம முழக்கமுறும் வியனதிபாயும் பயனுமுடைய நல்லநாட்டில் வந்து பிறக்கப்பெறுவர். பஞ்சலக்கண முடைய புராண காவியமானது மானிடவர்க்கத்தினருக்கு மிக வின்றியமையா தாகும். வடமொழியில் வியாசரார் செய்யப்பெற்ற புராணம் பதினெட்டனுள் சைவபுராணம் பத்தாகும். அப்பத்தனுள் ஒன்றும் இக்கூர்மபுராணம் என்பது புராணவரலாற்றிற் குறிப் பிடப்பட்டுள்ளது. எல்லாச்சமயத்தினுஞ்சிறந்த சமயம் சைவ சமயமாகும். "சைவத்தின் மேற்சமயம் வேறிலை'' என்பது ஆன்றோர் வாக்காகும். இச் சைவசமயத்தின் பொருட்டே வியாசமுனிவர் பத்துப் புராணகாவியங்கள் செய்திருப்பதே சிறந்த சான்றாகும். பத்துப்புராணங்களில் இலிங்கபுராணத் தினையும் கூர்மபுராணத்தினையும் தமிழில் மொழிபெயர்த்தி யாத்தவர். கவிராயரும், புவிராயரும், ஆகிய சிவபூசா துரந் தரர், அதிவீரராம பாண்டியராவர். இதனாலன்றோ இப் புராணநெறிகளை ஆன்மீக வுணர்ச்சியுறு மக்களனைவரும் மேற்கொண்டொழுக லாயினர்.

உலகில் பெரும்புகழ் உறுவதற்கு எழுவகைச் செயல்களுள

அவையாவன:—

"நேடிஞ் ரியாவ ரேகொ லெழுவகை யானுஞ் சீர்த்தி
நீடிஞ் ரவரே யென்பர் நீணிலத் துயர்ந்த மாந்தர்"

என்பது வில்லிபாரதம். அவ்வெழுவகைச் செயல்களாவன. குளமுண்டாக்கல், நிதிநிரட்டல், அக்கிரகாரம்அமைத்தல், தேவாலயம் செய்வித்தல், நந்தனவன முண்டாக்கல், பிரபந்த நிர்மாணம், அன்னசாலை தோற்றுவித்தல், என்பவைகளாம். இவற்றினை வடநூலார் சப்தசந்தானம் என்பர். பிரபந்த நிர்மாணம்—நூல் செய்தல். சீர்த்தி—பெரும்புகழ். இம்மிருபுகழுக்குரியார் அதிவீரராம பாண்டியராவர். இதனையொப்ப நூல்களைத் தொகுத்தவர்கள் (திரட்டி வைத்தவர்கள்) பெரும் புகழுக்குரியராயினர்.

நம்நாட்டில் தலை சிறந்த நூல் நிலையங்களில் நம்சரபோசிமன்னர் பெருமான் உலகின் பொருட்டு வைத்தருளிய சரசுவதிமால் நூல்நிலையமு மொன்றுமன்றே. எண்ணிறந்த சுவடிகள் இந்நூல் நிலையத்தில் வைத்துப் பாதுகாக்கப் படுகின்றன. இந்நூல்நிலையத்திற்கு இந்திய வரசியலாரும், சென்னைமாநில அரசியலாரும் பெரும்பொருள் அருள்கொடு உதவிபுரிந்துவரல் உலகத்தாரால் பெரிதும் பாராட்டற்குரித்தாகும். அவ்வகையில் தற்போது கூர்மபுராண முதலிய நூல்கள் அச்சிற் போந்துலவற்கு ஏதுவாயின. இவ்வறச் செயலினைப்பொதுநோக்கோடமையாது சிறப்புநோக்கோடு புரிந்து வரும் பெருந்தகையாளர் கனம் கௌரவ காரியதரிசி பெருந்திரு S. கோபாலையர் B.A., B.L., அவர்கள் ஆவர்.

"பொது நோக்கா னோக்காது வரிசையா னோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்" எனுந்

திருக்குறட்பாவின் செம்பொருளினைச் சிந்தையிற் கொண்டவர் எனின் மிகையாகாது. எம்மொழிப்புலவரும் செம்மையாக வாழல் வேண்டும் எனுந் திருவுள்ளப்பாங்கினர். "சென்னைமாநிலத் தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சிமன்றத்தின் செயலாளரும், செந்தமிழ் ஆங்கிலம் முதலிய பன்மொழியிலும் வல்லுநரும், நூல்நிலையங்களைப் புரத்தலில் கண்ணுங் கருத்துமுடையவரும் ஆகிய உயர்திரு. V. **கண்ணையன்** B. A., அவர்கள் பழந்தமிழ்நூல்களும் அழகுற வச்சிடல் வேண்டுமெனும் நன்மனமுடையவர். இவர்களுடைய தூண்டலினால் இந்நூல் வெளிவரற் கேதுவாயிற்று. இவ்விருவர் தமக்கும், அடியேனுடைய நன்றியும் வணக்கமு முரித்தாகுக. இதனை யுரியகாலத்தச்சிட்டுதவிய சைவசீலர் உயர்திரு. **பக்கிரிசாமி பிள்ளை** யவர்கள் வெற்றி வேலச்சகத்தார் ஆவர். இவர்கட்கு என்நன்றியுரித்தாகுக. "எப்பொருட்கு முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளவோ" என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு இந்நூல் விரைவில் அச்சிடல் வேண்டுமெனும் ஆணையால் சிலவழுக்களும் செறிந்து விட்டன. அதனையடுத்த பதிப்பில் செப்பமுறக் காண்பாராக.

இங்ஙனம்,

பண்டித வித்துவான்,

**இராம. கோவிந்தசாமி பிள்ளை**

தமிழாராய்ச்சியாளர்

சரசுவதிமால் நூல்நிலையம்

தஞ்சாவூர்
பிலவ
சித்திரை
1—5—61

உ

# முகவுரை.

**கூர்மபுராணம்:** இப்புராணமானது, வியாசமுனிவரால் செய்யப்பட்ட பதினெட்டுப் புராணங்களில் ஒன்றாகும். இதனைத்தமிழில் மொழிபெயர்த்தவர் பாண்டியநாட்டை யாண்ட மன்னருளொருவராகிய அதிவீரராமபாண்டியர் ஆவர். இஃது சைவபுராணங்கள் பத்தினுள் ஒன்றாய், பூருவ காண்டம் உத்தரகாண்டம் என்னும் இரண்டு பெரும்பிரிவு களையுடையது. இப்போது வெளிவருவது பூருவகாண்ட மாத்திரம்தான். இப்பூருவகாண்டத்தில் 2729. செய்யுள்கள் உள்ளன. இந்நூல் மூலத்துடன் செய்யுள் முதற் குறிப் பகராதியும் புராணவரலாற்றுக் குறிப்பும் சேர்க்கப் பெற்றுள்ளன.

ஐந்து இலட்சணங்களுடன் கூடிய (மன்வந்தரம், சருக்கம் பிரதிசருக்கம், வமிசம், வமிசாநுசரிதம்) இப்புராணகாவியத் தில் பலவகையாகச் சந்தச்செய்யுட்களும் பலவகையான அலங் கார நயங்களும், தருமார்த்த காமமோட்சமாகிய சதுர்வித புருடார்த்தங்களும், பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத் தம் சந்நியாசமாகிய நால்வகை ஆச்சிரம பேதங்களும், நால் வகை யுக தருமங்களும், சூரிய சந்திர வமிசாவளியும், பலவர சர்களின் பாரம்பரியங்களும் சிவபரத்துவமும் ஒருசேர அமையப்பெற்று விளங்குகின்றன.

**இந்நூலினது:** சுமார் 88 ஆண்டுகளுக்கு முன்னர்ப் பல எழுத்துச் சொற்பிழைகளுடன் கூடிய ஒரு பதிப்பு வெளி

வந்துள்ளது. இந்தப்பதிப்பும் இப்போது கிடைத்தற்கு அரிது இந்நூலிள்ள சில அத்தியாயங்களை யெடுத்து பி, ஏ. பட்டப் பரீட்சைக்கும் (64) ஆண்டுகளுக்கு முன்னர் அரசாங்கத்தார் பாடபுத்தகமாகவும் வைத்துள்ளனர். இங்கிலேயிலுள்ள இப்புராண மூலப்பிரதிகள் (ஓலைச்சுவடிகள்) எங்கள் சரசுவதிமால் நூல்நிலையத்தில் பூர்த்தியாகவுள்ளவை மூன்றேயாகும். 'இவற்றினைப்பிரதிசெய்து, நன்கு பரிசோதித்துப்பல பாடபேதங்களும்; செய்யுள் முதற்குறிப்பகராதியும் சேர்த்துப் பூருவகாண்டமாத்திரம் அச்சிட்டு வெளிவருகின்றது அடுத்து உத்தரகாண்டமும் விரைவில் வெளிவர வருகின்றது இதனை நன்கு ஆராய்ச்சிசெய்து பதிப்பவர் எங்கள் சரசுவதிமால் நூல்நிலையத்தில் தமிழாசிரியராக இருந்த பண்டித வித்துவான் **திரு.இராம, கோவிந்தசாமிபிள்ளையவர்கள்** ஆவர். இவர்களுடைய தொண்டு சைவத்திற்கும் தமிழ் நாட்டிற்கும் பெரிதும் பயன்படும் என்பது உறுதி. இந்நூலைப் போலவே ஏனையநூல்களும் பதிப்பதற்குப் பேருபகாரம் புரிந்துவரும் மத்திய அரசாங்கத்திற்கும் சென்னை மாநில அரசாங்கத்திற்கும் எங்கள் நன்றி யுரித்தாகுக.

இங்ஙனம்,

**சே. கோபாலன்,**
கௌரவ காரியதரிசி

சரசுவதிமால் நூல்நிலையம்,
தஞ்சாவூர். 1—6—61

# பதிப்புரை I

## கூர்ம புராணம்

இந்நூலானது சைவபுராணங்கள் பத்தினுளொன்று. இதனை வடமொழியிற் செய்தவர் வியாசராவார். தமிழிற் செய்யுளாகப் பாடியவர். பாண்டியர் பரம்பரையில் வந்த கொற்கையாளி யென்னுந் திருப்பெயர் பூண்ட அதிவீரராம பாண்டியர் ஆவார். இஃது எங்கள் சரஸ்வதிமால் நூல்நிலையத்தின்கண், தொகுத்துவைக்கப்பட்ட ஏட்டுப்பிரதிகளில் ஒன்று. இவ்வேட்டுச் சுவடிகள், நிறைவுற்றுள்ளனவாக வுள்ளன மூன்று. அவற்றுள் மிகச்செப்பமானதும் திருத்தமுற்றதுமான ஏட்டுப்பிரதி எண் 266 உடையது.

இந்நூலானது இற்றைக்கு எண்பத்துநான்காண்டுகளுக்கு முன்னர் (84) சென்னைத் தண்டையார்பேட்டை இலட்சுமீ விலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டுள்ளது. எங்கள் சரஸ்வதிமால் ஏட்டுப்பிரதிகட்கும் இப்பிரதிக்கும் பாடாந்தரங்கள் பல உண்டு. (1336) எழுபத்தைந்தாண்டுகட்கு முன் எப் ஏ வகுப்பிற்குச் சென்னைப் பல்கலைக்கழகத்தாரால், இராவணன் வதையத்தியாய முதலிய 241 செய்யுட்கள் பாடமாகவும் வைக்கப்பட்டுள. இதன் சிறப்பு நன்குணர்ந்த யாழ்ப்பாணத்து நல்லூர் அருட்டிரு ஆறுமுக நாவலர் பரம்பரையில் வந்த, உயர்திரு நா. கதிரைவேற் பிள்ளையவர்களால் காப்புமுதல் அந்தகாசுரன் சாருப மடைந்த வத்தியாயம் 56ம் செய்யுள் முடிய உரைவகுக்கப்பட்டுள்ளது.

இவ்வுரை கிடைத்தற் கரிது. இவ்வுரைநூல் அப்படியே அச்சிடப்படுமானால் சைவ வுலகுக்கும் தமிழ்நாட்டிற்கும் பெரிதும் பயன்படுமென்பது ஒருதலை. அவ்வுரையினின்று

தான், திருக்கல்யாண அத்தியாயத்திற் கூறப்பட்ட தேவியா யிர நாமமாகிய சகத்திரநாமாவலி யெடுத்தச்சிடப்பட் டுள்ளது. இந்தப்பேருதவி புரிந்தவர், திருக்குடந்தை சிவ குருநாதன் செந்தமிழ்நூல் நிலையத் தலைவர். மதிபிற்குரிய திரு. **சாமிநாதச் செட்டியார்** அவர்கள் ஆ வ ர். அடியேனிடம் உள்ளதொரு இவ்வுரைப்பிரதி. ஒரு பெரியாரிடங் கொடுக்கப் பெற்று மீளாவகையிலிப்போது, உதவவில்லை, ஏட்டிலும், அச்சுப்பிரதியிலும் உண்மையான பாடங்கள் காண்டற்கு, மிகத்தொல்லையா யிற்று. வடமொழியிலுள்ள கூர்ம புராணத் தை வைத்துக்கொண்டும் சில பாடாந்தரங்கள் கண்டுபிடிக்கப் பட்டன. இதற்குபகாரமாக விருந்தவர் உயர்திரு **உ. வே. தேவநாதா சாரியார்** வடமொழியாசிரியர் (நூல்நிலைய வாய் வாளர்) ஆவர்.

இந்நூல்போல(வடமொழிக்கூர்மபுராணமும்) இங்ஙனம் ஆய்ந்தச்சிடப்படல் வேண்டியது இன்றியமையாததாகும். அடியேனை அடிக்கடி ஊக்கி யுற்சாகப் படுத்தி யாங்ஙனம் அச்சிடுமாறு செய்தருளியுள்ளவர் ஸ்ரீமாந் கனம் கௌரவ காரியதரிசி **S. கோபாலையர்** B.A., B.L., அவர்கள் ஆவர்கள். அவர்களுடைய் பெருந்தகைமை பெரிதும் போற்றற்பா தாகும். இவர்கள் காலத்திற்றான் வடமொழியிலும் தென் மொழியிலும் பல நூல்கள் வெளிப் போந்துள்ளன. பிரதி யொப்பு நோக்கன் முதலிய நல்லுதவி புரிந்தவர் நூல்நிலையத் தமிழ்ப் பிரதி செய்துவரும் திரு. **ப. இராசரத்தினம்** ஆவர். ஏடுபார்த்துப் பிரதிவரையும்வன்மை இ வ ர் க் கி ய ல் பா யமைந்துளது பாராட்டற்பாலது.

---

உ

# புராண வரலாறு II

## கூர்ம புராணம்

எப்போதகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போதகத்தின் கழல்.

கூர்மாவதாரரமாகிய திருமால், சிவபெருமானுடைய பரத்துவத்தை, தேவர்க்கிறைவனாகிய இந்திரனுக்கும், நாரத முனிவர்க்கும், இந்திரத்துய்மன் என்னுமரசனுக்கும் போதித்ததாகும். புராணம் பழைய வரலாறு - முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய ஆண்டவனுக்குப் புராணன் என்னுந்திருநாமமுண்டு.

வேதகாம உபநிடத சித்தாந்த சாரங்களை யெல்லா முள்ளடக்கி, உலகத்தின் றோற்றமொடுக்கம், மனுவந்தரம், முனிவராற்றல், அரசபாரம்பரியம், அவர்கள் வரலாறு என்னும் ஐந்தும் வாய்ந்ததே புராணம் என்பதற்குப் பொருளாகும் என்பர் வடமொழிகாரர்.

வடமொழிக்கடற்கண் வியாசராற் செய்யப்பெற்ற பதினெண் புராணங்களில் கூர்மபுராணமென்பது மொன்றாகும். சைவபுராணங்கள் பத்தினுளொன்றாகிய விதனைகொற்கையம் பதியாகிய நன்னரை யிராசதானியாகவுடைய அதிவீரராம பாண்டியராகிய மகாகவியானவர் தண்டமிழ்த் தென்மொழியார்க்கு நன்கறிவுறுக்கப் பொருட்டொடர் நிலைச்செய்யுளென்னும் பெருங்காப்பியமாக மொழிபெயர்த்தியாத்தனர். பிறவிப் பெருந்துயர் மூன்றும் அவை ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம் ஆதியாத்மிகம் என்பனவாம். இவையிற்றான் வருந்துன்பங்களை நீக்கி யின்புறுத்துவானொருவனே. அவனே

சிவனென்று நாமந் தனக்கேயுடைய செம்மேனியெம்மான். அவன்றன் பெருமை கூறும் புராணங்கள் பத்தாம். ஏனைய கடவுளர் புராணங்க ளெட்டாம்.

**பதினெண் புராணங்கள்**

பிரமநற் பதுமம் வைணவஞ் சைவம்
பேருல கேத்துபா கவதம்
அருடரு நார தியமார்க் கண்டம்
ஆக்கினே யம்பவி டியமே
கருதரும் பொருள்சேர் பிரமகை வர்த்தம்
இலிங்கம்வ ராகமெய்க் காந்தம்
மருவுவா மனஞ்சொற் கூர்மநீண் மற்சங்
காருடஞ் சிறந்தவா யவியம்

என்னும் இச்செய்யுளானறிக.

1. பிரமம், 2. பதுமம், 3. வைணவம், 4. சைவம், 5. பாகவதம், 6. நாரதியம், 7. மார்க்கண்டேயம், 8. ஆக்கினேயம், 9. புவிடியம், 10. பிரமகைவர்த்தம், 11. இலிங்கம், 12. வராகம், *13. கந்தபுராணம் 14. வாமனம், 15. கூர்மம், 16. மற்சம், 17. காருடம், 18. வாயவியம். ஆகியவைகளே புராணங்கள், இவற்றிற்கு, உபபுராணங்கள் பதினெட்டாம்

நவையில்சனற் குமாரம்வளர் நாரசிங்கம்
புகழ்நந்தி துருவா சஞ்சொற்
சிவதரும மியனுர தியங்காபி
லந்திகழ்மா னவஞ்சீர் வாய்ந்த
வவுசனம்வா சிட்டலைங்கம் வாருணங்கா
ளிகமுலகிற் கருள்சாம் பேசஞ்
சவுமியநற் சவுரமுயர் பராசரமா
ரீசம்பார்க் கவமாஞ் சாற்றின்; என்பனவாம்.

உபபுராணம் பதினெட்டாவன

(1) சனற்குமாரம், 2)நாரசிங்கம், (3) நந்திகேச்சரம் (4) துருவாசம், (5) சிவதருமம், (6) நாரதீயம், (7)காபிலம், (8) மானவம், (9) அவுசனம், (10) வாசிட்டலிங்கம், (11) வாருணம், (12) காளிகம், (13) சாம்பேசம், (14)சௌமியம் (15) சவுரம், (16) பராசரம், (17) மாரீசம், (18) பார்க்கவ புராணம். என்பனவாகும்

**முதற்புராணம் பதினெட்டின் விவரம் வருமாறு:-**

(1) **முதலாவது பிரமபுராணம்:-** பிராமியம் என்று சொல்லவும் படும். பதினாயிரங் கிரந்தங்களையுடையது. பிரமதேவரால் மரிசி முனிவருக்கு உபதேசிக்கப்பட்டது. உலகசிருட்டி, மநுவந்தரம், கிருட்டின மூர்த்திவரைக்கு மிருந்த சூரிய சந்திரகுல அரசர் மரபு, சூரிய சி வ ா ல ய ம், சகநாதராலயம், திருநந்தனவனம், சகநாதம், என்னுந் தலமான்மியம் முதலிய பிராமியகற்ப விருத்தாந்தங்களைக்கூறுகிற்கும், மற்சபுராணம், "அருந்தவத்தின் மரீசிதனக்கயனுரைத்த பிராமியத்தின் அளவைகூறிற்—கிரந்தமயு தத்தளவை" என்றதனுனுமறிக.

(2) **பதும புராணம்:—** பாத்மம் எனவும் பெயர். ஐம்பத்தையாயிரங் கிரந்தமுடையது சிருட்டிகாண்டம், பூமிகாண்டம், சுவர்க்ககாண்டம், பாதலகாண்டம், உத்தரகாண்டம், என்னும் ஐந்துகண்டங்களாற் புனையப்பட்டுளது. பிரமதேவர் சிருட்டிநிமித்தம், ஓர் பதுமத்திலே தோற்றிய சரித்திரங்கள், தீர்த்த ஆலயங்களின் விசேடங்கள், அண்டவளவு, இலக்குமி, நராயணமந்திரங்கள், திலீபராசனுக்கும், வசிட்ட முனிவருக்கும் நடந்த சம்வாதங்கள், முதலிய பதுமகற்ப விருத்தாந்தங்களைப் பகருவதாம். "கேரிரண்டாயுறுபாத்மமைம்பத்தையாயிரமாம் பாத்மகற்பத்துயர்ச்சி கூறும், என்றதனுனும் அறிக,

3. **வைணவ புராணம்:—** விட்டுணுபுராணம், விஷ்டு புராணம் எனவும் பெயர் ஆருயிரங் கிரந்தங்களையுடையது ஆறம்சங்களாற் புனையப்பட்டுள்ளது. அண்டநிலைமை, வேத சாகைகளின்பிரிவு, தருமாதருமம், ஆசிரம முதலியவற்றேடு விஷ்ணு மூர்த்தியின் பிரபாவங்கள் முதலாய சுவேதவராக கற்ப விருத்தாந்தங்களைக் கூறுவதாம். இஃது நாராயண முனிவராற் பிரம தேவருக்கும், அவரால் தக்கர் முதலிய முனிவர்களுக்கும், அவர்களால் புருகுச்ச ராசனுக்கும், அவனுல் சாரசுவத முனிவருக்கும், உபதேசிக்கப்பட்டது. "மூன்றெனவே வைணவப்பேர் சார்புராணம்—மேனிவரும் வராககற்ப விருத்தாந்தம் பராசரர்முன் விளங்கக் கூறும்—ஊனமில் எண்ணுயிரமாங் கிரந்தம்" என மற்சபுராணத்தில் எண்ணுயிரங் கிரந்த முடையதென்று கூறப்பட்டது.

4. **நான்காவது சைவபுராணம்:—** வாயுபுராணம் எனவும் பெயர் பெறும். இருபத்து நாலாயிரங் கிரந்தமுடையது. வித்தியேசுர சங்கிதை, உருத்திர சங்கிதை, விநாயக சங்கிதை உமா சங்கிதை, மாதிரு சங்கிதை, ஏகாதசருத்திர சங்கிதை, கைலாய சங்கிதை, சதருத்திர சங்கிதை, கோடிருத்திர சங்கிதை, சகத்திரகோடி ருத்திர சங்கிதை, வாயு சங்கிதை, தரும சங்கிதை, எனப் பன்னிரண்டு சங்கிதைகளையுடையது இலக்கங்கிரந்த முடைய தெனவுங்கூறுப. மற்சபுராணத்திற் பன்னிராயிரங் கிரந்தமுடையது என்று பகரப்பட்டது.

இஃது பிரமன், வாயுதேவன் உபமன்னியு முனிவர். என்பவர்களால், நாரதாதிய முனிவர்களுக்கும், கிருட்டின மூர்த்திக்கும் உபதேசிக்கப்பட்டது. சிவலிங்கத்தினின்று யாவு முற்பத்தியாதல், சிவலிங்க வழிபாடு, புண்ணியகாலம், புண்ணியக்ஷேத்திர தீர்த்தங்கள், சரியையாதிபாதங்கள், உருத்திரர்களின் இலக்கணங்கள், விநாயகர், உமை, கந்தக்கடவுள் இவர்களின் மகாத்மியம் விதிவிலக்கு முதலிய சுவேத கற்ப விருத்தாந்தங்களை யுணர்த்துவதாம்.

(5) **ஐந்தாவது பாகவத புராணம்:—** சுகர்பாகவதம் எனவும் பெயர் பெறும். சிலர் தேவிபாகவதமே புராணபாகவதம் என்று கூறுவர். பதினெண்ணாயிரங் கிரந்தமுடையது. பன்னிரு கந்தங்களாலும், இருநூறு அத்தியாயங்களாலும் சுருதிகீதை முதலிய பன்னிரு கீதைகளானும், புனையப்பட்டுளது. ஏழுதினங்களுக்குட் சர்ப்பந் தீண்டப்பெற்று இறக்குமாறு சாபம்பெற்ற விண்டுராதன் என்னும் பரிட்சித்து அரசன், அவ்வாதனையை யொழிக்குமாறு கங்காதீரத்திருந்த சுகமுனிவரையடுத்து வேண்ட அவரால் உபதேசிக்கப்பட்டதாம். விட்டுணுவின் நான்கு அவதாரங்களையும், நான்கு பக்தர்களின் சரிதங்களையும் விரிவாகவும், காயத்திரிமகிமை தியானம், முனிவர்சரித முதலியனவற்றைத் தொகையாகவும் உணர்த்துஞ் சார்ச்சுவத கற்ப விருத்தாந்தங்களைக் கொண்டுளது.

(6) **ஆருவது நாரதீய புராணம்:—** இருபத்தையாயிரங் கிரந்தமுடையது. நாரதமுனிவரால் உபதேசிக்கப்பட்டது. விட்டுணு தோத்திரங்கள், அவரைப் பூசித்தற்குரிய காலவிதிகள், துருவ பிரகலாதசரிதம், உருக்குமாங்கதன் புதல்வியாகிய மோகினியின் வரலாறு, நானுவித தருமங்கள் முதலிய பிரகற்பதிகற்ப விருத்தாந்தங்களை. யுணர்த்துவதாம்.

7. **ஏழாவது மார்க்கண்டேய புராணம் —** முப்பத்திராயிரங் கிரந்தமுடையது, மார்க்கண்டேயர் பொருட்டுரைக்கப்பட்டது பின்னர் வியாசமுனிவரின் சீடராகிய சைமினி முனியை, பிராமண குலத்திற் பிறந்து, பறவையாகும்படி சாபம்பெற்ற சகுனியென்னு மிருபறவைகளும் அடுத்து, முனிவர் பெருமானே! விட்டுணுமூர்த்தி மானுட சரீரம் எடுத்தற்கும், பாண்டவர் ஐவர்க்கும் திரௌபதி பொருந்தியே மனைவியாயமைதற்கும், பலராமர், மதுவுண்டதற்கும், அதன் மயக்கினுற் கொலைசெய்து பிரமகத்தி பிடித்து வருந்தியதற்கும், அது பிராயச்சித்தஞ் செய்தற்கும், கிருட்டிணுர்ச்சுனர் இரு

வருக்கும் அகாலமரணம் எய்தற்குங் காரணம் யாது என்று வினவிய வினக்களுக்கெல்லாம் உத்தரமாகவுரைத்த விவரணங்கள் முதலிய சகுனிகற்ப விருத்தாந்தங்களை யுணர்த்துவதாம். "ஏழெனு மார்க்கண்ட புராணத்தை யோதின், சகுனியேனும் பக்கிகளை யதிகரித்துத் தன்மமுட னதன்மந் தன்னை—வெகுவிதமா விரித்துரைக்கு மொன்பதினயிரங் கிரந்தம்" என்றமற்ச புராணச் செய்யுளின்படி ஒன்பதினயிரங் கிரந்த முடைத்தாதலுங்காண்க

8. **எட்டாவது ஆக்கினேயபுராணம்:—** எண்ணயிரங் கிரந்தமுடையது. அக்கினி பகவான் வசிட்ட முனிவருக்கு உபதேசித்தது. யாகம், அக்கினியின் பெருமை, விஷ்ணு அவதாரங்கள், சிவபெருமானை நோக்கிச்செய்யும் ஞானபூசை பிரபஞ்சலட்சணம், அரசரிறை முதலாய ஈசான கற்ப விருத்தாந்தங்களை யுணர்த்துவதாம்.

(9) **ஒன்பதாவது பவிடிய புராணம்:—** பவிஷியத் என்றும் பெயர். முப்பத்தோராயிரங் கிரந்தமுடையது. பிரமதேவர் மனுவரசனுக்கு உபதேசித்ததாம். சர்வபூதலக்கணம். உலகநீதி ஆதித்திய மான்மியம், அகோரகற்பத்தில் உலகமுளதாமுறை, சிருட்டிபேதம் முதலிய ஆதித்தகற்ப விருத்தாந்தங்களை யுணர்த்துவதாம்.

(10) **பத்தாவது பிரம கைவர்த்த புராணம்:—**பன்னிராயிரங் கிரந்தமுடையது. சாவர்ணி மனுவென்பவர் நாரதமுனிவர்க்குபதேசித்த கிருட்டிண சரிதம், பிரமவராகமான்மியம் ஆதித்தர்களின் வரலாறு, இதரசரித்திரங்கள் முதலிய பராதந்தர கற்பவிருத்தாந்தங்களை யறிவிப்பதாம். மற்சபுராணம் ஐம்பத்துநாலாவது அத்தியாயம்.

"பத்தெனும் புராணமது பகர்பிரம
கைவர்த்தம் பண்பி னேங்கு
மொத்தபரா தந்தரகற் பத்தியல்போ
டிதரகதை யொளிருங் கண்ணன்

வித்தகமாஞ் சரித்தி ரஞ்சிர்ப் பிரமவரா
கக்கதையும் விளங்க முன்னாட்
புத்திபெறு நாரதர்க்குப் பொருவருஞ்சா
வர்ணிமனுப் புகன்ற தாமால்"

"புகலும் வடமொழி பதினெண்ணாயிரமாம்" என்று கூறிய தனால் பதினெண்ணாயிரங் கிரந்த முடைத்தாதலுங் காண்க.

(11) **பதினொன்றாவது இலிங்க புராணம்:—** பதினோராயிரங் கிரந்தமுடையது. சிவபெருமான், சிவலிங்கத்திலின்றுந் தோன்றி யான்மாக்களடையும் அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் புருடோர்த்தங்களை யுரைத்தருளியதையும், சிவலிங்கமகிமை, துருவன், ஆதித்தர் முதலியவர்களின்நிலை, அரச பாரம்பரியம், விரத தியான, நித்தியகர்ம சிரார்த்தவிதிகள், முப்பொருளுண்மை, தானங்களி லிலக்கணமாதிய அக்னிகற்ப விருத்தாந்தங்களை யறிவிப்பதாம்.

(12) **பன்னிரண்டாவது வராக புராணம்:—** இருபத்துநாலாயிரங் கிரந்தமுடையது. வராகவுருவெடுத்த திருமாலினாற் பூமிதேவிக்குபதேசிக்கப் பட்டது. மானவகற்பத்தின் தன்மை நீதிகளும், திருமாலின் வாயில்காவலாளராகிய சயவிசயர் என்னும் இருவருஞ் சாபமேற்று, இரணியகசிபு இரணியாக்கனாய்த் திதிவுயிற்றிற் றோன்றியதும், இரணியாக்கன் வராகமூர்த்தியால் வதைக்கப்பட்டதும், திதிக்கும் விட்டுணுவுக்கும் நிகழ்ந்த யுத்தமும், விட்டுணு வராகரூபத்தைப் படிப்படியே நீக்கிக்கொண்ட தன்மையும் ஆகிய இவை முதலாய சுவேதவராக கற்பவிருத்தாந்தங்களை விளக்குவதாம்.

(13) **பதின்மூன்றாவது கந்த புராணம்:—** ஓரிலக்கங் கிரந்தமுடையது. ஐம்பது கண்டங்களாலும், சனற்குமாரசங்கிதை, சூதசங்கிதை, பிரம சங்கிதை, விட்டுணு சங்கிதை, சங்கர சங்கிதை சூரசங்கிதை என்னும் ஆறு சங்கிதைகளானும் புனையப்பட்டுள்ளது

"புதுமயி லூர்பரன் புராணத் துற்றிடாக்
கதையிலை யன்னது கனித மின்றரோ"

என்றருளியதனானும், எந்நூலினுங் காணப்படாத பொருள்களை யெல்லாம் கந்தபுராணத்திற் காணலாம் என்னுங் கருத்துட்பட இந்தப்பொருள் கந்தத்திலுமில்லை, என உலகர் வழங்கும் பழமொழியாலும் இதன் பெருமை விளங்கும். இது தற்புருடகற்ப விருத்தாந்தங்களை யெல்லாம் உணர்த்தும்.

என்னுபதின் மூன்றுன புராணமதா
மெழிற்காந்த மறைக ளேத்தி
நண்ணியதற் புருடகற்ப வளமைசிவ
தருமம்போன் ஞட்டை நாட்டும்
புண்ணியசண் முகக்கடவுள் புகரறவே
யநுக்கிரகம் புரிந்த தாகும்
பண்ணமரும் வட்மொழியோ ரிலக்கம்..........

என்றதனால் எந்தையாகிய குமாரக்கடவுளாற் றிருவாய் மலர்ந்தருளப் பட்டதெனத் தெரியக்கிடத்தல் தெளிக.

**14. பதினன்காவது வாமன புராணம்:—** பதினாயிரங் கிரந்தமுடையது. வாமனனாகிய திருமாலினு லுபதேசிக்கப் பட்டு, பின்னர்ப் பிரமதேவராற் சொல்லப்பட்டது. தக்கன் யாகம், திருமாலின் வாமனவதாரம், திரிவிக்கிரமாவதாரம், திரிமூர்த்திகளின் மகிமை; அவர்களருளும்பலன், கேதாரேசுவர புரத்துள்ள சிவலிங்கப் பெருமானினதும் வதரிகாச்சிரமத்தினதும், பெருமைகளை விளக்கவந்த காமதகனம், சரோமாகாத்மியம், உமாமகேசுர திருமணம், தானு கோதாவரி. தீர்த்தங்களின் சிறப்பு, முருகக்கடவுள் திருவவதாரம், சுவாரோசிஷ மனுவந்தரத்திருந்த மாவலிச்சக்கரவர்த்தியின் அரசியல் அவன்பேறு முதலிய சைவகற்ப விருத்தாந்தங்களை யுணர்த்துவதாம்.

**15. பதினைந்தாவது கூர்ம புராணம்:—** கௌர்மம் எனவும் பெயர், ஆறுயிரங் கிரந்தங்களை யுடையது. பூருவகாண்டம் உத்தரகாண்டம் என்றும் இருகாண்டங்களாலும் தொண்ணூற்றேழு அத்தியாயங்களாலும் புனையப்பட்டுள்ளது. வேதாந்த சித்தாந்த சாரங்களை யெல்லாம் உள்ளடக்கியது. திருமால் பாற்கடல் கடைந்த காலத்துக் கூர்ம ரூபமெடுத்து மலைதாங்கி யமுதமளித்து அங்கிருந்த நாரத முனிவருக்கும் இந்திரனுக்கும், அவந்திநாட்டரசனாகிய இந்திரத்துய்ம்மனுக்கும் முன்னர் உபதேசித்தபடியே இலக்குமி கற்ப விருத்தாந்தங்களை யெல்லாம் உபதேசித்ததாகும். இவற்றிற் கூறப்படும் பொருள்களை யெல்லாம் பதிகத்திற்கண்டுகொள்க

**மற்ச புராணம்:—**

கோதில்பதி னேந்தாகுங் கூர்மபுராணந்திருமால் கூர்ம மாகி
மேதினிமேவக் புறத்தேந்தி யிலக்குமிகற் பத்தின்விருத்
[தாந்தம் யாவும்
ஓதும் அறம் பொருளின்பம் விடிவைநான் கையுந்தெரிய
[வும்பர்கோன்முன்
ஏதமிலா விந்திரத்துய்ம் மனைவியா சிகரித்தங்கிருடி மார்க்கே,

என்றதனானும் அறிக.

**16. பதினாறாவது மற்ச புராணம்:—**மத்ஸியம் எனவும்படும் பதினாலாயிரங் கிரந்தமுடையது மச்சாவதாரமெடுத்த திருமாலினால் வைவச்சுத மநுவுக்கு உபதேசிக்கப்பட்டது. மச்சாவதாரம், திருமால் மனுவரசனையும் பிறவுயிர்களையும் சலப்பிரளயத்தில் அழியாவண்ணம ஓர்பேழையினுள் வைத்திரட்சித்தமை, திரிபுரசங்காரம் சதுர்வேத தாற்பரியங்கள் நாரசிங்காவதாரம், பார்வதிதேவியார் திருமணம், தாரகாசுரனுக்கும் தேவர்களுக்கும் நடந்த யுத்தம் முதலிய எழுவகைக்கற்ப விருத்தாந்தங்களையும் உணர்த்து மென்க.

**(17) பதினேழாவது காருட புராணம்:—** ஆறுயிரங் கிரந்தமுடையது. விட்டுணுவினாற் கருடனுக் குபதேசிக்கப்பட்டது

உலகசிருட்டி விரதவிவரணம், சோதிடம் புண்ணியக்ஷேத் திரம், அந்தியேட்டி, பிதிர்பூசை, சாமுத்திரிகாலக்கணம், ஔடதம், இரத்தின விலக்கண முதலிய விசுவென்பவன் ஆண்டகாலமாகிய கருடகற்ப விருத்தாந்தங்களையு முணர்த் தும் என்க.

(18) **பதினெட்டாவது வாயவிய புராணம்**— பிராமம், பிர மாண்ட புராணம் என்றும் பெயர். பன்னீராயிரங் கிரந்த முடையது. பிரமதேவராற் சொல்லப்பட்டது. பிரம அண் டங்களின், மகிமை, மேல்வருங் கற்பங்கடோறு நிகழுஞ் சரி தங்கள் வராகவதம். சிவபிரானது பஞ்சகிருத்திய முறைமை சரப வடிவெடுத்து நாரசிங்கத்தின் வலியடக்கினமை, பிரம காலவளவை அவர்களின்றன்மை, பூகோள ககோளவியல் முதலிய பிரமாண்டகற்ப விருத்தாந்தங்களை விளக்குவதாம்.

"பதினெட்டாம் பிரமாண்ட முதுபு ராண
மக்கமலத் தயன்பிரமாண் டத்தினுறு
கதை யொடெதி ரடுக்குங் கற்ப மிக்க
வடமொழி பன்னீராயிரத்தோ டிருநூற்றின்
விளங்கச் சொன்னன்"

என்று மச்ச புராணத்திற் கூறியபடி பன்னீரா யிரத்து இருநூறுதலுங் காண்க. இவைகள், வேதாகமங் களின் சாரங்கள் இன்னவென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றி விளக்குதலால் உபாங்கம்எனவும், உபப்பிருங் கணம் எனவும், யாவராலுங் கொள்ளப்படுவதோடு, முதல் வனால் அருளப்பட்டமைபற்றிச் சுத்தவித்தையெனவும், பழையவரலாறுகளை யுணர்த்துதலாற் புராணம் எனவும் பெறும். புராணம் பதினெட்டிற்கும் கிரந்தத்தொகை நாலி லக்கத்தெண்ணுயிரமாம். இவையெல்லாம், ஆதியிற் சிவ பெருமானல் திருநந்திதேவருக்கும், அவராற் சனற்குமார முனிவருக்கும் உபதேசிக்கப்பட்டு இம்முறையே வழங்கப் பட்டு வருவனவாயின.

நூறுகோடி கிரந்த முடைத்தாய் பிரமாண்ட புராண மென்னும் பெயரோடு அதிபரமாப்தபதியாகிய சதாசிவ நாய னாரால் திருவாய்மலர்ந் தருளப்பட்ட ஓர்புராணமே முன் னுள்ளது. அதனை யுலகர் நன்கறிதல் அரிதென்று கருதிக் கிருதயுகத்திலே, பிரமதேவர் நூற்றுப்பதினொரு சங்கிதை கள் கொண்ட பதினெண் கண்டங்களாகவும், ஒருகோடி கிரந்தமுடையதாகவுஞ் சுருக்கிச் செய்தனர். அதுவும் அறி தல்மிக அருமையாமென்று துவாபரயுகத்திலே வியாசமுனி வர் நாலிலக்கத் தெண்ணாயிரங் கிரந்தங்க ளுள்ளனவாகச் சுருக்கி ஆக்கியானங்களும் உபாக்கியானங்களும், சுவேத வராககற்பம், இலக்குமிகற்பம், பிரமாண்டகற்ப முதலியகற்ப நிண்ணய சரிதங்களும், சிருட்டிமுதலிய பஞ்சலக்கணங்களும், சரியையாதிநாற்பாதங்களும், தருமாதருமங்களும், விளங்கப் பதினெண் புராணங்களாகப் பகுத்துத் தம்மாணாக்கரான, உரோமகருடண முனிவருக்குபதேசித்தனர். அவர் தமது மாணாக்கர்களாகிய சுமதி, அக்கினிவருச்சன், மித்திராயு சாம் சபாயனன், அகிருதவிரணன், சாவர்ணி, என்னும் அறுவருக் கும், மற்றை முனிவர்களுக்கும், உபதேசித்தனர். அவர்களுள் வசிட்டர் சாம்சபாயனர், முதலிய முனிவர்கள் அவற்றின் சாரங்களைத் திரட்டி யொவ்வோருபபுராணங்களைச் செய்தனர் இவ்வாறு, வைணவம், இலிங்கம், சைவம், பராசர முதலிய புராணங்களிற் கூறப்படுதல் காண்க.

நால்வகை யோனிகளுள் ஒருயோனி வாய்ப்பட்டுப் பிறப் பவை யாவை அவையெல்லாம் பசுக்கள், அப்படிப்பிறத்த லில்லாதது யாது அது பதிப்பொருள் என்னும் இது வொன்றே எளிதில் அவ்விரண்டிற்கும் தம்முள்வேற்றுமை யறியும் வண்ணம் நிற்பது. ஆதலால், வேதம் புராணம் இதிகாசம் முதலிய நூல்களிலே மற்றைத்தேவர்களெல்லாம் அப்படிப் பிறந்திறத்தல் சொல்லப்படுதலாலும், சிவபெரு மானும் அஃதுண்டென்பது எங்காயினும் சொல்லபடாமை

யானும், அநாதிமுத்த சித்துருவாகிய முழுமுதற்கடவுள் சிவபெருமானே யென்பது தெள்ளிதிற் றுணியப்படும்.

**சிவஞான சித்தியார்**

"யாதொரு தெய்வங் கொண்டீர்
அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம்
வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும்
பிறக்குமேல் வினையுஞ் செய்யும்
ஆதலா லிவையி லாதான்
அறிந்தருள் செய்வ னன்றே"

**அருணகிரி யந்தாதி**

எல்லாப் பிறப்பும் இறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோநஞ் சோணேசர் — இல்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
டிறந்த கதையுங் கேட்டி லேம்.

2. இப்படித்துணிப்படும் முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய சிவபெருமானை வேதசிவாகம விதிப்படி மெய்யன்போடு வழிபடுவோர் சைவசமயிகள் என்றும், சிவனடியார்கள் என்றும், சொல்லப்படுவார்கள் இச்சைவர்கள் பலசமயத்தாருக்கும், பொதுவகையில் வேண்டப்படும் இலக்கணங்களை முன்னே வழுவாது தழுவிக் கொண்டே பின்பு தங்களுக்குச் சிறப்பு வகையில் வேண்டப் படும் இலக்கணங்களை யுடையவர்களாய் ஒழுகல்வேண்டும்

3. பொதுவிலக்கணங்களாவன, கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை கள்ளுண்ணாமை, பிறர்மனைநயவாமை, வரைவின்மகளிர் நயவாமை, இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தாய்தந்தை முதலியோரை

வழிபடல், முதலிய நன்மைகளாம். இந்நன்மைகளில்லாத கிரியை ஞானங்கள் சிறிதும் பயன்படவாம்.

**கூர்ம புராணம்.**

கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர்
　　கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் துநரை மகிழுநர் நரகிற்
　　கற்பகா லலங்கிடந் தழுந்தி
யெள்ளுறுந் தீய மலப்புழு வாகி
　　மலத்தினை நுகர்ந்தபின் விறந்து
வீள்ளருங் கொடிய ரௌரவ நரகின்
　　மீட்டுமீட் டுழந்துநாள் கழிப்பார்

என்றாம்.

4. சிறப்பிலக் கணங்கள், புறத்திலக்கணம், உடலிலக் கணம், அகத்திலக்கணம் என மூவகைப்படும். அவற்றுள் புறத்திலக்கணம் பத்து, உடலிலக்கணம் பத்து. அகத்திலக் கணம் மூன்று. ஆகவே சிவனடியாரிலக்கணம் இருபத்து மூன்றும்.

5. புறத்திலக்கணம் பத்தாவன. திருநீறு, உருத்திராக் கம் என்னுஞ் சிவசின்னங்களைத் தரித்தல், குருவை வழிபடல் சிவபெருமானைத் தோத்திரஞ்செய்தல், சிவநாமங்களை யுச் சரித்தல், சிவபெருமானைப் பூசை செய்தல், சிவதருமங்களைச் செய்தல், சிவபுராணங்களைக் கேட்டல், சிவாலய தரிசனஞ் செய்தல், சிவனடியாரிடத்தன்றிப் பிறரிடத்து உணவருந் தாமை, சிவனடியார்களுக்குக் கொடுத்த லென்பவைகளாம்.

6 **உடலிலக்கணம் பத்தாவன:-** சிவபெருமானுடைய பெருமையைச் சிந்திக்குந்தோறும் பேசுந்தோறும் கண்டம் விம்முதல், நாக்குத்துடித்தல், உதடுதுடித்தல், சரீரநடுங்குதல் உரோமஞ் சிலிர்த்தல், குறுவியர்வை கொள்ளல், நாக்கு

தழுதழுத்தல், ஆனந்தக் கண்ணீர் சொரிதல், வாய்விட்டழு தல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல் என்பவைகளாம்.

7. **அகத்திலக்கணம் மூன்ருவன:-** பஞ்சாக் கரத்தை மானதமாகச் செபித்தல் மானதபூசை, சிவபெருமானைத் தன்னேடு பிரிவறக் காண்டல் என்பவைகளாம்.

8. இவ்விருபத்து மூன்றிலக்கணங்களுள் ஒன்ருகிய சிவபுராணங் கேட்டல்தான் ஒரிலக்கணமாய் நிற்றலன்றித் தன்னையும் தன்னை யொழிந்த சிறப்பிலக்கணங்களையும், மற்றைப் பொதுவிலக்கணங்களையும், வருவித்தற்குக் கருவி யாயும் நிற்றலுடையது. யாதினுலெனின் விபூதி உருத்தி ராக்க தாரணம் முதலிய புண்ணியங்களையும், அவற்றின் பயனுகிய, இன்பத்தையும், கொலை முதலிய பாவங்களையும் அவற்றின் பயனுகிய துன்பத்தையும் அறிவிப்பது சிவபு ராணமா கலினென்க. ஆதலால், சைவசமயிகள் அனைவரும், சிவபுராணங் கேட்க வேண்டுமென்பது துணிவு.

9. புராணங்கள். 18. பதினெட்டும் மேலே கூறப்பெற் பெற்றுள்ளது. இப்பதினெட்டிற்கும் கிரந்தம் நாலிலக்கத் தெண்ணுயிரமாம்.

10. அவற்றுள், சைவம், பவிடியம், மார்க்கண்டேயம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மற்சம், கூர்மம், பிர மாண்டம், ஆகிய பத்துப் புராணங்களும் சிவபுராணங்களாம்.

11. காருடம், நாரதீயம், வைணவம், பாகவதம், என்னும் நான்கு புராணங்களும் விட்டுணுவுக் குரியனவாம்

12. பிரமம், பதுமம் என்னுமிரண்டும் பிரமபுராணங் கள்.

13. ஆக்கினேயம் அக்கி புராணம்.

14. பிரமகைவர்த்தம் சூரியபுராணமாகும்.

15. சிவபுராணம் பத்தும் சாத்துவிதங்களாம். சத்துவ குணம், வெண்ணிற முடையதும், சுகத்துக்கும், ஞானத் துக்கும், இடமுமாம். யோகியர்தமக்கு ஞானம் உபதேசிக் குஞ் சிவபெருமான், தெளி பளிங்கு வடிவினராய் எங்கு முறங்காது, பிராமணுதிபதியா யிருப்பர்.

16 விட்டுணுபுராண நான்கும் தாமதங்களாம். தமோ குணம் கருநிற முடையதும் உதாசீன ரூபமும், கூடகிருத் திய சமர்த்தமுமாம். துயில், சோம்பு, பிரமாதம், வஞ்சனம், முதலியவைகள் தாமதங்கள், விட்டுணுகரியரும் சேடசயனஞ் செய்வோரும், பத்தரை மோகிப்பவருமா யிருப்பர்.

17. பிரமபுராணம் இரண்டும், இராசசங்களாம். இரசோ குணம், சிவந்த நிறமுடையதும், துக்கத்துக்கிடமும், சஞ்சல ரூபமுமாம். பிரமாச் செந்நிற ரூபமுடையராய்ச் சஞ்சல ரூபியாயிருப்பர்.

18. அக்னிபுராணமும், சூரியபுராணமும், திரிகுணயுத் தமாம். அக்கினியுஞ் சூரியனும் முக்குண வடிவினரா யிருப்பவர்.

19. ஆதலால் இப்பதினெட்டனுள்ளுஞ் சிவபுராணங் கள் பத்துமே உயர்ந்தனவாகும். ஆகையாற் சிவனடியார்கள் சிவபுராணங்களையே விதிப்படி மெய்யன்போடு கேட்கக் கடவர்கள்.

20. சிவபுராணம் படித்துப் பொருள் கூறற்குரிய இடங்களாவன, தேவாலயம், மடாலயம், நதிக்கரை, குளக் கரை, நந்தனவனம், யாகசாலை முதலிய தூய இடங்களாம்.

ஆகவே, இதுகாறுங் கூறியவாற்ருன், புராணங்களி ளிலைமை யின்னவென்றும், இதனை வடமொழியிலி யாத்தவர் வியாசமுனிவரர் என்பதும், தமிழில் மொழிபெயர்த்தவர் (புராணங்களை) பலரென்பதும், அவருள் கவிராயரும் புவிராயரும், சைவ சமயத் தனிராயருமாவர். அதிவீரராம பாண்டியனு ரென்பதும் இந் நூலைப்போன்றதொரு நூலின் றென்பதும், சித்தாந்த நூலுரையாசிரியர் பலரும் இதனை யெடுத்தாண்ட சிறப்புடைத்து என்பதும், சிவோத்கிருஷ்டம் கூறும் சிவபக்திமான் என்பதும், சிவபூசனையுடன் சதா சிவத்தியானத்திலிருப்பவரென்பதும், சிறப்பாக இல்லற துறவற நிலைகளை யெடுத்து வடித்துரைக்கும் வாய்ப்புடையவர் என்பதும் பிறவும் நன்கினிதாய்ந்திடின் புலனுமெனல் உண்மை. கலியுக தருமம் கண்டாய்ந் துரைத்திருக்குங் கவிகள் படித்தின்புறற் பாலன. இனி யடுத்து வர விருக்கு நூல்கள். இவராற் செய்யப்பெற்ற (1) காசிகாண்டம் அரும்பத வுரையுடன்

(2) இலிங்கபுராணம் அரும்பதவுரையுடன் முதலியனவாம்.

களித்துக் கலந்ததோர் காதற்
        கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுது முன்னின்றவிப்
        பத்தரைக் கோதில்செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி
        யமரர்கள் சூழிருப்ப
வளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை
        யாற னடித்தலமே —அப்பர்.

வாழிய தமிழகம், வாழிய சைவம், வாழிய ஆத்திகம்.

---

# கூர்மபுராண நூலாசிரியர் வரலாறு

## அதிவீரராம பாண்டியர்

1. இவருடைய இராசதானி பாண்டி மண்டலத்திலே திருநெல்வேலியின் தென்கரையிலுள்ள கொற்கைமா நகரமாம். குலம் பாண்டிய ராசகுலம் (சந்திரவமிசம்). சமயம் சைவசமயம். காலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூருண்டுகட்குமுன் என்பர். இவர் பண்டைத்தமிழ் இலக்கியங்களில் நற்பயிற்சியுடையவர். இவர் இயற்றிய நூல்கள் நைடதம், கூர்மபுராணம், இலிங்புராணம், காசிகாண்ட முதலிய பேரிலக்கியங்களும், திருக்கருவைக் கலித்துறையந்தாதி, திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி முதலியனவுமாம். வெற்றிவேற்கையாகிய நீதிநூலும் இவர் செய்ததாகும். கொற்கையாளி யெனவே வழங்கப்பெறுவர் (புலவர் சரித்திரகாரர்)

2. அதிவீரராம பாண்டியர், பாண்டியநாட்டு மன்னரில் ஒருவர். சிவபக்திமான் சுவாமிதேவரென்னும் ஆசாரியரிடத்தில் சிவதீட்சை பெற்றுக் காசிகாண்டம் இலிங்கபுராணம் கருவையந்தாதிகள் முதலியன பாடியவர். முன்னர் செய்த நூல் நைடதமாகும். வடமொழித் தென்மொழிக்கலைகளை நிலைகண்டுணர்ந்தவர் என்பது இவர் தம் நூல்களான் அறியக்கிடக்கின்றது. இவர் தமையனுர் வரதுங்க பாண்டியனுவர். இவரே கொக்கோகம் என்னும் நூலைப்பாடியவர் இங்ஙனமாக அபிதான சிந்தாமணி நூலாசிரியர் எழுதியுள்ளனர்.

8. **கூர்மபுராண வாசிரியர் வரலாறு:—** இவர் பெயர் அதிவீரராம பாண்டியர். இவர் பட்டத்திற்கு வருவதற்கு மூன்று வருடங்கட்கு முன்னரேயே, அதாவது கி. பி. 1559-ம் வருடத்திலேயே, மதுரை, நாயக்கர்களின் ஆட்சியிலிருந்தமையின் மதுரையை யாண்டிருந்த பாண்டியருள் ஒருவராகக் கொள்வதற் கிடமில்லை. பிற்காலத்தில், பாண்டிநாட்டிற் கீர்த்தி பெற்றிருந்த பாண்டியருள் இவர் ஒருவராகக் கொள்ளத் தக்கவர். தமிழ்ப்புலமையிற் சிறந்தவர். அன்றியும் சிவபக்திமான், சுவாமிதேவனென்பவ ரிடத்தில் சிவதீட்சை பெற்றவர். இவருக்கு ஜடிலவர்மனான திரிபுவனசக்கரவர்த்தி கோனேரின்மைகொண்டான்பெருமாள், அழகன்பெருமாள் அதிவீரராமனான ஸ்ரீ வல்லபதேவன் என்றும் விருதுப்பெயருமுண்டு. இவர் ஆட்சிசெய்திருந்த காலம் கி. பி. 1562-முதல் 1610 வரையுமாகும். (சிலாசன வெளியீடறிவிப்பது)

ஆதலால் இவருடைய காலம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியும் பதினேழாம் நூற்றாண்டின் துவக்கமுமென்று கொள்ளத்தக்கது. இவரியற்றிய நூல்கள், காசிகாண்டம் திருக்கருவை யந்தாதி முதலியவைகளாம்.

பழியங்குடுமிப் பொலங்கிரி குழைத்துப்
படிந்தபின் பாயிருள் செறிந்து
காழ்பழுத் தொழுகும் எம்மனக் கருங்கல்
குழைத்துநற் கருணைநீ ராட்டி
யாழ்கடற் பிறவித் துன்பமுற் றழுந்தா
தடிமலர்ப் புணையளித் தாண்ட
சூழ்சுடர் ஞானத் திருவுரு வமைந்த
சுவாமிதே வன்பதம் பணிவாம்

**முதனூல் வழியும் ஆக்கியோன்பெயரும்**

கீடலக முழுதும் பொதிந்தபேழ் வயிற்றுக்
கடவுண்மோட் டாமையம் பெருமான்

வடமொழி தொகுத்த தெய்வமாக் கதையை
வடித்தசெங் தமிழினூற் செய்தான்
படுமதஞ் செருக்கிப் பாகுடல் பிளந்து
படர்சிறை மழலேவண் டோச்சும்
அடுசினக் களிற்று மானவேல் வழுதி
யடலதி வீரபூ பதியே

இந்நூலாசிரியரின் விரிவான வரலாற்றினை உத்தர காண்ட முகவுரையிற் காண்க.

---



உ
கணபதி துணை

கூர்ம புராணம்

# பூருவகாண்ட அத்தியாய அட்டவணை.



---



உ

சிவமயம்.

# கூர்ம புராணம்.

## காப்பு.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

வெண்ணிலாக் கற்றை ஞான்று விளங்குமோர்
 பிறைக்கோ டின்றி
யெண்ணிலோர் பாகங் கூந்தற் பிடியென
 விருந்த வாற்றாற்
பெண்ணொரு பாகம் வைத்த பிஞ்ஞக
 னுருவு காட்டும்
அண்ணலங் களிகல் யானை யடிமலர்
 சென்னி வைப்பாம். (1)

## பாயிரம்.

### கடவுள் வணக்கம்

(நடேசர்.)

சீர்பூத்த குழவி மதி யமுதிறைப்பக் கங்கையெழுந்
 திவலை தூற்ற
வார்பூத்த பொம்மன்முலைக் கௌரியிரு கண்களிப்ப
 வானோர் போற்ற
ஏர்பூத்த மணிமன்றத் தானந்த நடம்புரியும்
 எண்டோண் முக்கட்
*கார்பூத்த மணிமிடற்றோன் கமலமலர்ச் சேவடியெங்
 கருத்துள் வைப்பாம். (2)

## உமாதேவியார்

(வேறு)

புலவியி லுடைந்த சங்கம் புரிசடைத்
திங்கட் கீற்றின்
மலைவற விணைக்கு மேல்வை, மழுவலான்
குறித்து நோக்க
முலைமுகங் கோட்டி நோக்கி நாணொடு
முறுவல் பூத்து
கலைநிறை மதியிற் செய்யுங் கவுரிதாள்
சென்னி சேர்ப்பாம். (3)

## விநாயகர்

மற்றையங் கடவுட் போற்றி வரம்பெற
விடையூ றெய்தா(து)
ஒற்றைவெண் கோட்டு வேழ முவப்பமுன்
வழுத்து கின்றோர்
முற்றுமக் களிற்றை யேத்தி முன்னிய
யாவும் வாளா
பெற்றிடா தயலார்ப் போற்றும் பேதைமை
யென்கொல் மாதோ (4)

## முருகக் கடவுள்

(வேறு)

கள்வாய் மடுத்துப் புரையேறிக் கனைத்துக்
குமட்டி யெதிரெடுக்கும்
புள்வார் கடப்ப நறுந்தெரியல் புரளுந் தடந்தோள்
வரைய னைத்தும்
வெள்வே னெடுங்கட் குறத்திமுலை வேழ
முழக்கக் களிகூரும்
தள்ளா மதுகை முருகனிரு சரண
மெமது தலைக்கொள்வாம் (5)

## திருஞானசம்பந்தர்

வெள்ளாங் குருகி னிளம்பிள்ளை விளையாட்
டயர முகையவிழும்
கள்ளார் கமலத் தடம்புடைசூழ் காழிநகரி
னிடைத் தோன்றி
நள்ளார் சமயக் குறும்பெறிந்து கங்கை
பாகன் பதம்போற்றித்
தெள்ளா ரமுதக் கவிதைபொழி சிறுவன்
பாதந் தலைக்கொள்வாம். (6)

## திருநாவுக்கரசர்

புல்லா ராய சமண்புலையர் பொருந்த
விக்கிக் கடற்புகுத்துங்
கல்லே புணையாக் கரையேறிக் கவர்வாய்ப்
புள்ளின் வாய்கிழித்த
கொல்லே றுயர்க்குங் காமாரி குளிர்பொற்
கமலத் தாள்பழிச்சுஞ்
சொல்லே புணையாய்ப் பவக்கடலுங் கடந்தோன்
பாதம் துதித்திடுவாம் (7)

## சுந்தரமூர்த்தியார்

(வேறு)

உரவுநீர்த் திரைக்கடலின் மலரயனோ டுலகனைத்து
முந்தி பூத்த
கரியமால் வெண்கேழ லுருவாகித் தனித்தேடி
யின்னுங் காணா
முருகுலாந் தாமரைத்தாள் சிவப்பூர புரமெரித்த
முறுவ லானைப்
பரவைபாற் றூதேகப் பணித்தநா
வலன்மலர்த்தாள் பணிதல்செய்வாம் (8)

## மாணிக்கவாசகர்

(வேறு)

உரைத்தற் கரிய முதுக்குறைவி னூமை
　　பேச வுரைபுகன்று
நிரைத்தெற் றெதிர்ந்த சாக்கியர்புன் சமயக்
　　குறும்பி னிலையெறிந்து
வரைத்தோள் வழுதி தனைவிடுப்ப வைகை
　　யழைத்து மணிமன்றிற்
பரத்து டமர்ந்த வாதவூர்ப் பரமன்
　　பாதம் வணங்குவாம் (9)

(குருவணக்கம்)

பாழியங் குடுமிப் பொலங்கிரி குழைத்துப்
　　படிந்தபின் பாயிருள் செறிந்து
காழ்பழுத் தொழுகு மெம்மனக் கருங்கல்
　　குழைந்துநற் கருணைநீ ராட்டி
யாழ்கடற் பிறவித் துன்பமுற் றழுந்தா
　　தடிமலர்ப் புணையளித் தாண்ட
சூழ்சீர் ஞானத் திருவுரு வமைந்த சுவாமிதே
　　வன்பதம் பணிவாம். (10)

(முதனூல் வழியும் ஆக்கியோன் பெயரும்)

கடலக முழுதும் பொதிந்தபேழ் வயிற்றுக் கடவுண்மோட்
　　டாமையெம் பெருமான்
வடமொழி தொகுத்த தெய்வமாக் கதையை
　　வடித்தசெந் தமிழினுற் செய்தான்
படுமதஞ் செருக்கிப் பாகுடல் பிளந்து படர்சிறை
　　மழலைவண் டோச்சும்
அடுமினக் களிற்று மானவேல் வழுதி யடலதி
　　வீரபூ பதியே (11)

பாயிர முற்றிற்று.

# அநுக்கிரமணி (பதிகம்)

## (அறுசீரடியாசிரிய விருத்தம்)

சீர்கெழு மாய னோடுஞ் சிறப்புடைக் காதை கேளா
ஏர்குலாய்க் கிடந்த திண்டோ ளிந்திரத் துய்ம னென்றும்
பார்புகழ்ந் தினிதி னேத்தும் பஞ்சவர் குலத்திற் றோன்றும்
வேரியந் தொடையன் மார்பன் விட்டின்ப மடைந்த வாறும்.
(1)

வளிதட வரினும் பாடு மகதியாழ் முனிவ னோடுந்
தளிமதுப் பிலிற்று மென்பூந் தருநிழ லரசன் கேட்ப
அளியுடன் கூர்ம முன்ன மறைந்திடும் வருண நான்கின்
தெளிவுறு மொழுக்க நான்காச் சிரமமுந் தெரித்த வாறும்.
(2)

எள்ளருஞ் சிறப்பு வாய்ந்த வியல்பிர கிருதித் தோற்றந்
தெள்ளிதி னுரைத்த வாறுந் தேன்றுளி மாரி சிந்தும்
வள்ளவாய்க் கமலப் புத்தேட் கினிதினின் வகுத்த காலம்
பள்ளநீ ருலகம் யாவு மறிந்திடப் பகர்ந்த வாறும். (3)

துறுமயிர்க் குறுத்தாட் செங்கட் டுணிகதிர் நிலவு காலும்
பிறைநிக ரெயிற்றுப் பேழ்வாய்ப் பிறங்கொளி வராக கற்பம்
பறிவுற வறைந்த வாறும் பல்வகைத் தோற்றத் தோடுஞ்
செறிதமோ குணச்சி ருட்டிச் சிறப்புட னுரைத்த வாறும். (4)

தண்ணறுந் துளவி னோனுந் தாமரைப் பொகுட்டின் மேய
விண்ணவன் றானும் போற்ற விழைவொடு வரத்தை முன்னம்
கண்ணுத லீந்த வாறுங் காலனைக் காலாற் செற்ற
அண்ணலன் பொழுக வட்ட மூர்த்தியா யமர்ந்த வாறும் (5)

பொற்பிதி ரணிந்து விங்கும் புணர்முலை யமுதத் தீஞ்சொற்
கற்பகக் கொம்பர் போலுங் கவுரியைத் தவங்க ளாற்றி
அற்பொடு மிமைய வேந்தன் அரிதினிற் பயந்த வாறும்
வெற்பிளங் கொடியை யீசன் விழைவொடு வேட்ட வாறும்.
(6)

பிருகுவை முதலா யுள்ள முனிவரர் பிறந்த வாறும்
மருவுமீ ரைந்து மன்னர்க் கொருத்தியவ் வயிற்றிற் ரோன்ற
அரிதுணர் தக்கன் றன்னை யரன்முனிந் துரைத்த வாறும்
வெருவுற வன்னோன் வேள்வி விரன்முன் னழித்த வாறும் (7)

இரணிய விரணி யாக்க லிறந்தபின் னமரி னேற்று
மருமலி துளவத் தண்டார் மாயவன் முதலி னோரைப்
பொருவருஞ் சமத்தில் வென்று புராரிகு லத்திற் பொன்றி
அரனுடை யுருவ மந்த காசுரன் பெற்ற வாறும். (8)

மாவலி யளிப்ப ஞால முழுவது மாய னெய்திப்
பாவடிப் படுத்தி முன்னம் பண்பொடு கவர்ந்த வாறும்
தேவரும் புகழும் வாணன் சிவனுருப் பெற்ற வாறும்
ஓவில்சீர்ப் புலத்தி யன்றன் மரபுகன் குரைத்த வாறும் (9)

இருட்குறும் பெறியும் வெய்யோன் மரபினி திசைத்த வாறும்
திருத்தகு குலத்தி ராமன் சிறப்புட னுதித்த வாறும்
அருத்தியி னன்னோன் கான மடைதலு மணங்கை வவ்வ
வெருக்கொள்வ ளரக்கர் கோனை வேரொடு மறுத்த வாறும் (10)

சேதுவி ஸ்ரீராம னெய்திச் சிவலிங்க மமைத்துத் தூய
தாதவிழ் மலர்க டுவித் தாழ்ந்தருச் சித்த வாறும்
ஏதமி லயோத்தி யெய்தி யெரிமணி மௌலி சூடி
மாதவ ரோடுந் தீயோர் வரன்முறை கேட்ட வாறும். (11)

வண்டுழா யலங்கற் ரோளான் வைகுந்த மடைந்த வாறும்
அண்டர்பாற் கடலை முன்னங் கடைதலு மமுதத் தோடுந்
தெண்டிரை முகட்டிற் ரோன்றுந் திங்கணன் மரபி னுற்ற
ஒண்டிறல் வேந்தர் தூய மரபினை யுரைத்த வாறும். (12)

வெண்மதி மரபிற் கண்ணன் மேதக வுதித்து வெம்போர்
நண்ணியு கஞ்சன் றன்னை நாமறக் கொன்று வீட்டிப்
பண்ணமை யமுதத் தீஞ்சொற் பாவைகப் பின்னை யாதி
எண்ணறு மடவா ரின்ப மினிதினிற் றுய்த்த வாறும். (13)

கண்ணன்வெண் பூதி பூசிக் கண்டிகை மாலை சூட்டிப்
புண்ணியத் திங்கள் வேணி யரனிரு பாதம் போற்றித்
தண்ணறுந் தாமத் திண்டோட் சாம்பனைப் பயந்த வாறும்
நண்ணரு மிலிங்க பூசை நயப்புடன் புரிந்த வாறும். (14)

உலகெலாம் விழுங்குஞ் சோதி யுமிழ்ந்தழற் பிழம்பாய் நின்ற
கலைமதிக் கண்ணிப் புத்தேள் கழலிணை சென்னி தேடி
அலர்செழுங் கமலத் தோனு மாயனு மறிந்தி டாத
மலைவறு காதை கண்ணன் மார்க்கண்டர்க் குரைத்த வாறும். (15)

ஈறுல கத்தி னுள்ள விடர்தணித் திர்ந்தேன் பில்குங்
கானலர் துளவ மாயன் வைகுந்தங் கலந்த வாறும்
ஊனமில் வியாத னெய்தி யுகத்தியல் புரைத்த வாறும்
வேனில்வேட் செற்றோன் காசி விழுச்சிறப் புரைத்த வாறும். (16)

மனுமர புரைத்த வாறும் மண்டலத் தளவை யாவும்
இனிதினி னிசைத்த வாறும் பனிக்குறும் பெறியும் [வெய்யோர்
புனிதமா மியற்கை யாவும் புகரறப் புகன்ற வாறும்
கனையிருட் பிழம்பு சீய்க்குங் கதிர்ச்சிறப் புரைத்த வாறும். (17)

உரைத்திடு முலகீ ரேழின் செய்தியோர்ந் துரைத்த வாறும்
வரைத்தநா வலந்தீ வுற்ற வண்மைக டெரித்த வாறும்
பரித்திடு மேரு வெற்பின் சிறப்பினைப் பகர்ந்த வாறும்
நிரைத்திடு நவகண் டத்தோ ரியற்கைக ணிகழ்த்து மாறும் (18)

மாலைவெள் ளருவிக் குன்றின் வானவர் வதிந்த வாறும்
சால்புறு மேனைத் தீவி னியற்கைகள் சாற்று மாறும்.
பால்பட வெய்து மன்வந் தரவிதி பகர்ந்த வாறும்
சிலநூல் வியாதன் மூன்று முகந்தொறுஞ் சேர்ந்த வாறும் (19)

வ்தரிகாச் சிரமந் தன்னின் மகேசுரன் மேய வாறும்
ததைமலர்த் துளவோன் கேட்பச் சாங்கிய மறைந்த வாறும்
சிதைவில்சம் பிரதா யத்தைத் தெளிவுறப் பகர்ந்த வாறும்
பதமலர் பணிந்துபோற்றப் பத்திமை யுரைத்த வாறும் (20)

விச்சுவ வுருவங் காட்டி விமலன்முன் நின்ற வாறும்
இச்சையிற் சத்தி பண்ணும் இயல்பினை யிசைத்த வாறும்
கச்சர வணிந்த புத்தேள் விபூதியை நவின்ற வாறும்
மெச்சுசீர் பிரவஞ் சத்தின் மிகுதியை யுரைத்த வாறும் (21)

மாயையின் புணர்ப்பை நன்கின் வகுத்தெடுத் துரைத்த
ஆயதத் துவத்தி னுற்ற தரிசன மறைந்த வாறும் [வாறும்
பாயநல் யோகமி யாவும் பாற்பட விசைத்த வாறும்
ஏயநற் கருமந் தன்னை யினிதினிற் புகன்ற வாறும் (22)

ஆசம னத்தின் செய்தி யரில்கெட வுரைத்த வாறும்
தேசுடைப் பிரம சாரி யியற்கையைத் தெரித்த வாறும்
மாசிலில் லறத்தின் செய்தி மாண்புட னுரைத்த வாறும்
பூசுரர் மகிழ்ச்சி பூப்பப் பொதுவிதி யுரைத்த வாறும் (23)

அல்லவை யொழித்த வாறும் நித்திய கரும மாய்ந்து
சொல்லிய வாறுந் தென்னம் புலத்தினோர் தெவிட்டத் துய்ப்ப
நல்லன வூட்டு மாறும் நவையறு சிரார்த்தத் துண்ணப்
புல்லியோர் தம்மை நீக்கி நல்லவர் புகன்ற வாறும் (24)

தென்புலத் தோர்கட் கூட்டு முறைநனி தெரித்த வாறும்
மன்பெருஞ் சூத கத்தோ டியலுமாச் சௌச வுண்மை
நன்கினி துரைத்த வாறு நவையிறீக் கரும மியாவும்
அன்பினில் லறத்தோர் தங்கள் பகுதியு மறைந்த வாறும்.
(25)

எண்ணிரண் டாய தான முதலவா வியம்பு கின்ற
புண்ணிய தான மியாவும் புகரற வுரைத்த வாறும்
நண்ணும்வா னப்பி ரத்தர் செய்தியை நவின்ற வாறும்
எண்ணரு ஞானம் வல்ல வெதியொழுக் கிசைத்த வாறும்.
(26)

துறந்தவர் தண்டச் செய்தி தொகுத்தினி துரைத்த வாறும்
மறங்கெழு பிரம கத்தி தண்டத்தை வகுத்த வாறும்
நிறங்கிளர் கமலப் புத்தே ணெடுந்தலை யுகிரிற் கொய்து
பிறங்குசீர்க் காரி யையம் பெட்பொடு மேற்ற வாறும். (27)

புகலுமா பாத கத்தின் றண்டங்கள் புகன்ற வாறும்
நிகழுமப் பாத கத்தின் றண்டத்தை நிறுத்த வாறும்
இகலுறு புரங்கண் மூன்றும் எந்தைநக் கெரித்த வாறும்
மகிழ்சிவ பூசை செய்யும் மாண்மிய முரைத்த வாறும் (28)

கறைமிடற் றெங்கஃதை நாமங் கருதல னாகி வாளா
வறைதரு புளிஞன் பெற்ற பேற்றினை யறைந்த வாறும்
இறைவனோர் பால னுண்ணப் பாற்கட லீந்த வாறும்
உறுசலந் தரனை வெய்ய நேமியா லொறுத்த வாறும் (29)

கண்மலர் பறித்துச் சாத்திக் கமழ்நறுந் துளபப் புத்தேள்
பெண்ணொரு பாகற் போற்றித் திகிரிமுன் பெற்ற வாறும்
வண்ணவிற் சுவேத விசன் மலரடிக் கன்பு பூண்டு
நண்ணிய மறலி சீர்த்தி நாமற வென்ற வாறும் (30)

உலகினிற் கடவுட் டீர்த்த மியாவையு முரைத்த வாறும்
இலவிதழ் மாயை பொம்ம லிளமுலை வனப்பு நோக்கி
நிலவுநாற் றன்ன பித்தை நெடுந்தவர் மருள வையன்
பலியிரந் தன்னோர் மாதர் நாண்பலி கொண்ட வாறும். (31)

முனிவரர் தெருள வையன் முதுமறை யுரைத்த வாறும்
பனிவரை யணங்காங் கெய்தி யவர்க்கருள் பயந்த வாறும்
வினையறு சிலாதன் மைந்தன் மெய்த்தவ நோக்கி யெந்தை
தனதுபே ருருவு மியார்க்குந் தலைமையு மளித்த வாறும் (32)

நால்வகை யொழுக்கத் துள்ள பகுதியு நவின்ற வாறும்
பால்புரை நீற்று மேனிப் படர்சடைப் பவளக் குன்றை
மாலயன் முதலோ ரேத்துங் கருணைவா ரிதியைப் போற்றுஞ்
சீலமு முலகில் யாருந் தெருளுற வுரைக்க லுற்றேன் (33)

அருக்கிர மணிமுற்றிற்று
காப்பும் பாயிரமு முட்பட திருவிருத்தம் (44)

---

## பூருவ காண்டம்

### முதலாவது
### இந்திரத்துய்ம்மன் முத்திபெற்ற வத்தியாயம்
### அறுசீரடி யாசிரியவிருத்தம்

---

திருவிற் றிருக்கு மணிமார்புந்
திண்டோ ணான்கு முகையவிழ்ந்து
மருவிற் றிருக்குந் துழாய்முடியும்
வயங்குங் கதிர்கா லிம்படையும்
அருளூற் றிருக்குந் தடங்கமலக்
கண்ணு மாகி மோட்டாமை
உருவேற் றிருந்தோற் போற்றியவ
னுரைத்த காதை யுரைசெய்வாம் (1)

சீற்றங் காம மயக்கமற வெறிந்து ஞானப் பொருடேர்ந்து
மாற்ற வரிய புலனைந்து மடக்கு மறைதேர் முனிவோர்கள்
போற்றும் பருவ மீரா றும் புரியு முயர்சத் திரயாக
மாற்று நைம்மி சாரணியத் தருள்கூர் சூத முனியடைந்தான்.
(2)

வந்த முனிவன் றனைப்போற்றி வயங்கு மணியா சனமளித்துப்
புந்தி மகிழ்ந்தாங் கருக்கியமே முதல பூசை புரிந்ததற்பின்
நந்த லில்லா வியாதமுனி புராண நினக்கு நவில்பொழுதிற்
சிந்தை மகிழ்ந்து மயிர்பொடிப்ப வதன்பே ரினக்குச்
சேர்த்தினனால் (3)

கமலப் பொகுட்டு வட்டவணைக் கடவுள் வேள்வி யியற்றுத
[லுஞ்
தமரத் திரைப்பாற் கடற்றுயிலு முகுந்தன் தானே
[நின்னுருவா
யமர்குற் றனனற் புராணமுற்று மறைய வேண்டி
[யாணவமாந்
திமிரக் கடற்குப் புணைநினது மொழியென் றெவருஞ்
செப்புவார். (4)

கேட்டோர் மம்மர்க் கிழங்ககழுங் கூர்ம புராணங்
[கிளத்துகென
மோட்டா மையினல் லுருவெடுத்த முதல்வ னுலக
[முழுதளந்த
தாட்டா மரைத்தா ளிவ்தேத்தி வியாதன் பாதந்
[தலைக்கொண்டு
வேட்டோ ருள்ளங் களிந்துருக வதனை விரித்து விளம்புவான்
(5)

மறுமை யிலதென் றுரைத்திடுவோர்க் குரைப்போர் தவம்
[வாளி னெடுங்கண்ணாள்
இறுமென் மருங்குல் போற்றேயும் இகழாவுண்மை
[யறிவினர்கட் (கு)
அறிய வுரைப்பி னவர்செய்யுந் தவங்கண் மேன்மே லளவின்
பிறைவெண் முத்தங் கிடந்தொளிரு முலைபோ னுளும் [றிப்
[பெருக்குமால் (6)

தோற்ற முலக மீண்டொடுங்கல் துகடீர் மன்வந் தர்முனிவர்
ஆற்ற லரசர் மரபவர்தஞ் சரித மென்னு மோரைந்தும்
சாற்று புராண விலக்கணமென் றறிஞ ருரைப்பர் தவநீன்றிப்
போற்று புராணம் பதினெட்டின் பெயரு முறையிற்
[புகலுதுமால் (7)

வேறு

பிரமநற் பதுமம் வைணவஞ் சைவம்
பேருல கேத்துபா கவதம்
அருமறை தெளித்த பவுடிக நார
தீயமார்க் கண்டமாக் கிநேயங்
கருதரும் பொருள்சேர் பிரமகை வர்த்த
மிலிங்கசுல் வராகமெய்க் காந்தம்
மருவுவா மனஞ்சொற் கூர்மநீண் மச்சங்
காருடஞ் சிறந்தவா யவியம். (8)

வேறு

எனவீ ரொன்பான் புராணமுள பிரமாண்
டப்பே ரியைந்தோங்கும்
பனிதோய் விசும்பு தனிபுரக்கும் புத்தேள்
முதலோர் பயின்றோதும்
தனியோர் புராண முளதிவற்றின் சார்பின்
முனிவர் வகுத்திளிதிற்
புனையும் புராண மீரொன்பா னுள்ள
வவற்றின் பெயர்புகல்வாம் (9)

வேறு

நவையிற்சனற் குமாரம்வளர் நாரசிங்கம் புகழ்காந்தந்
[துருவாசசஞ்சொற்
சிவதருமமியனுரை தியங்கா பிலம்புகழ்மா னவஞ்சீர் வாய்ந்த
*வவுசனம்வா சிட்டலிங்கம் வாருணங்கா ளிகமுலகத்
[தருண்மாகேசஞ்
சவுமியநற் சவுரமுயர் பரா சரமாரீசம்பார்க்
[கவமாஞ் சாற்றின் (10)

வேறு

செஞ்சேர் நாட்டுஞ் சிற்றறுவை முனிவீர் கூர்மந்
[தெளிந்தோர்கள்
எஞ்சா துரைக்கின் மூவைந்தாம் புராண மென்பர் மற்றீது
நஞ்சார் மிடற்றுப் புத்தேளின் சீர்த்தி நவிலும்
[மிதனைநவின்(று)
உஞ்சோர் பலராங் கதனளவை யாறு யிரமென் றுரைப்பரால்
(11)

கரைகொன் றிரங்கு திரைக்கடல்வான் குழிசியாகக்
[கறையனல்வாள்
அரவங் கயிறாய் மதிதறியா வமர ரமுதங் கடைந்தெடுப்ப
வரைமுன் னிடலுந் தாழாது மாயோன் வளர்கூன்
[புறத்தாமை
யுருவிற் றாங்கிக் கடன்மதித்து வானோர்க் கமுத முதவினான்
(12)

---

* வவுசன நற் பிரமாண்டம் பி. பேதம்.

அன்னோன் மாயைப் படாம்புதைப்ப வண்ண லயிரா
[வதப்பாகன்
தன்னோ டமரர் நாரதனே முதல முனிவர் தாமரைக்கண்
முன்னோன் மருங்கி னினிதிருக்கும் முளரித் திருவை
[யுணராமல்
இன்னோ ளியாவ ளெனவுலக மின்றோ ரிதனை யியம்புவான்
(13)

வேறு

சங்கொடு நேமி கிள்ளை தாதவிழ் கமலத் தண்போ(து)
அங்கையோர் நான்கி னேந்தி யாயிரம் பசும்பொற் றோட்டுப்
பங்கய மலரின் வைகும் பைந்தொடி யிவளே பார்க்கின்
அங்கண்மா ஞால மாதி யுலகெலா மடைவி லின்றாள் (14)

பொறிவரிச் சுரும்புண் டாடுந் தாமரைப் பொகுட்டின் மேய
விறைவனே முதல தேவர் ஈங்கிவள் புணர்க்கு மாயைச்
சிறையிடைப் படுந ரல்லாற் றீர்க்குநரில்லை யென்ன
வுறிதட வந்து வெண்ணெ யுண்டசெங் கமலம் விண்டான் (15)

ஈங்கிவள் புணர்க்கு மாயைக் கடல்கடந் தேறி னோர்கள்
யாங்குள ரிசைத்தி யென்ன வின்னகற் காதை முன்னாக்
கிங்கற வென்பாற் கேட்டோன் மறையவர் திலகன் யார்க்கு
நீங்கரு மாயை நீங்கிச் சிவனடி நீழல் சேர்ந்தான். (16)

ஆயநான் மறையோன் முன்னைப் பவத்தினி லாழி சூழ்ந்த
மாயிரு ஞாலங் காக்கும் வழுதியர் குலத்திற் றோன்றல்
பாயொளிப் பருதி வைவே லிந்திரத் துய்ம்மன் பைந்தார்ச்
சேயனு னெனது தொண்டிற் சிமிழ்ப்புறு மனத்த னானன்.

அத்தகை வழுதி யென்பா லடைவினிற் புராணங் கேட்டு
முத்தக முரிஞ்சு கொம்மை முகிழ்முலைக் கிடப்பா னல்கும்
தத்துவங் கடந்த ஞானத் தனிப்பொருள் பதத்திற் சேர்வான்
சித்தமீமா லூற்ற' தென்னத் தெருளுற வணங்கிச் சொன்னான்
(18)

வருபிறப் பதனி லிம்மைப் பெயரொடு மம்மர் நீங்கித்
தெருளின்முற் பவங்க ளங்கை நெல்லியிற் றெளிந்து தோன்ற
விருபிறப் பாள னாகி யென்றுமைப் போந்தி யார்க்குங்
கருதரு ஞான மியாவுந் துகளறக் கற்ற பின்னர் (19)

## வேறு

வைவச்சுத மன்வந்தர மகல்வுற்றுழி மன்னு
வெவ்வக்கட லிடுமாணவ மகலத்துவ ரிலவங்
கொவ்வைக்கனி நிகர்வாயுமை-பங்கிற்றிகழ் குழகன்
தெய்வக்கம லச்சேவடி சென்றெய்துவை யன்றே (20)

அந்நாள்வரு காறுஞ்சுட ரவிர்வெண்மதி மரபிற்
றென்னுமணி முடிமன்னவர் திறைதந்தடி பரவப்
பைந்நாகம் மிசைத்தங்கிய பாரேழும் மளிப்பாய்
என்னுவுரை செய்யத்தொழு தெழின்மாநகர் புக்கான் (21)

உலகம்பொது வறநூன்முறை யோராழி செலுத்தி
யலகில்லன பரிமாமக மன்றயின்வழி யாற்றி
நிலவும்புக ழுலகேழினு டேழுஞ்செல நிறுவிக்
கலையின்கடல் கரைகண்டவன் வாழ்நாள்கரை கண்டான் (22)

தோலாவிறன் முடியோனுயிர் தொலைவுற்றபி னெறிநேர்ப்
பாலாழியு டுத்தோங்கிய படர்தீவினி லெய்தி
மாலோனென வைகுண்டந கர்ப்போக மகிழ்ந்து
மேலோனரு மறைநன்குல மேம்பாடுற வுதித்தான். (23)

அருமாமக முறுநற்பலன் விழையாதிவி தாற்றி
வருநாளிலின் னுருவாமொரு கலைவந்தெதிர் மன்ன
விருதாண்மலர் பணியாமகிழ் வெய்தாவடை யாளந்
திருமாலது நீயாரைகொ லெனமாதுரை செய்வான். (24)

மன்றற்றுள வத்தார்புனை மாயன்றனி மாயை
யென்றற்புத மொடுநீயெனை நினைவாயிறை யடியிற்
சென்றுற்றவர் மருளும்படி செய்யேனுயர் ஞானத்
தொன்றிச்சிவ னருளாலவ னடிநீழலி னுறைவாய். (25)

எனலும்புவி புனல்வளி வெளியாயிவை யெய்தாத்
தனியோர்பொரு டனையானறி வகைசாற்றுதி யென்ன
நினையும்படி யுலகுண்டரு ணெடுமால்சொலு மென்ன
வனையோனுட னடவந்தலர் மயிலன்பின கன்றான். (26)

பூருவத்திடை யிருக்கண்கள் புகுத்திப்புல னைந்தும்
வெருவுற்றிடு விடயங்களி னெய்தாது விலக்கி
யருவத்துறு மான்மாவினை யான்மாவினொ டுக்கி
மருவுற்றிடு துளவோனடி மன்றுற்றிடு பொழுதின். (27)

செந்தாமரை மலர்மாதிரு முலையானை இளைக்கும்
அந்தாரக லத்தோனுயிர் மறையோனெதி ரணுகக்
கொந்தார்மலர் தூவாமொழி குழறுவிழி களியா
வெந்தாயென விருதாண்மலர் தொழவண்ண லிசைப்பான் (28)

(வேறு)

கருதரு தத்துவம் விபூதி காரியமீ
மருவுகா ரணம்பெற வாற்றி மற்றவை
தெருளினோர்ந் துயர்நெறிச் செல்ல வேண்டுநர் ,
அரனடிப் பூசனை யாற்றல் வேண்டுமால் (29)

ஓதிய வருணநல் லொழுக்கம் பூண்டுறு
காதலில் வருசிமிழ்ப் பனைத்துங் கையொரீஇ
மாதர்கூர் சகத்தினை மாயை யென்றுயிர்
ஆதியம் பரஞ்சுட ராகப்பா விப்பாய் (30)

பாவனை தானுமுப் பகுதி யென்னுரு
வோவற வுணர்வதொன் றவ்வி யத்தமேற்
றுவற வுணர்வதொன் றென்று தற்பர
மேவரும் பாவனை யென்பர் மேலையோர் (31)

முடிவினின் மொழிந்தருள் பிரம மாலயற்
கடிமுடி தேடுதற் கரிய தாகுமச்
சுடரினை நறுமலர் தூவிக் கைதொழின்
ஒடிவறு முத்திவீ டதனி லொன்றுவாய். (32)

எனத்தொழு திந்திரத் தும்ம்ம னேத்துருத்
தனிப்பர தத்துவம் விபூதி காரிய
நினைப்பருங் காரணம் பெறவி ருத்திநீ
மனக்குற வுரையென மகிழ்ந்து கூறுவான். (33)

நித்தியா னந்தமாய் நிமல மாயருஞ்
சித்தமா யேகமாம் பிரமந் தேர்பர
தத்துவ மதனயிச் சொரியந் தாவில்சீர்
வித்தக முனிவரர் விபூதி யாகுமால். (34)

காரியஞ் சகமதன் கார ணந்தெளித்
தேருமவ் வியத்தமவ் விறைவன் செய்தொழில்
நேர்பெறப் படைத்தலை யளித்து நீக்குதல்
ஓரில்யா னதற்குயி ராகு மொண்சுடர். (35)

என்பவை யறிறப வினிதி னோர்ந்துயர்
வன்புல னடக்கிய யோக மாட்சியாற்
றென்புலக் கூற்றுயிர் குடித்த சேவடிக்
கன்பூண் டிடுதியென் றறையக் கூறுவான் (36)

தத்தும வருணநல் லொழுக்கஞ் சார்ந்துவெம்
பைத்தலை யரவணி பவள வார்சடை
யத்தனைப் போற்றுகென் றருளிற் கூறினுய்
உத்தம வருணம்யா தொழுக்கம் யாதரோ (37)

மூன்றுபா வனையுடைத் தெனமொ ழிந்ததோர்
ஆன்றமெய்ஞ் ஞானமே தளப்ப ருஞ்சகந்
தோன்றிய வாறெது தோற்ற மெத்துணை
யேன்றநன் மரபின தியல்பியா வையால் (38)

அறையுமன் வந்தரத் தளவை யாதுகொல்
பெறலரும் விரதமா சாரமி யாவைபின்
நிறைபுனற் றீர்த்தமெத் துணைய நீள்சுடர்
எறிகதிர் முதலகோ ணிலைக ளென்கொலாம் (39)

நீணிலப் பரப்பத விள மெத்துணை
காண்வரு தீவமால் வரைத்த டங்கடல்
யாணர்வெண் டிரைநதித் தலங்க ளெத்துணை
மாணுற விளிதிவின் வழங்கென் றேருதினுன் (40)

கோட்டமில் குணத்தினுன் குடந்தம் பட்டெமைக்
கேட்டவை முழுவதுங் கிளத்தி யன்பினுல்
வேட்டிடு வரம்பல வியந்து விண்ணவர்
தாட்டுணை பரவவை குந்தஞ் சார்ந்தனம் (41)

வேறு

ஆங்கவன் றானுந் துயிலுண வருந்த
லரும்பெறற் குமரர்மே லாசை
கோங்கெழில் கவற்றிச் சுணங்குபூத் தலர்ந்த
குவிமுலை மகளிரின் புறுதல்
ஈங்கிவை முதல யாவையு நீத்திட்
டியானென தென்பவை நீக்கி
யோங்குசீ வான்மா வினைப்பர மான்மாத்
தன்னெடும் பிறிதற வொடுக்கி (42)

தன்னுள மதனிற் சகமெலா நோக்கித்
தானதிற் புகுந்திடா தொழுகி
முன்னதின் முன்ன யுரையுணர் விறந்த
முழுமுத லாகியொன் றுகிப்
பின்னமற் றின்றிக் குணங்குறி கடந்த
பிரமபா வனையினி லடையா
வுன்னரு மியோகத் துறங்கிநற் சிவன்
முத்தனு யொழுகிடு நாளில் (43)

பருதியஞ் செல்வன் நான்முகக் கடவுள்
பதியினி லேகெனப் பணிப்ப
மருவிய யோக மாட்சியிற் பனிதோய்
வானிடைப் படர்ந்துசெல் பொழுதின்
விரிகதிர் விமான மெய்தலு மதன்மே
லிவர்ந்துயர் விண்ணவர் முதலோர்
இருபுடை நடப்ப மானசோத் திரமால்
வரைமிசை யினிதுசென் றிறுத்தான். (44)

ஆயிரங் கோடி வெங்கதிர்ச் செல்வ
ரன்னிருட் பிழம்பெடுத் தருந்தும்
பாயொளி மழுங்கப் புதுவெயி லெறிக்கும்
பனிவரை முகட்டினுட் புகுந்து
தாயென வுலக முழுவதும் பூத்த
தனிச்சுட ரதனைமுன் னுதலும்
மேயபே ரொளியா யருவுரு வாகு
மெய்ப்பொரு ளுருவினெய் தியதே. (45)

எய்திய வொளியிற் றோன்றிய வுருவை
யிருகணுங் களிப்புற நோக்கிக்
கையினை முகிழ்ப்ப வுளங்கனிந் துருகக்
களிப்பொடு மெய்ம்மயிர்ப் பொடிப்ப
வையன தடியிற் பணிதலு மெழுகென்
றன்பினிற் றழுவமா மறையோன்
மெய்யினின் றனந்த கோடிசூ ரியரில்
விரிகதிர்ப் பிழம்பெழுந் ததுவே. (46)

எழுந்த நற்சோதி யிரணிய கருப்ப
னுறையுளா யாவரும் யாவுந்
தொழுந்தகு முத்தர் புகும்வழி யாகுஞ்
சுடரவன் மண்டலத் தடைந்து

செழுங்கனற் பிழம்பா முக்கணெம் பெருமான்
றிருவருள் பெற்றுவே றின்றி
யழுங்கலில் சிவமாந் தன்னுருத் தாஞ
யமர்ந்துய ரின்பமுற் றதுவே. (74)

இன்னணங் குழந்தை மதிதவழ் குடுமி
யிறைவனை யேத்துந ரல்லான்
மன்னுதற் கரிதா முத்திவீ டதனின்
மருவுதற் கரிதென வழங்க
அன்னவற் குரைத்த காதையை யெமக்கு
விரித்துரை யெனவரு மறையோன்
பொன்னகர்க் கிறைவன் கேட்டலு முலகம்
பொதிந்தசே வடியினேன் புகல்வான் (48)

என்றருந் தவத்துச் சூதமா முனிவன்
முனிவரர்க் கினிதினி விசைத்தான்
மன்றவிக் காதை கேட்டுளோர் பயின்றோர்
மற்றதி னேரெழுத் துணர்ந்தோர்
ஒன்றியே செல்வத் தமர்ந்துகிண் கிணிக்காற்
சிறுவரை யினிதினி னுயிர்த்துக்
கொன்றைதேன் றுளிக்க மன்றிவின் றுடுங்
கூத்தன தடிநிழ லுறைவார் (49)

இந்திரதுய்ம்மன் முத்திபெற்ற வத்தியாய முற்றிற்று
ஆக திருவிருத்தம் (93)

---



## (இரண்டாவது)

## வருணச்சிரமதன்ம முரைத்த வத்தியாயம்

### (அறுசீரடி யாசிரிய விருத்தம்)

பொன்னகர்க் கிறைவ னாதி யமரரும் புலன்க ளைந்தும்
தன்னுழை யடக்கும் வீணை முனிவனுந் தாழ்ந்து கேட்ப
மின்னகு நேமி சங்கம் வெங்கதை சிலைவா ளேந்தி
மன்னிய கூர்மரூப மான்முக மலர்ந்து சொல்வான் (1)

நித்திய மாகி யொன்றாய் நிமலா யெங்கு மாகித்
தத்துவங் கடந்து நின்ற மகேச்சுரன் றன்னு ளீங்காச்
சித்துரு வாகி யான்முன் றோன்றினேன் சிறந்த வென்பேர்
உய்த்திலி துணரி னாரா யணனென வுரைப்பர் மேலோர் (2)

பாய்திரை சுருட்டுந் தெண்ணீர்ப் பனிக்கடன் முகட்டிற் [செங்கண்
ஆயிரஞ் சூட்ட ராவி னறிதுயி லமர்ந்து பின்னர்க்
காய்கதிர் தோன்று மேல்வை கண்மதர் நீந்தி யாங்கு
மீயுய ருலக மூன்றும் படைத்திட விழைவுற் றேனால் (3)

ஆயிடை யெனது நெஞ்சத் தருளொடு மகிழ்ச்சி பூப்ப
மாயிரு ஞாலம் போர்த்து மல்கிருட் பிழம்பு சீய்க்கும்
பாயொளிப் பரிதி கோடி யெழுந்தெனப் பசுந்தேன் பில்குஞ்
சேயிதழ்க் கமலப் போதிற் செல்வன்முற் றோன்றக் கண்டேன் (4)

அவ்வழிக் குழவித் திங்கள் சுடுசிலை வடிவேற் செங்கேழ்க்
கொவ்வையங் கனிவெண் முத்தங் குலவுமோர் கமலம் பூத்துத்
தெய்வமென் கொம்பி ரண்டு செவ்விள நீருந் தாங்கிப்
பௌவவா ரிதியிற் பொன்னம் பங்கயத் துதித்த தன்றே (5)

மங்கலை யாகி யாவு மயக்குறு பொருளா யென்றுந்
தங்குமா மாயை யாகித் தனிப்பிர கிருதி யாகுஞ்
செங்கய னெடுங்கட் செவ்வாய்த் திருவினைக் கண்டு வேதன்
பொங்கிய வுவகையோடு மெமக்கிவை புகல லுற்றான் (6)

யான்படைப் பவைக ளெல்லாம் மலிதல்கா ரணமா யென்றும்
வான்படு பூத மியாவு மருளுறு பந்த மெய்தத்
தேன்றெளித் தமுதி னோடுங் கலவிய கனிவாய்த் தீஞ்சொற்
கான்படு நறுமென் கூந்தற் கமலையைப் பணித்தி யென்முன் (7)

என்றலுங் கமல வீட்டி லிளங்கொடி வதன நோக்கி
நின்றபல் லுயிர்க ளியாவும் சகத்திலி லீங்கா வாகி
வன்றிறற் குயவ னுளும் வனைகலத் திகிரி போலச்
சென்றியல் கருமத் தாம்பிற் றிரிதரப் புரிதி யன்றே (8)

உத்தம வருணத் தோது மொழுக்கினிற் சார்ந்து நானுஞ்
சித்தமா செறிந்து பொய்யிற் றீர்ந்துநான் மறையுந் தேர்ந்து
மைத்தவழ் மீடற்றுப் புத்தேண் மலரடி போற்றி னோர்பால்
உய்த்திடேல் மாயை யென்ன வந்நெறி யொழுகல் செய்தாள் (9)

ஆங்கதன் பின்ம ரீசி யங்கிராப் பிருகு தக்கன்
ஓங்குமத் திரிவ திட்டன் புலத்தியன் புலக னுற்ற
தீங்கெறி கிருது வென்று மொன்பது நிறத்தி னோரைப்
பாங்கினில் வேதன் யோக மாயையிற் படைத்தல் செய்தான் (10)

வேதியர் முகத்தில் வேந்தர் விறல்கெழு துணைத்தோள் [வெற்பிற்
றீதறு வணிகர் செம்பொற் குறங்கினிற் சதுர்த்தர் செய்ய
பாதபங் கயத்தி னின்முன் பதுமன்முன் படைத்த மூவர்
ஓதிய மகங்க ளியாவு மாற்றுதற் குரிய ராவார் (11)

வேதமோர் நான்கு மாதி யந்தம்வே றிலவாய் முன்னர்
ஓதிய வாக்க தாகும் உரைத்தவிம் முறையிற் சார்ந்த
வேதமி னூல்க ளியாவும் விழுமிய விவற்றிற் றீர்ந்த
தீதுநா லவற்றி னின்றோர் செவ்விய ரல்ல ரன்றே (12)

தோற்றுமி புயிர்களி யாவு மறிவின்றித் தோன்றுந் தத்த
மாற்றுநல் லொழுக்கந் தன்னு லறிவுறு மதற்கு நாளும்
ஏற்றதோர் காலந் தன்னில் விருப்பொடு வெறுப்பாங் [கெய்திப்
போற்றுறு தரும நீக்கித் தீவினை புகுது மன்றே (13)

உரைத்திடு மணிமா வாதி சித்திக ளுருத வாற்ருல்
நிரைத்தநற் பொருள்கள் வாளா புகுந்திடா நெறியிற் றீர்ந்து
வருத்துதா மதத்தி னுய சித்திவந் தெய்து மீதும்
பொருத்து காலங்க டம்மிற் பொன்றிடு மென்ப மாதோ (14)

வேறு

உடுப்பு முகத்த கூர்ங்கொழுவி னுழுதற் செயலா னுணும்
அடுத்து முயன்ற வாணிகத்தா லடைவர் பயன்மற்
[றவர்புரிவான்
தொடுத்த கருமத் தொடர் பனைத்துந் தொகுத்தான் வேத
[சுவாயம்பு
விடுத்தற் கரிய கருமங் ளனைத்து முறையின் விளம்பினுன்
(15)

மனுவான் டுரைத்த கருமத்தின் வழியே பிருகு முதலான
முனிவோர் யாருந் தெளிவுறமுன் மொழிந்தா ரன்னோர்
[மொழிந்தநெறி
இனிதி னோத லோதுவித்தல் இயல்பின் வேட்டல்
[வேட்பித்தல்
புனிதர்க் கீதே ருமேற்றல் மறையோர் புரியுந் தொழிலன்றே
(16)

ஒதல் புரவி மகமுதல வேள்வி யாற்ற லமருடற்றல்
ஈத லரசர் தொழிலி யல்பிற் கொடுத்த லோதன் மகமியற்றல்
நீதி இழவு வாணிகமா னளித்தல் வணிகர் செயலடுதல்
கோதின் றேவல் செயல்பாக வெச்சம் பின்னேர்க்
[கெனக் குறித்தார் (17)

இனைய வாறு தொழிலமைத்தாங் கியலாச் சிரமநிறுவினர்
அனைய யாவை யெனிற்பிரம சரிய மமைந்த வில்வாழ்க்கை
புனைபொற் சடைவள் ளுகிர்குறையா வானப் பிரத்தம்
[புலன்வாட்டி
மனமுற் றடக்கி யெவற்றினையு மறுக்குஞ் சந்நி யாசமன்றே.
(18)

இல்வாழ் வுற்றோர் தருமமழற் கரும மதிதி பூசை யெச்சங்
கொல்லேற் றண்ண லடிபணிதல் கொடுத்தல் வானப்
[பிரத்தர்செயல்
தொல்லா ரணங்கள் பயிற்றலழற் கரும மூல மடகு துய்த்தல்
நல்லோ ரெதிரிற் பகுத்தருந்த னரையே றுயர்த்தோ
னடிபோற்றல் (19)

முற்றுந் துறந்து முதுக்குறைந்தோர் தரும மைய
[மேற்றுண்டல்
பற்றற் றிருந்து தவமாற்றல் மவுனம் பரபா வனைபுரிதல்
மற்றைப் பிரம சரியத்தோர் தருமம் வளர்தீத் தொழில்சந்தி
யற்ற நோக்கிச் செயல்பலியேற் றுண்டல் குரவ னடிபணிதல்
(20)

நீத்த பருவ மோரைந்து நீக்கித் தனது மனைக்கிழத்தி
பூத்து நீரா டியநாடொட் டுரைத்த நாளிற் புனர்கிற்போன்
வாய்த்த வில்வாழ் பவனென்றும் வானப்பிரத்த
[னறத்துறந்தோன்
ஏத்தும் பிரம சாரியனும் பிரம சாரி யென்பரால் (21)

அருப்பு முலையார் பூப்பெய்தி நீராட் டயரு நாண்முதலாய்த்
தெரித்த நாள்க ளீராறிற் றிங்க டோறு மகிழ்சிறப்பக்
கருப்ப மினிதி னுறுமளவுங் கலவா னாகிற் கருவழித்தோன்
உருப்ப நரக மிவற்காகு மென்ன மறைக ளோதுமால் (22)

நெற்றித் தனிக்கண் வானவனை வழுத்த லவுபா சனநெறியின்
முற்றத் தமர்ந்த விருந்தினருக் கருத்தல் வேத
[முறையுணர்தல்
சொற்ற நெறியிற் றென்புலத்தோர் துய்ப்ப வினிதி
[னுணவளித்தல்
கற்றோ ரெவரு மில்வாழ்வோர் கடனென் றுலகிற் கழறுவரால்
(23)

வேற்றோர் புலத்தி னெய்தினுந்தன் மனைவி வியந்தா
[னாலும்
போற்று மவுபா சனமொழிதல் *புதல்வோர் புரியா
[ரில்வாழ்வோன்
மாற்ற வரிய மூவர்க்கும் வருந்துப் புரவு வழங்குதலால்
ஏற்ற மாகு முலகுநெறி †யல்லா வொழுக்க மியல்பாவா (24)

மருவற் கரிதா முயர்வீடு சீர்த்தி மல்லற் பெருஞ்செல்வந்
தருமத் தளவின் வந்தடைந்த வாற்றாற் றருமம் விடஈது
பெருகுந் தருமம் பொருள்காம மிவைகள் பேசிற்
[சாத்துவிதங்
கருதற் கரிய ராசதந்தா மதத்தின் வழியே கலந்திடுமால் (25)

ஆசின் றுயர்ந்தசாத்துவிதத் தமர்ந்தோர் மேலாங் கதியடைவர்
பேச வருரா சதகுணத்திற் பொருந்தி னோர்கள் பெட்பினெடு
தேசி னுறுமத் திமகதியிற் சேர்வர் வளர்தா மதகுணத்தோர்
மாசு பூத்த விழிகதியி னுலக மிகழ மன்னுவார் (26)

(வேறு)

அறந்திறம்பாது நாளு மரும்பொருள் காமந் துய்ப்போர்
சிறந்திவ் வுலகந் தன்னி லளப்பருஞ் செல்வ மெய்தி
மறங்கிளர் வடிவே லுண்கண் வானவர் மகளி ரோடும்
உறங்கிடா தின்பந் துய்க்கு முலகினி லினிது வாழ்வார். (27)

அறம்புரிந் தன்றி யோங்கு துறக்கத்தி னடைத லாகா
சிறந்தநற் பொருள்செய் தல்லாற் றிகழ்தரு மின்பஞ் சேரா
வுறைந்தகா ரணத்தி னன்றிக் காரிய மாகா வோடு
கறங்குபோற் பிறவி ஞானத் தல்லது கடக்க லாகா. (28)

தாமரைப் பொகுட்டின் மேய சதுர்முகக் கிழவ னுதி
தேமலர்த் தருக்க ளீருச் செறியுநல் லுலக மியாவும்
நாமநூற் றருமந் தாங்கி நின்றன நல்லோர் யாருங்
காமுறல் வேண்டு மென்றுங் கலைகளுந் தரும மென்றே (29)

* புலவோர் புரியார் (பி. பே.) † யெல்லா வொழுக்கம் (பி. பே.)

வைதிகத் தருமம் வாய்ந்த பிரவர்த்தி நிவர்த்தி யென்ன
வெய்துமந் நிவர்த்தி ஞானத் தொழுகன்மற் றையதென்
[ஞான்றும்
கைதவத் தெவையு மாற்ற லாங்கது கடிந்து முன்னோச்
செய்தவ ஞானந் தன்னி லிற்பதே செவ்வி தாமால். (30)

பொறைகொடை கருணை தானம் பொய்ம்மொழி யழுக்கா
[றின்மை
யுறையுமுட் கரணங் காத்தல் பயில்புறக் கரண மோம்பல்
குறளைசொல் லாமை நாணு முனிவின்மை யுயிர்கொல் லாமை
பிறர்மனை நயத்த லின்மை நன்மொழி பிறழா வாய்மை. (31)

புண்ணிய நன்னீ ராடல் கடவுளர் பூசை யாற்றல்
உண்ணிறை மகிழ்ச்சி வேத பாரகர்க் கூட்ட ,ரீய
கண்ணய வாமை கள்ளா தொழுகுதல் கடுஞ்சொ லின்மை
யெண்ணிய விவைக ளான்கு குலத்திற்கு மியைந்த வாமால்.
(32)

தம்மொழுக் கியன்ற பார்ப்பார் சார்குவர் பிரம லோகந்
தெம்முனைப் பட்ட வேந்தர் கற்பக நீழல் சேர்வார்
மெய்ம்மைய வணிகர் வாயு புவனத்தின் மேவு வார்கள்
இம்மையிற் றுறந்தோர் சேர்வ ரிரணிய கருப்ப லோகம்
(33)

காழ்த்தவைம் புலனுஞ் செற்றுக் கரணங்க ளடக்கி நாளும்
ஊழ்த்தமென் சருகு மாந்தி யோகிளி லுறங்கு கின்றோர்
சூழ்த்துநான் முகனும் விண்ணோர் தொகுதியுஞ் கருதி
[நான்கும்
வாழ்த்துதற் கரிய முத்தி வீட்டின்ப மருவி வாழ்வார் (34)

என்னலு மகதி வீணை நாரதர் முதலோர் யாரும்
மன்னு மாச்சிரம நான்காய் வகுத்திளி துரைக்கு மேல்வைப்
பின்னுமோர் யோகி தன்மை பேசினை யைந்துண் டாங்கொல்
பன்னுமாச் சிரம மென்னப் பைந்துழாய் முகுந்தன்
சொல்வான். (35)

உரைத்தவாச் சிரம நான்கே யொவ்வொன்றே யிரண்ட
[தாகும்
வரைத்தவை யுரைத்துங் கேண்மி னுவகுரு வாண
[னென்றுந்
திருத்தகு நெறிவ னாத நயிட்டிக னென்றுஞ் செவ்வன்
விரித்தநூற் பிரம சாரி யொழுக்கிரண் டாகுமேவும். (36)

உவகுரு வாண னென்போன் மறைமுழு துணர்ந்த பின்னர்
நவையறு மகளிர் தம்மை வேட்டுளோ னயிட்டி கன்சீர்
தவலருங் கேள்வி முற்றித் தன்னுயி ருலக்குங் காறுந்
துவரிதழ் மடவா ரின்பந் துய்த்திடா தொழுகு வோனே (37)

ஓதுமில் லறத்தி னின்றோ னுயருதா சீனன் மிக்க
சாதக னெனவி ரண்டாந் தன்மைய னவற்றின் முன்னோன்
ஏதமில் கடன்கண் மூன்றுங் கழித்தபி னில்லிற் நீர்ந்தோன்
றீதில்சா தகன்சாங் காறு மில்லொழுக் கதனிற் சேர்வோன்

வேறு

வானப் பிரத்தன் சந்நியாசி
வளர்தா பசியென் றிருவகையாய்த்
தானத் துறும்வா னப்பிரத்தர்
தம்மின் முன்னோன் மனைநீத்துக்
கானத் துறைவோன் மற்றையவன்
கன்னிக் கற்பின் மனைவியொடு
மோனத் திருந்து தீக்கரும
முறையி னுற்று முரவோனே (39)

பரவுஞ் சந்நி யாசியரிற்
பார மேட்டி யோகியென
விருவ குளர்மற் றவரின் முன்னோ
னிகலும் புலன்க ளுள்ளடக்கி
மருவும் யோகத் திருந்துமுத்தி
யடைய முயல்வோன் மற்றையவன்
கருது மெவையுந் தானுகிக்
கைவல் லியத்திற் களிப்போனே (40)

இனைய நான்காச் சிரம மொவ்வொன்
றிரண்டா யியன்ற வாறின்றி
நினையி லஞ்சா மாச்சிரம
நிகழ்த்தாச் சிரமம்படைத் ததற்பின்
கனைவண் டிமிருந் தாமரைமேற்
கடவு ட்க்கன் முதலோரைத்
துணைவி னோக்கி யனைத்துயிரும்
படைத்தி ரென்னச் சொற்றனனால் (41)

புவன மனைத்து மாங்கவரும்
படைத்தார் கமலப் பொகுட்டுறைவோன்
னவையில் சிருட்டி யிவ்வாறு புரியு
நாமற் றவையளிப்போம்
கவர்முத் தலைவேற் படைக்கடவு
ளவற்றைக் கருணை யொடுந்துடைக்குந்
தவவில் லொருமூ வருமொன்றே
யென்ன மறைகள் சாற்றுமால் (42)

திங்கட் குழவி கிடந்துறங்குஞ்
செம்பொற் சடையெம் பெருமாற்குத்
தங்கு பிராமி மயேச்சுரியக்
கரபா வனையாந் தனிமூன்று
துங்க முறுபா வனையுளவா
மவற்றி லெனக்குச் சொல்லுங்கால்
எங்கும் விளங்கு மக்கரபா
வனையொன் றென்றே யியம்புவார். (43)

கமலப் பொகுட்டுப் புத்தேளுங் காயா மேனித் திருமாலும்
இமிழ்தெண் கடலில் விடநுகர்ந்த தேவு மொருவ ரிங்கிவரில்
அமைவுற் றொருவர் தமைப்பூசை யன்பிற் புரியி னொருமூவர்
தன்மமுற் றுணர்ந்து வழுத்துவோர் பெறுபேற தனிற்
சார்குவார் (44)

இனைய மூவர் தமைநாளும் மலர்தூவப் பழிச்சி
[யிறைஞ்சுவோர்
அனைய கடவு ளடையாளந் தரிக்க நுதலி லயனடியார்
வனைக திலக மாலடியார் நீற்றாற் சாந்தாற் சூலம்போற்
புனைக திரிபுண்டர நீற்றாற் புராரி யடியார் வணங்கிடுக (45)

அருளி னோடு மவரவர்தஞ் சின்னம் புனையி னத்தேவைத்
தெருளிற் றரித்த வாருகுந் திரிபுண் டரம்வா னுதற் றீட்டிற்
கருத வரிய முத்தேவுந் தரித்த தாகுங் கலைமதிக்கீற்
றுருவச் சடையோற் றொழுமவரே முத்தியடைவ
[ரெனவுரைத்தான் (46)

வருணாச்சிரம தன்மமுரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் (139)

---

## மூன்றுவது
## ஆச்சிரம முறை யுரைத்த வத்தியாயம்.

ஓதுவரு ணாச்சிரம மியாவையு முரைத்தாய்
தீதற வவற்றின்முறை செப்புகென நல்யாழ்
மாதவன் முதற்கடவுள் வானவ னுரைப்பத்
தாதவிழ் நறுந்துளவ மாலினிது சாற்றும் (1)

பிரமசரி யங்கருணை பெற்றுமனை வாழ்தன்
மருவரிய கானிடை மாதவ மியற்றல்
ஒருவியெவை யுந்தினமு மோவ்வொரு நகர்க்கட்
டிரிதலென வோதுமுறை யேமுறை தெரிக்கின் (2)

ஈங்கிவை பிறந்துவரு மியாவையவை யென்னிற்
கோங்குமுலை மாதரொடு கூடுவதன் முன்னம்
ஓங்கியசந் நியாசியென வுற்றிடலு மாகும்
தீங்கெறிமெய்ஞ் ஞானநெறி சிந்தைநிலை பெற்றால் (3)

இல்லற முயன்றுகடன் மூன்றுமினி நீந்தால்
அல்லற மேவும்யதி யாகியமர் கிற்பார்
முல்லைநகை மாதர்கடி முற்றிய தினத்தின்
ஒல்லையதி யாகியுணர் வுற்றிடலு மாமால் (4)

ஈங்கிதி னுயர்ந்தநிலை யெய்திடுவ தல்லால்
ஆங்கதி னிழிந்தநிலை யெய்திடுத லாகா
மூங்கைமுடவன் செவிடன் முற்றுநிதி யற்றோன்
வீங்கறி வலாரெனினும் மேவுமெதி யாவார் (5)

முதுக்குறைவின் ஞானநெறி முற்றியபி னல்லால்
எதித்திற மடைந்திடி னிழுக்குறு மிவற்றின்
மதித்தொருநல் லாச்சிரம மன்னிவிளி காறும்
விதித்தநெறி நிற்பினுயர் வீடடைவ ரன்றே. (6)

கொடுப்பவர் கொடுத்தபொருள் கொள்பவர்க ளியாரும்
எடுத்துமறை சொல்பிரம மென்றுநனி யிவோர்
அடுத்தவிர தங்களினி தாற்றுபலன் யாவும்
விடுத்தவர்மெய்ஞ் ஞானநெறி வீடடை வரன்றே (7)

போக்குவழி கண்டிடை புகாதுறு முலண்டம்
ஆக்கியிடு கூடதனை யாத்திடுதல் போல
நீக்குகரு மம்பல நினைந்துபுரி வோனை
வீக்கியிடு மக்கருமம் வேதனை யுறுத்தே (8)

ஆதலி னறம்பலன் விழைந்திடுத லின்றி
மேதக வியற்றுநர்கள் விஞ்சையில ரேனும்
சாதல்பிற வித்துயிர் தவிர்ந்துவிட முண்டோன்
பாதநிழ லுற்றினிது வாழ்வர் பலகற்பம் (9)

பலன்விழை வுறுதுகரு மம்பல வியற்றின்
அலகறு பவத்தினுள பாபமறு மற்றால்
நிலவியமனம் புனித மாவது நிகழ்ந்தால்
மலைவிலுயர் ஞானம்வரும் வரிலடைவன் வீடே (10)

பிஞ்சுமதி யஞ்சடை மிலேந்தபெரு மானே
நெஞ்சுற நினைந்து புலனைந்தையு நிறுத்தி
வஞ்சமுறு மாணவ மெறிந்தமதி வல்லோர்
உஞ்சிடுவ ரென்பதனை யாவருணர் கல்லார் (11)

நன்னெறியி னச்சிரம நான்குமுறை செய்தேம்
இன்னெறியி னின்றவர்க ளின்பமடை கிற்பார்
அன்னெறி திறம்பின ரழன்றுதழல் கக்கும்
வெந்நரகில் விழ்வரென விண்டுவுரை செய்தான் (12)

ஆச்சிரமமுறை யுரைத்த வத்தியாயம்
முற்றிற்று (154)

---

## நான்காவது பிரகிருதி தோற்ற வத்தியாயம்

இன்னணம் வருணச் சிரமநல் லொழுக்கம்
யாவையும் வழுவறக் கேட்டுக்
கன்னியம் படலைத் துழாய்துயல் வருதோட்
கருமுகில் வண்ணனை நோக்கிப்
பொன்னவிர் திதலை முலைசுமந் தொல்கும்
புலோமசை நகைவிருந் தயரும்
மன்னவர் திலகன் மகதியாழ் முனிவன்
மகிழ்சிறந் திங்கிவை புகல்வான் (1)

அளப்பரும் புவன மொருங்களிப் பவர்யா
ராங்கவை யாருழை யுதிக்கும்
துளக்கறை யார்மாட் டொடுங்கு மெவ்வாறு
நியமிக்கப் படுபவை தொகுத்து
விளக்குற வுணர்வி னியமனஞ் செய்வா
னெவனிவை விளம்புதி யென்னக்
களக்கனி யனைய திருமறு மார்பன்
கருணைகூர்ந் தாங்கவை புகல்வான் (2)

பொருவிலவ் வியத்த மாயழி வின்றிப்
புனிதமா யனந்தமா யார்க்குந்
தெரிவரிதாகி யெங்கணு முகமாய்ச்
சிறப்புட னெவற்றினு நிறைந்த
கருதரும் பொருளா மகேச்சுரன் றுறுங்
காரண மாய்ச்சத சத்தாய்
பெருகுமவ் வியத்த முயர்பிர கிருதிப்
பிரதான மென்றிவி தியம்பும் (3)

சத்தமுன் கிளக்கும் விடயமோ ரைந்துந்
தாழ்ந்திடும் விடயமோ ரைந்துஞ்
சித்தமிருய கரணமோர் நான்கும்
சிறந்தஞா னேந்திய மைந்தும்
ஒத்திடு கரும விந்திய மைந்து
மின்றியே முழுமுத லாகி
நித்தமா யொன்றுய் அசலமா யொளியாய்
நிருமல மாய்வெறு வெளியாய் (4)

தன்னுழைத் தானே யுறைவதாய்த் தன்னைத்
தான்பணி கொள்வதா யார்க்கும்
முன்னைய தாகிப் பிரமமாய்ச் சிவமாய்
முதலொடு மந்தமில் லதுவாய்
மன்னுமுக் குணமுக் காலமில் லதுவாய்
வாக்கொடு மனந்தொடர் வரிதாய்த்
துன்னுதற் கரிதா யெங்கணு நிறைந்த
சோதியாம் பிரமமென் பதுவும் (5)

புருடனு மாக நான்கும்வை குதலும்
பிரகிரு திக்குமுன் புகன்ற
விரியுமுக் குணமுந் தூக்குபோற் றுலைநா
வெனச்சம மெய்துறு சிறப்பின்
வருபிரா கிருதப் பிரளைய மாகு
மற்றிஃது யர்மகேச் சுரற்கோர்
இரவுநற் சிருட்டி பகலிவை மாற்ற
மலதவற் கிராப்பக லிலையால் (6)

அன்னதோர் கங்குற் புலரியி லுலகுக்
காதியா யநாதியா மகேசன்
கன்னியர் முலைமேற் புனிற்றிளந் தென்றற்
கன்றுதை வருதலுங் காம
மன்னியுள் கலங்கு மாறுபோற் புருடன்
வளர்பிர கிருதியை நோக்கத்
தன்னிலை கலங்கு மதனிடை யுதித்த
துயர்மக தத்துவந் தானே (7)

அனையநன் மகதத் துவத்தினைப் புத்தி
மகான்மதி பிரகஇனை யான்மா
வனைதருங் காதி மேதையிச் சுரனென்
றுரைப்பர்மற் றிதனில் வைகாரி
யினியதை சதம்பூ தாதியாங் காரந்
தோன்றுமற் றிவற்றினக் கருதாப்
புனையபி மானம் புட்கல னுன்மாச்
சிவன்மந் தரமெனப் புகல்வார் (8)

உரைத்தவாங் கார மூன்றினும் விளங்கு
பஞ்சதன் மாத்திரை யோங்கி
நிறைத்திடு பஞ்ச பூதமிந் தியங்க
ளிகழ்த்துமிந் தியத்திறுக் கியைய
வரைத்ததெய் வதங்க டோன்றுமவ்
வியத்தந் தனில்மனந் தோன்றுமம் மனத்தாற்
றிருத்தகு கருத்தா யானென தென்றும்
விகாரத்திற் சேர்குவ னென்றே (9)

சொன்னவாங் கார மூன்றில்வை காரி
துலங்குசாத் துவிதவாங் காரம்
அன்னதில் வருமிந் தியவதிட் டான
தெய்வதந் தைச்சத மதனின்
மன்னுமிந் தியங்கா டோன்றிடு மனமும்
ஞானத்துங் கருமத்தும் வழங்கும்
துன்னுபூ தாதி தன்னில்வான் முதலாம்
பூததன் மாத்திரை தோன்றும். (10)

வேறு

விளம்பரிய பூதாதி யாங்காரம் விகாரமுறிற்
றுளங்கலருஞ் சத்ததன்மாத் திரைதோன்று மாங்கதனில்
களங்கமறு மாகாயந் தோன்றுமதன் குணங்கருதில்
அளந்தரிய வரிதர்குஞ் சத்ததன்மாத் திரையாமால் (11)

பனிவிசும்பு விகாரமுறிற் பரிசதன்மாத் திரையடையும்
அனிலமத னிடைத்தோன்று மதன்குணமு மூருகும்
துனைவில்வளி விகாரமுறி லுருபதன்மாத்திரை தோன்றுங்
கனலதனிற் றோன்றுமதன் குணங்கருதி லுருபமாம் (12)

எய்துமழல் விகாரமுற விரததன்மாத் திரைதோன்றும்
ஐயபுன லிதிற்றோன்று மதன்குணமு மிரதமாம்
பெய்புனலின் விகாரத்தாற் கந்ததன்மாத் திரைபிறக்கும்
வையமதிற் றோன்றுமதன் குணந்தெரிக்கின் மணமாகும் (13)

ஒலியுடைத்தா மாகாய மூறுடைத்தாம் வளியதனைச்
சுலவலாற் றோன்றும்வளி யிருகுணமா மிருகுணத்த
வுலவையுரு வடைந்தவழல் பொதிந்ததனா லொழிவரிதாய்
நிலவுமொரு மூன்றுகுணம் வெய்தாய நெருப்பினுக்கே (14)

மூக்குணமா மழலிரச குணப்புனலை மூடியதால்
மிக்கபுனற் கொருநான்கு குணமேவு நான்குகுணந்
தொக்கபுனல் மணமுடைத்தாய் புவியதனைச் சூழ்தலாற்
புக்ககுண மோரைந்து முரியவாம் புவியினுக்கே (15)

கருதரிய வவ்வியத்தத் தருளானுங் காண்வருசீர்ப்
புருடனுளுற் றிடலானும் பொருவரிய மகத்தாதி
மருவியிடும் விசேடாந்த மேழுமே வான்புனலின்
உருவமுறு குமிழிபோற் பிரமாண்ட மாயுதிக்கும் (16)

வ்டமேரு வுயர்கொப்பூழ்க் கொடியாக மற்றதனை
யடையாகும் வரையனைத்து மவையாக வாழிநீர்ப்
புடைமேவி வருகருப்ப சலமாகப் பொருவின்மறை
நடையாவும் வகுத்தருளி நளினத்தோ றுதித்தனனுல் (17)

முருகவிழுஞ் செழுங்கமலப் பொகுட்டிலுறை முன்னவனே
யுருவுடையோ ரியாவரினு மூந்தியநல் லுருவுடையோன்
புருடவிர ணியகருப்பன் மறைக்கிழவன் புவனத்துக்
கொருமுதல்வன் கஞ்சனென வவனையே யுரைத்திடுவார் (18)

தோற்றியிடு மண்டத்தின் பதின்மடங்கு புனல்சூழு
மேற்றபுனல் பதின்மடங்காங் கெரிசூழு மவ்வெரியைக்
காற்றதனிற் பதின்மடங்கு சூழ்ந்திடுமக் காற்றதனைப்
போற்றரிய தனிவிசும்பு சூழ்போகப் புதைத்திடுமால் (19)

அகல்விசும்பு புதைக்குமுயர் ஆங்கார மாங்கதனைப்
புகலுமக தத்துவமே புதைக்குமக தத்துவத்தைத்
துகளறநல் லவ்வியத்தஞ் சூழ்போது மாங்கதனில்
இகலுடனே விருப்பெறிந்த சிவசித்த ரினிதுறைவார் (20)

எவ்வுயிர்க்கும் வித்தாகு மீசனே மகேச்சுரனுஞ்
செவ்விதரு மவனிரண்டா முருவண்டஞ் செறிந்ததனிற்
றிவ்வியத்தின் முதலுதித்த தேவன்மூன் றுமுருவ
மவ்விறைநான் முகமுறுத லாங்கவனுன் காமுருவம் (21)

இரதத்தின் குணமெய்தி னன்முகனு யுலகினும்
பரவுற்ற சாத்விதுதப் பண்பின்மா லாயளிக்கும்
உரைபெற்ற தமோகுணத்தா லுருத்திரனுய்த்
[துடைத்தருளும்
மருவுற்ற விச்சையினுன் மருவாமல் மகேச்சுரனே (22)

(வேறு)

(அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்)

ஆதியி லுதித்த வாற்று
லந்தியம் பரமன் மிக்க
முதுணர் வுடைமை தன்னுல்
முதுக்குறை வினனெஞ் ஞான்றுஞ்
சாதலும் பிறப்புந் தோயாத்
தன்மையா லயன்மற் றியார்க்கு
மேதகு வீர மாற்றல்
விண்டுவென் றுரைப்பர் மாதோ (23)

நாரத்தில் அமர்ந்த வாற்றுன்
நாரண னிமையோர் தம்மிற்
சீருற்ற மகத்தாம் வாற்றுன்
மகேச்சுரன் சேர்ந்தோர் மாயை
வேர்முற்று மரிந்த வாற்று
னிலவன்விளை யாட்ட தன்றே!
நீர்முற்று மண்ட மீன்று
காத்தவை நீக்கும் பண்பே .. (24)

இன்னணம் பகுதி தோற்றஞ்
சுருக்கிமற் றியம்பல் செய்தே
மன்னிய புத்தி முன்னுய்
மலரயன் வகுத்த யாவும்
நன்னயத் துரைத்து மென்றே
நாகிள வண்டு பாடுங்
கன்னியந் துளப மாலைக்
கார்முகில் வண்ணன் சொல்வான் (25)

(பிரகிருதித் தோற்றமுரைத்த வத்தியாய முற்றிற்று)
ஆகத் திருவிருத்தம் (175)

## ஐந்தாவது

## பிரமாவினுடைய கால வளவை யுரைத்த வத்தியாயம்

தாதளவி மணிவண்டு விளையாடுந் தாமரைமென்
றவிசின் மேலோற்
கோதுறுகா லங்கணிப்பி னளப்பினுள் கழிந்திடி.று
முரைத்த லாகா(து)
ஆதலினு லாங்கதனை மிகர்சுருக்கி யுரைப்பனவர்க்
கறைந்த காலம்
மூதறிவி னேரெவரு மோரிரண்டு பரார்த்தமென
மொழிவ ரன்றே (1)

உரைத்தவிரு பரார்த்தமுமே மலரயனுக் காயுளள
வுரைக்குங் காலம்
விரைக்கமலத் தவன்மானத் தாங்கவையும்-விளம்பியவாண்
டொருநூ றென்ப
வரைத்தபூர மிகுதிதனி னொருபாதி பரார்த்தமென
வகுப்ப ரீண்டு
நிரைத்துவரு காலங்கள் பிறழாம லுரைப்பனென
நிகழ்த்த லுற்றான் (2)

ஈரோன்பான் முறையிமைத்த லொருகாட்டை
காட்டைமுப்பா னியைந்து சேர்தல்
ஓர்கலையக் கலைமுப்பான் ஒன்றியதோர் முகுர்த்தமுயர்
முகூர்த்த முப்பான்
சேர்தல்மா னுடர்க்கொருநா ளன்னுள்மு வைந்துறுதல்
சிறந்த பக்க
மார்வமொடு மிரண்டுபக்க மியைந்ததொரு திங்களென
வறைவர் மாதோ (3)

திங்களோ ராறுகொண்ட தயனமுத்த ராயனமுஞ்
சிறப்பி னோடு
தங்குதக்க ணயனமும் எனவிரண்டா மிவையிரண்டுந்
தழுவ லோர்யாண்(டு)
இங்குரைத்த வுத்தரா யணபகலா மிருவிசும்பி
னுறையுந் தேவர்
கங்குல்தக்க ணயனமா மிவைகூட நாளொன்றாய்க்
கணிப்பர் மாதோ (4)

இன்னநா ளொருமுன்னூற் றறுபதுறல் திவ்வியவாண்
டென்ப ரீது
பன்னீரா யிரம்புணர்தல் சதுரியுக மாதியுகத்
தளவை பார்க்கின்
அன்னநா லாயிரயாண் டடுத்தயுக மொருமூவா
யிரம்யாண் டாகும்
அன்னதுவா பரமிரண்டா யிரம்வருடங் கலியாண்டா
யிரமா மென்றே (5)

ஆதியுகந் தலிற்சந்தி நானூருண்
டுயர்சந்தி யஞ்ச ஞறூ
ரேறுதிரே தாயுகத்துச் சந்திமுன்னூற்
றுயர்சந்தி யஞ்ச முன்னூ
றேதில்துவா பரசந்தி யிருநூறே
றிருநூறு சந்தி யஞ்ச
மாதர்கலி யுகச்சந்தி நூறு சந்தி
யஞ்சநூ றென்பா மாதோ (6)

ஆகவுயர் திவ்வியவாண் டாறிரண்டா
யிரஞ்சதுரி யுகம தாகும்
பாகுபடு சதுரியுக மெழுபானென்
றிறத்தல்மன் வந்தரமாம் பண்பிற்
சேகின்மனுப் பதினல்வ ரிறந்திடுகா
லத்தளவை திருமா லுந்திப்
போகுயர்தா மரைப்பொகுட்டுப் புத்தேளின்
பகலென்னப் புகல்வர் மாதோ (7)

பகலளவெத் துணைக்காலம் அத்துணைய
கங்குலுக்கும் பகர்ந்த காலம்
புகல்பிரமன் பகற்போதைக் கற்பமெனப்
புகல்வரொரு கற்பந் தன்னை
வகைதருகா லளத்தளவே கற்பமெவற்
றினுக்குமொரு மனுவின் காலம்
நிகழ்வதெவ னவ்வளவே பதினுன்கு
மனுவினுக்கு நிகழ்த்துங் காலம் (8)

கற்பமுன்னூற் றறுபதுசெல் காலமறைக்
கடவுளுக்கோர் வருட மாகுஞ்
சொற்றயாண் டொருநூறு கழித்தல்பரம்
பரமற்குத் தொகுத்த வாயுள்
மற்றிவ்வா ருெருநூறு வருடமுநான்
மறையோர்க்குச் சென்ற காலை
யுற்றசரா சரமனைத்தும் பிரகிருதி
யதனிடைப்பூா யொடுங்கு மன்றே (9)

ஆதலினப் பிரளயத்தைப் பிரகிருதிப்
பிரளயமென் றறைவ ரந்தன்
போதுறைபுத் தேண்முதலா மெத்தேவு
மிறந்துமறந் துழல்வர் போற்று
மேதகுகா லத்துருவாய்க் காலவரை
கடந்துவெறு வெளியா யென்றுஞ்
சாதல்பிறப் பில்லாத தனைப்பிரம
மகேச்சுரனென் றுரைப்பர் தக்கோர் (10)

படைத்ததருளு மெனவுரைத்த கடவுடனக்
காயுளினோர் பரார்த்தம் போக
நடப்பதெவ னெனிரண்டாம் பரார்த்தத்தின்
முதற்கற்பம் நவின்ற கற்பத்
தெடுத்தவே மாங்கற்பம் பாற்மகற்ப
மினிதினின் டியலுங் கற்ப
மடுத்துலகைக் கூரெயிற்றிற் கிண்டெடுத்த
வுயர்வெள்ளை வராக கற்பம் (11)

ஈங்கிதனைத் தெருளுறயான் விரித்துரைப்பன்
 கேட்டிரென விலவக் கொவ்வாய்க்
கோங்குமுகைக் கவற்று முலையயிராணி
 வரிநெடுங்கட் குவளைபூத்த
விங்குதடந் தோட்கடவுள் வளிதடவ கரிதடவந்
 திடின்வாளா மிழற்றுபாணித்
தூங்கிசைய திவவியாழ் முனிகேட்ப மணிவண்ணன்
 சொல்லு வுற்றான் (12)

பிரமாவினுடைய காலவளவை யுரைத்தவத்தியாய முற்றிற்று
(ஆகத் திருவிருத்தம் 187)

---

## ஆருவது
## சுவேத வராக கற்ப முரைத்த வத்தியாயம்

மியுயருங் கரைக்குறும்பு படவெறிந்து மூவுலகும்
 விழுங்கி மேல்போய்ப்
பாயசெழுந் திரைக்கரத்தா லுயிரனைத்து
 மெடுத்தருந்தும் பரவை நாப்பண்
ஆயிரங்கை யாயிரங்கா லாயிரகீண்
 முடியினெடு மயன்மா லாகித்
தாயமலர் கண்முகிழ்த்துக் கடவுளா
 யிரம்பருவம் துயின்றா னன்றே (1)

துயின்றபழ மறைக்கிழவன் அவ்விருள்போய்த்
 தொலைந்துபடு புலரிக் காலைப்
பயின்றவுல கொருமூன்றும் படைப்பவென
 வுளத்தெண்ணிப் பார்க்குமெல்லை
யியன்றபுவி பாதலத்தி னிடைபோகி
 யொளித்ததனுக் கிரங்கி வெண்ணெய்
பயின்றமலர்ச் செங்கனிவா யாழியான்
 றனையுளத்தி லமைத்தல் செய்தான் (2)

எண்ணிமல ரயன்பழிச்ச வுறிதடவந்
 தாய்ச்சியரி லிடங்க டோறும்
வெண்ணைகவர்ந் தினித ருந்தி விசித்தவுர
 லொடுந்தவழ்ந்து மருதஞ் சாய்த்த
வண்ணலெறும் வலிக்குறுந்தாட் சுவேதவரா
 கத்துருவ மமைந்து கீழ்போய்
மண் ணுலகு முழுவதுமோர் கூன்பிறைக்கோட்
 டினிதேந்து வந்தா னன்றே (3)

சுறவமெறி கடல்வலைய முழுவதுமோர் நுண்டுகளிற்
 றுலங்கு கோட்டின்
உறைவதனைத் தனிநோக்கிச் சனலோக முதலோகத்
 துறைவோர் யாருங்
கறையடிய புகர்முகத்த கடக்களிற்றி னிடர்தவிர்த்த
 காயா மேனி
மறைமுதலே முதலேயென் றுளங்கனிய விழிபனிப்ப
 வாழ்த்தல் செய்தார் (4)

சோவரணங் கட்டழித்துத் தொல்லிலங்கைக்
 குடுமிகொண்டு நிருதர்ச் செற்றோய்
மாவலிபாற் குறளுருவின் மூவடிமண் டருகென்ன
 வாங்கி நீர்சூழ்
பூவலைய முழுவதுமோர் மலரடிசேர் துண்டுகளிற்
 பொதிந்து *விட்டுங்
காவல்புரிந் துண்டுநசை யடங்காம லோர்கோட்டிற்
 கவர்ந்த தெந்தாய் (5)

வேறு

நாரண னாகி யொன்றாய் நனந்தலை யுலகுக் கெல்லாங்
காரண னாகி யந்தக் காரணங் கடந்து நின்ற
பூரண னாகிப் பூமே லுறைந்திடும் புனித னாகி
யாரண முடிவாய் நின்ற வமலனே போற்றி போற்றி (6)

* மீட்டுங் காவல் புரிந்துண்டு (பி, பே.)

என்றுயர் முனிவ ரேத்த
வின்னருள் பூத்துத் தேன்சோர்
மன்றலந் துளவோ னேந்தும்
புவியைமுன் போல வைத்துப்
பன்றியி னுருவ நீத்தான்
பங்கய னெரிவாய்ப் பெய்த
குன்றெலாம் படைத்து மீட்டும்
படைப்பவை குணித்தா னென்றான் (7)

(ஆறுவது)
சுவேத வராக கற்ப முரைத்த வத்தியாய முற்றிற்று.
(ஆகத் திருவிருத்தம் 194)

---

## ஏழாவது
## பலவகைத் தோற்றமுரைத்த வத்தியாயம்.

---

ஆங்கவை யென்கோ லென்ன வளிமதுக் கலுழி யாறு
தூங்குநாற் கோட்டு வெள்ளைச் சூழிமால் யானைப் பாகன்
திங்களி பிழிந்தா லன்ன திவவியாழ் முனிவன் கேட்ப
வாங்குவில் விழுங்கு திண்டோண் மணிநிற வண்ணன்
சொல்வான். (1)

முன்னைய படைப்பின் வேதன் படைத்திட முயன்ற ளுகித்
துன்னிமுன் புத்தியாதி தமோமய சிருட்டி தோன்றிற்
றன்னதின் வகையோ ரைந்தாந் தமமோக மாமோ கஞ்சிர்
மன்னுதா மிச்சிர மந்தத் தாமிச்சிர மென வகுப்பார். (2)

மற்றவை தமஞ்சூழ் போத வாயிலி கும்பத் திட்ட
நற்பொருள் போலத் தோன்ற தொழிந்தன முன்னர் நாட்டும்
வெற்பெலாஞ் சிறந்த வாற்றல் முக்கிய மென்று வேத
மற்பினிற் புகன்ற தென்ன வறைந்தனர் அறிவின்
மிக்கோர். (3)

ஈங்கிது படைப்பிற் கேது வன்றெனக் குறுக்காய் நோக்க
வீங்குபல் விலங்கு தோன்ற வெறுத்துமே லாக நோக்க
ஓங்கிய விண்ணோர் யாரு முதித்தன ரேது வன்றென்(று)
ஆங்கவன் கீழாய் நோக்க மா நுட ருதித்தா ரன்றே. (4)

சத்துவ குணத்த ராகித் தணப்பி லானந்த மேவிச்
சித்தமா செறிந்து மெய்யிற் றிகழொளி யுடைய தேவர்
மொய்த்ததா மதத்தி னேனை யிராசத குணத்தின் மூழ்கி
மெய்த்தகு மொழியி னோடு மேவுவார் மனுடர் தாமே. (5)

பின்னுமோர் சிருட்டிக் காகப் பிழிநுகர்ந் தறுகால் பாடும்
பொன்னவிர் கமலத் தோட்டுப் புங்கவ னெண்ணு மேல்வை
கன்னவி றிரடோட் செங்கட் கழிபுலால் கமழும் வெண்பற்
றுன்னிய குறுத்தாட் பூதம் பேயொடுந் தோன்றிற்
றன்றே. (6)

வேறு

ஆதி சிருட்டி மகானென்ன
வறைவ ரிரண்டாஞ் சிருட்டிமிகப்
போதுந் தன்மாத் திரையாகும்
பூத சிருட்டி யதிற்றோன்றும்
ஓதி யிடுமூன் றுஞ்சிருட்டி
வைகா ரிகமற் றதனுதிக்கும்
ஏத மறுமிந் தியசிருட்டி
யிவற்றின் றோற்றம் பிராகிருதம். (7)

நான்காந் தோற்றந் தாபரமாம்
நாட்டி லதுமுக் கியமென்ப
வான்சா திகளே முதலவிலங்
கஞ்சாந் தோற்ற மெனவறைவர்
வான்சேர் தேவர் சிருட்டியினை
யாறுஞ் சிருட்டி யெனவகுப்பர்
ஊன்சேர் மனுடர் சிருட்டியினை
யேழாஞ் சிருட்டி யெனவுரைப்பர் (8)

எட்டாஞ் சிருட்டி பிறையெயிற்ற
பூத சிருட்டி யெனவறைவார்
முட்டாட் செழுந்தண் பாசடைய
முருகு விரிக்கும் பசுந்தோட்டு
மட்டார் கமலப் பொகுட்டுறைவோன்
மைந்தர் சிருட்டி யைம்புலனு(ம்)
ஒட்டார் கடந்தோ ரொன்பானுஞ்
சிருட்டி யென்ப ரஃதுரைப்பாம் (9)

சனக ரருள்கூர் சனந்தரர்நற்
சனற்கு மாரர் சனுதரர்சீர்
புனையு மிருது முதலாய
முனிவர் தோன்றப் பூமேலோன்
றனைவி லவரைப் படைத்திரென
வுரைப்ப வுள்ளத் துகமடர்ந்த
முனிவர் விச்சை புரியேமென்,
றீசன் பாத முன்னினரால் (10)

மைந்த ரறிவின் வீக்கத்தால்
ஈசன் பாத மனத்திருத்திச்
சிந்தை தெளிவுற் றேகுதலுந்
தெய்வக் கமலப் பொகுட்டுறைவோன்
அந்தின் மாயை தனின்மயங்க
வலகிற் புவன முண்டுமிழும்
பைந்தா மரைக்கட் டிருநெடுமால்
பரிவின் மாயை தீர்த்தனனால் (11)

மாயை யகல நான்முகத்தோன்
வரம்பில் காலந் தவம்புரிந்து
மேய சிருட்டி யுணர்ந்திலனால்
வெகுளி தோன்றிக் கண்கலுழ

வாய மலரோன் முரிபுருவ
நாப்ப னுலக மனைத்தினையுந்
தாயி வீன்ற மதிக்கண்ணரிச்
சடையோ விளிதி னுதித்தனல் (12)

தோற்றுங் கடவு டனைமலரோன்
சூழ்வந் திறைஞ்சு மெழுநோக்குங்
கூற்றி னுயிருண் டுயர்மூத்தி
கொழிக்கும் பொன்னங் குரைகழற்ருள்
போற்றுங் குனிக்குஞ் செம்மாக்கும்
பொருவின் மறைகள் பாடிநற
வூற்று நறிய மலர்தூவு
முள்ளத் திருத்து முவக்குமால் (13)

இனைய புரியு மலரோனை
யெல்லா வுயிர்க்கு முயிரான
முனைவ னோக்கி யெவ்வரநீ
கேட்டி யருள்வ னெனமொழியக்
கனைவண் டிமிருந் தாமரைமேற்
கடவுள் படைத்தி யெனவிரப்பத்
தனைநே ராகிப் பிறப்பிறப்பென்
றில்லாக் கணங்க டனிபடைத்தான் (14)

மறந்தும் பிறவாக் கணங்கள்பல
படைப்ப தொழிந்து மழுவல்லோன்
இறந்தும் பிறந்துஞ் சகட்டுருளிற்
றிரியுங் கணங்க ளியற்றுகென
வறைந்த வவையாம் படைக்கலநீ
படைக்க வருள்பூத் தனமென்ன
வுறங்கா வென்றி முத்தலைவே
லொருவன் கரந்து போயினனால். (15)

போய பின்னர் மலர்ப்பொகுட்டுப்
புத்தேள் புனரீ யகல்வான
வுலகம் வெற்புந்தி
விரிநீ ருவரி கலைகாட்டை
யாயு முகுர்த்தம் பகஃகங்குல்
பக்கந் திங்க ளயனமுதல்
ஏய வெவைக்கும் பிரமாண
தெய்வ மிவரிதி னியற்றினன். (16)

ஒழுகு கொடிமூக் கிலிற்றக்கன்
கண்ணில் மரீசி யுயர்சென்னி
வழுவில் சிறப்பி னங்கிரா
வுளத்திற் பிருகு மறித்தேயும்
விழியிற் புகழத் திரிசிறந்த
விவசா யத்தி லுயர் தருமன்
பழிதீர்ந் துயர்ந்த சங்கற்பந்
தன்னிற் பரவு சங்கற்பன், (17)

மருவு முதானன் றனிற்சிறந்த
மறைதேர் தெய்வப் புலத்தியனல்
இுருவ முகத்தி லருட்புலகன்
அபானந் தன்னி லுயர்கிருதுப்
பெருகு சமானந் தனில்வசிட்டன்
பிறந்து முனிவ ருருவாகித்
தரும வொழுக்க மெவற்றினையுந்
தவறு துலகி னீறுவினர் (18)

தேவ ரசுரர் தென்புலத்தோர்
மனுட ரிவரைச் சிருட்டிப்பான்
பூவி லயனே ருருவெடுப்ப
பொருந்த வுருவந் தமோகுணமாய்

மேவு மதனுற் சகனத்தி
லசுரர் தோன்ற விடுத்தவுடல்
ஓவில் கங்கு லாயதனி
லுயிர்க *ளனைத்து முறங்குமால் (19)

மலரோன் பின்னுஞ் சாத்துவிதீ
வுருவந் தாங்க வாண்முகத்தி
னுலவாத் தேவ ருதித்தனரவ்
வுடலம் விடுப்ப வதுபகலாய்
அலகிற் றரும மெவற்றினுக்கு
மிடனு யதுசத் துவகுணத்தா
னிலகு முருவா யுலகனைத்து
மீன்றேன் யானென் றெண்ணினன் (20)

எண்ணு மேல்வை யுயிர்பிதிர்க்க
டோன்ற வெடுத்த வுடல்விடுத்தான்
நண்ணு முடல முயிர்சந்தி
யென்ப நவின்ற விராசதத்தின்
அண்ண லுருவ மெடுப்பமக்க
ளுதித்தா ராண்டவ் வுடல்விடுப்பத்
தண்ணங் கதிர்வெண் ணிலவாய
ததுவே புலரிச் சந்தியுமே (21)

பின்னர்த் தமமு மிராசதமும்
பிரியா வுருவ மெடுத்திடலும்
மன்னு மரக்கர் கந்திருவர்
இயக்க ரரவம் வளர்பூதந்
துன்னி யுதித்த வுயர்பறவை
மறிமார் பகத்திற் றேன்றினவாற்
கொன்னே கமலன் வாண்முகத்திற்
கொதிக்குஞ் சரபந் தோன்றியதால் (22)

* உயிர்களைந்தும் (பி. பே.)

இருதா ளிடத்துங் களிறுபுலி
யெண்கு மரையொட் டகமிவுளி
திருகு பொரிகோட் டிரலைபன்றி
செறியு முளவு மானிநெடு
மருவு விலங்கின் கணமுதித்த
மயிர்க்கால் தோறுங் கலிப்பொறைய
வுருவப் பைந்தார்க் கொடியனைத்தும்
விற்று வீற்று யுதித்தனவே (23)

அருமா மறைக ளொருநான்கு
மகங்க ளனைத்தும் பாவனைத்துந்
திருமா லுந்தித் தடம்பூத்த
தேவின் முகநான் கினுமுதித்த
வுரைசெய் பூத மனைத்து மிவ்வா
றுதித்து முன்னைப் படைப்பதனின்
மருவுந் தமது தொழிலதனிற்
பிறழா தினிதின் வைகினவே (24)

பூதப் பகுதி யிருடிகள்பேர்
பொருந்து முடல்சே ரனைத்தினுக்கு
மோது நாம விருதுவினற்
குணங்க ளுணர விவையனைத்தும்
வேதா கமங்க ளிடைவகுத்தான்
விரைகொப் புளிக்கு நறுந்தோட்டுத்
தாதார் கமலப் பொகுட்டுறையு
மொருநான் முகத்துத் தனிமுதலே (25)

(ஏழாவது)

பலவகைத் தோற்ற முரைத்தலத்தியாய முற்றிற்று
(ஆக திருவிருத்தம் 219)

---

## எட்டாவது

## தமோகுண சிருட்டி யுரைத்த வத்தியாயம்

என்று கூறுந் திருநெடுமா
　　லிருதாள் வணங்கி யாழ்முனிவன்
குன்றின் சிறக ரறவெறிந்த
　　கூர்வாய் வயிரப் படைக்கடவுள்
துன்று சிருட்டி விரிவனைத்து
　　மீட்டு முரைத்தி யெனத்தொழலு
மன்றல் கமழும் பசுந்துளவ
　　மாயன் மகிழ்ந்து கூறுவான் (1)

### வேறு

வள்ளவாய்க் கமலத் தவிசின்மீ துறைந்து
　　மறைவினை யாடுநா வலவன்
றெள்ளிதிற் றெரிந்து படைத்தபல் லுயிரு
　　மல்கிடா தொழிந்திடுஞ் செயலால்
[illegible]ள்ளமா ழாந்து தமோகுணம் புதைப்ப
　　வுரையவிந் திருத்தலு மென்றல்
மெள்ளரா சதஞ்சத் துவகுண மேவத்
　　தமோகுண மகன்றது விரைவின் (2)

விரைவினின் றகன்ற தமோகுணம்
　　வேற்கட் டெரிவையும் புருடனு மாக
வுருவமெய் தியவப் புருடன்வெம் பாவ
　　மொண்ணுதல் படுகொலை வடிவ
மருமறை கிழவன் றன்னுட லிருகூ
　　றுக்கலு மவற்றினோர் கூறு
வருசுவா யம்பு மனுவொரு கூறு
　　மகிழ்சத ரூபையா னதுவே (3)

* (துன்றுஞ் சிருட்டி)

குங்குமந் துதைந்து பீறைவடங் கிடந்த
குவிமுலைக் கொடிசத ரூபை
யங்கண்மா ஞாலங் முழுவது மளிக்குஞ்
சுவாயம்பு மனுவினை யணைந்து
பங்கமில் பிரிய விரதனை யுலகம்
பரவுமுத் தானபா தனைச்சொன்
மங்கைநற் பிரசூதி சிறந்தவா கூதி
யிவர்தமை வயிறுவாய்த் தனளால் (4)

தழலுயிர்த் தொளிறு பருதிவேல் மனுப்பிர
சூதியைத் தக்கனுக் களித்தான்
அழகுகண் படுக்கு மருப்பிள முலையா
கூதியை ருசியினுக் களித்தான்
மொழியுமா கூதி ருசியினுக் கெச்சன் தக்கணை
முறையினி லீன்றுள்
ஒழிவில் தக்கணையவ் வயிற்றிடை வேள்விக்
கியாமர்பன் னிருவராண் டுதித்தார் (5)

ஆங்கவர் சிறந்த சுவாயம்பு மனுவின்
காலத்தி லமரரா யுறைந்தார்
வீங்குபல் கேள்வித் தக்கனன் மனையாம்
பிரசூதிவேல் கிடந்தொளிர் தடங்கட்
கோங்கரும் பிடையச் சுணங்குபூத் தலர்ந்த
குவிமுகி ழிளமுலைப் பணைத்தோட்
பூங்குழற் செவ்வா யோரறு நான்கு
புதல்வியர்ப் பயந்தன ளன்றே (6)

அனையரிற் சிரத்தை யிலக்குமி திருதி
துட்டிநற் புட்டியம் மேதை
நினைவருங் கிரிகை புத்திநாண் வபுசு
சாந்திவாழ் சத்திநற் கீர்த்தி

யெனவொரு பதின்மூன் றரிமதர் மழைக்க
ணிளமுலை மகளிரை யிலங்கு
கனகமுற் றருமற் களித்தன னவருங்
கவின்பெறு புதல்வரை யுயிர்த்தார். (7)

மற்றைய கியாதி பிருகுவை யணைந்தாள்
சதியினை யுருத்திரன் மணந்தான்
உற்றசம் பூதி மரீசியை யடைந்தாள்
மிருதியங் கிராவுட ளுறைந்தாள்
குற்றமில் பிரீதி புலத்தியர்ப் புணர்ந்தாள்
புலகனற் கமைமணங் கூர்ந்தான்
சொற்றசந் ததியைக் கிருதுவேட் டனனத்
திரியன சூயையைத் தோய்ந்தான் (8)

கன்னியங் கற்பி னருந்ததி தன்னைக்
கடிமணம் புரிந்தனன் வசிட்டன்
வன்னியை சுவாகை யணைந்தனள் பிதிர்க்கள்
சுவதையை யினிதினின் மணந்தார்
முன்னர்யா முரைத்த தருமதே வதத்தின்
மனைவிய ராமொரு பதின்மூன்
றன்னலார் தம்மின் முகிழ்முலைச் சிரத்தை
யடக்கருங் காமத்தை யுயிர்த்தாள் (9)

அருளிலக் குமிவெஞ் செருக்கினை யின்றாள்
திருதிநன் னியமத்தை யளித்தாள்
பொருவறு துட்டி மகிழ்ச்சியை யீந்தாள்
புட்டியூ தியத்தினைப் பெற்றாள்
தருபுகழ் மேதை சுபத்தினை யளித்தாள்
கிரிகைகற் சமமுகற் றமமும்
அரிதினிற் பயந்தாள் புத்திநற் போத
மப்பிர மாதமு முயிர்த்தாள். (10)

நாணகல் விநயம் பயந்தனள் வபிசு
நல்விவ சாயத்தை யுயிர்த்தாள்
மாணெழிற் சாந்தி சுமனயின் றணனீள்
சத்திவான் சுகத்தினை யளித்தாள்
காண்வருஞ் சீர்த்தி யோசையைப் பயந்தாள்
முன்னவள் பயந்திடு காமம்
பேணரு மகிழ்ச்சி கடவுளா னந்த
மிரண்டையும் பெற்றதை யன்றே (11)

கருதரும் பாவங் கொலையினை மணந்து
வஞ்சமாங் கன்னியைப் பொய்யா
மருமக வினையாங் களித்தது பொய்ம்மை
வஞ்சனை தன்னொடு மணந்து
வெருவர நிரைய மென்னுமைந் தரையும்
வேதனை மாயையென் றேதும்
இருமக ளிரையு மளித்தது மாயை
புயந்தழீஇ மிருத்துவின் றதுவே (12)

சொல்லிய நிரையம் வேதனை தோய்ந்திட்
டசுபமுந் துன்பமும் பயந்த
தல்லல்செய் மிருத்து நோய்நரை துன்பம்
வெகுளிபட் டிமையிவை யளித்த
தொல்லையிற் சுருக்கித் தமோகுணச் சிருட்டி!
யுரைத்தன மெனவருள் சுரந்து
மல்லடு திணிதோள் வாலிமார் புருவ
வடிக்கணை படித்தவ னுரைத்தான். (13)

எட்டாவது
(தமோகுண சிருட்டி யுரைத்த வத்தியாய முற்றிற்று)
(ஆகத் திருவிருத்தம் 232)

---

## ஒன்பதாவது
## பிரம விட்டுணுக்களுக்குச் சிவன்றேன்றி வரங் கொடுத்த அத்தியாயம்

காலமுங் காலத் தளவையுங் கடந்து
கருத்தளந் தறிவரும் பொருளாய்
மூலமா மீசன் மலரய னுதலி
னுதித்திடும் புதுமையென் முகுந்தன்
கோலமா ருந்தி மலரயற் பயந்த
கொள்கையென் சொல்கெனப் பசும்பொற்
சோலைவா யுறையுங் கடவுள்யாழ் முனிவன்
கேட்டலும் மாயவன் சொல்வான் (1)

உலகமோர் மூன்று மிடிந்து பாழாகு
மூழியி லிறுதியி னோங்கு
மலைபுரண் டன்ன வெறிதிரை புரண்டு
மறிதரும் வாரியி னுப்பண்
அலகதிர்ப் பருதி யாயிர மெழுந்தாங்
கவிர்மணிச் சூட்டரா வணையிற்
கொலைபழுத் தொழுகு நேமியந் தடக்கை
கொண்டல்கண் டுயின்றதை யன்றே (2)

பாசடைத் துளவந் துயல்வரு தடந்தோட்
பண்ணவ னுந்தியந் தடத்தின்
ஓசனை யொருநா றகன்றுநீண் டோங்கி
யொள்ளித ழாயிரம் விரித்துத்
தேசுறு கதிரோ ராயிர மெறிக்குஞ்
சேட்டிளம் பருதியிற் பொலிந்து
மூசுவண் டரற்ற முருகுகொப் புளிக்கு
முள்ளரை முளரிபூத் ததுவே (3)

தாமரை யுந்தித் தடத்திளிற் பூப்பத்
 தாமரைக் கண்டுயில் வோனை
நாமகள் கொழுந னண்ணிமண் ணளந்த
 நளினமென் கரத்தினுற் றடவித்
தோமறு யோகத் தருந்துயி லெழுப்பித்
 துளவினேன் மாயையின் மருளா
வேமமுற் றலைவாய்த் துயின்றநீ யாரை
 யெனநகைத் திறையவன் புகல்வான் (4)

உலகனைத் தினையு மள்ளியுண் டகத்தி
 னொருபுடை கிடைத்துநா ரணன்யான்
கலைவலா யாரை நீயென வறியான்
 போலெதிர் வினவலுங் கடவுண்
மலரய றுலக மனைத்தையு மீன்ற
 தந்தையா னெனமறை வடித்தோய்
அலகினின் சீர்த்தி யறிவனென் னகட்டுப்
 புகுந்துல கனைத்துநோக் குதியால். (5)

என்னலும் வயிற்றிற் புகுந்தெழு கடலும்
 எழுபெருந் தீவுமே ழுலகும்
மன்னிய புவன மனைத்தையு நோக்கி
 மனத்திறும் பூதுறுங் காலைத்
துன்னிய வாயி லொன்பது மாயோன்
 சுருக்கலும் வரும்வழி யுணரான்
பொன்னிதட் கமல நாளமென் றுணையிற்
 போந்துயர் பொருட்டில்வந் ததனுல் (6)

போதரு நெறிகள் யாவையுஞ் சுருக்கி
 யென்னைநின் னகட்டினிற் பொதியா
வேதமில் வென்றி கொண்டிட நினைத்த
 தியாதுகொ லுலகனைத் தினுக்குங்

தாதையா னென்னை நிகருறுங் கடவு
ளெவர்கொல்நீ சாற்றுதி யெனலும்
மாதவன் முறுவல் கோட்டியோர் விளையாட்
டயர்ந்தனன் மனக்கொளே லென்னு (7)

உலகனைத் தினையு மெளிதினி லுயிர்த்தா
யுன்னையார் நிகர்வருங் கடவுண்
மலர்செழுங் கமலத் துதித்தலாற் கமல
னெனும்பெயர் மருவியென் மகவாய்
நிலைபெற வேண்டு மெனமல ரயனு
மகிழ்வுட னுங்கவை நேரா
வலகில்சீர்க் கடவு ளுமிரு வருமே
யன்றிவே றிலையென வறைந்தான் (8)

பித்தர்போல் மனத்திற் பிறந்தவை வாளா
பிதற்றுவ தெவன்கொல் நான்முகத்தோய்
மத்தமு மறுகும் வளர்பிறைக் கொழுந்தும்
பவளவார் சடைமிசை வனைந்த
முத்தவெண் முறுவற் கனிபடு துவர்வாய்
முகிழ்முலை யொருமருங் கமைத்த
தத்துவங் கடந்த முக்கணெம் பெருமான்
றனையுண ராதுநீ யென்றான் (9)

எனவுளங் கனன்று நான்முகக் கடவு
ளிளங்களி வண்டுபாட் டயரும்
வனைதுழா யலங்கற் கடவுளர் நீயும்
மலர்ப்பொகுட் டுறைதரும் யானும்
நினைவருந் தேவ ரெவரினு மேலாய்
நிற்பவர் நம்மில்யா ருயர்ந்தோர்
கனைகடல் வயிறு கிழியமத் தெறிந்து
கடைந்தமு தெடுத்தகார் முகிலே (10)

என்றலு முகுந்த னிளநகை கோட்டி
நன்னிரு ளொளியுற விருண்டு
துன்றிய மாயைப் படாம்புதைத் திடவுந்
துரியமாய்த் துரியமுங் கடந்து
நின்றபே ரொளியாந் திங்களங் கண்ணி
நிமலனை யறிந்திலை போலும்
மன்றயா னறிவ னென்றுதற் பரனை
மனத்திடை யிருத்துமேல் வையிலில் (11)

சேட்டிளம் பருதி முதலிய கோளு
முடுக்களுந் தொடுத்ததீந் தொடையல்
தோட்டுணை மீது துயில்வரத் திங்கட்
கண்ணிசூழ் செஞ்சடை மௌலி
யோட்டற நிவந்த வண்டபித் திகையி
னுரிஞ்சவேழ் பாதல முருவுந்
தாட்டுணை பெயர்த்து மறைகளு மறியாத்
தனிப்பொரு டோன்றிய தன்றே (12)

பொற்றரு விழுது விட்டெனக் கிடந்த
புரிசடை வெண்ணிலா வெறிப்ப
நெற்றியங் கண்ணிற் றழற்சுட ரெறிப்ப
நீற்றொளி மெய்முழு தொளிப்ப
வொற்றைவெண் சங்கக் குழையழ கெறிப்ப
வுருகெழு சூலவேற் றிரித்து
முற்றுநீர்க் கடலிற் றமியனாய்ப் போது
முதல்வன்யா ரெனவய னுரைத்தான் (13)

உரைத்தலு முயர்வான் மழகதி ரென்ன
வொருமணி கிடந்தநீண் மார்பன்
நிரைத்தபைத் தலைய பாம்பணை துறந்து
நீற்றொளி யிளநிலா வெறிக்கும்

வரைத்தடந் திணிதோண் மழுவலான் செய்ய
மலரடி தொழுதெழுந் தேத்தி
விரைச்செழுங் கமலப் பொகுட்டர சிருக்கும்
வேதியற் கிங்கிவை புகல்வான் (14)

உலகமற் றெவையும் படைத்தவை யளித்து
மொடுக்கியுங் கடையுகந் தோறும்
அலகிலா விளையாட் டயர்பவன் யாவன்
யாவனிற் பயந்தனன் யாவன்
நிலைபெற வமைத்த சத்தியா னவனே
நீறுபூத் தொளிர்தழற் பிழம்பின்
மலைவறத் தோன்றுஞ் சங்கர னிவன்றாள்
வணங்கெனப் பேருணர் வளித்தான். (15)

மருங்கிற வாக முழுதுங் கவர்ந்த
வருமுலைக் கலைமகள் மணாளன்
ஒருங்கறி வெய்தி *கரைவிடைப் பாக
னொண்மலர்ச் சேவடி நோக்கி
விரும்பியுண் ணெகிழ விழிபுனல் வார
மெய்ம்மயிர்ச் சிலிர்ப்பநாக் குழற
திருந்துநான் மறைகள் பாடிநின் றடித்
தேமலர்த் தூய்வணங் கினனால் (16)

வணங்கிய கடவுட் கமலநான் முகத்தோன்
வாண்முக நோக்கிவா ளெயிற்ற
வணங்கர வசைத்தோ னெமதுகுற் றேவ
வடியரிற் சிறந்தனை யுளத்தில்
இணங்குநல் வரநீ கேட்டியென் றுரைப்ப
விருகையிற் பவளவாய் புதைத்துப்
பணிந்தென துள்ளப் பருவர லொழியப்
பாலனாய் வருதியென் றிரந்தான் (17)

* யனனடைப் பாகன் (பி. பே)

ஆங்கது நேர்ந்தெவ் வுலகமும் படைக்குந்
தொழிலுமற் றவற்கினி தருளித்
தேங்கமழ் கன்னிப் பசுந்துழா யலங்கற்
றிருமறு மார்பனை நோக்கி
யிங்குநின் னுளத்தி னன்பினுக் குகந்தேம்
வேட்டன கேளென வினது
பூங்கழ லிணையி லன்புற நாளும்
பொலிந்திட வேண்டுமென் றிரந்தான் (18)

அளப்பருஞ் சகமாங் காரிய நீயான்
காரண மவிர்மதி நீயான்
றுளக்கறு பருதி கங்குல்நீ பகல்யான்
சொற்பிர கிருதிநீ யானே
விளக்குறு புருட னறிவுநீ யானே
யறிபவன் மாயைநீ *விளங்க
வுளக்கணிற் றோன்று மீசன்யா னென்ன
வுணர்ந்தவர் யாவையு முணர்ந்தார் (19)

என்னநன் கியம்பி யரவநாண் கொளுவி
யிருவிசும் பளந்துயர் குடுமிப்
பொன்வரை குழைத்துப் புரமொரு மூன்றும்
புகையெழக் குறுநகை கோட்டு
மின்னவிர் சூல முரட்படை யேந்தும்
வேதியன் விழியினை முகிழ்த்துத்
தன்னிலை யுணருந் தக்கவ ருள்ளத்
தாமரைத் தடந்தொறுஞ் சார்ந்தான் (20)

ஒன்பதாவது
பிரம விட்டுணுக்களுக்குச் சிவன்றோன்றி வரங்கொடுத்த
வத்தியாயம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 252

---

* விளக்கவுளக்கணிற் றோன்றும் (பி. பே.)

## பத்தாவது
## அட்டமூர்த்தி யியல்புரைத்த வத்தியாயம்

மரகத வல்லி படர்மதிக் குடுமி
மாணிக்க மலையகன் றிடலுங்
திருமறு மார்ப வயனிழைத் தவைகள்
செப்புதி யெனவமு துகுக்கும்
புரிநரம் புளரு மகதியாழ் முனியும்
பொன்னகர்க் கிறைவனுங் கேட்பக்
கரைபொரு கடல்வாய் புழுங்கமத் தெறிந்த
கார்நிற வண்ணனி துரைப்பான் (1)

### வேறு

இரவி யன்றியும் பகற்செயு மெரிமணிக் கிடந்த
மரக தச்செழுங் குன்றனன் மணிகெழு செஞ்சுட்(டு)
அரவ ணைப்புறத் தறிதுயில் புரிதலு முந்தித்
திரும லர்ப்பொகுட் டுறைந்தனன் றிசைமுகக் கடவுள் (1)

ஆய காலையிற் றமரைக் காடலர்க் தென்னப்
பாய வெண்டிரைக் கண்வளர் பண்ணவன் செவியிற்
றீயுந் தண்ணெனக் கொதித்திமைத் தீய்த்தொளிர் செங்கட்
காயுஞ் சூலவேல் மதுவொடு கயிடவ னுதித்தான். (3)

மண்டு செங்கனல் வடவையை யவிப்பினு மவிப்பர்
அண்டம் யாவையு மொருகடக் கையினி லள்ளி
யுண்டு தேக்கெறிந் துலவினு முலவுவ ரிவர்யார்
கொண்டல் வண்ணவென் றனன்மறை மழலைவாய்க் குழவி (4)

தண்ணந் தாமரை யயன்வெரீஇச் சாற்றுதல் கேளா
வெண்ணெ யுண்டமால் விட்டுணுச் சிட்டுனு வென்ன
நண்ணு பேருடை யிருவரை வகுத்துநான் முகத்தோன்
கண்ண ணங்குற வருபவர்க் கடிதிரென் றுரைத்தான் (5)

உரைத்த வாசகம் பிற்பட முற்பட வோடி
வரைத்த டம்புயத் தவுணரை வலியினிற் பற்றிக்
கரைக்கு றும்பெறி வெண்டிரைக் கனைகடன் முகட்டிற்
சிரக்கு வட்டினை யிருகையாற் றிருகினின் றெறிந்தார் (6)

மறங்கொள் திண்டிறல் மதுவொடு கயிடவன் றன்னைக்
கறங்கெ னத்திரித் தாருயிர் கவர்ந்ததற் பின்னர்ச்
சிறந்த மைந்தனிற் றுங்குவ தரிதுதே மலர்விட்
டிறங்கு தென்னலு மிழிந்தன னிளிதுகண் வளர்ந்தான் (7)

கள்ள யாவுயிர்க் குஞ்செழுங் கமலமென் பொகுட்டு
வள்ளல் கங்குல்போம் புலரியிற் கண்மதர் நீங்கிப்
பள்ள நீர்கவர்ந் துண்டதொல் லுலகெவாம் படைப்பான்
உள்ள முன்புபோற் சனகனை முதலினோ ருதித்தார் (8)

தோற்று மைந்தரோர் *நால்வரும் படைக்கெனத் தூய
நாற்றி தழ்க்கம லத்திறை நுவலலு மதனைப்
போற்றி லேமென முன்னைய கற்பத்திற் புகன்ற
வாற்ற ருந்தவ மாற்றின ரரனடி பணிந்தார் (9)

தந்தை யாய்முகில் வண்ணனை யென்னைமுன் றந்தோன்
மைந்த னைவலென் றுரைத்தனன் வந்தில னென்னாச்
சிந்தை முக்கணன் சேவடி சேர்தலும் மகிழ்வுற்(று)
எந்தை நான்முக னுதலிடை யினிதுதோன் றினனல். (10)

தோன்றி யோர்வினை யாட்டயர்க் தெழுதலுந் தாயோற்
கேன்ற வற்குமற் றுருத்திரன் முதற்பெய ரெட்டு
மான்ற தானமோ ரெட்டுமோ ரெட்டரி வையருஞ்
சான்ற மைந்தரோ ரெண்மருஞ் சார்ந்தன ரன்றே (11)

எய்து நாமமென் னெனிற்பவன் சருவனீ சானன்
வைதி கந்தரு பசுபதி வீமன்மா தேவன்
எய்தி ளம்பிறை யணிந்திடு முருத்திர னென்ப
மைதி கழ்ந்தொளிர் கண்டனெண் வடிவமும் வகுப்பான்.

---

* ஐவரும் படைக்கென (பி. பே.)

(12)

பருதி வெண்கதிர்க் கடவுள்நீர் புவியழல் பனிவான்
உருவ நல்வளி யருமகம் புரிந்தழ லூட்டும்
பொருவி லுன்மறை யந்தண னென்பரப் புனிதர்
மருவி வாழ்வுறு மங்கைய ரெண்மர்பேர் வதுப்பாம் (13)

மிருசு வார்ச்சிலை யுரோணிபா சுவையருள் மிகேசி
திகழ்சு வாகையெண் டிசைசிவை தீக்கையா மைந்தர்
மகிழு மந்தனற் புதன்கவி வயங்குறு செவ்வாய்
குகன் சருக்கரீள் மனுசிவன் கூறு சந்தானன் (14)

முன்ன ரெய்திய சங்கரன் றனைமுக நோக்கி
மன்னு யிர்த்தொகை படைக்கென மலரய னுரைப்பத்
தன்னை யொப்புற முன்புபோற் சங்கரன் சமைப்ப
வின்ன வாறமைத் திடலொழி கெனவய னிசைத்தான் (15)

இனைய வாறலாற் பிறந்திறந் தொழிபவர் சிருட்டி
நினைக வேமவை நீபடைத் திடுகென நிகழ்த்தி
முனைவ னுன்முகன் முதுக்குறை வெய்துணர் வளிப்பப்
பனிம லர்ப் பொகுட் டண்ணல்முக் கண்ணனைப் பழிச்சும் (16)

கொண்டன் மேனியான் முதலிய கடவுளோர் குப்புற்(று)
அண்டம் யாவையு மிடிந்துபா றாகிய வமையத்
திண்டி றற்கவைச் சூலவே றிரித்துல கின்றுன்
கண்டு வப்பநின் றுடிய கடவுளே போற்றி (17)

மாலை வெள்ளரு விப்புனற் குறுந்துளிர் வாரிச்
சோலை நெற்றியிற் றெடுத்தபூந் துகள்துதைந் தடுபோர்க்
கோலுந் தென்றலந் தேர்கடாய்க் கொடியபூங் கழைவிற்
காலகு ளித்தவற் செற்றவெங் கண்ணுதல் போற்றி (18)

பறந்து விண்ணிடை விண்ணவர் பருவர லுழப்பக்
கறங்கு போற்றிரி முப்புர மொருங்கு* நீக் கருவ
நிறங்கொள் பொன்னவிர் குடுமிய நெடுவரை குழைத்து
நறுந்து றாய்முகிற் கணைதொடு நம்பனே போற்றி (19)

* நீக்கனற்ற.

நோற்ற பாலன தாருயிர் நோவுறு வண்ணங்
கூற்றி னாருயிர் குடித்தபைங் கழலினாய் போற்றி
ஆற்றல் வானவர் வெருவர வலைகட லகட்டிற்
றோற்று நஞ்சமுண் டருளிய தோன்றலே போற்றி (20)

அருவ மாயுரு வாகிய வமலனே போற்றி
துரிய மாயது கடந்தொளிர் சோதியே போற்றி
கருது வாருளத் துறைதருங் கடவுளே போற்றி
குருதி கக்குவெஞ் சூலவேற் குழகனே போற்றி (21)

என்று தாள்பணிந் தெழுந்துநாத் தழும்பநின் றேத்தி
மன்றல் நாண்மலர் தூய்வலம் வந்தன னிற்பக்
கொன்றை தேத்துளி பிலிற்றநின் றுடிய குழகன்
தன்று ணைக்கையா லயனுடல் தைவந்து சாற்றும் (22)

அருளின் மைந்தனாய் வருகென வறைந்தனை யதனாற்
புருவ நாப்பணிற் றோன்றின னென்னுடைப் புதல்வ
வுருவ மாயுல கின்றவை யளித்துமீட் டொடுக்கல்
மருவு மென்வினை யாட்டென வுணர்தியால் மலரோய் (23)

மைந்த வுன்னையென் வலப்புறத் தின்றன னறிய
பைந்து ழாய்மணி வண்ணனை யெனதிடப் பாலிற்
றந்த ளித்தனன் விரவெங் கரிமுக னழல்வேற்
கந்த னேரெனக் கருணையி னுச்சிமோந் துரைப்பான் (24)

கனைக ருங்கடல் நஞ்சமுண் டுமதுயிர் காத்த
முனைவ னென்னுளத் துதித்தனன் மூவிரு மெனக்குத்
தனைய ரிவ்வுருச் சதாசிவ னேனைய வுருவம்
புனைவன் வேண்டுருக் குணங்குறி புலனெமக் கிலையால் (25)

கள்ள யின்றுவ டறைதருந் தாமரைக் கண்ணன்
முள்ள ரைச்செழுந் தாமரை முகட்டில்விற் றிருப்போய்
உள்ளு வந்தெனை நினைப்புழி யுறுவலென் றுரையா
வள்ள னான்மறை யுபநிட தத்திடை மறைந்தான் (26)

திங்க ளின்னமு துறைப்பமென் கொன்றைதேத் துளிக்குங்
கங்கை யஞ்சடைக் கண்ணுதல் கழறலுங் கடவுட்
பங்க யத்தவி சுறைதரு பண்ணவன் மரீசி
யங்கி ராமுதல் முனிவரை யளித்தன னென்றான். (27)

பத்தாவது
அட்டமூர்த்தி யியல்புரைத்த வத்தியாயம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 279

---

## பதினொன்றாவது
## பார்வதி தோற்றமுரைத்த வத்தியாயம்.

---

போதுறை கடவுள்மீட் டுலகம் பூத்தவை
யோதுகென் றின்னரம் புளரும் யாழ்முனி
நீதறு மகபதி கேட்பத் தேம்படு
தாதவிழ் பசுந்துழாய் முகுந்தன் சாற்றுவான் (1)

அள்ளிலைக் கமலவி டுறையு மந்தணன்
தெள்ளிதி னமைப்பவை சிந்தை செய்கலா
துள்ளம தாழ்ந்துகெட் டுயிர்ப்பு வீங்கிமேல்
எள்ளரு மருந்தவ மியற்று மேல்வையின் (2)

பாடமை யிடப்புறம் பணித்திட் டாயிழை
நாடரும் வலப்புறந் தானு நல்கென
வேடவிழ் கூந்தலாய் நல்கி னேமென
வாடியிற் காட்டிய வையன் றோன்றினன் (3)

பெண்ணொரு பங்கினி லமைத்துப் பேரெழில்
அண்ணலாங் கெய்தலுங் கமலத் தந்தணன்
கண்ணொடு தொடுத்தெனை நோக்கிக் காதலிற்
புண்ணியச் சேவடி போற்றிக் கூறுவான் (4)

ஐயவிவ் வுலகினுக் காக்க மெய்துறத்
தையலோர் பங்கினிற் சார்ந்து நின்றனை
மையறு மிவ்வுறு வகுத்துப் பாலிரண்
டெய்தநீ செய்தியென் றிவிதி னேத்தினான் (5)

பெண்ணொரு பங்கினைப் பிரித்துப் பேரெழில்
ஒண்ணுதற் பேதைதன் னுருவ மாக்கிமேல்
நண்ணரும் வலப்புற மதனை நாடரு
மண்ணலா னுருவமா யமைத்திட் டானரோ (6)

மதியுற வகுத்துவா னுருவ மானுறப்
பதினொரு கூற்றிலிற் பகுப்ப வாங்கவர்
கதிர்மதி முடித்தகா பாலி யாதியாம்
விதிமுறை யுருத்திர ராகி மேவினார் (7)

பெண்ணொரு பாதியாய்ப் பிரித்த கூற்றினை
யெண்ணருஞ் சத்தியா லியற்றி னானவர்
கண்வழுக் குறுமெழிற் கமலை யாதியாம்
ஒண்ணுதன் மகளிரொன் றுரைக்க லாயினார் (8)

இன்னண மமைத்திடி னன்றி யாக்கையின்
மன்னுயிர் யாவையும் மல்கி டாதெனக்
கன்னெடுஞ் சிலையிரு கால்கு னித்திடு
முன்னவ னயனொடு மொழியு மேல்வையின் (9)

மின்னுவிழ் விழ்த்தெனக் கிடந்த மென்சடை
முன்னவன் பணிதலை கொண்டு முற்றிழை
தன்னொரு கூற்றினை வாங்கித் தாழ்சிறை
யன்னமூர் கடவுள்பா லடைதன் மேயினாள் (10)

என்னுட னுலகெலா மீன்ற தாயிவள்
மன்னிய தேவனென மலர்க டூய்த் தொழு(து)
அன்னை நீ தக்கனன் புதல்வி யாகென
சொன்னவா ரவன்மக ளாகித் தோன்றினாள் (11)

தக்கனற் புதல்வியைக் கொன்றை தாழ்சடை
முக்கணுற் களித்தனன் முரச மார்ப்பெழ
மீக்கதன் றந்தைதீ வினையி னன்னைபோய்ப்
புக்கனள் மேனைதன் புதல்வி யாகவே (12)

தோலடி யெகினமி திவர்ந்த தோன்றலுங்
காலுமிழ் கொடுஞ்சிறைக் கருடப் பாகனும்
ஆலமுண் டவனுமே யன்றி யார்கொலோ !
பாலலோ சனிதிற னறியும் பண்பினர். (14)

பதினொன்றுவது
பார்வதி தோற்ற முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 292.

---

## பன்னிரண்டாவது
## திருக்கலியாண வத்தியாயம்

---

என்றலுமிவ் வுலகின்றன் தக்கன்மக
ளாயுதித்த வியல்புஞ் செம்பொற்
குன்றனரயன் மகாளாகிப் பிறந்ததுவும்
விரித்தெமக்குக் கூறு கென்ன
மன்றல்கமழ் தருவினிழ லுறைவோனு
மகதியாழ் முனியுங் கேட்பக்
கன்றுகுணி லாய்வினவின் களியுகுத்த
மாமாயன் கழற லுற்றான் (1)

மேருவரை யுயர்குடுமி முகட்டிருந்து
வேதமுனி விளம்ப லுற்ற
தேர்வரிய பவக்கடலின் விழுமுயிர்
கரையேற்றுந் தெப்ப மோவில்

சீர்கெழுதற் பரம்புணருஞ் சிற்சத்தி
யெவ்வுலகும் பொதிந்து நின்ற
பூரணநீ டுலகுயிர்ப்ப மலையரையன்
மகளாகப் போந்த தன்றே (2)

பொருவரிய சிவையாகி யனந்தையா
யேகையாய்ப் புராணை யாகி
விரிகதிரு மொளியுமென மகேசனைவிட்
டகலாத விமலை தோன்றும்
உருவுறுமிவ் வுலகனைத்தும் படைத்தளித்து
மீட்டுமிவை யொடுக்கி யீசன்
றிருமுன்விளை யாட்டயருங் காந்தமணி
முனமிரும்பு திரியு மாபோல் (3)

கருவிகா ரியமென்ப காலமொரு
மூன்றினையுங் கடந்து நின்ற
வொருமுதல்வன் றனையணுகா வுலகமனைத்
தினுக்குமுபா தான மாகி
மருவுபரா சத்திதன துருவாகி
யொருநான்கு வடிவாஞ் சத்தி
தெரிவுறுபேர் சாந்திவித்தை நிவர்த்திபிர
திட்டையெனச் செப்பு வாரால் (4)

இனையவொரு நான்குகலை யுணர்தலாற்
சதுர்வியூ கரென்று நாமம்
நினைவரிய மகேச்சுரற்கு நிகழ்த்துவரிக்
கலைநான்கி னுருவ நான்காய்த்
துனைவிலடைந் தருள்புரியுஞ் சோதியாம்
பரன்பரையைத் தோய்ந்து நாளுந்
தனைநிகரி லானந்தந் தனில்மூழ்கு
மெனமறைகள் சாற்று மன்றே (5)

மற்றவட்கு விபூதியுக வடிப்பாட்டின்
றெடர்பாகு மகேச னோடும்
பற்றுறலா லிங்கிவளு மவன்போல
வளவிறந்த பான்மை யாவீர்
முற்றுலக முறுசெயலி னுளுற்றுவது
மைங்கரனை முருக வேளைச்
சிற்றுதரந் தனிலின்றுங் கன்னிமைநீங்
காதொழியுஞ் செல்வி யென்பார் (6)

காலமுயர் மகேசனரி பிராணனுருத்
திரனரன்வெங் கனலி யென்ப
வாலமயின் றேனென்ன வருமறையின்
பொருடெரிந்த வறிஞர் சொல்வார்
மாலுறுகா லிச்செயலின் மன்னுமுல
கனைத்துமீக மதிக்குங் காலம்
மேலுரு தொருசெயலு மொருமூன்று
செயலுமஃ தியற்று மாதோ (7)

காரியமா முலகினுக்குக் காரணமா
மிறைவனது கலையா மாயை
தீர்வருமம் மாயையினுல் மாயாவி
யாயுறையுந் திங்கள் சூடு
மாரியனெவ் வுலகினையும் மயக்குறுத்து
மாங்கவன்பா லிங்கா மாயை
யோர்வரிய வெவ்வுலகுந் தானுகி
யவைதாங்கி யொளிரு மன்றே (8)

சாற்றரிய ஞானசத்தி திகழ்கிரியா
சத்தியிச்சா சத்தி யென்னத்
தோற்றுமொரு மூன்றுகித் தோற்றரிய
சத்தியிலத் தொல் லோன் சத்தி

வீற்றுவீற் ருயளப்பில் பகுதியுறு
மீங்கிவற்றை விடாது நிற்கு
மாற்றரிய சத்திமான் களுமவன்றன்
மாயையினுல் வகுத்தா னன்றே (9)

ஆங்கவனைப் பிரியாத மாயையுமற்
றவன்போல வநாதி யாகுந்
தீங்கறுமற் றதனுருவே யெவ்வுருவாஞ்
சத்திகளுந் தேவ தேவா
யோங்கியபே ரொளியாகும் பரமசிவன்
முன்னெய்தி யொழியா மாயை
பாங்குறுகன் மாயைபுரு டன்பகுதி
யெனமூன்று பகுதி யாமால் (10)

ஒன்ருகிப் பலவாகி விபுவாகிச்
சிவையாகுஞ் சத்தி யொன்றே
துன்றியது நீங்காத துரியாதீ
தப்பொருளாஞ் சிவமு மொன்றே
மன்றவுயிர் சத்திகளுஞ் சத்திமான்
களுமீசன் மருவு மாயை
யன்றளித்த வாஞ்சத்தி யனைத்துமுமை
சத்திமா னெல்லா மீசன் (11)

நுகர்பவனெம் மிறையாகு நுகர்பொருணற்
கலையந்தக் கலையே நாளும்
அகிலபுவ னங்களையு மாக்கியளித்
தழிக்கின்ற ததனுல் முத்தி
புகநினைவோர் பகிரண்டப் பிறைவடந்தாழ்ந்
தழகொழுகிச் சுணங்கு பூத்த
முகிழ்முலைச்செங் கனித்துவர்வாய்
முற்றிழைசே முன்னு வாரால் (12)

இத்தகைய மடமயிலை மலையரைய
 னிழைத்திடுநற் றவத்தாற் றாய
முத்தவடங் கிடந்திமைப்ப வழகுகுடி
 யிருந்தோங்கு முகிழ்மென் கொங்கை
மைத்தவழுங் கருங்கூந்தன் மேலையினி
 துயிர்த்துள்ள மகிழ்ச்சி யோடுஞ்
சித்தகனி செம்மாப்பக் காதலனை
 வணங்கியிவை செப்ப லுற்றான் (13)

மழகதிரி னொளிர்மெய்யு மிருஞ்சிலைநாண்
 மதிக்குழவி வள்ளை வாட்டுங்
குழைபுனையுங் கமலவிகர் நான்முகமு
 முக்கண்ணுங் குலவும் வேயின்
அழகழிக்கு மெண்டோளு மவிர்மதிக்கீற்
 றணிசடையுந் தாங்கி யிங்ஙன்
இழையுயிர்க்குங் கொடியென்ன வெய்துமக
 டனைநோக்கென் றியம்ப லோடும் (14)

மலையரையன் குழவிமதி *யமுதுறைக்கு
 மணிமவுலி மகளை நோக்கி
யிலவிதழி னமுதனைய மழலைமொழிப்
 பேதைநீ யாரை யென்னக்
குலவரையி னுயர்குடுமி குழையவரி
 யரவுநாண் கொளுவி முன்னம்
உலவுபுர மெரியூட்டு மொருமுதல்வன்
 பங்கிலினி துறைகு வேனல் (15)

மட்பகைஞர் திகிரியென வருவினையின்
 வாய்ப்பட்டு மம்ம ரெய்திக்
கொட்புறுவெங் கொடும்பிறவி யொழிப்பதெனை
 தருளெனது கோலம் யாவுங்

*வமுதீறைக்கு மணிமவுலி (பா. பே.)

கட்புலனிற் கண்டுவப்பப் பேரறிவு
தந்தனணீ காண்டி யென்ன
விட்புலம்போய் முடியுரிஞ்ச கதிர்கோடி
யெழுந்தெனவே றுருவங் கொண்டாள் (16)

தண்டுழாய் முடியோனு நான்முகனு
மிந்திரனுந் தாழ்ந்து போற்ற
அண்டகோ டிகளனைத்து மொருகாம்முத்
தெனமுலைமே லணிந்து வெய்ய
துண்டவாச் பிறையென்ன வெயிலிலங்கக்
கதைநேமி சூலஞ் சங்கங்
கொண்டுநீள் தடக்கையினிற் கொடுவரியி
னுரியதண்மென் குறங்கிற் சேர்த்தி (17)

வெண்ணிலவு கதிர்கோடி யொளிர்வதென
மணிமவுலி விளங்க வோங்கும்
அண்ணல்மால் வரையரியிற் பெய்தநூ
புரமடிமீ தரற்றி யார்ப்பக்
கண்வழுக்குச் சுடர்மாலை மெய்ம்முழுதுந்
தவழமிகக் கனன்று வெய்தா
யொண்ணுதற்கட் டழலெறிப்ப வருங்கலன்யா
வையுங்கதிர்க ளொடிப்ப நீட்டி (18)

உலப்பரிய வுயிரனைத்தும் உள்ளுமாய்ப்
புறமுமாய் உலகம் போர்த்து
கலத்தகுசி ரடிமுக்கண் நளினமலர்க்
கைசெவிவா யெங்கு மாகிச்
சொலற்கரிய சிவக்கொழுந்தின் கூறுய
முதல்விதனைத் தொழுது நெஞ்சம்
மலக்கமெடு மகிழ்வெய்த வாங்கவளா
யிரம்பெயரும் அறைந்து போற்றும் (19)

சிவையனந்தை பராசத்தி நிட்களகே
வலைமாயா நீதை சாந்தை
கவுரிமகேச் சுரியமிர்தை யசலைசுமங்
கலைநிவர்த்தி காளி கங்கை
பவகரைமா தேவிமகா நந்தைநா
தாக்கியைபார் வதிமா மாயை
கவதைமா ஞநிதை பிரதானை
பிரகிருதி துருவை யேகை (20)

சுத்தைவியா பினிசாவித் திரிசகலை
சூக்குமைசுக் கில புராணி
நித்தையநுப் பிரவேசி சோயம்பூதி
மகாரூபை நிமலை சோதி
சித்திசரு வாதாரை பிரகுதி
தருமவித்தை கன்மா நிதை
சத்தியைமா னினிதேவி தாமசிமா
நவிமேதை சுகீதி நீதி (21)

சுருதிசரு வாணிசரச் சோதியுருத்
திராணிமா னசிக வாகை
மிருதியோ கினிசோபை சுந்தரியம்
பிகைலோபை விசுவ ரூபை
விரதையதி சோபனமா பெலைகாந்தை
விபாவனைவாக் கியை பவாநி
பிரமவிஞ்சை புருடமோ கினீநாத
ரூபதரை புராண விஞ்சை (22)

பகவதிசம் பவைமகிட வாகினியச்
சுதைபரம கலைய நாதி
மகதிசத்த யோனிபிர தானபுரு
டேச்சுரிமா விஞ்சை சாந்தை

குகைசருவ சத்திகலை யவ்வியத்த
லக்கணைநிர்க் குணிபி ராமி
சகமாதா விபாவரிசின் மயையனந்த
விபவைசரா திதை துர்க்கை (23)

இவைமுதலா வியநாம மாயிரமு
மெடுத்தோதி யிருகை கூப்பிப்
புவிபுனல்தீ வளிவிசும்பு வெங்கதிரோன்
மதியெச்சம் புரிவோ னாகும்
சிவனுருவி லிங்காத செல்விமல
ரடிக்கமலஞ் சிந்தை சேர்த்தித்
தவலருஞ்சீர் மலையரையன் மகிழ்பூப்ப
விங்கிதனைச் சாற்ற லுற்றான் (24)

வேறு

குங்கும மெழுகிய கொம்மை வெம்முலை
மங்கையிப் பேருரு வொழித்து மானுற
விங்கு*நீ நல்லுரு வெடுத்தி யென்னலும்
அங்கலும் மேனிதன் னுருவ மாயினாள் (25)

மைம்மெழுக் கெறிந்தென வளர்ந்த கூந்தலுங்
கொம்மைவெங் கதிர்முலைக் கோடு தாங்கலா(து)
அம்மவென் றலமரு மிடையு மாந்தளிர்ச்
செம்மையி னலங்கவர்ந் தொளிருஞ் செங்கையும் (26)

குழைமறிந் தருள்பொழி குவளை யுண்கணுங்
கழையுற மிருதடந் தோளுங் கண்கவர்
எழில்கனிந் தொழுகிய முகமு மீர்ங்கதிர்ப்
பொழிதரு நித்திலம் பொருவு மூரலும் (27)

தவளையங் கிண்கிணித் தாளு மெல்லிதழ்க்
குவளையின் மணங்கமழ் கோல மேனியும்
பவளவார் கடிகைமெல் லிதழும் பன்மணித்
திவள்கதிர் மேகலை திளைக்கு மல்குலும் (28)

* இங்குநின்னல்லுரு (பி. பே.)

ஆயநல் லுருவினை யன்பி னேக்குறு
மியுயர் பனிவரை வேந்தன் காதலின்
ஏயவன் பொடுமுழு துலகு மீன்றருள்
தாயிரு சேவடி தாழ்ந்து கூறுவான் (29)

வருபிர தானகற் புருடன்* மானுறத்
தெரிவரு நான்மலர்க் கடவுள் செங்கண்மால்
பொருவருங் காமநல் லுயிர்கள் புங்கவர்
அரிவைநீ யளித்தன வாகு மென்பரால் (30)

பேதமா யபேதமாய்ப் பெக்தமி யாவையுந்
தீதறப் பரித்திடுஞ் செல்வி நீயுனைக்
காதலின் மகேச்சுரன் கலந்தி லானெனில்
ஓதுமிவ் வுலகெலாம் படைத்தற் கொண்ணுமோ (31)

வேறு

உயர்வா னவரி னிந்திரனி
யோதும் பிரம வாதிகளிற்
செயிர்தீர் கமலப் புத்தேணி
மொய்ம்புள் ளவற்றிற் றிகழ்வனிநீ
பயிலும் யோகப் பண்பினரிற்
சனற்கு மார னிபரத்தின்
முயலு மறைதேர் முனிவரரி
லருள்கூர் வசிட்ட முனிவரனி (32)

சாற்று மறைதேர் முனிவரரில்
வியாத னீகற் சாங்கியரிற்
போற்றுங் கபில முனிவரனி
புலவுக் கணிச்சி யுருத்திரரில்
ஆற்றல் சான்ற சங்கரனி
யாதித் தியரி லுபேந்திரனி
மாற்றற் கரிதா முயர்சீர்த்தி
வசுக்க டம்மிற் பாவகனி (33)

* மானுறத் தெரிவரும் (பி. பே.)

தவலில் மறையிற் சாமநீ
சந்தச்சி னிற்சா வித்திரிநீ
நவிலும் விச்சை தனிற்பிரம
விச்சை நீசுற் சத்திகளில்
நுவலற் கரிய மாயைநீ
வருணந் தனினூன் மறையோனீ
யெவரும் விரும்பு மாச்சிரம
நான்கி னில்வாழ் வுடையோனீ (34)

ஈசர் தம்மின் மகேச்சுரனீ
புருடர் தமிலீர்க் துளவோனீ
யாசின் னுயர்ந்த கற்பகத்தி
னருளீ சான கற்பகநீ
பேசும் யுகத்தி லாதியுக
நீபே ரொளியிற் கதிரோனீ
மாசில் கவியிற் பாரதிநீ
மாயா விகளின் மாதவநீ (35)

கற்புள் ளவரி லருந்ததிநீ
பறவை களில்வெங் கலுழனீ
வெற்பி லுயர்ந்த பொலங்கிரிநீ
வெவ்வா யரவு ளனந்தனீ
யற்பி னிற்ப நடப்பனக
ளனைத்து நீமற் றுதலினுற்
சிற்ப மாகிப் பெரிதாகிச்
செறிந்த பிரம நீயாமால் (36)

என்று விருகை மலர்கூப்பி
யிதய நெகிழ கண்பனிப்பத்
தன்னுத் ததும்ப நின்றேத்திப்
புவன மனைத்துந் தனியீன்ற

நின்னைப் பயந்த மேனைக்கு
 மெனக்கு நிகரா ரெனவியந்து
பொன்னார் கமலச் சேவடிகள்
 போற்றுந் தந்தைக் கிவைபுகல்வாள் (37)

புரியுங் கருமம் பலன்விழையா
 துள்ளம் புனித மாய்நாளும்
அரிய மகங்க ளிளிதாற்றி
 யென்னை யினிதி னடிபோற்றிக்
கருதற் கரிதா முத்திநினைக்
 களிபப லென்னக் கருணையொடும்
வரமாண் டளித்து மீட்டுமுள
 மகிழ்ச்சி கூர்ந்திங் கிவைபுகல்வான் (38)

அருமா மறைகள் முழுவதுமென்
 சத்தி யாகு மாங்கவைகள்
திருமா லுந்தித் தடம்பூத்த
 செல்வன் முன்னைப் படைப்பதனில்
ஒருகான் மறையாம் பெயரோடு
 நடக்கு மந்நூல் வழியொழுகார்
மருவார் முத்தி வீடதனின்
 மம்ம ருறுநூல் வலைப்பட்டே (39)

வேத வொழுக்க மிகழ்ந்துபுல்லர்
 விரகின் றமபோற் றவிபுனையுந்
தீது நூலின் வழிச்சென்றோர்
 செல்வர் நரகர்க் கதிதிகளாய்
ஆத றன்னூற் பின்சமயங்
 கற்றோர் முகத்தி னருமறைகள்
ஓதி யுணர்ந்த முதுக்குறைவி
 னுரவோர் சிறிது நோக்காரால் (40)

சாறு வாங்கங் காபாலம்
    சாற்றும் பாஞ்ச ராத்திர நூல்
மாறு செய்யும் வாமமுள
    மயக்கச் செய்த நூலாகும்
தேறி யின்னூற் படிநின்றோ
    ரிவற்றை யுலகிற் செப்புவோர்
பானு துடரு நரகத்தி னளப்பில்
    காலம் படிந்திடுவார் (41)

வேத நூல்க ளவற்றின்வழி
    விரட்டாங் சுவாயம் பூமனுமுன்
ஓதுநூல்கள் வியாதமுனி
    யுரைத்த நூல்க ளவற்றின்வழி
தீதி லருமா மறைக்கிழவர்
    செப்பு நூல்க ளனைத்துமே
நீதி நூல்கள வற்றின்வழி
    நின்றோர் நெறியி னின்றோரே (42)

அங்க மாறு மறைநான்கும்
    மீமாங் கியமென் றருள்கொழித்துக்
தங்கு நீதி நூலொன்று
    புராண மொன்று தவறெறிந்து
பொங்கு தரும நூலொன்று
    புகன்ற விரேழ் விஞ்சைகளை
யங்க ணுலகின் றவனளித்தா
    னிவற்றை யுணர்ந்தோ ரறிவுடையோர் (43)

இன்ன விஞ்சைத் துறைபோய
    வியாதன் முதலா மிருந்தவத்தோர்
அன்ன மிவரு நான்முகனோ
    டழியா முத்தி யடைவரவர்

பன்னு மறையின் பொருடெளிந்தோர்
பாழ்க ளொருமூன் றினையிகழ்ந்து
துன்ன வரிதாய்ச் சுடர்க்கொழுந்தாந்
துரியா தீதந் தனிலடைவார் (44)

அருவாய்ச் சித்தா மென்னிலைமை
யுளத்தி லிருத்த வரிதென்னில்
உருவாய் நினைதி யென்றுருவ
முணர்தற் கரிதே லுன்னுளத்தின்
மருவா நின்ற வெத்தேவி
னுருவா யேனு மனத்திருத்திற்
றருவேன் முத்தி யத்தேவி
னுருவாய் விபுவாந் தன்மையால் (45)

என்று தனது நிலையனைத்து
மியம்பித் தக்கன் புனிற்றிளமான்
கன்று தனதோர் கரத்தேந்துங்
கருணைக் கடலை யிகழ்ந்ததனுல்
மன்ற மற்றுன் மகளாக
வந்தே னென்னை மதிக்கண்ணிக்
குன்ற வில்லிக் களித்தியென
வுலகம் பூத்த கொடியுரைத்தார் (46)

களிக்குங் கயல்போற் குழைதடவுங்
கண்ணி பவளக் கனிமலர்ந்து
தெளிக்கும் பழைய மறைமழலைச்
சில்லென் கிளவி கேட்டுவகை
தளிர்க்கும் பசும்பொற் குடுமிவரைத்
தலைவன் புனிற்று மதியமுதந்
துளிக்குங் கொன்றை வேணியனைத்
தொழுது தவமாற்றிடு மேல்வை (47)

இமையாச் செங்க ணேற்றெகினப்
பாகன் கவரி புடையிரட்ட
வமுதாற் றிருப்பக் கடல்கடைந்தோ
னண்ண லேற்றுக்கொடி யெடுப்ப(த்)
திமிரம் பருகி வெயிலுமிழுஞ்
செங்கேழ்ப் பருதி விளக்கெடுப்பக்
குமுத மலர்த்துங் குளிர்கதிரோன்
கொற்றக் கவிகை மிசைநிழற்ற (48)

அண்ண லயிரா வதப்பாகன்
அடைப்பை தாங்க வெய்திறுயிர்
உண்ணுங் கூற்றங் குற்றுடைவா
ளேந்த விர்ந்தண் டுளியிறைப்பத்
தண்ணென் சிவிறி யிரங்குகடற்
றலைவன் றுங்கச் சாந்தாற்றி
வண்ணப் புரிகோட் டேற்றிரலைப்
பாகன் போந்து மருங்கசைப்ப (49)

நிலவுக் கதிர்கால் முத்தவடங்
கிடக்குந் தடந்தோ ளிநிக்கிழவன்
மலர்வாய்த் தம்ப லுமிழ்பொன்னம்
வட்டில் தாங்கிச் செம்மாப்ப
விலகு கதிர்வான் பிறையெயிற்ற
நிருதி வேந்த னெரிகான்று
புலவு கமழு முத்தலைவேல்
முடிமேற் றுங்கி முன்போத (50)

சீற்றத் துப்பிற் புரிகோட்டுச்
செங்க ணேற்றுத் தகரூர்வோன்
கூற்றை யுதைத்த சேவடியிற்
றெடுபா துகைகைக் கொண்டேக

வேற்றை யுயர்த்த விசானன்
பினாக மேந்திச் செலவயரப்
போற்றி யமரர் முடியுழுதாள்
வியாழம் விசையம் புகழ்ந்தேத்த (51)

அவுண ரியக்கர் கந்தருவர்
வசுக்கள் முனிவ ரருந்தவதோர்
நவையில் சித்தர் மருத்துவர்கள்
வரைகள் கோட்கள் நதிகதங்கள்
நுவலு நாட்க ளனந்தமுத
லுரகவேந்தர் நோன்றருக்கள்
துவலைப் படுதெண் டிரையாழி
யாவுந்தொடர்ந்து பின்போத (52)

சனகன் முதல முனிவரர்கள்
மரீசி முதல்வ ருலகுதந்தோர்
புனைநீந் தொடையாழ்க் கின்னரர்வான்
பொருப்பி லுறையுங் கிம்புருடர்
கனலுஞ் சுழல்கட் பேய்பூதங்
கனைபொற் கழற்காற் குய்யகர்வெவ்
வினைதீர் கருடர் பறவைகள்பல்
விலங்கு தொழுது பின்செல்ல (53)

தக்கன் மகத்திற் புகுமமரர்
தலைதோ ளுடலங் கண்விழுங்கிக்
கக்குங் குடுமி முத்தலைவேல்
வீரன் கடவுட் சிலைமணிமான்
மிக்க சீற்றத் தெறும்வலித்தோட்
சண்டன் முதலாம் விளங்குசுடர்
முக்கட் பெருமான் கணமனைத்து
மிருபாற் றொடர்ந்து முன்செல்ல (54)

அண்ட முகடு மோமைபடப்
பானு கம்ப னதிர்குரல்வான்
கொண்ட லுருமி னுயிரம்வெண்
குடவாய்ச் சங்க மெடுத்தூத
மண்டு திறல்கூர் வெஞ்சினத்த
வாண னேரா யிரங்கரத்தால்
விண்ட துலக மெனச்சதியின்
மயிர்க்கண் முழவு மீகமுழக்க (55)

வேறு

ஆள்வழக் கொழிய நீண்ட
வரிமதர் மழைக்கட் செவ்வாய்
காளிள மதியை நக்க
நறுநுதல் நகைகொண் முத்தம்
நீள்வடஞ் சுமந்த கொங்கை
யுருப்பசி முதலோர் நேர்போய்த்
தாளிணைப் பெயர்த்து முன்னஞ்
சதிமுறை பிறழா தாட (56)

கன்னலி னமிழ்திற் றேனின்
கனியினிற் கனிந்து பாட
வின்னிசை மகதி வீணை
நாரத னிசைவ ழூத
கின்னர மிதுன நாணக்
கிளைநரம் புளரு நல்யாழ்ப்
பன்னருஞ் சிறப்பின் மிக்க
தும்புரு முதலோர் பாட (57)

மருக்கிளர் துளவத் தண்டார்
வானவன் முதல விண்ணோர்
அருக்கனி லழகு காட்டு
மவிர்மணி மவுலி தோறும்

நெருக்கன்மின் போமின் காண்மி
    னீங்குமி னிள்மி னின்மி னென்னுத்
தருக்குடை நந்தி தாக்கும்
    பிரம்பொலி தரணி போர்ப்ப (58)

வெள்ளிவே தண்டத் துச்சி
    யரசுவீற் றிருக்குந் தூய
பிள்ளைவெண் டிங்கட் கண்ணி
    வார்சடை முடித்த பெம்மான்
ஒள்ளழற் செங்கட் பேழ்வாய்
    நரைவிடை துணைவி னூர்ந்து
தள்ளருந் தவத்தோர் வைகு
    மிமயமால் வரையிற் சார்ந்தான் (59)

மழவிடை யிழிந்து முக்கட்
    பண்ணவன் மலரி னோனும்
பொழிகதிர் நேமி யோனும்
    பொருப்புறழ் தடக்கை தாங்க
விழைவொடும் போந்து மாமன்
    வியப்பொடுந் தொழுது நல்கு
மழலுமிழ் தறுகட் பேழ்வா
    யரியணை யிவர்த மர்ந்தான் (60)

மருகனைத் தொழுது வாழ்த்தி
    மலர்த்தடங் கண்ணே வாயாய்ப்
பருகுவான் போல நோக்கிப்
    பண்ணவர் முனிவர் யார்க்கு
முருகியுள் குழையச் செம்மாந்
    துவப்புறு முகமன் கூறி
அருவைமீ ருலக மீன்ற
    வன்னையைக் கொணர்மி னென்றான் (61)

என்னலுங் குருதிக் காந்தன்
முகிழ்விர லிருகை கூப்பி
யன்னமு மயிர்வாய்ச் செங்கட்
பிடியுமுள் ளயர்ந்து சோரப்
பொன்னடிச் சிலம்பு பைம்பொற்
கிண்கிணி புலம்ப வேகி
மன்னவ னுரைத்த மாற்ற
மேனையை வணங்கிச் சொன்னூர் (62)

மைதவழ் கூந்த னல்லார்
கூறலு மகளைப் புல்லி
யைதெழின் மேனி யெங்கு
மரிறபத் *திருநீ ராட்டிக்
கொய்தவிர்த் தாமஞ் சூட்டிக்
குங்கும முலையிற் கோட்டிப்
பெய்தொளிர் பைம்பொற் பூணிற்
பேரெழின் மறைத்திட் டாரால் (63)

எரிமணி முகடு வேய்ந்திட்
டிளங்கதிர்க் கற்றை காலும்
குருமணி யடைப்பை தாங்கிக்
கூரொளி யிட்டு வைகும்
அரிமதர் நெடுங்கட் செவ்வாய்ப்
புலோமிசை யலங்கு காந்தண்
மருமலர்க் கரத்தாற் றாய
வெள்ளடை மடித்து நல்க (64)

அழகுபூத் தொசிந்த கொம்பி
னம்பகட் டல்குற் செவ்வாய்க்
குழைபுறங் கண்ட வேற்கட்
டிருவுகெய்த் திருண்ட கூந்தல்

* அரில்தபத் திமிரியாட்டி

நுழைநுசுப் பலங்கு வேய்த்தோள்
　　வாணியும் நொய்தி னெய்திப்
பொழிகதிர் நிலவு காலும்
　　சாமரை புடையின் வீச (65)

கன்னியங் கற்பு வாய்ந்த
　　வருந்ததி வாழ்த்தக் கங்கை
பன்னரு மறைகள் பாடி
　　யினியபல் லாண்டு கூறப்
பொன்னகர்க் கிறைவற் றந்த
　　வதிதியும் பொறிகள் சிந்த
முன்னருந் தவத்தி லோபா
　　முத்திரை யாசி கூற (66)

தாழ்தடக் கையின் யார்க்குந்
　　தழுமுற்று வாரா தோங்கும்
விழ்முலை யரம்பை செம்பொற்
　　சிவிறிநீர் விழைவிற் றாற்றக்
கேழ்கிளர் மயிலஞ் சாயற்
　　றிலோத்தமை கிளக்குஞ் செய்ய
சூழ்சுடர்ப் பருதி மானுஞ்
　　சுடர்மணி விசிறி யேந்த (67)

புல்விதட் குவளை யுண்கட்
　　காளிபொற் பிரம்பு தாங்கி
மெல்லென நடத்தி யென்று
　　வியந்தடி யிடு போற்ற
மல்லலம் புவனம் யாவும்
　　ஈன்றசிற் றுதர வல்லி
பல்லியங் கறங்க மன்றற்
　　பயிலுமண் டபத்துள் புக்கார் (68)

வேய்நெடுந் தோளி பெய்த
விண்டுவை முதல தேவர்
தூயினர் மலர்கள் கண்ணீர்
துளித்தன ருவகை பொங்க
வாயிரநாமம் பாடி
யாடி னரடியின் விழ்ந்தார்
தாயினைக் காணின் மைந்தர்
மகிழ்வது தக்க தன்றே (69)

கடிமணக் கருமம் யாவும்
நான்முகக் கடவுள் காட்ட
விடிமுர சிரங்கி யார்ப்ப
வினவலை யலறி யேங்க
வொடிவில்சீ ரிமைய வேந்தன்
வாக்கிய வுதகத் தோடும்
வடிமலர்க் கண்ணி னானை
மகேசனுக் கருளி னானே (70)

தூயவிக் கதைகற் றோர்கள்
விட்டின்பந் துய்ப்ப ரின்னுள்
ஆயிர நாம மோதி
யாரமுற் கருமஞ் செய்வோர்
மாயிரு ஞாலங் காத்துப்
பின்னர்வான் றருவி ழிமல்
மீயுயர் பசும்பொன் னாட்டு
மேவிவிற் றிருப்ப ரென்றான் (71)

பன்னிரண்டாவது
திருக்கலியாண வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 363.

---

## பதின்மூன்றுவது
## பிருதுவாதியர் தோற்ற முரைத்த வத்தியாயம்

---

*அன்னநற் காதை யாவு*
*முரைத்தனை யைய வென்னுப்*
*பொன்னகர்க் கிறையு நல்யாழ்*
*முனிவனும் புகழ்ந்து வேதம்*
*பன்னிய பிருகு வாதி*
*முனிவரர் படைப்பு முற்று*
*நன்னயத் தியம்பு கென்ன*
*நாரண னவில லுற்றுன் (1)*

### வேறு

*பிருகுமுனிக் கவ்வனைத்தோட் குழையலைக்கும்*
*பிணைநெடுங்கட் கியாதி யென்பாள்*
*திருவயிற்றி லஞ்சுணங்கார்க் தழகுகுடி*
*யிருந்துநனி செம்மாந் தோங்கும்*
*வருமுலைச்சென் துவர்க்கனிவாய் வாரொளிமென்*
*கருங்கூந்தல் மயிலஞ் சாயல்*
*முருகுயிர்க்குஞ் செழுங்கமலப் பொருட்டுறையு*
*முதல்வியினி துதித்தா ளன்றே (2)*

*பின்னருமம் முனியளித்த தாதாவும்*
*விதாதாவும் பிறங்கு கோட்டுப்*
*பொன்னெடுமால் வரையுயிர்த்த வாயதியை*
*நியம் பொறிகள் சிந்து*
*மன்னியசெந் தழல்சான்ருய் மணம்புரிந்து*
*பிராணன்மிரு கண்டு வென்னும்*
*பன்னருஞ்சீர்ப் புதல்வர்தமை மகிழ்விறெடு*
*முலகேத்தப் பயந்தா ரன்றே (3)*

போற்றரிய மிருகண்டுப் புரமூன்று
    மொருங்கெரித்த புனிதற் போற்றி
யேற்றெருமைக் கடும்பாகன் றனியானே
    யரனடியார்க் கெய்தா வண்ணை
மாற்றியிடு மார்க்கண்ட முனிவரனை
    மகிழ்ந்தளித்தான் பிராண னென்போன்
ஆற்றலரு மறைதேரும் வேதசிர
    செனுமுனியை யளித்தா னன்றே (4)

தழல்வேள்வி யினிதாற்று மரீசிமுனி
    சம்பூதி யிடத்திற் றாய
நிழன்மேவு பவுரணப்பேர் மைந்தனையுங்
    கிருட்டிமுத னிகழ்த்து நான்கு
குழைமேவு மதர்நெடுங்கண் மகளிரையு
    மினிதளித்தான் கோதில் சீர்த்திப்
பழமறைதேர் பவுரணரும் விசையனொடு
    பர்வதனைப் பயந்தா னன்றே (5)

புலத்தியற்குக் கமைவயிற்றிற் கருத்தமனுஞ்
    சயிட்டுனுவும் பொருவி லாத
வுலப்பருசீர் மிகவோங்கு வன்கபீ
    வாசனும்வந் துதித்தார் நாளும்
அலக்கணறு மத்திரிகல் லனசூயை
    யவ்வயிற்றி னலங்கு சோமன்
கலக்கமில்தத் தாத்திரயன் றுருவாச
    னெனுமிவரைக் களிப்பிற் றந்தான் (6)

அங்கிரா வெனுமுனிவற் கமுதுயிர்த்து
    விடமுமிழு மலங்கு வேற்கண்
மங்கையா மிருதிகுகுச் சினிவாலி
    ராகையனு மதியென் றேதுங்

கொங்குசேர் நறுங்கூந்தற் குழைதட வந
துயிர்பருகுங் கொடிய வேற்கட்
டிங்களா மெனவார்வப்பற் றெழுவாண்
முகத்தசிறு மியரை யீன்றாள் (7)

மறைபயிலும் புலத்தியநற் பிரீதிநல
மகிழ்வெய்தி* வேத வாகுத்
திறல்கெழுநற் †றம்போளி யெனுமைந்த
ரிருவரையுஞ் சிறப்பி னல்கி
நறைகமழுங் கருங்கூந்தற் சந்ததியை
யுரைத்தனள்சந் ததியென் பாளும்
அறுபதினா யிரம்வால கில்லியரை
கிரதுவினை யணைந்து பெற்றாள் (8)

கற்புருவு கொண்டனைய வருந்ததிநல்
வசிட்டனருள் கலந்து மேவிச்
சொற்றரசன் பயனூர்த்த வாகுசே
வனன்புகலுஞ் சுதபா வோடு
மற்புடைய சக்கிரனல் லவனென்று
மெழுமகவை யயில்வே லுண்கட்
பொற்புவழிந் தொழுகுமுகப் பூவையையிவ்
வுலகுய்யப் பொலிவி னீன்றான் (9)

வன்னியெனு மழற்கடவுள் சுவாகையெனு
மனைவியிடத் தன்பு கூர்ந்து
பன்னுதிறற் பாலகனைப் பவமானன்
றனைச்சுசியைப் புரிவி னீன்றான்
அன்னவரி லரணிதனிற் பிறந்தவழல்
பவமான னழன்று விசு
மின்னிடத்திற் பிறந்தவழற் பாவகன்மென்
சுசியெனுந்தீ வடவைத் தீயே (10)

---

*சே தவவாகு என வடமொழியிற் கண்டது.

† (1) தம்போசி (2) தத்ரிசி எனவுங் கூறுவர்.

அன்னவழற் கடவுளரோ மூவருமற்
றேரொருவ ரைம்மூன் றுக
மன்னியசாற் பாலைந்து மகவின்றூர்
மற்றவர்மூ தாதை யோடு
துன்றுமழற் கடவுளர்தந் தொகையோதி
னென்றெழித்த வைம்பா னென்னப்
பன்னிடுவ ரிங்கிவர்கள் சிவநெறியி
னினிதொழுகும் பண்பி னோரே (11)

மறைகிடந்து விளையாடு நன்றாவே
தியனிடத்தின் மகிழ்வி னோடு
முறையின்மகம் புரிந்தோரும் புரியாரு
மாய்ப்பிதிர்க்கண் மொய்ம்பி னோடு
மறைதருமக் கினிச்சுவத்தா வெருகிடத
ரெனும்பெயரோ டமைந்தார் தேவர்
செறியுமா றுடரிவர்தம் பிதிர்க்களென
மற்றிவரைச் செப்பு வாரால் (12)

உரைத்திடுமக் கினிச்சுவத்த ரெனுந்தேவர்
பிதிர்க்களுநீ ளுலப்பில் சீர்த்தி
நிறைத்தவெரு கிடதரெனு மானுடர்தம்
பிதிர்க்களுநன் னெறிவ ழாது
முருக்கிதழ்மென் சுவதைதுணை முலைமுகடு
புயந்தழைப்ப முயங்கிச் செய்ய
திருக்கிளர்மே னையைத்தாய வைதரணி
தனையிதயஞ் சிறப்ப வின்றூர் (13)

மேனையெனு மணங்கரசி மலையரையன்
புயந்தழுவி வியப்பி னோடு
மூனவறு மைநாகம் பறவைப்பேர்
வரைகங்கை யொளிகு லாய

பானிலவுக் கதிர்பரப்பி நள்ளிருண்மேய்ந்
தழகொழுகும் பனிமென் கோட்டுக்
கூனல்மதி வடந்தாழ்ந்த கொம்மைமுலை
யுமையிவரைக் குறிப்பி னின்றாள் (14)

கொம்மைமுலை வேய்நெடுந்தோட் குழையலைக்கு
மதர்நெடுங்கட் கொவ்வைச் செவ்வா
யெம்மையா ளுடையவடன் கதைமுன்ன
ரிசைத்தனமற் றியம்பு தக்கன்
செம்மைசேர் புதல்வியர்தம் மக்கள்வரு
தோற்றமனந் தெரியச் சொன்னேம்
அம்மனீர் கேட்பனகள் யாவையுநன்
கியம்புவமென் றறைத லோடும் (15)

வாளமரின் றிறம்புரியு மன்னவர்தந்
தோற்றநனி வழங்கு கென்ன
பானகமழ் நறுங்கூந்தற் புலோமிசைவெம்
முலையானைப் பாகன் றாய
கேள்வியினற் றுறைபோய மகதியாழ்
முனிவணங்கிக் கேட்ட லோடு
மாளரியாய் இரணியன்ற னுரம்பிளந்த
நெடுமாய னறைத லுற்றான் (16)

பதின்மூன்றுவது
பிருகுவாதியர் தோற்ற முரைத்தவத்தியாய முற்றிற்று,
ஆகத் திருவிருத்ததம் 379.

---

## பதினான்காவது
## தக்கனைச் சபித்த வத்தியாயம்

அலங்கிலேவேற் சுவாயம்பு மனுவென்போன்
சதருபை யாக மேவி
யிலங்குபுகழ்ப் பிரியவிர தனைப்புகழுத்
தானபா தனையாங் கீன்றான்
வலங்கெழுந்தா ளுத்தான பாதனியற்
றுருவனையுண் மகிழ வீன்றான்
றுலங்கியசம் புவைமணந்து தாஸியனைச்
சிட்டனையத் துருவ னீன்றான் (1)

எட்டானைத் தம்பத்தோ டிகல்புரிதன்
சயத்தம்ப மினிதி னுட்டுஞ்
சிட்டனில விதழ்ச்சுமதி *முலைதோய்ந்து
ரிபுவிருக தேசன் விப்பிரன்
மட்டவிழ்தா ரிபுஞ்சயன்சொல் விருகலனென்
பவர்ப்பயந்தான் ரிபுவும் வாய்ந்த
பெட்பினெடும் பிருகதிதன் *முலைதோய்ந்து
சக்குசனைப் பெற்றா னன்றே (2)

தீய்த்துமிழும் வெள்வேற்கைச் சக்குசனு
மனமருட்டிச் சிறப்பு வாய்ந்த
வேய்த்தடந்தோட் புட்கரணி முலைதோய்ந்து
சாக்குசனை விருப்பி னீன்றான்
ஏத்துபுகழ் சாக்குசனும் நாக்கிடந்து
கதிரெறிக்கு மைதேய்ந் தல்குல்
வாய்த்தபொலங் கொடியனைய நாட்டுவலை
தனையினிதின் வதுவை செய்தான் (3)

* முலை சேர்ந்து (பா. பே.)

ஐதெழிலார் காட்டுவலை யன்பிநெடு
*மனங்கலந்தா ருருவெய் தாம
நெய்திகழ்வேற் சுசிபுருவக் கிளியுக்கிரன்
முளிகுழ நிலனேழ் போற்றச்
செய்தவங்கூர் சுத்துய்ம்மன் சத்துய்ம்மன்
முன்னுலகிற் சிறப்பி னோங்கு
மெய்தருஞ்சி ரபிமன் யுமகளிவரோர்
பதின்மரையு மினிதி வின்றான் (4)

ஆங்கவரி லுருவென்போ னம்பலைக்குங்
கருந்தடங்க ணாக்கி னேயி
வீங்குதட முலையுணர்ந்திட் டங்கனேகத்
சுமனசனை விளங்கு வேற்கை
யோங்குதிற லுக்கிரனை கிரிசனைச்சா
ரனைக்கயனை யுவப்பி லின்றான்
ஈங்கிவரி லங்கனென்போன் வென்னென்றும்
புகழ்வேந்தை யினிதி வின்றான் (5)

வேறு

அரசுவிழுங்கி வாய்காய்ந்த வயில்வே
லுழுவன் வென்னென் போன்
கரைகொன் றிரங்கு கடல்வலைய
†முழுதும் மகவான் கன்றாக
வுரிய பொருள்க ளனைத்தினையும்
பாலாய்க் கறந்தி னுயிர்புரந்த
பிருது வென்னு மணிமவுலிப்
பெரியோன் றன்னைப் பெற்றனனால் (6)

அன்னோன் வேள்விச் சாலைதனிற்
காதை நவில்வா னழல்நேமி
முன்னோன் சூதமுனியாகப் போந்தா
னென்பர் முதுக் குறைந்தோர்

* மலங்கலந்தாருனத வெய்தாம் (பி, பே.)
† பசுவாம் மகவான்.

பைங்கா கத்தின் கதிர்ப்பொழியும்
　　நெற்றிக் கிடந்த பாரேழுந்
தன்னே ராணை தனிசெலுத்தும்
　　பிருதுமாழ்கி யிவை சாற்றும் (7)

மழலைத் தீஞ்சொற் கிண்கிணிக்கால்
　　மைந்த ரில்லா வரசாட்சி
விழையே னென்று வலங்குளைய
　　சிங்கா தனம்விட் டிழிந்தேகி
மழைவிழ்ந் துறங்கு நெடுங்குடுமிக்
　　கோவர்த் தனமால் வரையெய்திக்
கழையா லானின் கணங்குவித்த
　　கண்ணற் பழிச்சித்தவம் புரிந்தான் (8)

இழுக்குத் தேறற் செஞ்சேற்றிற்
　　பெடைவண் டெய்திச் சேவல்முனம்
வழுக்கி விழ்ந்து நாணெய்தும்
　　வண்டா மரையாள் புணர்மார்பன்
ஒழுக்கந் தன்னி னிகரில்லா
　　வரச னுஞற்றுந் தவநோக்கிப்
பழுத்த கனிவிண் டமுதுக்கும்
　　பான்மை போல விவையுரைப்பான் (9)

பாற்றி னுடன்வெங் கழுது*தொடர்
　　பருதி வேலோய் பன்னெடுநாள்
ஆற்றுந் தவங்கண் டுளமகிழ்ந்தே
　　மழுதுங் கனியுந் தனிகுலவி
யூற்று மழலை மொழிச்சிறுவ
　　ரிருவர் தந்தோ மெனவோதிக்
கோற்றேன் குதலைச் செழுங்கமலைக்
　　கொழுநன் மறைந்து போயினனால் (10)

---

* வெங்கழுதுபடர் (பா. பே.)

முழையி னுதவுங் கொடைத்தடக்கைப்
பிருது வென்னும் வாழ்வேந்தன்
அழகு முலையுஞ் சுமக்கலா
திறுகு மிடையத் தரத்தாளைக்
கழைமென் பசுந்தோ ளலனுகர்ந்து
கதிர்செய் வடிவேற் சிகண்டியையும்
நிழல்செய் கதிர்வாள் விரதத்தான்
றனையு நெறியி னினிதளித்தான் (11)

ஒன்னார் மகளிர் கலன்கழிப்ப
வொளிறும் வடிவாள் உறைகழிக்கும்
பொன்னார் தடந்தோட் சிகண்டியென்போன்
பொருவில் சுசீலன் றனைப்பயந்தான்
அன்னோ னிமைய வரையடைந்து
கங்கை யாற்றி னகன்கரையின்
மின்னுக் கதிரோன் மண்டலத்தின்
விருப்பி லீசன் றுள்போற்றி (12)

பால வெண்ணி *றொளிமுத்த
சுவேதாச் சுவனும் பாசுபதன்
சால வருமா தவம்புரியு
மரசன் முன்னர்த் தானணுகி
மாலோ னீசன் றுள்போற்றி
வரம்பெற் றனனீண் டரம்பொருத
வேலோ யென்னத் துறப்பித்து
விழுமா மறையு மொன்றுரைத்தான் (13)

அருமா மறையா னுளந்தெருளுற்
றன்னோ னுங்குத் தவம்புரிந்தான்
மருமா் கேள்வி விரதத்தா
னென்போ னுலக மகிழ்ந்தாங்கப்

* றொளி பழுத்த (பா. பே.)

பெரியோ ரேத்தும் பிரமனென்
பெருகச் சென்போன் றனைப்பயந்தான்
தெருளா லவனுங் கடலுயிர்த்த
தெரிவை முலையிற் றிளைத்தனனால் (14)

இமையோர்* பரவும் பிரச்சேதச்
சென்றும் பெயரி னொருபதின்மர்
தமையாங் களித்தா னம்மைந்தர்
பதின்மர் தாமுந் தவலருஞ்சீர்
அமையார் தடந்தோள் மாரிடையை
யன்பின் வதுவை யாற்றிநறுங்
குமுதச் செவ்வாய்ப் புத்தமுதங்
கூட்டுண் டமர ரெனக்களித்தார் (15)

களிக்கும் வேந்த ரொருபதின்மர்
கலந்து கடவு ளருங்கற்பிற்
றுளிக்குந் தேன்முர் நறுங்கூந்தற்
றுவர்வாய்த் தீஞ்சொன் மாரிடையாங்
களித்தாள் தக்கன் றனைமகவா
யெனலு மவனீண் டுதித்ததெவன்
தெளித்தீண் டுரைத்தி யெனவேலாடுந்
திருமால் தனை யுரைசெய்வான். (16)

கடவுட் பொன்னங் குடுமிநெடுங்
கயிலை வரையி னமரர்தொழ
உடனக் கண்ணா னெடுந்தக்க
னுவப்பி னெய்தி முக்கணனை
முடியின் வணங்க வவர்க்கியன்ற
முகம னோடு மருள்புரிய
விடைகொண் டேகித் தத்தமது
பதியின் விரைவிற் சென்றடைந்தார் (17)

---

* இமையோரேத்தும் (பா. பே.)

காம னுடலம் வெந்தொழிய
நுதற்கண் விழித்த காபாலி
மாம னெனவு மதித்திலனென்
றுள்ள மாழ்கு மமையத்திற்
றேமன் கூந்த லுலகீன்ற
செல்வி தாதை மனையெய்தத்
தூமம் பிறக்கத் தனிநோக்கிச்
சொல்லாற் கடுசொற் பலசொன்னான் (18)

திங்கட் கண்ணி முழுமுதலை
யிகழ்ந்த மாற்றஞ் செவிப்படலும்
மங்கை நீங்கி யுலகீன்ற
வன்னை யிமவான் மகளாகிக்
கொங்கு விரிக்கும் பசுங்கொன்றை
நறவூற் றிருப்பக் குளிர் தூங்குங்
கங்கை வேணி யிடமருங்கின்
மகிழ்வி னோடுங் கலந்தனளே (19)

உலக மீன்ற பொலன்கொடியைத்
தக்கன் முனிந்த வுரைகேளா
அலகில் சோதி யெம்பெருமான்
சீற்ற மெய்தி வவனிதனில்
இலகு மவுலி மாவிடவேந்
தாகிப் பிறக்க வெனச்சபித்தான்
புலவு வேற்கண் மாரிடைபா
லதனாற் புதல்வ னாயினான் (20)

ஈரைந் தரசர்க் கொருத்திவயிற்
றுதித்த தக்க னிழைத்தவைகள்
பாரின் விளங்க வுரைத்தியெனப்
பருவ வயிரா பதப்பாகன்

றேரு முதுநான் மறைவடித்த
தெய்வ முனிவன் கேட்டிடலுங்
காரிற் கரிய திருமேனிக்
கருணைக் கடலாண் டுரைசெய்வான் (21)

பதினான்காவது
தக்கனைச் சபித்த வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 406.

---

## பதினைந்தாவது
## தக்கன் வேள்வியழித்த வத்தியாயம்.

---

கரைபொரு கடலந் தானைக்
காவலன் றக்க னென்போன்
உரவுநீ ருலக மேழுந்
தனதடிப் படுத்தி யொன்னார்
தருநிறை யளப்ப விண்ணோர்
தனித்தனி யேவல் கேட்ப
அரியணைப் புறத்து வைகி
யாழியோன் றுருட்டு நாளில் (1)

முன்னையப் பவத்தி லீசன்
வைதவை யுளத்தின் முன்னி
யென்னையா ளுடைய முக்கட்
கடவுளை யின்றி யோங்கு
பின்னல்வெண் டிரைத்தாழ் கங்கா
துவாரத்திற் பெட்பி னெய்தித்
துன்னரும் வேள்வி மற்றொன்
ருற்றுவான் றுடங்கி னானே (2)

குறுமுய லரத்த மேய்க்குங்
　　கோசிகந் தாழ்ந்த வல்குல்
இறுமருங் குமையாள் பாக
　　வின்றியா ஞற்றும் வேள்விக்(கு)
அறிதுயி லமர்ந்த மாயோன்
　　முதலிய வமரர் யாரும்
உறுகென முடங்கல் போக்க
　　வியாவரு மொல்லை யுற்றார் (3)

தாக்கணங் கமர்ந்த மார்பிற்
　　றண்டுழாய் முகுந்தன் வேள்விக்
கோக்களி றூரும் விண்ணோர்
　　கோன்முத லமரர் நாளுந்
தீக்குண வருத்தி யுண்ணு
　　முனிவர ரியக்கர் சித்தர்
ஏக்கற வெய்த வீங்கு
　　மிளமுலை யமரர் மாதர் (4)

குவளைநாண் மலரை வென்று
　　குழைபொரு தலைக்கு முண்கட்
டுவரிதழ்க் கமலை வாணி
　　பழமறை யினிது தொக்க
வவையினிற் பால்வெண் ணீறு
　　கண்டிகை யணிந்து மிக்க
தவமொரு வடிவுற் றன்னத்
　　ததீசிமா முனிவன் வந்தான் (5)

தொள்ளைபூத் தலர்ந்த நெஞ்சிற்
　　றக்கனே கேட்டி தூய
வள்ளிலைக் கமலவீட்டி
　　*லந்தண னுதி யாகும்

* அந்தணனுதியாகும் (பா. பே.)

எள்ளருந் தருக்க வீறு
யியைந்திடு முயிர்கட் கெல்லாம்
உள்ளுறை சோதி தன்னை
யிகழ்ந்ததென் னுரைத்தி யென்று (6)

தவத்துறை படிந்த நெஞ்சிற்
றதீசிமா முனிவன் சாற்ற
உவப்புடன் மறைக ளியாவு
முருத்திர பாகந் தன்னை
நிவப்புட னுரைத்த தில்லை
நீயவை கேட்டி யென்று
வவித்துறை போய நெஞ்சத்
தக்கனுங் கறைந்திட் டானே (7)

பழுதுணர் தக்க னுங்குப்
பகர்தலு நடுக்க மெய்தி
யிழுதைநீ மடமை நெஞ்சத்
திசைந்தவா றிசைத்தி கொல்லோ!
மழவிடை யூர்தி யன்றி
மகம்புரிந் திடல்தீ தென்னத்
தொழுதகு மறைகள் யாவுஞ்
சொல்லியாண் டகன்ற மாதோ (8)

மன்பெருஞ் சிறப்பு வாய்ந்த
மலரயன் முதலி னோர்தம்
என்பணிந் திமத் தாடி
யேறிவர்ந் தைய மேற்கும்
கொன்படு சூல வேற்கைக்
கூத்தனுங் கருத்தன் கொல்லோ
பொன்புனை யறுவை யார்த்த
பூவைமே னியனை யல்லால் (9)

என்னவே தக்கன் கூற
விருந்தவ முனிவர் தாமும்
மன்னுயி ரனைத்துங் காக்கு
மணிநிற வண்ணன் யார்க்கு
முன்னையோ னென்ன நெஞ்சின்
முதுக்குறை வளைத்து நீங்கத்
துன்னிய மாயை யுள்ள
மறைப்பமா றாந்து சொன்னர். (10)

என்றலுந் ததீசி நெஞ்ச
மெரியழக் கனன்று சீறிக்
குன்றவிற் கடவு டன்னை
யிகழ்ந்திடுங் குற்றந் தன்னால்
பொன்றிவெந் நரகந் தன்னிற்
புகுந்துநெஞ் சழிதி ரென்னத்
துன்றிய முனிவ ருள்ளஞ்
சோர்வுற முனிந்து வைதான் (11)

மெல்லிய வணுவைச் செம்பொன்
மேருவோ டிணைத்து நோக்கும்
புல்லறி வாளர் போலப்
பூவைபோன் மேனி யானை
யெல்லையில் குணக்குன் றாய
விசனுக் கிணையென் றோதுங்
கல்வியின் மடமை நெஞ்சக்
கடவுளர் தம்மைச் சீறி (12)

விழுமிய ரல்லார் கேண்மை
வெந்துயர்ப் படுத்து மென்று
வழிமதுக் கமழுஞ் செய்ய
மரைமலர்ப் பொகுட்டில் வாழும்

பழமறைக் கிழவ னிங்கப்
பனியிரு விசும்பி னீங்கி
யுழையுறை தேவர் யாருந்
தனித்தனி யுள்ளஞ் சோர்ந்தார் (13)

வருவன வெண்ணி வேதன்
போயது மனக்கொண் டுள்ளம்
வெருவர வின்றித் தக்கன்
வேள்வியை யியற்ற நோக்கி
யருமுறை வடித்த செஞ்சொற்
றதீசிமா முனிவ னுங்கட்
கருமிடற் றெந்தை செம்பொற்
கழலிணை நினையு மேல்வை (14)

முன்னைய பவத்தி லென்னை
யிகழநீ முனிந்த தக்கன்
மன்றுமிப் பவத்தி னின்னை
யிகழ்ந்தரு மகஞ்செய் கின்றான்
அன்னவ னாற்று மெச்ச
மழித்திட வேண்டு மென்ன
வென்னையா ளன்னை கூற
விறைவனு மதனை நேர்ந்தான் (15)

ஆயிர மௌலி யண்ட
முகட்டினை யளப்பச் செய்ய
வாயிரங் கமலப் பொற்றா
ளகனில மளந்து செல்ல
வாயிரந் தடந்தோ ளெட்டுத்
திக்கையு மளப்ப வெய்ய
வாயிரங் கண்க டைய
வழற்சிகை பரப்ப மண்ட (16)

பொழிகதிர் நேமிச் சங்கங்
கப்பணம் புகையு மொள்வாள்
எழுவழல் கவிழ்க்குஞ் சூலந்
தேர்மர மெறியும் வைவேல்
மழுமுதற் படைகள் யாவுங்
கரந்தொறும் வயங்கித் தோன்ற
முழுமதி வகிர்ந்தா லன்ன
முள்ளெயிற் றொளிவில் வீச (17)

புவனகோ டிகளுந் திக்கும்
புராரிவெஞ் சீற்றத் தீயிற்
கவைபடு சூல வைவேற்
காய்சின வீரன் தோன்றித்
துவரிதழ்க் கனிவாய்த் தீஞ்சொற்
றோகையோர் பங்கன் றாளில்
உவகையின் வணங்கிச் சூழ்போந்
தினையன வுரைக்க லுற்றான் (18)

வேறு

அண்ட கோடிகண் மிதக்குமலை யாழி யொருகைக்
கொண்டு மற்றது பொதிந்தகனல் கொட்புறல் செய்யும்
மண்டு காலதனை முற்றும்வெளி மற்று மடைவே
யுண்டு மீளவு மளித்திடுவ னெந்தை யுரையாய் (19)

என்று கூறலு நகைத்துலகம் யாவு மழியேல்
வென்றி வீரவுயர் தக்கனழல் வேள்வி விரைவிற்
கொன்று போதுக வெனுவிடை கொடுப்ப வவனும்
நன்று வீரமென நாணொடு நடந்த னனரோ (20)

மாலை வெள்ளருவி தாழிமைய வல்லி கடிதிற்
கால னுஞ்சமரி லஞ்சவரு காளி யையுயிர்த்
தால முண்டெரி கவிழ்த்துமுடை நாறு மழல்வாய்ச்
சூல நல்கவிடை கொண்டுதொழு தேகி னனரோ (21)

எரிக விழ்க்குமயில் கப்பணமு சுண்டி யெறிவேல்
குருதி கக்குகதை கொண்டுகண நாதர் குடர
நரைவி டைக்கண்வரு காளியொடு மேரி நகைகால்
பருதி வேலுழவன் விண்ணவர்கள் பால ஞகினுன் (22)

சேட்டி எம்பருதி கோடிகதிர் சிந்தி யெனலாம்
மொட்டு மாமணி யணிக்கிடு முகுந்தன் முதலோர்
கூட்ட மெய்துமுயர் சாலையிடை சென்று குறுகி
வாட்டி றற்குரிசில் தக்கனுள மாழ்க நவில்வான் (23)

எந்தை பூசனை யிகழ்ந்துனது வெள்ளை யறிவில்
நந்து மாமக நடத்துதிகொ லென்ன நகையா
அந்தில் மந்திர மறைந்ததிலை யென்று மறையோர்
உய்ந்தி டாதவழி தக்கனுரை யாடு பொழுதின் (24)

அடைவின் வேதமுதன் மந்திர மனைத்து முதவுங்
குடிலை தக்கனை வெருண்டரிமுன் வந்து குறுகி
விடை வலானெழிய நீகடவு ளோவி டைவலான்
இடம ருங்குறையு மங்கையுனை யன்றி யெவரே (25)

என்று கூறுதலும் விண்ணவர்கள் யாரு மிகழா
நன்று நன்றென விலாவிற நகைப்ப மிடல்கூர்
வென்றி வீரனும் விழிக்கடை சிவப்ப முனியா
வன்று சாலையழ லுண்டிட வளித்த னனரோ (26)

வேறு

இரும்பு குதட்டி விளாழியுமி
    ழிவுளி வீக்கு மணியூபங்
கருந்தா தென்ன காய்ப்பிருந்த
    கரத்தான் *முறித்தோர் குறும்பூதம்
பொருந்து மவிகள் பேய்குழிசி
    புடைத்தாங் குடைத்து முத்தழற்கும்
பருந்திற் படுத்த சயனமிசைப்
    பருஉத்தா ளதனுற் புடைத்தே (27)

---

* முரிந்தோர் குறட் பூதம். (பி. பே.)

உரறு சிற்றத் தெரிகுஞ்சிக்
குறுத்தாட் பூத முமிழ்கனற்கட்
டிருகு சினத்த பேய்க்கணங்கள்
செருவேற் றெதிர்ந்து திசையளக்கும்
இருதோள் கொட்டி மகமாற்று
முனிவர்ப் பற்றி யெறிதிரைய
விரிநீர்க் கங்கை யிடையமிழ்த்தி
விளையாட் டயர்ந்து துள்ளுமால் (28)

கடவுட் சாலை தனிலமரர்
களிப்பக் குளிக்கு மரமகளிர்
உடலுங் கூற்றுங் கண்புதைப்ப
வொறுக்குங் கணங்கள் வாய்வெருவி
வடிவே னெடுங்கண் புதைப்பவவை
குடங்கைக் கடங்கா வாற்றினுற்
படர்கூர்ந் துள்ள நடுங்கவயி
றதுக்கி மயிலிற் பதைபதைப்பார் (29)

அஞ்சி லோதி சுவற்பிறழ
வம்மென் சிலம்பு கிடந்தலற
வஞ்சி மருங்குல் போயொளிப்ப
வளர்மென் முலைமே லுத்தரிகம்
பஞ்சி யூட்டும் *பதம்பனிப்பப்
படர்தற் கரிதென் றிடைவீழ்ந்து
நஞ்ச மமுதங் கலந்தன்ன
நகுவே னெடுங்கட் பனித்தயர்வார் (30)

பாழி நெடுந்தோட் சூளியெதிர்
படர வெருவிக் கடைகாண்பான்
ஊழி யூழி யழிந்திடினு
முலவா நெடுங்கட் புலோமிசையும்

* பஞ்சியூட்டும் பதம் பணிப்ப (பி. பே.)

மாழை நெடுங்கட் டிருமகளும்
வயவாள் வயிரப் படையோனை
யாழித் தடக்கைத் துளவோனை
யலம்வந் தோடித் தழீஇக்கொண்டார் (31)

தண்ணங் கமலத் திருவுமலர்த்
தடங்கட் செவ்வாய்ப் புலோமிசையும்
நண்ணுந் துயரந் தனைநோக்கி
நகையாச் சினவி யிதழதுக்கிக்
கண்ணின் வடவைக் கனலொழுகக்
கனன்று கடைவாய்ப் புகைதவழ
வண்ண லயிரா வதப்பாக
னமரர் துடர வமரேற்றான் (32)

செருவேட் டுறங்காப் பகடுகைக்குந்
தறுகண் மறலி தீக்கடவுள்
வெருவாத் தானைத் திறல்வருண
னுலவை வேந்த னீசானன்
நிருதி யுயர்புட் பககடவு
நிதிக்கோன் முதல புத்தேளிர்
குருதி கவிழ்க்கு முத்தலைவேற்
கூற்றின் கூற்றத் தெதிர்சென்றார் (33)

வேறு

மண்டு வெஞ்சம ருடற்றவெதிர் வந்த விர்கொலோ
கொண்ட லூர்திமுதல் விண்ணவர்க ளென்று குறுகி
அண்ட கோளகை வெடிப்பவய லண்ட முழுதும்
விண்டு மோமைபட வீரனகை யாடி வெகுளா (34)

கள்ளு லாநறிய கற்பக நகர்க்கி றைவனை
யள்ளி மண்ணிடை களிற்றொடு மரைத்த தொருகை
பிள்ளை வெண்பிறை யெயிற்றபில வாய்ம றலியை
யுள்ள மென்புதசை நைந்திட *நெரித்த தொருகை (35)

* நெரித்த தொருகை (பா. பே.)

ஆர முற்கடவு ளுவினை யகழ்ந்த தொருகை
கார்நி றத்தநிரு திக்கடவுள் கைகள் விழிதோள்
ஈருள் மூளைகுடர் சிந்திட வெறிந்த தொருகை
வாரு திக்கிறையை வாரியின் மடுத்த தொருகை (36)

மண்ட மர்க்கலை யுதைத்தெதிர் வளிக்கி றைவனை
யண்ட கோளகை முகட்டினி லடித்த தொருகை
கண்டெ றித்துயிர் சிதைந்திட நிதிக்க டவுளைச்
செண்ட டித்தன வெறிந்தெதிர் திரித்த தொருகை (37)

பாயெர் ளிப்பகன் விழித்துணை பறித்த தொருகை
யாய்க திர்த்தொகை பரப்பரிய மாவி ளிருதோள்
சேய வெங்குருதி சிந்திட வடித்த தொருகை
காய்க திர்க்கடவுள் பற்றுகை கடிந்த தொருகை (38)

மருத்து வத்தலைவர் வாய்குருதி கக்கி மரிய
வுருத்து மென்கனியி னுருயிர் பிழிந்த தொருகை
செருக்க ளத்தெழு வசுக்களிரு நால்வர் சிதைய
நெருப்பெ ழும்படி பிசைந்துட னெரித்த தொருகை (39)

இன்ன வாறுதிறல் வீரனுயர் கைக ளேவையும்
மன்னு வானவ ரியக்கர் முனிவோர்கள் மரிய
முன்னி யோரிமை யொடுங்குமுன் முடித்தி டுதலுங்
கன்னி யந்துளவ மாயன து கண்டு வெகுளா (40)

மறிதி ரைக்கடவு ளோன்றின்மிசை யொன்று மறியச்
சிறைய டித்தொரு கணத்திலிடை யெண்டி சைசெலும்
எறும்வ லிக்கலுமன் மேலினி திவர்ந்து முனியா
வுறுச மத்திடை யெதிர்ந்தம ருடற்றி னனரோ (41)

மாயி ரும்புவி ருயந்துமணி வண்ணன் வடிவேற்
சேயின் மிக்கதிறல் வீரனெதிர் சென்று சினவா
வாயி ரங்கதிரொ ருங்கெழுவ தென்ன வழல்கால்
பாயொ ளிப்பருதி வெம்படை பணித்த னனரோ (42)

ஊழி வெங்கனலு மாலமு முயிர்ப்ப துடலும்
பாழி வாய்மறலி யைக்கொலை பயிற்று வதுவெஞ்
சூழ்சு டர்ப்பருதி யன்னதொரு சூல மதனால்
ஆழி யம்படை செருக்கற வகற்றி னனரோ (43)

நேமி யம்படைய கற்றிநிக ரற்ற விறலோன்
றும ரைக்கடவு ளோடுலகு தந்த முகிலைக்
காமர் மென்சிறையி னிற்பொரு திறற்க லுழனைத்
தாம வெங்கணைது ரந்துடல் துளைத்த னனரோ (44)

வரைபெ யர்ந்துகலு முன்சிறை வழங்கு வளியாற்
சருகி னிற்றிரிய வோடியெதிர் சென்று தளராச்
செருவி ளைத்தகண நாதரை யுடன்று சினவிக்
குருதி *கக்கும்வளை வாய்கொடெதிர் குத்தி யிடலும் (45)

கலுழன் வெஞ்சம ருடற்றவது கண்டு வெகுளா
வலகில் வீரனுயர் புள்ளரசொ ராயி ரம்வகுத்
துலகம் யாவையுமுன் னுண்டவன தூர்தி யுடனே
மலைக வென்னவவை சென்றமர் மலைந்த பொழுதின் (46)

வேறு

திருகு சீற்ற வெந்துப்பின்
வீரன் விடுத்த திறற்புள்ளேற்
றரசி யாவும் மணிவண்ண
னிவரும் புள்ளேற் றினையடர்ப்ப
வெருவந்தமரி னாற்றாது
மேக வண்ணன் றனைவிழ்த்தி
யிரியல் போக வதுநோக்கி
யிகழ்ந்து வீர னிவைசெய்வான் (47)

* சருதி காலும் வளைவாய் (பி. பே.)

அன்ன லேற்றுப் புள்ளரசு
விழ்ப்ப வாவி தீர்ந்தான்போற்
றண்ணக் துளவோன் கிடந்திடலுந்
தக்க னெதிர்போய்ச் சிவனன்றி
நண்ணும் வேள்வி யாற்றியது
நன்று நன்றென் றிகழ்ந்துரையாத்
துண்ணென் றுடலம் வெருக்கொள்ளச்
சுரிமென் குஞ்சி பற்றினன் (48)

சுரிமென் குஞ்சி யொருகையாற்
பற்றி யவன்றன் றலைதுமிப்பான்
பருதி வடிவா ளுறைகழிப்பப்
பனிமென் கமலப் பொகுட்டுறையும்
அருமா மறையோன் வந்தெய்தி
வீரற் போற்றி யளியேற்காய்க்
கருணை கூர்ந்திங் கிவனுனிக்
கடியே லென்று மேல்வைதனில் (49)

எண்டோண் முக்க ணெம்பெருமா
னிமய முயிர்த்த வல்லியொடு
தொண்டர் குழுவி னுடுமெய்தித்
தக்கன் சென்னி துமித்திடேல்
விண்டு முதலாம் தேவர்களும்
விளியா தளித்தி யெனவுரைப்பத்
திண்டோள் வீர னுயர்தக்கன்
பங்கி விடுத்துச் செருவொழித்தான் (50)

வெயிலேற் றெழுந்த முத்தலைவேல்
வீர னமர ருயிரளிப்பத்
துயிலேற்றவர் போன் முகில்வண்ணன்
முதலாந் தேவர் துனிவினெழுந்

தயிலேற் ருலத் தொடுஞ்சினவி
யமுதிற் பழகு மரிநெடுங்கண்
மயிலேற் றிருந்த விடைப்பாகன்
பாத முறையின் வணங்கினுர் (51)

குடந்தம் பட்டுச் சூழ்போந்து
குழைந்து வழுத்தி நின்பாதம்
அடைந்த தேவ ரிழைத்தபிழை
பொறுத்தி யென்ன வழகொழுகுங்
கடைந்த மணிச்செப் பெனவீங்கு
கதிர்மென் கொம்மை முலைக்கனிவாய்
மடந்தை வேண்ட மதிக்கண்ணி
மறையோ னிதனை வழங்குவான் (52)

அவுணர் செகுத்த சுடர்நேமி
யண்ணல் முதலோ ரிழைத்தபிழை
துவர்வாய்ப் பேதை நின்னருளாற்
பொறுத்தே மென்னத் தொழுதிறைஞ்சு
முவணப் புள்ளேற் றுயர்பறவை
யுயர்த்தோன் முதல தேவர்களும்
நவையற் றிடவின் னருள்பூத்து
நாத னினிதின் விடையளித்தான் (53)

*எரிகொப் புளிக்கு மணிமவுலித்
தக்கன் முகம்பார்த் தெம்பெருமான்
அரிகொப் புளிக்கு மதர்நெடுங்க
ணணங்கி னருளா லெமதுகணத்
தொருவ னுகிக் கற்பாந்தத்
துறைதி யென்ன வரநல்கி
மருவும் வீரன் முதற்கணங்க
ளோடு மறைந்து போயினனுல் (54)

---

* எரி கொப்பளிக்குமணி (பி. பே.)

வள்ளக் கமல வட்டவணைக்
    கடவுட் டக்கன் முகநோக்கி
யெள்ளி லீசன் றனைமறந்து
    நெடுமா லீச னெனுமவர்கள்
உள்ளி லொருவர் திருநெடுமா
    லுமைபோ லீச னுயர்சத்தி
வெள்ளை யறிவின் மாயோனை
    யிகழி லீசன் வெகுண்டிடுமால் (55)

தன்னை யிகழ்தல் பொறுத்திடினுந்
    தனதிற் கிழத்தி தனையிகழின்
மன்னுஞ் சீற்ற மிகுமெவர்க்கு
    மற்றுங் கதுபோன் மாயோனை
யுன்னிச் சிறிதே யிகழ்ந்திடினு
    மொறுக்கு மீச னுதலாற்
கன்னித் துளவோ னிறைவனெனப்
    பிரித்தோ திடுதல் கடனன்றே (56)

என்று கூறிச் செழுங்கமலப்
    புத்தே ளகல விற்றுளைந்து
சென்ற வண்டு பொறையுயிர்த்துச்
    செழுந்தோட் டகட்டி னடைகிடக்கு
மன்றல் கமழுஞ் செழுங்கொன்றைத்
    தொடையோன் செய்ய மலரடியின்
ஒன்று முள்ளத் தொடுந்தக்கன்
    பன்னாள் வழிபட் டுறைந்தனனால் (57)

கொண்ட சீற்றத் தொடுமுனிந்து
    ததீசி வைத குலமுனிவர்
மண்டு கலியி னல்குரவின்
    மறையோ ராகி யுடனீத்துப்

புண்டோய் நரகத் தழுந்தி மவர்ப்
புத்தே ளருளா லுளங்தெருண்டு
பண்டு போல முனிவரராய்ப்
பரமன் பாதம் பழிச்சினர் (58)

தக்கன் வேள்வி யில்வாறு
புகன்றேன் தக்கன் முனமீன்ற
மக்கண் மரபீண் டுரைத்துமென
மகதி வீணை முனிவர்க்கு
நக்க வயிரப்படைக் கடவுண்
முதலா நாகத் திமையோர்க்கு
மைக்கார் நிறத்த மணிவண்ணன்
மகிழ்வி னேடுமிவையு ரைப்பான் (59)

பதினைந்தாவது
தக்கன் வேள்வியழித்த வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 459.

---

## பதினாறாவது
## அந்தகாசூரன் சாருபமடைந்த வத்தியாயம்.

---

தாளதா மரையி னரகவிற் றிருக்கு
மந்தணன் தக்கனை நோக்கி
மீளவு முயிர்க ளளித்தியென் றுரைப்ப
விதித்தவை மல்கிடா வதனல்
ஆள்வழக் கறநீண் டம்பலைத் தொழுகு
மரிமதர் நெடுங்கணு ரணைமென்
றோளிணைத் தழுவிப் பெறுமக வல்லால்
மல்கிடா தெனவுளந் துணிந்தான் (1)

மாரனை யழகு மறலியை விறலுங்
கவர்ந்திடு மலையுறழ் தடந்தோள்
வீரனப் பிரமன் அரிதினீற் பயந்த
வேய்த்தடந் தோளசிக் கினிதன்
ஏர்குடி யிருந்து சுணங்குபூத் தலர்ந்த
விளமுலை யின்னலம் பருகிப்
போர்கெழு திறல்வேற் றக்கன்மென் குதலைப்
புதல்வரா யிரவரைப் பயந்தான் (2)

ஆயிர மகவு ளாரதன் மாயைப்
படுகுழி தன்னில்வீழ்ந் தவிய
வேய்மருள் பசுந்தோ ளசிக்கினி யென்னும்
வேற்றடங் கண்ணியோ டாடி
மாயிரு ஞால முழுவது நல்க
மீட்டுமான் மறைபயில் தக்கன்
காயெரி கவிழ்க்கும் பூண்சுமந் தொல்கு
மறுபது கன்னியர்ப் பயந்தான் (3)

ஆங்கவர் தம்மிற் பதின்மரைத் தரும
தேவதைக் களித்தன னருளால்
நீங்கரு முவப்பிற் காசிபற் கொருபான்
மூவரை நெறிவழா தீந்தான்
தீங்கதிர்த் திங்கட் கடவுளுக் கிருபா
னெழுவரைச் சிறப்பொடு மளித்தான்
கோங்கிள முலையார் நால்வரை *யரிட்ட
நேமிகைக் கொள்கெனக் கொடுத்தான் (4)

வருமுலை சுமந்து தேம்புநுண் மருங்குல்
மதியுறழ் நித்தில முறுவல்
இருவரை வெகுபுத் திரற்கினி தளித்தா
னிருவரைக் கிரிச்சுவற் கீ(ய்)ந்தான்

---

* யருட்டநேமி (பி. பே.)

அரிமதர் நெடுங்கண் ணிருவரை மகிழ்பூத்
தங்கிரா வினுக்குவந் தளித்தான்
பொருவரு மவர்தம் பெயருமற் றவர்தம்
புதல்வர்கா மமுமினிப் புகல்வாம் (5)

அருந்ததி யிலம்பை சியாமிசங்கற்பை
யருண்மருத் துவதிநல் விசுவை
முருந்திள முறுவற் சாத்தியை பானு
முகூர்த்தைநல் வசுவெனத் தருமன்
பொருந்திய மடவார் பெயரிவி துரைப்பார்
புணர்முலை விசுவைதன் புதல்வர்
திருந்தெழில் விசுவ தேவர்சாத் தியைதன்
சிறுவர்சாத் தியரெனத் தெரிப்பார் (6)

*அருந்ததி மைந்த ரருந்ததர் வசுவின்
மைந்தரெண் வசுக்களென் றறைவார்
பொருந்திய பானு மைந்தர்பா னுக்கள்
முகூர்த்தைபுத் திரர்முகூர்த் தங்கள்
திருந்தெழி லிலம்பை புதல்வர்கோ டான்மாச்
சியாமிதன் மைந்தர்பேர் தெரிக்கின்
மருந்தினு மினிய நாகவீத் தியரென்
றுரைப்பர்நான் மறைமுழு துணர்ந்தோர் (7)

குலிகமென் செப்பென்முலைமருத் துவதி
குமரர்கோ டிகள்பிரு துவியர்
இலகுசங் கற்பை மைந்தர் சங்கற்ப
ரென்னநற் றருமதெய் வதத்தின்
அலகறு புதல்வர் பெயரிவி துரைத்தே
மாங்கவர் தம்மிலெண் வசுக்கள்
மலைவறு நாமம் யாவரு முணர
மகிழ்வுட னினிதெடுத் துரைப்பாம் (8)

* அருந்தரவசுவின் (பி. பே.)

குங்கும மெழுதுங் குலவரைத் தடந்தோ
ளாபன்வேற் றுருபனற் சோமன்
திங்களங் கவிகைத் தரனுயர் நீல
னனலன்மெய் தெளிபிரத் தியூடன்
துங்கவேற் பிரபா சனன்எடுத் துரைப்பார்
சொல்லுமாங் கவரிவா பன்றன்
டாங்கமில் புதல்வர் சிராந்தன்வை தாண்டி
சீர்மனந் றனியெனப் புகல்வார் (9)

துருவன்மெய்ப் புதல்வன் பொருவில்சீர்க் காலன்
சோமனற் சேயருள் வர்ச்சன்
தரனியல் மைந்தன் திரவிணன் அனிலன்
றன்மகன் செவனுல கேத்த
வருள்விக்கி ஞாத தேதிய னலன்சேய்
தேவசே னுபதி யாகும்
வருபிரத் தியூடன் குழவிதே வலனும்
பிரபாசன்சேய் விச்சுவ கர்மன் (10)

*அதிதிவேற் றடங்கட் டிதிதனுச் சிறந்த
வளர்முலைக் கத்துரு வரிட்டை
மதர்விழிச் சுரசை சுரபிவார் கூந்தல்
வினதைதாம் பிரைவனப் பொழுகும்
கதிர்முலைக் குரோதை வசைமுனி யேர்பொற்
கமலையேர் தருமையென் றுரைக்கும்
எதிரறு மிவர்கள் ஒருபதின் மூவர்
காசிபன் மனைவிய ரென்பார் (11)

* குறிப்பு மனைவி 13. 1. அதிதி, 2. திதி, 3. கத்துரு, 4. வரிட்டை, 5. சுரசை, 6. சுரபி, 7. வினதை, 8. தாம்பிரை, 9. குரோதை 10. வசைமுனி, 11. பொன், 12. தருமை, 13. தனு.

அள்ளிருள் பருகு மங்கிசன் தாதா
வலர்கதிர்ப் பகனுயர் துவட்டா
வொள்ளொளி விரிக்கு மித்திரன் வருணன்
அரியமான் விவச்சுவா னுலகந்
தெள்ளருஞ் சவிதா விசைகெழு பூடா
வஞ்சுமான் விட்டுணு வென்னத்
தெள்ளியின் டுரைத்த *பன்னிரு வரையு
மதிதிதன் சிறுவரென் றுரைப்பார் (12)

சாக்குச மன்வந் தரத்தனிற் றுடிதப்
பெயரொடுஞ் சார்ந்தன ரிவர்கள்
விக்கிய கழற்கால் விறல்கெழு வடிவேல்
விளங்குவை வச்சுத மனுவின்
காக்குநா ளதிதி புதல்வ ராதலினு
லதிதயப் பெயரொடுங் களிப்பிற்
போக்கருஞ் செல்வத் தொடுமிரு விசும்பிற்
புங்கவ ரேத்தவாழ் கின்றார் (13)

கருங்கடல் போழ்ந்து வல்லவர் குளித்த
கதிர்மணி நித்திலந் தாங்கி
மருங்குறேய்த் தகல்வான் போக்கற விங்கும்
வருமுலைத் திதியெனு மடந்தை
யருந்தவம் புரியும் காசிப னருளா
லாடல்கூ ரிரணியன் றனையும்
பருந்துவீழ் கெடுவே லிரணியாக் கனையும்
விண்ணவர் வெருவுறப் பயந்தான் (14)

---

* 12 சூரியன். 1. அங்கிசன், 2. தாதா, 3. பகன், 4. துவட்டா, 5. மித்திரன், 6. வருணன், 7. அரியமான், 8. விவச்சுவான். 9. சவிதா 10. பூடா. 11. வஞ்சுமான். 12. விட்டுணு.

ஆங்கவர் தம்பின் மறங்கவிந் தொழுகு
மாடல்வே லிரணிய னென்போன்
விங்கொளி விரிக்கும் வெள்ளிநல் லருளால்
விரிசிகை யைந்தழ னுப்பட்
டேங்கமழ் கமலப் பொகுட்டுவீற் றிருக்குந்
தேவனைத் தனதுளத் திருத்தி
நீங்குமைம் புலனு மொருவழிப் படுத்தி
நினைவரு மருந்தவம் புரிந்தான் (15)

மழகதிர்ப் பருதி திங்களஞ் செல்வன்
வானவர் யாவரும் விசும்பின்
உழிதர லின்றிப் புகைப்படாம் போர்ப்ப
வுஞற்றருந் தவத்தினை நோக்கிப்
பழமறைக் கிழவ னுவப்பின்வந் தெய்திப்
பரிவுட னவுணர்கோ னுளத்தின்
விழைவன யாவும் வெறுப்பவாங் களித்து
வியப்பொடுங் கரந்துபோ யினனால் (16)

ஆயிரந் தோட்டுக் கமலவீட் டுறையு
மந்தண னேகிய பின்னர்
பாய்புலிப் போத்தி னுருகெழு சீற்றத்
திரணியன் பண்ணவ ரியக்கர்
மாயிரு ஞாலம் புரந்திடு மரசர்
வழுத்தநீண் மணிமுடி புனைந்து
காயும்வா ளமரி னென்னலர்ப் பெருது
களிப்புட னினிதுவீற் றிருந்தான் (17)

கலைமகள் கொம்மை முலைபொரு திணிதோட்
கடவுடன் படைப்பினை மாற்றி
மலர்தலை யுலக முழுவது தானே
வருந்தற வெளிதினிற் படைக்குஞ்

சிலைவிழுங் குயர்தோண் மாயனை யகற்றிச்
சிறப்புட னுலகெலா மளிக்கும்
அலர்முலைப் பாகன் சிறிதுகை யாற
வாருயிர் துடைப்பினுந் துடைக்கும் (18)

நனந்தலைச் சுடிகை வாளராப் போத்தின்
சுமைகெட களிகடற் போர்வை
புனைந்தபே ருலக மொருகையி னேந்திப்
பொறையில திதுவெனப் புகலுங்
கனம்படிந் துண்ணும் பெரும்புறக் கடலைக்
குளப்படி நீரெனக் கருது
மினங்கொளேழ் வரையும் பொற்கழங் கென்ன
விண்ணிடை யெறிந்தெதிர் பிடிக்கும் (19)

மங்குல்வான் புதைக்கு நள்ளிருள் விழுங்கும்
வானவன் புரிதொழில் மாற்றி
அங்கண்மா ஞாலத் தொற்றையாழியந்தே
ராதவ னெனவெயில் விரிக்குங்
கங்குல்வாய்க் கமல நறுமலர் குவியக்
கடிகம ழாம்பல்வாய் நெகிழத்
திங்களிற் பசும்பொன் மானமீ திவர்ந்து
தெண்ணிலாக் கதிர்விரித் துலவும் (20)

உலகமோர் மூன்றுந் தனதடிப் படுத்தி
யுயர்விசும் பொருதனி புரக்கும்
இலகொளி வயிர வாட்படை யுழவன்
முதலிய வெண்டிசைப் பாலர்
மலர்தடஞ் சினைய கற்பகத் தருவுந்
தேனுவு மணியுநீ ணிதியும்
அலகில கொணர்ந்து தொழவிடம் பெறுமல்
கன்மணி முன்றிலிற் றுயில்வார் (21)

விண்ணக டுருவும் போகுயர் குடுமி
மேருமால் வரைமுதற் கிரியுங்
கண்ணகன் ஞால முடுத்ததெண் டிரைய
கருங்கடன் முதலவேழ் கடலும்
அண்ணலஞ் சேடன் முதலிய செஞ்சுட்
டரவமு நதிகளும் பிறவும்
பண்ணவ ருருவின் விரைவின்வந் தெய்தி
யவுணர்கோன் பணித்தன புரியும் (22)

இன்னண முலக முழுவதும் வெருவா
வெரிகதிர்த் திகிரியோன் றுருட்டி
மின்னகு பருதி வாட்படை யுழவன்
வியனுல களிக்குநா ளதனிற்
பொன்னவிர் திதலை பூத்தழ குறங்கும்
புணர்முலைப் புலோமிசை கொழுநன்
தன்னுளந் துயரம் விண்ணவ ரோடு
மலரயன் சார்வுழி யடைந்தான் (23)

அரசவேற் றெகினப் பாகனைப் பழிச்சி
யடற்கரும் புலிப்பக டனைய
விரணிய னிழைக்குங் கொடுந்தொழிற் காற்று
தெய்தின மளித்தரு ளென லும்
விரைவளங் கொழிக்குங் கமலமென் பொகுட்டு
வேதிய னவரொடு போந்து
திரைபொரு கடலி னறிதுயில் கூருஞ்
செங்கண்மா லுறையுழிச் சேர்ந்தான் (24)

கதிர்மணிச் சுடிகை நிரைவிளக் கெடுப்ப
நாகணை மீதுகண் டுயிலுந்
ததைமலர்க் கன்னிப் பசுந்துழாய் முகிலைத்
தாழ்சிறை வண்டுபாட் டயர

மதுமழை பிலிற்று மலரயன் முதலோர்
வழுத்தலு மலர்விழி யலர்ந்து
புதியதெள் ளமுதுஞ் சுவையறப் புளிப்பப்
பவளவாய் மலர்ந்திவை புகல்வான் (25)

எரிவிடங் கடைவாய் மடையுடைத் தொழுகு
மெரிமணிச் சூட்டரா நெற்றி
மருவுநீர் வலய முதலிய வுலக
மனைத்தையும் வகுத்திடு மலரோய்!
முருகு கொப்புளிக்குங் கற்பக நீழன்
புரந்தரன் முதலினோ ரோடும்
விரைவினீண் டடைந்த தென்கொ லென்றுரைப்ப
விரைமலர்ப் பண்ணவ னுரைப்பான் (26)

இளவெயில் விரிக்குந் தமனியப் போர்வை
யெழில்பெற வணிந்தநீள் வரைபோற்
றுளையெயிற் றகல்வாய்ப் பாம்பணைப் புறத்தி
னறிதுயி லமர்ந்திடுந் தோன்றல்
தளர்வொடு மெலிந்தே யிரணியற் காற்ற
தடைந்தனந் தஞ்சநீ யல்லாற்
களைகண்மற் றெவரே வானவர்க் கென்னக்
கண்பனி யுகுப்பநின் றுரைப்பான் (27)

வெஞ்சினத் தறுகட் கடாக்களி றனைய
விறல்கெழு மிரணியற் காற்ற(து)
*அஞ்சிவீர் போலும் வெருவலி ரென்று
வாய்பிழித் துளவுடுத் தோங்கும்
மஞ்சுறழ் மேனித் திருமறு மார்பன்
மலர்க்கரங் குவித்துவா னவர்கள்
உஞ்சிடும் வண்ண முளத்திடை நினையா
வொல்லையி னிங்கிவை புகல்வான் (23)

---

* அஞ்சினிர் போலும் (பா. பே.)

படைக்கடல் துடைக்குஞ் கடர்ப்படைத்திகிரி
    பான்மதி பொருவுவெண் சங்கம்
அடற்கருங் கதைவாள் கொடுமரந் தாங்கும்
    போகுய ரஞ்சனக் குன்றல்
கடுப்பவோர் புருடன் றனையினி தமைத்துக்
    கலுழன்மீ திவர்ந்து விண்ணவர்க்கு
முடற்றருஞ் செருவி லிரணியனிரிய னுவி
    யுய்ம்டிவண் வருகென வுரைத்தான் (29)

குருந்தொசித் தாயர் கோவிரை மேய்த்த
    கொண்டல்கூ றலுங்கரங் குவித்துக்
கருந்தலை யுகுத்த மூனைவெண் சோறுங்
    தடிபடு கருணையுங் குழைத்து
விருந்தயர் காலம் வந்ததென் றன்வி
    வெள்ளெயிற் றலகைபாட் டயரப்
பருந்தினந் தொடரப் பகட்டெழின் மார்ப
    விரணியன் பதிமருங் கிறுத்தான் (30)

திறைகொணர்ந் தொன்னர் புகுவதை யன்றித்
    தெவ்வடு வெஞ்சம முருக்க
உறைகுநர் பெறுத மணிமதில் வாயில்
    புறத்திளி லும்பர்சூழ் போதப்
பறவைவேந் திவர்ந்தோர் முகிலுறழ் மேனிப்
    பண்ணவன் புகுந்தன னென்ன
வறைகழ லவுணற் கிறையொடு மொசற்று
    மவுணன்வாய் புதைத்திவை யறைந்தான் (31)

கேட்டலும் வடவைத் தழல்விழி பொழியக்
    கிளக்கரும் புவனமோ ரேழும்
மூட்டரக் குண்ட குலிகமென் செப்பி
    னுள்ளழல் பரந்தன சிவப்பத்

தோட்டுணைப் பணைத்துத் தமனியத் திழைத்த
    வண்டமென் *சுவர்த்தலை சோழிய
வாட்டலைப் புகைய வாளெயி றதுக்கி
    மைந்தரை நோக்கியீ துரைப்பான் (32)

விரிந்த செங்கதிரும் போக்கற நிவந்த
    வெயிற்புறத் திறுத்தபண் ணவலோக்
கரும்புகைச் செந்தீச் சுடர்விரிப் பகுவாய்க்
    கட்செவி நெற்றியிற் கிடந்த
விரும்புவி யதனி னுயர்பரி விசும்பிற்
    பாதலத் தொளிப்பினு மெய்தி
வருந்தநீள் தடந்தோள் பாசத்திற் பிணித்து
    வல்லையிற் கொணர்மினென் றுரைத்தான் (33)

கடியவெங் கூற்றங் கண்புதைத் தேங்கக்
    காவலன் விடைகொடு சிறுவர்
குடவளைச் சங்கங் குமுறிநின் றார்ப்பக்
    கோளரி நூற்றினைச் செகுத்த
வடுசினத் திமிலேற் றுரிபுனை முரசங்
    குணில்பொரு மார்ப்பொலி கறங்கக்
கிடுகொடு சுழலும் வயவர்சூழ் போதக்
    கிளர்சமம் வேட்டெதி ரெழுந்தார் (34)

கனைகடாஞ் செருக்கிக் கண்படை பெருது
    †படர்முரட் செவியெறி காற்றிற்
பனையென நீண்ட திரள்தடக் கையிற்
    பாவடி நான்கிவீள் வாலிற்
புனைமணி பொதிந்த வெண்பிறைக் கோட்டிற்
    பொருகரை நாழிலாட் டயருஞ்
சினவுநீள் வரைப்போத் தெண்ணரைக் கச்சம்
    புவிமுது குளுக்கமுன் செல்ல (35)

† படர்முறச் செவியெறி (பா. பே.)
* சவர்த்தலை சொறிய (பா. பே.)

இலகொளிப் பருதி நடவுபைம் புரவி
யேழுநின் வரையினை யோர்கால்
வலம்வரும் முன்ன நேமியங் கிரியை
யாயிரங் கால்வலம் வருவோன்
*நிலவுநாற் றன்ன கவரிதாழ்ந் துலவு
நெற்றிய விசும்பினிற் பறப்ப
வலைகடற் பிறந்த கலினவாம் புரவி
யாயிரங் கச்சமுன் னடப்ப (36

கொடுமரம் விசைத்த கணையிலக் குறுமுன்
னெல்லையிற் குரோச முற்செல்ல
கடுநடைப் புரவி யாயிரம் பூண்ட
கதிருமிழ் கிடுகுசூழ் கிடந்த
விடுசுடர்ப் பருதி தழும்புற நிவந்த
கூம்பினம் விண்ணிடைப் படர
வடுதிறல் வலவர் தூண்டுபொற் றடந்தே
ராறரைக் கச்சமுன் னேக (37)

ஆயிரங் களத்தி னிந்திரன் புறங்கண்
டணிவிலா விறநகை புரிந்தோர்
பாய்புலிப் போத்தின் பாழிவாய் கிழித்துப்
பற்பறித் தணிந்த வெந்திறலோர்
மாயிரு ஞாலம் வலம்வரும் புகழோர்
வாளினர் வேலினர் வில்லர்
காயெரி யூழிக் கனலுமிழ் கண்ணர்
கச்சமெண் ணாயிரந் தொடர (38)

ஆள்வழக் கறுத்துக் கூற்றினைச் சினவி
யம்பலைத் தொழுகும்வாட் டடங்க
ணீளிருங் கூந்தற் கூத்திய ரல்குற்
றட்டென வகன்றுநீண் டுயர்ந்த

---

* நிலவு நாற்றன்ன (பா. பே.)

கோளரிப் போத்தோ ராயிரம் பிணித்த
*குருமணிக் கொடுஞ்சியந் தடந்தேர்
வாளெயிற் றகல்வாய் மறலிகண் புதைப்ப
மைந்தர்நால் வருங்கடி திவர்ந்தார் (39)

†மழைமதக் களிறு வழங்கலி விடந்த
மண்ணினுல் மழகதிர் மருட்டு
மொழுகொளி மணிச்சூட் டுரகம்விற் றிருக்கு
முலகுகொல் மண்ணுல காய
தெழுதருஞ் சேனு பராகம்விண் படர்ந்தாங்
கிமையவர் மேயபொன் னுலக
முழுதுமண் ணுலக மாகவேற் றடக்கை
மொய்ம்பினர் வெகுண்டெழுந் தனரால் (40)

கூந்தன்மான் றடந்தேர் கடாம்பொழி களிறு
கொய்யுளைப் புரவிபண் ணுறுத்தி
யாய்ந்தநூல் வழியிற் ருனையங் கடலைச்
சக்கர வியூகமா யமைத்து
பாந்தண்மேற் கிடந்த புவிமுது குளுக்க
வவுணர்கோன் பயந்தவேற் புதல்வர்
காந்தெறி யுமிழும் படையுடை யமரர்
கடற்படை வெருவுற நடந்தார் (41)

கூற்றென வுரறி யவுணர்கோன் சேனை
வருதலுங் குருதிநீர் வெள்ள
மூற்றிருந் தொழுகு நேமியந் தடக்கை
விண்ணவ னும்பர்சே னையைப்போர்
மாற்றரு மகர யூகமாய் வகுத்து
வாய்மடித் தெயிறுதின் றமரின்
ஏற்றன னவுணர் வயிற்றெரி தவழ
விருளு மிதயமுங் கருக (42)

---

* குருமணிக்கொடிஞ்சி பி. பே. † களிறுமுழக்கவிடிந்த (பி. பே.)

நறவுகொப் புளிக்கும் பசுந்துழாய் முகுந்தன்
 றுணவர் சேனையி னடவும்
உறுவலிக் கலுழ னிமைசுடுங் கடைக்கண்
 ணுமிழ்புகை வடவையுஞ் செந்தீ
யெறிபடை யவுணர் தானையங் கடலை
 யொருங்குவாய் மடுத்துநின் றெறிப்பச்
சிறையுடைத் தெறியும் வல்விசை வளியிற்
 களிற்றினந் திசைதிசை கவிழ (43)

கூர்நுதி வயிரத் தோட்டியின் வாய்ந்த
 துண்டவெம் படையினிற் குத்தி
மாரிவிழ் கட த்த தறுகண்மால் யானை
 மத்தகம் போழ்ந்துயிர் குடித்துத்
தார்வயப் புரவி யொன்றரைக் கச்சம்
 வள்ளுகிர்த் தாளினு லள்ளி
யிருளுங் குடரு மென்புநெக் கொழுக
 *வொல்லையி னிருவிசும் பகலும் (44)

†மாலையுங் குடரும் பிணங்குவெள் ளிலைவே
 லவுணர்தங் கடற்படை மறியக்
காலவெஞ் சிலையின் குடுமிநாண் கொளுவிக்
 கல்செய்திண் டோளுற வாங்கி
யாலமும் வடவை யழலும்வா யுமிழுங்
 கொடுங்கணை யளப்பில சொரிந்தான்
ஞாலமோ ரேழு மளந்தவன் விடுத்த
 நாகிளம் பருதிவா னுழவன் (45)

இரணியன் சேனைத் தலைவர்பைந் துளவோ
 னெறும்வலி நோக்கினர் வெகுளா
வரணியி னெழுந்த தீப்பொறி யென்னக்
 கட்கடை யழற்பொறி சிதற

---

* இருவிசம்புறலும் (பி, பே,)
† மாலையம் குடரும் (பி, பே.)

முரணுடைக் களிறு கலினமான் றடந்தேர்
    கூந்தன்மா மொய்ம்புறச் செலுத்திக்
குருதிதோய் வெய்ய பகழியோ ரொருவர்
    கோடியின் மேற்பொழிந் தார்த்தார் (46)

நிழலொடு கறுவி யெண்டிசைக் களிற்றி
    னீண்மதச் சுவடுதோய்க் கோடி
யிடுமெனப் பாயுங் கவிழ்தலை யருவி
    வரையினை வேழமென் றேற்று
முழைபுகு சீய மிரிதரப் பாய்ந்து
    முழங்குவெங் கடாமலை தூண்டி
யழலுமிழ் திகிரி கலுழன்மே லத்தம்
    படுகதி ரெனவெறிந் தார்த்தார் (47)

கண்ணழற் சீற்றத் தவுணரோர் மூவ
    *ருலகின துயிர்கவர்ந் துண்ண
விண்ணிடைப் பறந்து திரியுமுப் புரத்தின்
    விரைசெலற் கலினமான் றடந்தே
ரெண்ணில தூண்டி நூற்றுவர் கொல்லி
    வேழமாங் கப்பண முகண்டி
யண்ணலம் புள்ளேற் றரசின்மேற் றாவி
    யகல்வரைத் தோள்புடைத் தழன்றார் (48)

தாழ்கடற் கிடங்குந் திடர்படத் தாக்கித்
    தரைபிதிர்த் தெறிகவிழ் குளம்பிற்
காழ்படு கலினமன் றுமிழ் விலாழிக்
    கடுவிசைக் கூந்தன்மா னடவிப்
பாழியந் தடந்தோள் வெஞ்சின வவுணர்
    கலுழன்மே லமர்க்கெதிர் படர்ந்த
சூழ்கதிர் மணிச்செஞ் சுட்டரா வென்னத்
    தீமுகப் பகழிதூ யினரால் (49)

---

* உவனன துயிர்கவர்ந்து (பி. பே.)

*கடங்கவு ளயிரா வணத்தினுற் கோடுங்
கவந்தமாட் டயர்தரு களத்திற்
பிடுங்கினின் றுடுங் திறலினன் பகைவற்
பெருமையாற் றினவுறு தடந்தோண்
மடங்கலே றனைய சீற்றவெங் துப்பின்
வடவைகொப் புளிக்கும்வெங் கண்ணுர்
கொடுஞ்சிலைப் பொருந ருருமிடித் தென்ன
குரவையிட் டடுகணை பொழிந்தார் (50)

வாளம ரழுவத் தவுணர்கோன் சேனை
மனத்திறும் பூதுற வுடற்றுந்
தோள்வலி நோக்கிப் பசுந்துழா யலங்கல்
துயல்வரு முழவுறழ் தோளா
வினிருந் தடக்கை வரிவினுண் புடைப்ப
வெழுந்தநீ டொலியினி னண்ட
கோளகை வெடித்த திடியுறு மாவிற்
ருனவ ராருயிர் குறைந்தார் (51)

புற்றுரை யரவி னுவமுற் றுறைந்து
வெஞ்சமம் பொருதுடல் புழுங்குங்
கொற்றவெம் பகழி விடுத்தலுந் தமரக்
கொய்யுளைக் கலினவாம் புரவி
விற்றிற லவுணர் புள்ளியல் மான்றேர்
வெள்ளமோ ராயிரங் களத்தி
†னற்றநுண் பொடியிற் சிதர்ந்தன வலகை
யாவலங் கொட்டியாட் டயர (52)

தம்முடைக் கடலந் தானைவெண் கொடுத்தல்
காண்டலுந் தழல்விழி யிறைப்பத்
தெம்முனை கடந்து பொருநரைப் பெறுது
தினவுகண் படுக்குநீள் புயத்த

* கடங்கவிழ் (பி. பெ.)
† அற்றுகின் பொடியின் (பி. பே.)

சம்மவோ நமது வலியழ குடைத்தென்
றண்டமும் வெடிபட நகைத்து
வம்மென வறைகூய்ப் பசுந்துழாய் முகிலை
மைந்தர்நால் வருஞ்சமர் மலைந்தார் (53)

வேறு

குருதி வாயலகை வெய்ய சூர்மக
டுணங்கை யிட்டெதிர் குளிப்பநீள்
விரிதலைப் புவன முழுது மஞ்சுவர
விண்ணு ளோர்விழி புதைப்பவெம்
பருதி யாயிர மெழுந்த தென்னவொளி
படர நான்முகன் வடிக்கணை
பிரக லாதன்வரி விற்கு ளித் தவுணர்
பெட்பு றும்படி விடுத்தனன் (54)

கனக ருங்கடல் குடிப்ப தண்டருயிர்
கவர்வ தேழ்கிரியின் முதுகுற
முனைபடும் பொழுதி னுருவி யோடுவது
முடைகமழ்ந் துதிர முமிழ்வதோர்
புனைது ழாய்முகி லளித்த வெங்கணை
யெடுத்து வாள்விழி புகைந்திட
வனுகி லாதனுயர் கொற்ற வெஞ்சிலை
குளித்த முன்றெதிர் விடுத்தனன் (55)

மங்கு ரும்குடுமி வரைகி கர்த்ததொரு
மணிக டேர்கடவி யெதிர்செலாச்
சிங்க வேறென வுருத்து வாளெயிறு
தின்று தீயுக விழித்துநீ
ளங்கண் மாநில நடுங்க வெஞ்சிலைக்
குனித்து நின்றசனி யேறெனச்
சங்கி லாதனடன் முருகன் வெங்கணை
விடுத்து நின் றெதிர் தழங்கினன் (56)

அலாயு தங்கொடு முன்மேரு மால்வரையை
  யைந்து விற்கிடை யிழுத்திடுங்
கிலாதன் வானவரு மஞ்சு ருமலமர்
  கிட்டினுர் கொலென மூவிவொடும்
விலாவி றும்படி நகைத்து வெற்பனைய
  விற்கு னித்துநிண மூழ்கிவெம்
புலால்க மழ்ந்தெரியு மங்கிவெங்கணை
  விடுத்து நின்றெதிர் புழுங்கினுன் (57)

அவணர் கோனுதவு புதல்வர் நால்வரு
  மழன்று விட்டகணை யாவையு
முவண மூர்த்தியை வலஞ்செய் தேகமிக
  வுள்ளமாழ் கியயர் வெய்தலும்
புவன கோடிகளு முந்தி தந்தமுகி
  தந்தை பூவைநிற வண்ணனுங்
கவன வெம்பரிகொ டேர்க ளுன்குமொரு
  கையி னள்ளியெதிர் வீசினுன் (58)

ஒர்கு டங்கையினி லிரணி யன்புதல்வர்
  நால்வர் தம்மையு மொருங்கெடுத்
தார்வ மோடெறிதல் கண்டு வானவர்க
  ளலர்சொ ரிந்தடி பராவினுர்
போர்பு ரிந்திடுத லஞ்சி நீளிடை
  புறங்கொடுத் திரியுமவுணர் பேர்
யாரு மஞ்சுவர வமரு டற்றுமசு
  *ரேச னுக்கிவை யறைந்தனர் (59)

சொற்ற திமொழிகள் செவிமு தற்றடவு
  முன்னர் வாயிதழ் துடித்திட
செற்றி மீதுற வெழுந்தி ழிந்துமிக
  நெரிகொடும் புருவ நடமிடக்

---

* அசுரேசனுக் கிவை யியம்பினுர் (பி. பே.)

கொற்ற வாளினெடு மெஃகம் வெவ்வழல்
கொளுத்தி நின்றெரிய நகைசெயாப்
பற்றலார் மவுலி யிடறுசே வடிகள்
பார்கு மிப்பவெதிர் போயினன் (60)

எங்கு ளன்கொலவ னெங்கு ளன்கொலென
வசனி யேறென வுரப்பிநீள்
துங்க மால்வரைகள் கால்வி சைக்குளெறி
சூறை யோட்டய ருடர்ந்திட
மங்கு ழுழ்குடுமி வரைந டந்ததென
வந்து வெங்கலுழ னேடுமச்
சிங்க வேறனைய குருசில் யோசனையின்
விழவு தைத்துநவி சீறினன் . (61)

கருடன் வீழவும் விழாம லூர்திகள்
பயிற்று கல்விதரு மாட்சியாற்
புருட னக்கலுழ னுடனெ ழுந்துபுவி
யுண்ட மாலுமையி னெய்துரு
விரணி யன்றனது செய்தி கூறுதலு
மிறைவ னெல்லையி னெழுந்துபோய்
முரணின் வெய்யநர சிங்க மாகிவெளி
முகடு டைந்திட முழங்கினன் (62)

அண்ட கோளகையின் மவுலி சென்றறைய
வாட கக்கிரி நிகர்த்ததோ
†ளெண்டி சாமுக முகப்ப வெண்ணில
விலங்கு வாளெயிறு பொழிதர
மண்டு செஞ்சிகை விரித்த மூன்றுதெறு
வட்வை கட்கடை வழங்கிட
விண்டு பார்முது குளுக்க மானுட
மடங்கல் வெங்கள மடைந்ததே (63)

* கொளுந்தி நின் றெரிய (பா. பே.)
† எண்டி சாமுக மளப்ப (பா. பே.)

அடைந்த மானுட மடங்க றன்னையெதி
ரிற்ற வெற்றிபுனை யவுணர்கோன்
றொடர்க்து பற்றியிவண் வருக வென்றுதிற
லிரணி யாக்கனொடு சேர்தலும்
படங்கொள் வாளரவின் முடியின் வைகுமுயர்
பார்நெ ளித்திட நடந்துபோய்
மடங்க லேறுடல் புதைப்ப வெய்யதிறல்
வாளி பற்பல வழங்கினன் (64)

அங்கி யின்பகழி வருணன் வாளியொளி
ரலர்கதிர்ப் பருதி வெஞ்சரந்
திங்கள் சூடிகணை முதல வாக்வெதிர்
சிந்து கின்றகணை யாவையு
மங்கு ரும்வரையின் மீதெ றிந்தபசு
மட்க லத்தின்முனை மடிதலும்
வெங்கண் வாளவுண னெஞ்ச மஞ்சுற
வெரிங்கொ டுத்திரியல் போயினன் (65)

இரணி யாக்கனம ரிற்றொ லைந்துதனி
யிரிதல் கண்டுதிற லவுணர்கோன்
பிரக லாதனை விளித்து வெஞ்சம
ருடற்று கென்னவுயர் பெட்பொடும்
வரைகொண் மார்பிடை யணைத்து ரைத்தலும்
வணங்கி யங்கையினீல் வாய்புதைத்
தரச வென்றுரை மறுத்தி டேலென
விரந்து நன்கினுரை யாடினன் (66)

தாம ரைத்தவிசி னரசி ருக்குமுயர்
சதுமு கக்கடவு ளேயியா
வீம முற்றுபொடி யாடி யென்னுமொரு
மூவ ருந்தவ மிழைத்துளோர்

*காமு றற்குரிய தாம னத்திடை
காணு தற்கரிய பிரமமும்
நீமு கத்தவரி யேறு வெய்யசமர்
செய்தி டேலென விலக்கினன் (67)

விலக்கி நின்றுரைசெய் பிரக லாதனை
வெகுண்டு தீயெழ விழித்துமே
லலக்க ணுற்றிட வடர்க்க வுஞ்சிறுவ
னருளி னேடவை விளம்பலுங்
குலக்கி னுக்கிசைக லாத வெய்யமொழி
கூற லியென முனிந்துபோய்க்
யலக்க ணிரமற் றழுதி ரங்கவெழு
காரு நாணுற முழங்கினன் (68)

காணி லானொருவர் கண்ணு மென்றவிறை
கருதி லெங்குமுள னுகிலித்
தூணி னேடுமுள னேசொல் லென்றுசுடு
சொல்லி னாடவணின் மோதுரு
வாணி லேறரி யெழுந்து தானிடை
யவுணன் வெஞ்சின மடக்கவோர்
தானு வாமென முனின்று வெஞ்சமர்
துடங்கினன் தரும வேலையின் (69)

நிரையு ளைப்பொரு சினத்த மானிட
மடங்க லாளியை நெருக்கினேள்
வரைபி திர்ந்துவிழ வான மீதுறையு
முடுக்கள் சிந்தமறி திரையுலாங்
குரைக டற்புன லுடைந்தெ ழுந்துகரை
கொன்று செல்லவிசை போயபோ
திரணி யப்பெயரி னவுணன் வெற்பின்விழு
மிடிநி கர்ப்பவெதிர் குத்தினன் (70)

* தாமுறற்குரியதாய் மனத்திடை கண்ணுதற்கரிய (வி. பே.)

அத்த வெற்புறழ் பணைப்பு யத்திடை
யழன்று வெய்யதிற லவுணர்கோன்
குத்த வாலமிசை முறுக்கி மண்பக
வடித்து வாளரி கொதித்தெழா
மைத்த கார்தவழு மேரு வோடிகலு
மருமம் விண்டுதிரம் வழியவோர்
கைத்த லத்தினை யெடுத்து ரப்பியெரி
கனல்பு கைந்தெழ வடித்ததே (71)

பற்க றித்தித முதுக்கி வெவ்வுரை
பகர்ந்த முன்றுவிற லவுணர்கோன்
வெற்பி ரண்டனைய தோள்பு டைத்தற
வெகுண்டு மெய்யினொடு மெய்யுறப்
பொற்கு வட்டுவரை வெள்ளி யங்கிரி
பொருந்தி வெஞ்சமம் விளைத்தென
மற்பி டித்தனன் மடங்க லோடெட்திர்
வரைப்பு யங்களி னெருக்கியே (72)

தோளொ டுந்தனது தோணெ ருக்கியடர்
சுடுசினத் திறலி னவுணனைத்
தாளொ டுந்தனது தாள்பி ணித்துவரை
தரைவி ழுந்ததென வீழ்த்திமே
லிள்கு றங்கிடை கிடத்தி வன்பிட
ரிறுக்கி வெற்புறழு நெஞ்சகம்
வாளு கிர்த்தலை மடுத்த கழ்ந்துகுடர்
மாலை யிட்டுடல் பிசைந்ததே (73)

விண்ணு ளோர்மலர் பொழிந்து நெஞ்சகம்
வியந்து நின்றடி பணிந்திட
வண்ண லேறனை யவுணர் கோனுயி
ரருந்தி யாளரியி னுருவொழித்

தென்ன றும்புவனம் யாவு நான்முகனை
　　டிவரித எிக்குமல ருந்தியக்
தன்ன றுந்துளவ மாயன் வெண்டிரை
　　தயங்கு நாகணையின் மேவினன் (74)

வேறு

வாளம ரழுவந் தன்னி
　　லிரணியன் மடிந்த பின்னர்
நீளிருந் தடக்கைப் பேழ்வாய்
　　நிகரறு மிரணி யாக்கற்
காளரி யேறு போலு
　　மடல்கெழு பிரக லாதன்
கோளொடு நன்னு டேர்ந்து
　　குருமணி மவுலி வைத்தான் (75)

குடங்கையி னெடிய வாட்கட்
　　புலோமிசை கொழுநன் றெண்ணீர்த்
தடங்கடற் சுறவ மூர்வோன்
　　முதலிய தலைவர் யாரு
மடைந்துகுற் றேவல் கேட்ப
　　வறந்தலை மயங்கி மாழ்க
விடங்கெழு சிற்றத் துப்பின்
　　*வீரனேழ் வுலகுங் காத்தான் (76)

இன்னண மொழுகு நாளி
　　லவுணர்கோன் மகப்பே றின்றிப்
பொன்னவிர் †கடுக்கை வேய்ந்த
　　புராரியைக் கங்குற் போது
மன்னுநன் பகலு மன்பின்
　　வரன்முறை வழாது போற்றி
யன்னவ னருளால் வெய்ய
　　வந்தகா சுரனை யின்றுள் (77)

---

* வீரனெவ்வுலகுங் காத்தான் (பா. பே.) † கடுக்கை வேணி (பா. பே.)

இலகுபொற் கண்ணன் றேவ
 ரியக்கர்விஞ் சையர்மற் றுள்ள
வலகின்மன் பதைகள் யாரு
 மலக்கணுற் ருவி சோர
மலர்தலை யுலகம் யாவுங்
 கவர்ந்துவண் டிரைகு லாய
வொலிகட லகட்டி னுள்புக்
 கொளித்தன னொளித்த லோடும் (78)

அலர்தலை யுலகம் பூத்த
 வந்தணன் முதல தேவர்
கொலைபழுத் தொழுகு நேமி
 பண்ணவற் குறுகி யேத்திப்
பொலநிறக் கண்ணன் செய்தி
 புகறலுஞ் செங்கண் மாய
விலகொளி யெயிற்ற வெள்ளை
 யெறும்வலி யேன மானுன் (79)

துறுமயிர்க் குறுத்தாட் செங்கட்
 டுயவெண் பன்றி முன்னீர்
மறிகடன் முழங்கப் புக்கு
 வன்றிற லவுணன் மார்பம்
பிறைமறுப் பதனு லூன்றிப்
 பிளந்திரு கூறு செய்து
நிறையிரும் புவியை முன்போ
 னிலைபெற நிறுவிற் றன்றே (80)

வண்டுவீழ்ந் தரற்ற வாடாப்
 புதுமலர் மாரி சிந்தி
யண்டரார்ப் பெடுத்து வாழ்த்த
 வரும்பிள முறுவற் செய்ய

தொண்டைவாய்க் கமலைக் கேள்வன்
றுறுமயிர்ப் பன்றி யாகக்
கொண்டபே ருருவ நீங்கிக்
குரைகடற் பள்ளி சேர்ந்தான் (81)

முரண்மிகு மிரணி யாக்கன்
சமர்த்தலை முடிந்த பின்னர்க்
கரைபொரு கடலந் தானை
கைதொழப் பிரக லாத
விரைமணி மவுலி சூடி
னேரலர் வணங்கி யேத்த
வரியணைப் புறத்து வைகி
யவுணர்கோ னாயி னானே (82)

மணிநிற வண்ணன் செய்ய
மலரடிக் கன்பு பூண்டு
துணிகதிர்க் குளிர்வெண் டிங்கட்
சுடர்மணிக் கவிகை நீழற்
பணிமுடிக் கிடந்த வோரே
ழுலகமும் பரிக்கு நாளிற்
றணிவருங் கேள்வி யானோர்
மறையவன் வந்து சார்ந்தான் (82)

வந்தனன் மறையோன் றன்னை
மதிக்கல னாகி மிக்க
வெந்திறற் பிரக லாத
னிகழ்தலும் வெகுட்சி யெய்திப்
பைந்துழாய்ப் படலை மாலைப்
பண்ணவர்ப் பழிச்சு மாற்றா
லிந்திரத் திருவிற் செம்மாந்
திருந்தன னிவனென் றெண்ணி (84)

மழகதிர்ப் பருதி யன்ன
 கவுத்துவங் கிடந்த மார்பி
னழலவிர் நேமிப் புத்தேட்
 கன்பில னாக வென்ன
முழைபுகு சீய மன்ன
 மொய்ம்புடைப் பிரக லாதன்
பிழைபட வைது வேத
 முனிவரன் பெயர்ந்து போனான் (85)

மறைவிளை யாடுஞ் செந்நா
 முனிவரன் வைத வாற்றாற்
சிறுகருந் துளவோற் கன்பு
 செய்கல னாகி மேனா
ளுறுசினத் தவுணர்க் கொன்ற
 பழம்பகை யுள்ளத் தோர்ந்து
கறுவொடும் பிரக லாதன்
 கதழ்சினந் தலைக்கொண் டானே (86)

வேற்கடற் றானை யோடும்
 வெகுண்டன னெழுந்து பொங்கிப்
பாற்கடற் புறத்தி னெய்திப்
 பைந்துழாய்க் கரிய மாலை
யேற்றமர் புரிந்தா னோர்யாண்
 டிமையவர் பருவந் தன்னிற்
கூற்றுயிர் விழுங்கும் வைவேற்
 கொலைத்தொழிற் பிரக லாதன் (87)

வாளம ரழுவத் தாற்ற
 துடைந்தன னாகி மாயோன்
றுளிணைக் கன்பு பூண்டு
 தணப்பருந் திருவி னெய்தி

நீவிரு மாயை சேரு
　　மென்றிவை நீத்து வெய்ய
கோளுடைப் புலன்கள் செற்றுக்
　　குறிக்கருந் தவத்த னானன் (88)

மறத்துறை நீத்து வெய்ய
　　மைக்குடை பிரக லாத
னறத்துறை போய பின்ன
　　ரடுதிற லவுணர் யாரும்
பெறற்கருஞ் செல்வ மெய்த
　　வந்தகா சுரற்குப் பேராச்
சிறப்பொடு மிருள்கூட் டுண்ணுங்
　　கதிர்மணி மவுலி சேர்த்தார் (89)

பழிபடு மவுணன் காக்கு
　　நாளினோர் பன்னி ராண்டு
மழைவளங் குன்ற வேத
　　முனிவர ருள்ள மாழாந்
தழிபசி வருத்த நீடி
　　யகலிகை கொழுநன் வைகுந்
தழைபுனை குறுங்காற் சாலை
　　விழைவொடுஞ் சென்று சார்ந்தார் (90)

சந்தனப் பொதும்பர் சூழுந்
　　தாருகா வனத்தி னின்றும்
வந்தமா முனிவர் யார்க்குங்
　　கவுதமன் *மனைவி யோடு
மந்தமில் பூசை யாற்றி
　　யழிபசி யகன்று நாளுஞ்
சிந்தனை மகிழ நல்லூண்
　　சிறப்பொடு நல்கி னானல் (91)

* கவுதமன் மகிழ்வினோடும்

அகிறவழ்ந் துறங்கும் கூந்த
லகலிகைக் கணவ னில்லி
னகைபடு மமுத மென்னு
நாடொறு மடிசின் மாந்தித்
தகவொடு முனிவர் யாருஞ்
சார்ந்திடு நாளிற் றாய
முகில்வளஞ் சுரந்து மின்வி
மொய்ம்மழை பொழிந்த தன்றே (92)

பன்னிரு பருவத் துள்ள
பசிப்பிணி வெருவி யோட
மின்னிவான் பொழிந்தெஞ் ஞான்று
மிருவளஞ் சுரத்த லோடு
மன்னிய முனிவர் தத்த
மனைமருங் கெய்த வெண்ணிப்
பொன்னிறக் கபிலை மாயைப்
புணர்ப்பினு லமைத்து விட்டார் (93)

ஊதினும் பறக்கு மென்ன
வுயர்நரம் பெழுந்து தோன்றக்
கோதறு தொறுவை நோக்கி
கோதமன் பரிவி னேடுக்
நீதுரு தளித்து மென்னச்
சென்றுமெய் தொடலு மாழ்கி
வேதனை யுழந்து பாரின்
வீழ்ந்துயிர் மறிந்த தன்றே (94)

ஆனுயி ரிறத்த லோடுங்
கௌதம னழுங்கி மாழ்க
நான்மறை முனிவர் யாரு
*மாவுயிர்க் கடிந்தோ ரில்லிற்

* ஆவுயிர் கலிந்த வில்லிற் (பா. பே.)

ருனிவி தருந்திற் றீது
  தலைப்படு மென்ன வோதித்
*தேனமர் பொதும்பர் சூழ்ந்த
  தாருகா வனத்திற் சேர்ந்தார் (95)

கோதமன் ஞானக் கண்ணாற்
  குறித்திவி துணர்ந்து நோக்கி
மாதவ ரிழைத்த தீதென்
  றறிந்துநான் மறைவல் லோர்கள்
வேதநா லொழுக் மாறி†விடையவ
  னன்பிற் றீர்ந்து
தீதறு நரகின் வீழ்க
  வென்றுவெஞ் சினத்தின் வைதான் (96)

வைதவெஞ் சாபந் தன்னால்
  மறைபயில் முனிவர் யாரு
மைதுணர் விழுந்து வேத
  முதலிய வனைத்து நீங்கிச்
செய்தவ வொழுக்க மாறித்
  தீவினைச் சிமிழ்ப்புண் டியாரு
மெய்துதற் கரிதாம் வெய்ய
  விடர்க்கட லதனில் வீழ்ந்தார் (97)

தீவினை யுழக்கும் வேத
  முனிவரர் சிறுகட் பேழ்வாய்ப்
பாவடிப் பரும யானை
  யுரித்தபண் ணவனு மந்தண்
பூவைமே வியனும் வைகு
  மவையினிற் புகுந்து போற்றி
யோவரு துடற்று சாப
  மொழியுமா றுரைக்க வென்றார் (98)

---

* தேனவாம் பொதும்பர் (பா. பே.)

† விடைவர் னன்பிற்றீர்ந்து (பி. பே.)

வேறு

செற்றித் தழற்கட் பெரியோனு
　　நேமி யோனு மீங்கிவர்க
ளுற்ற திமை நிரையத்திற்
　　பன்னு ளுழைப்பி னல்லது
முற்று ருதென் றுளத்தெண்ணித்
　　தீமை பயக்கு முன்னூல்கள்
சொற்று ரவரை மதிமருட்ட
　　முனிவ ரவற்றிற் றுவக்குண்டார் (99)

அன்ன நூலின் வழிநூல்கள்
　　முனிவ ரோதி யஞரெய்தி
யின்னற் கடலுள் வீழ்ந்திடலு
　　மெம்மா னதனுக் *குளமிரங்கிப்
பன்னு மறையோர் துயர்தீர்ப்பான்
　　பலியேற் றுண்டல் தலைக்கிடாய்
மன்னு முயர்தா ருகவனத்தி
　　னன்னோர் சாலை மருங்கடைந்தான் (100)

வெயில்வீற் றிருக்குங் கடவுண்மணி
　　விளங்கு மார்பன் முதலமர(ர்)
அயில்வீற் றிருக்கு மதர்நெடுங்க
　　ணம்மெல் லோதிச் சிலைப்புருவ
மயில்வீற் றிருக்கு மஞ்சாயன்
　　மகளி ராகி வரைவுயிர்த்த
குயில்வீற் றிருக்கு மந்தீஞ்சொற்
　　கோதை யேவற் றலைநின்ரூர் (101)

ஆல முயிர்க்கு முத்தலைவே
　　லடுபோர் நந்தி யமரரொடுங்
காலக் கனல்கட் கடைகவிழ்க்கும்
　　கணங்கள் யாவுஞ் சூழ்போதப்

---

*குள்ளிரங்கி

பால்வெண் ணீற்றி னொளிபழுத்த
படிவத் தண்ணல் பங்குறையும்
ஞாலம் பூத்த சிற்றுதரத்
தணங்கி னேவல் கயந்திருந்தார் (102)

அனைய காலை விசும்பளக்கு
மம்பொற் குடுமி மந்திரத்திற்
கனைதெண் டிரைநீர்க் கடல்கிளர்ந்தா
லென்னக் கலின மாப்பூண்ட
புனைபொற் கொடிஞ்சி மணிநெடுந்தேர்
முதனூற் படைகள் புடைசூழச்
சினவுங் கொல்லேற் றடலரியிற்
சென்றா னந்த காசுரனே (103)

அரில்பூத் தலர்ந்த வுள்ளத்தி
னவுணன் மடமை மீதூர
வரிபூத் தலர்ந்த *மதர்நெடுங்க
ணணங்கைக் கவர்வான் வந்தனனென்
றெரிபூத் திலங்கு முத்தலைவே
லேந்தி நந்தி முதலானோர்
செருவேற் றெழுந்தார் வாட்டலைகள்
புகையச் சாரி †திரிந்தனரால் (104)

கொல்வேற் றுரிவை புறம்போர்த்த
கிடுகு குறங்கின் மிசைதாங்கி
யெல்லேற் றொளிகான் றிலங்குதிறல்
வடிவாள் விதிரா விதம்மடியா
மல்லேற் றுயர்ந்த திணிதடந்தோட்
கணங்கள் வெகுண்டு வானோக்கி
யல்லேற் றுடைய விருள்பழுத்த
நிறத்தோர் நெஞ்ச மழன்றெழுந்தார் (105)

---

* மதர்நெடுங்கணங் கைக்குவர்வான் (பி. பே.)

† திரிந்தனனால்

எழுந்தார் வரிவி ளுண்கொளுவி
யெய்தார் வைதா ரெரியுமழற்
கொழுந்தா ளிமைதிய்ங் திடவிழித்தார்
குனித்தார் கொம்மை கொட்டினர்
பிழிந்தார் கணங்க ளுடற்குருதி
பில்கி யோட வவை நோக்கி
யழிந்தார் நெஞ்சம் விண்ணோர்க
ளவுண ருரறி யார்த்தெழுந்தார் (106)

கூற்றும் வெருவிக் கண்புதைப்பக்
குனிக்கும் வரிவிற் றிறல்மணிமா
னேற்றை யுயர்த்த விறனந்தி
கண்டா கன்ன ரிவர்முதலோர்
சீற்றங் கதுவ வாளெயிறு
தின்றுங் கவுணர் படைவெள்ள
றாற்றின் மேலு ளொருனொடியிற்
கொன்றுர் நாழி லாட்டயர்ந்தார் (107)

கூர்த்த நோக்கின் வாளவுணர்
தொலைதல் காணு வவுணர்கோன்
ஆர்த்தா னண்ட முகடிடிய
வமரர் வயிற்றி னெரிதவழப்
பார்த்தா னரவின் முடிக்கிடந்த
வவனி நெளியப் பதம்பெயர்த்தான்
வேர்த்தான் கணங்க டமையள்ளி
யண்டச் சுவரின் விட்டெறிந்தான் (108)

கணங்க ளுடைந்து புறங்கொடுப்பக்
காயா மேனித் திருநெடுமா
லணங்கு நோய்செய் வரிநெடுங்கட்
சத்தி யொருநா றமைத்துவிட

நிணங்கொள் வடிவே லந்தகப்பே
    ரவுணன் றன்னை நிகர்வோரைத்
துணங்கை யயர்ந்து பேய்க்கணங்க
    டுள்ள மகிழ்ந்தி றேனவிடுத்தான் (109)

விடுத்த வோரா யிரமவுணர்
    விளிய நந்தி முதற்கணங்க
ளடுத்த விண்டு சத்திகள்வந்
    தடர்த்து வாகை புனைந்திடலுங்
கடுத்தாழ் மிடற்றெங் கண்ணுதலோன்
    கணங்கட் காற்ரு துடைந்துபுறங்
கொடுத்தா னுலக மொருமூன்றுங்
    கொலைசூ ழந்த காசுரனே (110)

அன்ன காலை முனிவரர்க
    ளமரு முயர்தா ருகவனத்திற்
பன்னீ ராண்டு நல்லருளிற்
    பலியேற் றுலவி வார்சடையிற்
பின்னற் றிரைவான் புனற்கங்கை
    முடித்த பெம்மான் பிறைதவழும்
பொன்னங் குடுமி மந்தரமால்
    வரையின் விரைவிற் போந்தனனால் (111)

அருவி மதவெங் கவுட்கலுழி
    வேழ முகன்வான் முகடவுணங்
குருகு பெயர்குன் றறவெறிந்த
    குமர னடுபோர் விறனந்தி
செருவெங் கோலத் தலங்கிலைவே
    றிரிக்குங் கால வயிரவன்வெம்
பகுதி வடிவேற் கணங்களொடும்
    பரமன் பாதம் பணிந்தனரால் (112)

கொங்கு கமழு மலர்ப்பொகுட்டி
 லுறையுங் கோதில் மறைக்கிழவ
னங்கண் விசும்பு பொது நீக்கி
 யளிப்போன் வெய்ய தழற்கடவுள்
வெங்கட் கூற்றஞ் சுறவுயர்த்த
 வெள்வேல் வருணன் முதற்றேவர்
திங்கட் குழவி வனைந்தசடைத்
 தேவின் கமலத் தாள்பணிந்தார் (113)

பணிந்த குமரர் தனையெடுத்தாங்
 குச்சி மோந்து பரிவினொடும்
வணங்கு மமர ருளங்களிப்ப
 மகிழ்வி னெக்கி மறைக்கிழவ
னணங்கு முரக கங்கணத்தை
 யேந்த வளைக்கிறைவழுத்தக்
கணங்கொள் மணிகூ ரிருடுருவிக்
 கதிர்செய் கோயி லுட்புகுந்தான் (114)

கரைகொன் றிரங்கு கருங்கடலி
 னஞ்சு மமிழ்துங் கடையுயிர்க்கும்
பொருவே னெடுங்க ணரமகளிர்
 பொன்னங் கவரி புடையிரட்ட
நிரைவா லுளைய பைங்கண்ண
 புலவு கமழும் நீனெயிற்ற
வரிமாச் சுமந்த மலரணையி
 னண்ணல் செம்மாந் திருந்தனனால் (115)

இமையாக் கருங்கண் முலைதாங்கி
 யிடுகு மிடைபோ யுள்வாங்க
வலைமயார் தடந்தோள் வளைபுலம்ப
 வம்பொற் சிலம்பு கிடந்தலற

வுமையா ளோடும் பெண்ணுருவம்
வாய்ந்த திருமா லுவந்தெய்தித்
தமரக் கடலின் விடமயின்ற
தலைவ னடியிற் ருழ்ந்தனனால் (116)

வேறு

காளொடு மொருத்தங் கோட்டி
கைமுகம் விருந்து நல்கி
மாணிழை யுருவி னின்ற
மாயனை யுமையி னோடுங்
காணவாத் தனது செம்பொற்
கவானிடை யிருத்தி நீங்கா
வேணவா வோடும் புல்லி
மேதக விருந்தா னன்றே (117)

திருமறு மார்ப னோடு
முமையொடுஞ் சிறந்து தோன்று
மரியணைப் புறத்து வைகு
மண்ணலை வணங்கி யேத்தி
யெரியுமிழ் தறுக ணாந்த
காசுர னிழைத்த வெல்லாங்
குருதிதோய் வயிர வொள்வா
ளிந்திரன் கூறி னானே (118)

மாயனுண் டளித்த நாறு
சத்தியும் வணங்கி யேத்தித்
தாயநீ யாரை மற்று
னிடமருங் கதனிற் ருேன்று
மாயிழை யெவள்கொ லுன்றன்
வலப்புறத் தழகு பூத்த
சேயிழை யார்கொ லென்னத்
திங்களஞ் சடையோன் கூறும் (119)

தத்துவங் கடந்து நின்ற
தனிப்பொரு ளாகி மேலாய்ச்
சித்தினி லறிவ தாகித்
தெரிவரும் பிரம மாகி
பத்திமை யோடுந் தம்மைத்
தம்முளே பார்க்குந் தூய
முத்தர்நல் லிதய நீங்கா
முழுப்பொருள் யாமே யாமால் (120)

உலகெலா மின்றுங் காவல்
புரிந்துமீட் டொடுக்கு கின்ற
வலகிலா விச்சைக் கென்றுங்
காரண மாகி யொன்று
யிலகுபே ரொளியா யென்ற
னிடமருங் கொளிக்குஞ் செல்வி
நிலவுநான் மறையு மேற்று
நிகரில்சிற் சத்தி யாமால் (121)

வலப்புற மதனில் மேய
வண்டுகண் படுக்குங் கூந்த
லுலப்பருங் காலா தீத
வுருவமா யொளியா யொன்றுய்க்
கலப்பிலவ் வியத்தாய்த் தோன்றுங்
காரண மாகி யானுய்
நலத்தகு குணக்குன் றுகு
நாரண னுகு மன்றே (122)

பூந்துழாய் படலை மாலைப்
பூவைவண் ணனையுஞ் செய்ய
மாந்தளிர் கவற்று மேனி
மலைமக டனையும் வேறு

யோர்ந்துரைப் போரென் னன்பிற்
நீர்ந்தவ ரொருவ ராக
வாய்ந்துணர் கிற்போ ரென்ற
னன்பரிற் சிறந்தா ரன்றே (123)

அலத்தகம் விளர்ப்பச் சேந்த
சீறடி யம்மெல் லோதிச்
சிலைக்கரும் புருவ வாட்க
ணுமையைவண் டேறல் கக்கு
மலர்த்துழாய் யலங்கற் பூவை
வண்ணனை யிகழ்ந்து ளோர்க
ளுலப்பினு ளெரிவாய்த் தீய
நரகிடை யுழப்பா ரன்றே (124)

என்றுவெண் டிங்கள் வேணி
யிறையவ னிசைத்த லோடுங்
குன்றெறி வயிர வொள்வாள்
குருசிலை முதல தேவர்
மன்றனுண் மலர்க டூவி
வலஞ்செய்து வணங்கி யேத்தி
யொன்றுபே ருணர்வி னோடு
மீங்கிவை யுரைக்க லுற்றார் (125)

முருங்கெரி புரத்தி னிட்ட
முதல்வனின் மேலுந் தெண்ணீர்க்
கருங்கடல் புகைய விற்கால்
குனித்திட்ட கடவுண் மேலு
மருந்தினு மினிய தீஞ்சொன்
மலைமகண் மேலு மன்பு
பொருந்திட வேண்டு மென்னப்
பொலிவொடு நல்கி னானே (126)

வேறு

முத்தம் பருமித் திடைதேய்த்து
முகிழ்த்து விங்கி
யத்தம் பொருவு மணிமென்
யம்மேல் வோதி
மைத்தங் குவேற்கட் டிருநாயக
ஞதி வாஞேர்
தத்தம் பதிக்கு விடைகொண்டெழு
மேல்வை தன்னில் (127)

நிழல்கொண்டு தெவ்வ ருயிர்மேயு
நிணங்கள் கொட்ட
வழல்வெஞ் சினத்த களிறுயிர
வெள்ள மேக
மழவெங் கதிரி விழற்றுங்
கொடிஞ்சி மான்றேர்
குழுமிப் புவியோ ரிடமின்றெனக்
குன்றி னேக (128)

திரைமுற்று முந்நீ ரிடைத்தெள்
ளமுத் தோடும் வந்த
பரிமித்த கூந்தற் பரியாயிர
வெள்ள மேக
வுருமுக் குரலர் வடிவாள
ருலங்கொ டோளர்
வெருவற்ற மள்ளர் பதினுயிர
வெள்ள மேக (129)

உடல்வெஞ் சினத்த வயவெம்புலிப்
போத்தி ேனுடா
வடுவெந் திறல்வா ளவுணர்க்கிறை
யாய வெய்யோன்

கடன்மொண் டெழுந்த முகில்போற்
கடற் ஞனை யார்ப்ப
மிடல்கொண்டு போதந் துயர்மந்தர
வெற்ப ண்டைந்தான் (130)

வேறு

ஆல விடங்கர் வெஞ்சி னத்திற
லந்த காசுர னடுசமங்
கோலி வருவதை யொற்றர் கூற
வெகுண்டு குன்றவி லந்தணன்
கால பயிரவ னந்தி யாதி
கணங்கள் சூழ்வர வண்டுமாய்
மாவி ளெடுமிக லவுணர் வெருவர
மலைதி யென்று வழங்கினன் (131)

என்று கூறலு முத்த லைப்படை
யெம்பி ரானடி கைதொழா
வென்றி மால்விடை மீதி வர்ந்து
வெகுண்டு விண்ணவர் கைதொழக்
கன்று நெஞ்சினர் கால வேலினர்
கனல்க விழ்த்தெரி கண்ணினர்
வன்றி றற்கண நாதர் சூழ்வர
வயிர வன்கடி தேகினன் (132)

இலகு முத்தலை வேல்தி ரித்திமி
லேறு யர்த்தரு ணந்தியுங்
கோலைப ழுத்தழ னேமி கொண்டுயர்
கலுழன் மேல்வரு கொண்டலும்
மலையி னைச்சிறை வீழ வெட்டிய
வச்சி ரப்படை யண்ணலும்
அலைக டற்படை யவுணர் நெஞ்சக
மலம ரத்தனி யேகினர் (133)

வெண்ணி ணத்தொளி பூசி யாருயிர்
மென்று மென்று விழுங்குபோர்
அண்ண லங்கதை சுற்றி யந்தக
ணந்த காசுர னெதிர்செலக்
கண்ண முற்பொரி சிந்த வெந்திற
லளகை யாளிக டற்படை
யெண்ணி டைப்புவி சிறிதும் வேறிட
மின்றெ னத்தவி சென்றதே (134)

இரலை யூர்தியு மேழ கத்திவர்
வெய்ய செந்தழ லிறைவனுங்
குருதி யாடி நிணப்பு லால்கமழ்
கொற்ற வாளுடை நிருதியுந்
திரைகொ ழித்தெறி விரிக டற்கிறை
யாய திண்டிறல் வருணனும்
உருவ மால்விடை யூர்தி யுந்திற
லவுண ரோடம ருடற்றினர் (135)

விண்மு கத்தெறி பகழி தோமரம்
வேலெ ழுப்படை கப்பணங்
கொன்று ழைத்திரி சூல வேல்கதை
குலிசம் வான்மழு நேமிகொண்(டு)
இன்ன லுற்றிமை யோர்க டுங்குற
வந்த காசுர னெதிர்தலும்
பொன்ன கர்க்கிறை புருவ வில்லொடு
விற்கு னித்திடு போர்செய்தான் (136)

கார்வ ரைப்படர் சிறைய ரிந்திரு
கைப்ப டிந்த திறத்தினாற்
கூர்நு னிக்குலி சாயு தப்படை
கொண்டு திண்டிற லமரர்கோன்

வார்ம தப்புன லருவி தாழ்தரு
சூழி மால்வரை கோடிவெம்
போர்மு கத்திடை கணங்கள் வெவ்வழல்
பொழிய நாழில் படுத்தினன் (137)

கனைகு ரற்பொரு பகடு கைத்திருக்
கண்ண முற்பொறி கதுவவெஞ்
சினமி குத்துய ரண்ட கோளகை
யிடிய நின்று சிரித்துலா
யனல்க விழ்த்தெரி கதைகொடந்த
னந்த காசுரன் மெய்யினிற்
புனைம ணிக்கவ சந்தெ றிப்படி
வத்து நின்று புழுங்கினன் (138)

அளகை காவல விரலை யூர்தி
யழற்று மங்கி யரக்கர்கோ
னளிபு னற்கிறை யீச னல்லுரு
நண்ணு வோர்பதி னொருவருங்
கனியு டைத்திற லவுண னென்னுமார்
கனமு கட்டி னெருங்குவான்
துளிமு கிற்குல மேழு நின்று
சொரிந்தெ னக்கணை தூவினர் (139)

தூவி நின்றிரு தோள்பு டைத்தெதிர்
துள்ளி வெய்தி னெதிர்ந்திடு
தேவிர் காளினி யென்முன் வந்துயி
ரெங்க ளுய்குவிர் நீர்கலா
வர்வி யோடுநும் முடல்பிழிந்து
குடித்த லாதயல் விடுவனோ
போவ தெவ்வழி நின்மி னென்றறை
*கூய்வெ குண்டடு போர்செய்தான் (140)

* வெகுண்டு போக செய்தனன் (பா. பே.)

அந்த காசுர னெதிர்பு குந்தயி
ராவ ணத்தின் மருப்பொசித்
திந்தி ரன்றட மார்ப கந்தவி
லென்பொ டிந்திட மோதுரு
வெந்தி றற்பக டூர்தி வெவ்வழல்
விழிபி துங்க வடித்துவெஞ்
செந்த ழற்கிறை கவுணெ ரிந்து
சிதர்ந்து விழ்தர வெற்றினன் (141)

நிருதி வாய்வழி குருதி கக்க
நெரித்து வாளமர் புரிதரும்
வருணன் மார்பி லுதைத்த மன்றள
கேச னோட மலைந்துபோ
ரிரலை யூர்தி வணங்க வஞ்சலை
யேகு கென்றரு ளீசனல்
லுருவு ளார்பதி யொருவ ருஞ்செரு
வொழிய வாகை புனைந்தனன் (142)

விண்ணு ளோர்படை வெருவி யோடுதல்
கண்டு நெஞ்சம் வெகுண்டுபோ
ரண்ண லங்கதை நேமி வாள்சிலை
*சங்க மங்கை யமைத்திடுந்
தண்ண றுந்துள வப்ப சுந்தொடை
தாழ்த ருந்திரு மார்பினன்
பண்ண மைத்துயர் கலுழன் வன்பிடர்
பருதி நாணுற வேறினன் (143)

ஊழி வாயதி ருருமெ னத்திற
லுரக ரஞ்சி வெருக்கொளப்
பாழி யங்கிரி புவியி டிந்தெழு
†பாத லத்தி னொளிப்பமேன்

* சங்க மங்கை யமர்ந்திடும் (பா. பே.)
† பாதலத்தி னொளிப்ப மென் (பி. பே.)

மோழை பட்டுய ரண்ட கோளகை
  முற்றும் விண்டு சிதர்ந்திட
வாழி மாமுகி லவுணர் நெஞ்சக
  மஞ்ச வால்வளை யூதினன் (144)

கொண்டல் மேனி முகுந்தன் வெஞ்சமர்
  கோலி வந்தமை கண்ணுருத்
திண்டி றற்பரி கோடி பூட்டிய
  தேரின் மீதி விவர்ந்துபோ
யெண்டி சைக்கிரி செவிடு பட்டுயர்
  மால்வ ரைக்குல மிடியவே
ளண்ட முற்றுமு டைந்து பாழ்பட
  வவுணர் கோன்வளை யூதினன் (145)

வேறு

புழைபடு தடக்கை வேழம்
  பொங்குளைப் புரவி நூறு
மிழைபக வெறியு மொள்வா
  ளெறும்வலி வயவர் தம்மை
விழைவொடு மமரர் மாதர்
  விருந்தெதிர் கொள்ள வில்வாயக்
கொழுநுசிப் பகழி மாரி
  கொண்டல்பெய் திட்ட வன்றே (146)

மலைதுணிந் தென்ன வெம்போர்
  வாரணங் கவிழ்ந்த முன்னி
ரலைமறிந் தென்னப் பொங்கு
  மலங்குளைப் புரவி வீழ்ந்த
தலைகுவிந் திரவி மான்றேர்
  தடுத்தன கலுழப் பாகன்
சிலைகுனிந் தளவின் வெம்பேய்
  நிணச்சுவை தெவிட்டிற் றன்றே (147)

ஆரொடுங் குழி சிச் சில்வி
	யற்றன கூம்பு வீழ்ந்த
பார்துக ளான செம்பொற்
	றிடுகொடும் பரிகள் வீழ்ந்த
ஊர்தரு பாகர் சென்னி
	யுருண்டன கொடி களற்ற
தேரணிசி தர்ந்து வீழ்ந்த
	தீமுகக் கணைகள் பாய (148)

ஊனொடு பழகி நெய்த்தோ
	ரொழுகு வெண் பிறைக்கோ டற்ற
கான்மதக் கலுழி தூங்குங்
	கவுளொடுந் தலைக ளற்ற
பானிறக் கவரி தூங்கும்
	படர்முறச் செவி களற்ற
நீனிறக் குன்ற மென்னக்
	கிடந்தன நெடுங்கை வேழம் (149)

கணிகையர் மனத்திற் செல்லுங்
	கடுவிசைக் கால்க ளற்ற
துணிகதிர்ப் பருமமற்ற
	சுடர்மணிக் கலின மற்ற
வணிமணித் தாரி னோடு
	மலங்குளை யெருத்த மற்ற
மணிநிற மாமை பூத்த
	வாம்பரி யனைத்து மாதோ (150)

சேட்டிளம் பருதி மார்பந்
	திறந்தன மலைக ளேய்க்குந்
தோட்டிணைத் துணிந்த செம்பொற்
	சுடர்மணிக் கவசம் வீழ்ந்த

தாட்டுணை யற்ற வெய்ய
தானவ ரெவர்க்கும் விழும்
பாட்டளித் துளவோன் வில்வாய்ப்
படைகெடும் பகழி பாய (151)

ஆங்கது காண்ட லோடு
மாரழல் கதுவ நோக்கி
விங்கிய வெகுளி தூண்ட
வெந்திற லவுணர் கோமான்
வாங்கருங் கொடிய விண்ணுண்
டெறித்தலும் வானோர் மாழ்கி
யேங்கினர் புவிக ளேழு
மிடைந்தன வுடைந்த தண்டம் (152)

திருகுவெஞ் சினத்தி னேடுஞ்
செங்கண்மால் முன்ன ரெய்தி
யிரணிய விரணி யாக்க
ளிகலவிந் தாவி சோர
முரனொடுங் கொன்ற வுன்னை
முடித்தரும் பழிகொள் ளேனே
லரனுடை வரிவி லென்று
மமரிடை யெடுக்க லேனல் (153)

என்றுரை யாடி வேதன்
மனத்திறு விழைத்த நிசன்
குன்றவில் லணைய தாற்று
விரணியன் குழைத்து நாணி
னென்றிட வேற்றெ ணுதென்
றெழிந்திடும் வலத்த தாய
வென்றியஞ் சிலைநா ணேற்றி
வெடிபட முழங்கி யார்த்தான் (154)

குடுமியம் பறவைக் குன்ற
முருவிடக் குமரன் முன்ன
மடுதிறல் வடிவே றன்று
லெறிந்திடு மாற்றல் கேளாப்
படர்தரு மேரு வெற்பை
யுருவிடப் பணித்த வாளி
கடையுக முடிவி னூழிக்
கனலெனக் கனன்று விட்டான் (155)

மரகதக் குன்ற மன்ன
மணிநிற வண்ணன் மேனி
*விரைவுற வெடுத்த வாளி
மெய்தளிர்ப் பவள மேனிப்
புரியெரி செய்த முக்கட்
புளிதளிற் றேன்ற னேக்கிக்
கரையழி கடலந் தானை
யவுணர்கோன் களித்தல் செய்தான் (156)

ஆங்கவன் களிப்ப நோனு
தஞ்சன வண்ணன் சீறிப்
பாங்கமை பரியுந் தேரும்
பதாதியும் நூழி லாட்டித்
திங்குரு வெடுத்தா லன்ன
வந்தகா சுரன்றின் டோளி
லோங்குபொற் கவசம் விழ
வொருகணை விடுத்து நக்கான் (157)

கார்முகம் வணக்கிச் செம்பொற்
கலன்செய்தோள் கழிய வாங்கிப்
பார்முழு தளந்த மாயன்
விடுத்தவெம் பகழி யாவும்

---

* விரைவுற வெடுத்த வாளி மெய்தளிர் (பா. பே.)

கூர்நுதி மழுங்கி வீழக்
கொழுங்கதிர்ப் பருதி யேய்க்கும்
போர்கெழு திகிரி மண்ணும்
வானமும் புகைய விட்டான் (158)

விட்டவெங் திகிரிக் கூற்ற
மின்னொடு முருமுக் கான்று
பட்டன னவுண னென்னத்
தானவர் பதைத்து மாழ்க
வெட்டுட னிரண்டு திக்கும்
வென்றவ னகலத் தெய்திக்
கட்டழ லிறைக்கும் வல்வாய்
மடிந்தொளி கரந்த தன்றே (159)

அள்ளிலை வயிர வொள்வா
ளவுணர்கோன் வெகுளி பொங்க
வொள்ளெரி தவழ்ந்து செய்த்தோ
ரொழுகிவெம் புலவு நாறும்
புள்ளவாம் பகழி யொன்று
விடுத்தலும் பூவை மேனி
வள்ளல்பைந் துளவத் தண்டார்
மருமம்போழ்ந் தேகிற் றன்றே (160)

நீனிறக் குன்றில் வீழுங்
குலிகநீ ளருவி யென்ன
மானிறந் திறந்து செய்த்தோர்
சொரிதலு மயக்க மெய்தப்
பானிற வெருத்த செங்கட்
பறவைவேந் தரியி னேடுந்
தீநிறப் படைகொள் கால
வயிரவன் மருங்கு சேர்ந்தான் (161)

திருமறு மார்பன் வெய்ய
கணைபடு மயக்கந் தீர்ந்து
குருதிகொப் புளிக்கும் வைவே
லந்தகா சுரனைக் கோற
லரிதரி தெம்ம னோர்கட்
கையநீ பாணி யாது
விரைவிலிற் சேறி யன்றே
லுலகெலாம் விழுங்கு மன்னோன் (162)

## வேறு

என்னலும் விழிசெந்தீ யெரிதர விடமூழ்கா
மின்னகு மழுவெம்போர் விறலுடை யடனந்தி
பன்னக முடிசாயப் படிநெளி தரமண்டிக்
கன்னவில் திரடிண்டோட் கணமயல் வரவந்தான் (163)

வந்தடு தழல்காலு மலையுறழ் கதையொன்றிற்
கந்தடு வயவெம்போர்க் கயரத துரகத்தோ
டந்தமில்களவேள்விக் கமைதரு மறமள்ளர்
செந்தசையுக மோதித் திசைசெவி டுறநக்கான் (164)

கரியொடு கரியெற்றிக் கால்வீசை யொடுதாவும்
பரியொடு பரியெற்றிப் பார்கிழி தரவோடித்
திரிதரு சுடராழித் தேரொடு தேரெற்றிப்
பொருசம ரிடையொன்னார் புறமிட வெதிர்சென்றான் (165)

சென்றெதிர் கொடியோனைப் புவியொடு திசையாவும்
வென்றவ னுயர்திண்டோள் விசயமு மடுபோரு
மன்றுகொல் நன்றென்று நகையொடு முரையாடி
மின்றிகழ் கணையந்தார் மார்பினி லுறவிட்டான் (166)

காய்கணை படவெம்பிக் கதமெரி விழிசிந்தப்
பாய்பரி யொடுதேரும் பாகனு முடன்விழ
வாய்பிழி யலர்கொன்றைத் தார்புனை யடனந்தி
தியுமிழ் கதையொன்றால் மோதின னெரிசிந்த (167)

தன்னுடை யுயர்கேயித் *தொழிலொழி தரலோடு
மொன்னல ருயிர்மேயா துறைபுக னிவெள்கு
மின்னடு சுடர்வேலான் மேதினி மிசைகுப்புற்
றன்னவன் மணிமார்பத் தெற்றின னதிர்வுற்றான் (168)

வேறு

நந்திதன் னயர்வு நோக்கி
  நாகிளம் பருதி கோடி
யந்தரத் தெழுந்த தென்ன
  வவிர்மணிக் கதிர்கள் வீசச்
சந்திர மவுலி யண்ட
  கோளகை சென்று தாக்கக்
கந்தடு திரடோட் கால
  வயிரவன் கடிதின் வந்தான் (169)

ஆலமும் வடவைத் தீயுங்
  கொப்புளித் தவுணர் செய்த்தோர்
வேலையிற் குளித்துத் தெவ்வர்
  வெண்ணிணச் சேறு பூசிக்
காலன்வெம் பசியு ருது
  களித்துயிர் விருந்து நல்குஞ்
சூலவே றிரிவித் தந்த
  காசுரற் றொடர்ந்து சேன்றான் (170)

கந்தடு புழைக்கை நால்வாய்க்
  கடாக்களிற் றுருத்தல் போலு
மந்தகா சுரன்றன் மார்பத்
  தழிபெருங் குருதி கால

* தடுதொழில் தரலோடு (பி. பே.)

விந்திரன் முதல தேவ
    ரிறைஞ்சினர் தொழுது வாழ்த்தக்
கொந்தழற் சூல வேலாற்
    குத்திமீ தேந்தி னானே (171)

பொருப்புறழ் சூல வேலின்
    வைந்நுதி புதையக் குத்தி
யருக்கன்மண் டலமட் டேந்தி
    யந்தகா சுரன்றன் மேனி
கருக்கலும் பாவ நீங்கிக்
    கண்ணுதற் கடவு டன்னை
யிருக்கினை முதல வாய
    மறைகளா லேத்த லுற்றான் (172)

விருப்பொடு வெறுப்பு நீங்கி
    வெறுவெளி யாகித் தோன்றுந்
திருக்கிளர் பவளக் குன்றே
    திருமறு மார்பன் காணா
மருக்கிளர் கமலப் பொற்றாள்
    மாணிக்க மலையே போற்றி
பொருப்புவிற் குழைய வாங்கும்
    புனிதனே போற்றி போற்றி (173)

பானலங் கண்ணி பங்கா
    பல்லுயிர்த் தொகைகள் யாவு
மீனமொன் றின்றி யினுந்
    *தந்தையே யென்ப தெல்லாம்
வானவ ரொருவர்க் கேயோ
    மறத்தொழில் பூண்ட புன்மைத்
தானவர்க் கில்லை கொல்லோ
    தாணுவே போற்றி போற்றி (174)

---

* தந்தைநீ யென்பதெல்லாம் (பா. பே.)

எனுமறைத் துதிகள் கேளா
    வெம்பிரான் மகிழ்ச்சி கூர்ந்து
முனைபடு சூல வைவேல்
    முகட்டினின் றிறக்கி யேத்து
மனையவன் மேனி தைவந்
    தருட்கடைக் கண்ணி னோக்கித்
தனதுபே ருருவம் யார்க்குந்
    தலைமையும் வழங்கி னானே (175)

நெற்றியங் கண்ணுந் தூய
    நீற்றொளி பழுத்த மெய்யு
மொற்றைவெண் குழையு நீல
    கண்டமு மொளிர்வெண் டிங்கட்
கற்றையஞ் சடையுந் தாங்கிக்
    கடவுள ரிறைஞ்சி யேத்தப்
பற்றலர் புரந்தீ யூட்டும்
    பண்ணவன் வடிவ மானான் (175)

தன்னுடை வுருவம் யார்க்குந்
    தலைமையு மவுண னெய்த
வின்னருள் புரிந்து நல்கு
    மெந்தைதன் கருணை நோக்கிக்
கன்னியந் துளவோ னாதிக்
    கடவுளர் மகிழ்ச்சி பொங்கப்
பன்மலர் தூவி யெண்டோட்
    பரமனை வணங்கி நின்றார் (177)

வணங்கிய தேவ ரோடு
    வகிர்மதிக் கண்ணி சூடி
யணங்கர வசைத்த முக்க
    ணவுணர்கோ னோடு மற்றைக்

கணங்கடம் மோடுங் கால
வயிரவன் கடிதிற் போந்து
கணங்கனி முலையாள் பங்கன்
சேவடி தொழுது நின்றான் (178)

அந்தகா சுரன்வெற் பின்ற
வுமையொரு மரனைப் போற்றி
யெந்தையான் செய்த தீமை
யாவையும் பொறுத்தி யென்ன
மைந்துடை வடிவேற் கால
வயிரவ னளித்த வண்ண
நந்தியின் கணங்கட் கெல்லாம்
நாதனா யிருத்தி யென்றான் (179)

மணிநிற வண்ணன் செங்கேழ்
மலரயன் மகவா னாதி
பணிதருந் தேவர் யாருந்
தத்தம பதியி னேகத்
துணிகதிர் திங்கட் கண்ணி
யமுதமூற் றிருக்குந் தூய
வணிகிளர் சடிலத் தெந்தை
விடையினி தளித்திட் டானே (180)

தண்டுழாய் முகுந்தன் வெய்ய
சத்திக னூற்றி னெடுந்
திண்டிறல் வடிவேற் கால
வயிரவர் சிறந்த நாகர்
மண்டுபா தலத்தி னெய்து
கென்றலும் வணங்கி யேத்திக்
கொண்டபே ருவகை யோடு
மவ்வழிக் குறுகி னானே (181)

பாதலத் தெய்துங் கால
வயிரவன் பருதி யேய்க்குந்
தீதறு மணிச்செஞ் சூட்டுச்
சேவல்வா லுளேயச் செங்கட்
*கோதில்வா ளரியே ரென்றாய்க்
கூடிய வுருவை நோக்கி
மேதக வியந்து விண்டு
சத்திகள் விளம்பு மன்றே (182)

ஓருரு வாய தன்மை
யென்கொல்மற் றுரைக்க வென்னச்
சேரிரா சதத்தால் வேத
னுருவஞ் சிறந்த சத்தாற்
கார்நிற வண்ண னுவேங்
கருதருந் தாம தத்தால்
மாரனை விழியாற் செற்ற
வார்சடைப் புனித னுவேம் (183)

ஆதலி னிலங்கு சோதி
மூவரு மொரு வராகத்
தீதற வுணர்ந்தோர் வெய்ய
நரகிடைச் சென்று சேரார்
மாதவக் கிழமை பூண்டு
வருத்துமைம் புலன்கள் செற்ற
மூதறிவு டையோர் சேரு
முத்திவீ டடைவர் மாதோ (184)

நீவிருங் கொலைக ளாதி
தீவினை யெவையு நீத்து
மூவரு மொருவ ராகி
முழுப்பொரு ளாகி நிற்குங்

* கோதில்வா ளரியென் றுன்றாய் (பா. பே.)

காவியங் கண்ணி பங்கன்
கழலிணைக் கன்பு பூண்டு
மேவரி தாய முத்தி
விட்டின்ப மடைதி ரன்றே (185)

என்னலும் விண்டு சத்தி
நாறுமங் கிளிதி னேத்திப்
பொன்னவிர் கடுக்கை சூடும்
புரிசடைப் புனிதற் போற்றிப்
பன்னரு மறைகள் பாடிப்
பாழொரு மூன்று நீத்துத்
துன்னரும் பிரமந் தன்னிற்
றோய்ந்தவென் றுரைத்தா னன்றே (186)

பதினாறாவது
அந்தகாசூரன் சாரூபமடைந்த வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 645.

---

## பதினேழாவது
## மாவலி மூவடி மண்ணளித்த வத்தியாயம்.

---

அந்த காசுரன் கடவு ளாயபி(ன்)
எந்தை யக்குலத் திறைவர் யாரென
முந்தை வாசவன் முனிவன் கேட்டலும்
பைந்து ழாய்முடிப் பரம னோதுவான் (1)

பீன மற்புயப் பிரக லாதனு
மான வெற்றிவேல் மன்ன வன்றரும்
வேனல் வேணிகர் வில்வி ரோசனன்
றூன வர்க்கெலாந் தலைவ னாயினான் (2)

ஏறும்வ லிப்பகட் டிந்தி ரன்றனைத்
திறைக வர்ந்துவெஞ் செறுநர் கைதொழ
முறையின் மிக்கபே ருலக மூன்றுநல்
லறனி ழுக்குறு தரசு செய்யுநாள் (3)

மராம ரங்களு டுருவ வாங்குவிற்
பராவ ரும்புகழ்ப் பரம னேவலிற்
றராத லத்தொழுஞ் சனற்கு மாரன்வில்
விரோச னன்றன தருகு மேவினான் (4)

வந்த மாதவற் றொழுது வான்சிறப்
பந்த மில்லன வருளி நல்குரு
வெந்தை வந்தவா றென்கொ லென்னலு(ம்)
முந்தை மாதவன் மொழிதன் மேயினான் (5)

அரிய வெந்திற லவுணர் தம்பிநீ
தரும சிந்தையா னாய தன்மையாற்
கருணை யானினைக் காண வந்தனன்
மருவ லார்தொழு மான வேலினாய் (6)

தருமம் யாவினுந் தலைமை யாகிய
வரிய ஞானமின் றருளு வாயெனக்
கருவி னெய்துறு முத்தி கைதருந்
தெருள்செய் நுண்பொரு டெளிய வோதினான் (7)

சனற்கு மாரனன் மொழியிற் றூனெனு
மனத்தை யாதியா மலமி றந்துயி
ரனைத்து மாகிவே றற்று நின்றிடு
முனிக்கு ழாந்தொழு முத்த னாயினான் (8)

மாவலிப் பெயர் மைந்தன் மாநிலங்
காவல் செய்கெனக் கதிர்செய் மாமுடி
யோவி லின்பொடுஞ் சூட்டி யுண்மையான்
ருவின் மாதவத் தலைமை யெய்தினான் (9)

தவறில் கேள்வியான் ருமமார்பினன்
கவன வெம்பரிக் காளை மாவலி
யவுணர் தங்குலந் தழைய வாழிரும்
புவனம் யாவையும் புரவு பூண்டனன் (10)

அன்ன காலையி லவுணர் சூழ்வரப்
பொன்ன கர்க்கிறை போரி னேற்றலுங்
கன்ன வின்றதோ ளவுணர் காவலன்
வென்னி டத்திறல் வில்வ ணக்கினன் (11)

இந்தி ராணிதன் னிழைகொள் வெம்முலை
மந்த ராசலம் பொருத மார்பினு
னைந்து வென்கொடுத் தோடி னோன்மைசா
லுந்தி பூத்துளா னுலக மெய்தினன் (12)

எய்தி மாவலி யிடரி ழைத்திடுஞ்
செய்தி யாவையுஞ் செப்பு மேல்வையிற்
பைய ராவணைப் பரம னைப்பணிக்(து)
ஐய நுண்ணிடை யதிதி கூறுவாள் (13)

வெந்தி றற்படைத் தகுவர் வேரொடுஞ்
சிந்தி மாயவெஞ் செருவி ழைத்திடப்
பைந்து ழாய்நறும் படலை மார்பவென்
மைந்த னாகநீ வருகென் றேதினள் (14)

மைந்த னாகயாம் வருது மன்னைநீ
சிந்தை செய்திடேல் செல்கென் றேதிமற்
றிந்தி ரன்றனை வெருவல் நீயென
வந்தில் நல்வீடை யருளி னனரோ (15)

வேறு

சால்புறு தன்னகர் சார்ந்த பின்றவங்
கோலிய காசிப னருளின் கொள்கையால்
மாலினைத் தரித்தலின் மடந்தை யவ்வயி
றுலிலை யென்பதற் கைய மில்லையே (16)

அரிமதர் நெடுங்கணு ளதிதி யன்பொடுங்
கரியமைம் முகில்செழுங் கமலம் பூத்தன
திருமறு மார்பனைச் சிறந்த நாளினன்
மருவலர் வெருக்கொள வயிறு வாய்த்தனள் (17)

ஆடின ருவகையா லமர ரச்சமுற்
ரோடின ரவுணர்க ளும்பர் நாயகன்
பாடின னருமறை கணவர் பாயலி
னாடிய மகளிரு முவந்து புல்லினர் (18)

விண்ணவர் சாரண ரியக்கர் விஞ்சைய
ரண்ணலங் கமலவிட் டுறையு மந்தண
னண்ணியக் காசிபன் மனையி னுதனை
யெண்ணறுந் துதிகளா லேத்தி னனரோ (19)

கறவுகொப் புளித்தலர் களினக் காதலன்
பிறையென வளர்ந்திடு நாளிற் பெட்பொடு
மறைபயில் காசிப னென்னு மாதவன்
முறையினின் முப்புரி நூலுஞ் சாத்தினன் (20)

கரியபூந் திங்களிற் கதிரெ றித்தொளிர்
திருமறு மார்பினன் றிருந்து கேள்வியோர்
பரவுற மேம்படு பரத்து வாசன்பா
லருமறை முதலிய வனைத்து மோதினன் (21)

புள்ளிடை தட்பமுன் பொருந்தி யேற்பினு
முள்ளவை மறுத்திடா துதவு கின்றதோர்
*வள்ளன்மை பூண்டரு மகங்க ளாற்றினன்
றெள்ளிதின் மாவலி யென்னுஞ் செல்வனே (22)

பாவவே ரறுத்திடும் பரத்து வாசன(து)
ஏவலி னுலகெலா மீன்ற வெம்பிரான்
மூவடி மண்விழைந் திரப்ப மொய்கழன்
மாவலி மகம்புரி சாலை மன்னினன் (23)

தாமரைக் கண்ணினன் சடிலன் றண்டினன்
வாமன வுருவினன் வந்து தோன்றிய
பூமகள் கொழுநனைப் புகழ்ந்து தானவர்
கோமகன் வந்ததென் கூறுவா யென்முன் (24)

என்னலு மகிழ்சிறந் தெனது தாளினன்
மன்னவ மூவடி மண்வ முங்கெனப்
பொன்னவிர் கரகநீ ரோடும் பொற்புறழ்
கன்னவி ரேளினன் களிப்பி னல்கினன் (25)

நன்றுபொற் றுகளென நாகர் நாட்டொடு
மண்ணகம் பொதிந்ததோர் பதமற் றோர்பதம்
விண்ணகங் கடந்துபோய் விரிஞ்ச னுடுரீஇ
யொண்ணிற வண்டமு முடைய நீண்டதே (26)

செங்கண்மால் மலர்ப்பதஞ் சென்ற மோழையிற்
றுங்கவண் டத்தினைச் சூழ்ந்த நீர்கடற்
பொங்கிவீழ்ந் தொழுகிய புனலை யன்றுகொல்
கங்கை யென் றின்னமுங் கழறு கின்றதே (27)

இறையவ னற்புத வியற்கை கண்ணுரு
மறைபயின் மாவலி வணங்கி யேத்தலும்
விறல்கெழு வானவர் துதிப்ப மீட்டுமக்
குறளுரு வாயினன் கொண்டல் மேனியான் (28)

---

* வள்ளன்மை பூண்ட ருமக்கள் (பா. பே.)

மாவலி வாண்முக நோக்கி மாயவ
னேவறு நான்முகன் பகலோ டுங்குநாட்
சேவடி தருவலவ் வளவுஞ் சீர்கெழு
தாவில்பா தலத்திலிற் சார்கென் றேதினன் (29)

திருத்துயி லுலகமோர் மூன்றுஞ் செவ்வனே
யருத்தியி லிந்திரற் கன்பி னேடளித்(து)
இருக்கினன் மகைறயவ ரேத்தி வாழ்த்துற
மருக்கமழ் துளவினன் மறைந்து போயினன் (30)

கோவெடுத் தருந்திய குருதி வேலுடை
மாவலி பா தலத் தெய்தி வார்சடைத்
தேவினை தடிமலர் சிந்தை செய்திருந்
தோவருந் தவத்திறுக் கொருவ னாயினன் (31)

பதினேழாவது
மாவலி மூவடி மண்ணளித்த வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் ௫௭௬.

---

## பதினெட்டாவது
## வாணாசுரன் சாருபமடைந்த வத்தியாயம.

---

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

என்று மொழிய விவன்மகனும்
வாணன் கதையுங் காசிபன்றன்
மன்னு மற்றை மனைவியர்தம்
மைந்தர் திறனும் புகலென்னப்
பொன்னு டளிக்கும் புத்தேளும்
பொருவின் மகதி யாழ்முனியுஞ்
சென்னி தாழ்த்து வினவுதலுந்
திருமா லருளி னுரைசெய்வான் (1)

---

* ஓவலுந் தவத்திறுக் கொருவன் (பா. பே.)

கொலைசூழ் வடிவேல் மாவலிதன்
குமர ரொருநூற் றுவர்தம்மிற்
றலைமை பூண்ட முதன்மைந்தன்
றறுகண் வாண னெனுந்தக்கோ(ன்)
உலக முழுதுந் தனித்திகிரி
யுருட்டிச் செங்கோ லினிதோச்சி
மலையின் சிறகர் விழவெறிந்த
வலியோ னரசு மாற்றினன் (2)

பொன்னந் தவிசி னரசிருக்கை
*யிகழுந்து கயிலைப் பொருப்பெய்திப்
பின்னற் றிரைதாழ் கங்கைமுடிப்
பெம்மான் பாதம் பணிந்தேத்தி
மின்னுங் கதிர்வேற் றிறல்வாணன்
விண்ணு டனைத்து மெரியூட்டி
யென்ன தாணை விலக்கினனென்
றியம்ப விறையோ னிவைசெய்வான் (3)

கொங்கு கமழ நறவுயிர்க்குங்
குழுங்கள் மாலை நறுங்கூந்தன்
மங்கை பாக னெருகணையால்
வாண னகரந் திமடுப்பப்
†பொங்கு முவகை யலதுள்ளம்
புலம்பு ருது நினம்பழிச்சித்
தங்கண் மரபி னவுணர்தொழு
மிலிங்கந் தலைமேற் கொண்டெழுந்தான். (4)

அவுணர் பெருமா னுளம்பிணித்த
வன்பின் வீக்கந் தனைநோக்கி
யுவகை கூர்ந்து மற்றவன்றன்
னுடலந் தடவந் தருள்பூத்து

* இழந்து கயிலைப்பெய்தி (பா. பே.)
† பொங்கு மலகை யலதுள்ளம் (ஷெ.)

நவையில் கணங்க ளனைத்தினுக்கு
    நாத னாக வரமீந்தான்
றவள நீற்றி னொளிபழுத்த
    வெண்டோண் முக்கட் டனிமுதலே (5)

தேன்றோய்த் தெடுத்த கனிப்பவள
    மனைய செவ்வாய்த் திதிபயந்த
வூன்றோய்த் தெடுத்த வேலவுணர்
    காதை யுரைத்தோ மிதுநிற்க
சான்றோர் புகழுங் காசிபன்றன்
    மனையாட் டியரிற் றனுவென்னும்
வான்றோய் மருங்கின் முதன்மாதர்
    மைந்தர் தம்மை வகுத்துரைப்பாம் (6)

ஆரஞ் சுமந்த முலைமன்றற்
    றனுவின் மைந்த ரயில்வேற்கைத்
தாரன் கபிலன் *சொற்பானுத்
    தழல்வெஞ் சுடர்வேல் விடபருவாப்
போரின் வெருவாச் சம்பரன்வெம்
    புலிப்போத் தன்ன சங்கரனென்
றோருந் திறலோ ரறுவருளர்
    மற்ற வர்சீ ருரைப்பரிதே (7)

அரசு விழுங்கி வாய்காய்ந்த
    வயில்வே னெடுங்க ணம்பணைத்தோட்
சுரசை புதல்வர் பலிறலைய
    சற்பர் பலர்வீழ் †சுரும்பூதர்
விரைசெய் மலர்ப்பைந் தருநீழல்
    விண்ணோர் மகிழ மேதக்க
திருவிற் றிருக்கு மாநகரிற்
    சிறப்பி னோடுந் திரிந்திடுவார் (8)

---

* சோற்பானு (பா. பே.)    † சுரும்புதர (பா. பே.)

அழகு சுமக்க லாற்றும
லலறு மருங்கு லரிட்டையெனுங்
கழைகொன் றௌிரும் பகநெடுந்தோட்
கதிர்வேற் கண்ணி யருண்மைந்தர்
மழவெங் கதிருஞ் செவிமழுங்க
வயங்கு மொளிகொப் புளித்தலரு
மிழைசேர் தடந்தோட் கந்திருவ
ரீரைஞ் ஞூற்றின் மேலுளரால் (9)

கடைந்த மணிச்செப் பெனப்பணைத்த
கதிர்மென் முலைக்கத் துருவென்று
மடந்தை யனந்தன் முதனுகம்
வயிறு வாய்த்தா ளாங்கவைகள்
தொடர்ந்து புகல்காப் பியக்கவிக
ளின்னு முரைப்பத் தொலையாத
மடங்காச் செல்வங் கடந்தோங்கி
யுயர்பா தலத்தின் வைகியவே (10)

தாமச் செப்பி னடிபரந்த
தரள முலைத்தாம் பிரையென்பாள்
காமர்க் கிளியை மென்பருந்தைக்
கங்குற் றிரியும் *பசாசினத்தை
தாமத் தழற்கட் சிறைக்கழுகைத்
தோகை மயிலை யோதிமத்தை
யேமம் பயக்குங் காசிபன்ற
னருளா லினிதி னின்றனளால் (11)

பங்கப் பழனத் திடைப்பிறவாப்
பதும மலரி னெழில்கவர்ந்து
கொங்கு கமழு மதிமுகத்துச்
சுரபி யென்றுங் குவிமுலையா

* பசாசத்தை

ளங்க ளுலக மினிதேத்து
மானி ேேடு மழல்பொருவுஞ்
செங்கட் கயவாய் மோட்டெருமை
யணைத்துஞ் சிறப்பி லின்றனளால் (12)

வெல்வேற் றடங்கண் *ணிராவதியென்
றுரைக்கும் வேய்த்தோட் கொடியன்னாள்
புல்லு மரிலும் பூங்கொடியு
மரனும் பொலிவி னினிதுயிர்த்தாள்
முல்லைக் கற்பி னெதிரில்லாக்
கிரீடை யென்னு மொய்குழலாள்
மல்லிற் பொலிதோ ளியக்கர்தமை
யினிதின் வயிறு வாய்த்தனளால் (13)

கனியு மமிழ்துஞ் செழுந்தேனுங்
கலந்தா லன்ன வந்தீஞ்சொன்
முனியென் றுரைப்பாள் கோங்கரும்பின்
முகிழ்த்துத் தரள வடந்தாங்கிப்
பனிதோய் விசும்பு குடிவாங்கப்
பணைத்து வீங்குங் கொம்மைமுலை
யனமென் னடைய வரம்பையரை
யமுத முயிர்த்தா லெனவுயிர்த்தாள் (14)

குனிவார் புருவக் குரோதவசை
கொடிய வரக்கர் தமைப்பயந்தாள்
வினதை யருண னெடுங்கலுழற்
பயந்தா ளாங்கு விறன்முக்கட்
கனியைப் போற்றி யவனருளாற்
கதிரோற் கருணன் சாரதியாய்த்
தனிசென் றனன்வெங் கலுழனுமா
லூர்தி யாகிச் சார்ந்தனனால் (15)

* இராவதை யென்று (பி. பே.)

பொருவற் றுளிருங் காசி பன்றன்
　　புதல்வர் செய்தி யிவைதிங்கட்
கிருபத் தேழு மனைவியரு
　　மோரோர் மகவை யின்றனரா
லருவப் பொருளைத் தனியுணரு
　　மரிட்ட நேமீ பதினறுவ
ருருவிற் கனங்க ளிகரென்று
　　மைந்தர் தம்மை யினிதுயிர்த்தான் (16)

மின்போற் புதல்வர் நால்வர்தமை
　　விளங்கும் வெகுபுத் திரவின்று
னன்பார் மைந்தர் நால்வர்தமை
　　யருன்சே ரங்கி ராவின்று
ளின்பம் பயக்குங் கிரிச்சுவப்பேர்
　　முனிவன் றெய்வப் படையெவையுந்
தன்பே ருலக முழுதேத்தத்
　　தவஞ்செய் தினிதி னின்றனால் (17)

மீட்டு முயர்கா சிபமுனிவன்
　　றவங்க ளாற்றி விழைவினெடுந்
தாட்டா மரைத்தார் வர்ச்சனையுஞ்
　　சிதன் றனையுந் தானுயிர்த்தான்
கோட்ட மில்லா வர்ச்சமுனி
　　குலவுஞ் சீர்த்தி யிப்பியனை
நாட்டங் களிப்ப நயித்துருவன்
　　றன்னை யினிதி னல்கினான் (18)

பொருவில் சீர்த்தி யிப்பியனும்
　　புகலற் கரிய ரிப்பியரா
முருவ மைந்தர் தமைப்பயந்தா
　　னுலவாக் கேள்வி நயித்துருவன்

மருவுஞ் சவனர் மகட்புணர்ந்து
மறைதேர் குண்ட பாயியரை
யரிதிற் பயந்தான் றேவலனைக்
கருத்தை யின்று ளெனவறைந்தான் (19)

பதினெட்டாவது
வாணுசுரன் சாருபமடைந்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 685.

---

## பத்தொன்பதாவது
## புலத்தியன் மரபுரைத்த வத்தியாயம்

---

கருணைப் பெருங்கடலாங் காசிபன்மா மைந்தர்
கறைதீர் மரபனைத்துங் கட்டுரைத்தாய் மற்றை
யருள்சேர்பு லத்தியன்றன் மைந்தர்மர போதென்
றந்திந் தொடைமகதி யாழ்முனியுஞ் செய்ய
மருவூற் றிருந்தொழுகும் பைந்தருவி வீழல்
வானோர்ப ணிந்தேத்தும் வாசவனுங் கேட்பத்
திருவிற்றி ருந்தரசு செய்யுமணி மார்பிற்
செங்கணெடு மாயன் செப்பிடுவ னன்றே (1)

திசைதிரிந்த தொல்பெருஞ்சீர்த் திரணவிந்துப் பயந்த
சேயிழையை யருந்தவத்துப் புலத்தியன்நீ வேட்டு
வசையறுசீர் விச்சிரவா வென்னுமறை முனியை
மகிழ்வினளித் தனனவனும் வாண்மீளிருந் தடங்க
ணிசைபெறுபுட் பொற்கடையைக் காலையைக்கே கசியை
யெழிற்றேவ வன்னியை யினிதின்மணஞ் செய்தா
னசையுறுமற் றவர்தம்மி லமுதனையந் தீஞ்சொ
லத்தேவ வன்னியாங் களகேசற் பயந்தாள் (2)

கிடைபொருவும் பவளவிதழ்க் கேசகியென் றுரைப்பாள்
கிளர்திசைக ளெட்டினையும் வென்றவிரா வணனை
யடல்புரியுந் திறல்கும்ப கருணனைவி டணனை
யம்பலேக்கும் வரிநெடுங்கட் சூர்ப்பனகை தன்னை
யுடல்சினத்த விண்ணவர்கள் வெருவவினி தீன்று
ளுரைத்திடுபுட் பொற்கடைவெங் கரனைமகோ தரனை
மிடல்கெழுமா மாரீசனைப் பிரகத்தன் றன்னை
விளம்பியகும் பினசியை விழைவி றுயிர்த் தனளால் (3)

தேனுருஞ் சுருளோதிக் காலையெனு மடந்தை
திரிசிராத்து டணனைவித்தி யுச்சிவுகன் றன்னை
யானுத பேரன்பி னின்றனள்மெய்த் தவத்தி
னருமறைதேர் புலகமுனி விலங்கினம்பேய் பூதங்
கானுருஞ் செம்மணிச்சுட் டரவினங்க ளீன்றான்
கருதரும்வை லச்சுதமன் *மந்திரத்திற் கிருது
வூன்வாட நோற்றதலான் மைந்தரையின் றிலன்மற்
றுவப்போடு மரீசியுயர் காசிபனை யுயிர்த்தான் (4)

பிருகுமுனி பார்க்கவனை யின்றனனத் திரிப்பேர்ப்
பெரியோனு முயர்பிரதிப் பிரபர்மூ வரையாங்
கருளினளித் தனன்றக்க னருளரியச் சுவரை
யகலிடம்பார்த் தேகுகென நாரதனே வுதலால்
விரிபுவன மனைத்திலும்போய் வியந்தனரா தலினல்
விளரியாழ் முனிவரனை விளம்பருஞ்சீர் தக்கன்
பொருவருநன் மகவில்லா திருத்தியெனச் சாபம்
புகன்றனன்மற் றுங்கவனும் புதல்வரிலா தொழிந்தான் (5)

வான்றவத்தால் வசிட்டமுனிக் கருந்ததிசத்தியனை
வயிறுவாய்த் தனள்சத்தி பராசரனை யின்று
ளன்றமறைப் பராசரனும் வியாதனையின் றனன்மற்
றுங்கவனஞ் சுகன்றன்னை யளித்தனனு லவனுங்

---

* மந்திரத்திற் கிருதிவூன் (பி. பே.)

தோன்றுபுகழ்க் கிட்டிணன்பூ திச்சரவாச் சம்புத்
தோமில்கவு ரவன்பிரபு வெனுமைந்தர் தமையுஞ்
சான்றவருங் கற்புடைய கீர்த்திமதி யென்றுந்
தரளநகை மயிலினையு மளித்தனனென் றுரைத்தான் (6)

பத்தொன்பதாவது
புலத்தியன் மரபுரைத்த வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 701.

---

## இருபதாவது
## சூரியன் மரபுரைத்த வத்தியாயம்.

---

முனிவரர்தம் மரபனைத்தும் வழாது கேட்டே
மூசியளி படிந்தாட முகைவாய் விண்டு
பனிமலர்த்தா மரைமலர்க்க ரங்க ணீட்டும்
பண்ணவன்றன் மரபனைத்தும் பகர்தி யென்னக்
*கவிபடுந்தீந் தொடைமகதி யாழ்முனியு மகவான்
கற்பகநாட் டரசனுமக் கடவுளருங் கேட்ப
புனைதுளவந் துயல்வருதோட் †கமலச் செங்கட்
பூவைமே னியனதனைப் புகலு மாதோ (1)

வேறு

அருமறை நான்கு மங்கமோ ராறு
மறத்தொடு மினிதிருந் தாலும்
பொருவருஞ் செந்நாக் காசிப னென்னும்
புரையறு முனிவரன் மைந்தன்
விரிதிரை யுடுத்த வுலகமோ ரேழும்
விழுங்கிருட் பிழம்புசீத் தொளிரும்
எரிகடர்க் கற்றை யேழ்பரித் தடந்தேர்
கடவிய விரவியஞ் செல்வன் (2)

---

* கவிபடுதீக் தொடைமகதி முனிவனோடும்
கற்பகநாட் டரசிருக்குங் கடவுள் (பா. பே.) † கமலமலர்ச் (பா. பே.)

அரம்பொரு துகுத்த பொற்பிதி ரன்ன
வவிர்சுணங் கணிந்தெழில் வாய்ந்து
கரும்புகை செய்த பச்சிளங் குரும்பைக்
கதிர்முலை தாங்குறுங் கங்கை
முருந்தெழில் கவற்று நகைவிருந் தருந்தி
மொய்கதிர்ப் பருதிநன் களித்த
திருந்துசீர் மைந்தன் றெவ்வடு சுடர்வேற்
றிறல்கொள்வை வச்சுத னென்பார் (3)

எழுதுவாட் டடங்க ணின்னிள முறுவ
விராக்கினி யிருட்குறும் பெறியும்
மழகதிர்ப் பருதி வேந்தனைப் புணர்ந்தாங்
களித்திடு மக்கள்வா ளெயிற்று
முழுவலித் திரடோன் மறலியும் †வெள்வே
லேந்திள வந்தனு முதிராக்
கழையுறழ் பசுந்தோள் யமுனையென் றுரைக்குங்
கதிர்முலைக் கன்னியு மன்றே (4)

கவின்குழைத் தெழுது மோவமு மருளுங்
கரும்புசாத் தியபசுங் கழைத்தோட்
குவிந்துபொற் சுணங்கா ரிளமுலைப் பிரபை
குறுந்துளிப் பனிகெட விமைக்குஞ்
சிவந்தவெங் கதிர்கா லனையவெம் பருதிச்
செல்வன திருகல முள்ளத்
துவந்தன னாகி யளித்தருண் மைந்த
னொளிறுவே லுடைப்பிர தாபன் (5)

சிறுபுறந் தாழ்ந்த *கருநெறிக் கூந்தற்
றீங்கரும் பனுக்கிய வின்சொற்
பிறைநுதற் சாயை யன்னவர் தமக்குப்
பெற்றருண் மக்கள்சா வனியா

---

* கருநெடுங் கூந்தல் (பா. பே)

† வெள்வே லேந்திரே வந்தனும் (பா. பே.)

மறைகழல் மனுவும் மைந்தனு மிணையி
லழகுகண் படுக்கும்வேய்த் தடந்தோள்
நறுமலர்க் கூந்தற் றபந்தியு நளினத்
திருநகர் நலங்கிள ருசையும் (6)

கடல்திரை யுடுத்த நெடுநில முழுதுங்
களைகணாய்த் தனதடிப் படுத்து
மடுதிறல் வைவச் சுதன்றரு மைந்த
ராடல்வே லிக்குவா குவுமங்
தொடிபுனை தடங்கை தலையணை யாகச்
சுரும்புண விரிந்ததா ரரசர்
இடுதிறை கொணர்ந்து துயின்மணி முன்றி
லிளனென வுரைக்கும்வேந் தனுமே (7)

நெய்மிதி கவளந் தெவிட்டிநின் றடர்க்கு
நிழல்சுளி தறுகண்மால் யானை
பெய்முகி லென்னக் கொடைக்கட னிறுக்கு
மிக்குவா குப்பெயர்ப் பெரியோன்
ஐயசெங் கமல மலரினுற் கங்குன்
முகத்தினி லரனடி யேத்தி
வெய்யவன் குலத்து விளக்கெனப் பெற்ற
விடலைவேல் விகுக்கியென் றுரைப்பார். (8)

கொழுநிணத் *தடிதின் றுதிரம்வாய் மடுக்குங்
கோதைவேல் விகுக்கியென் றுரைக்கும்
மழையுறழ் தடக்கை மன்னவன் றிங்கள்
வாரத்தின் மதுமலர் தூவிக்
கழிமதஞ் செருக்கிக் கண்படை பெறாத
களிற்றுரி போர்த்தவன் பாதம்
விழைவொடும் போற்றி யளித்தசேய்க் குத்த
னென்றிடும் விறலுடை வேந்தன் (9)

* தடிதின் றுதிரநீர் மடுக்கும் (பா. பே.)

பளிங்கு போழ்ந் தறுத்த பத்திமண் டபத்திற்
பருஉச்சுடர் மணிக்கடைப் புறத்தின்
அளந்தறி வரிய விடுதிறை யோடு
மரசுகண் டுயின்மணி முன்றிற்
றுளங்கலில் சீர்த்தி யாடல்வேற் குத்தன்
மைந்தன்விற் சுயோதன னென்றும்
விளிம்புமுத் தெறிந்து கதிர்சொரிந் தொழுகு
மணிமுடி வேந்தர்கள் வேந்தன் (10)

சிலைபயின் றகன்ற திருவளர் தடந்தோட்
சுயோதன னளித்தருள் சிறுவன்
கலிபுறந் துரந்து மாநில முழுதுங்
கலைகளுய்க் காக்குமப் பிருகன்
உலகமீக் கூறும் பெரும்புக ழன்னோ
னுயிர்நிகர் சிறுவன்விச் சுவகன்
அலகறு வன்மை யாங்கவன் சிறுவ
னடையலர் பரவுமத் திரகன் (11)

தண்ணறுங் கடுக்கை துயில்வரு தடந்தோட்
டானுவை மறையினுற் பழிச்சி
மண்ணக நிழற்று மாலைவெண் கவிகை
யத்திர கன்றிரு மைந்தன
வுண்ணிலா மவுலி வாளம ரழுவத்
திடறிவெண் ணகருனி தேய்ந்த
வண்ணல்மால் யானைத் திறல்கெழு தடந்தோ
ளடலுவ னுக்சுவ னென்பார் (12)

திசைமுகங் கவிக்குக் மாலைதா ழுவவுத்
திங்களங் கவிகைநன் வீழல்
வசையறு முலக முழுவதும் புரக்கும்
ஆங்கவ னளித்தருண் மைந்தன்

நசையுநர்க் கடையா நன்பெரு வாயி
　　லலங்கொளச் சுவத்தி யென்றுரைப்போன்
இசையுறு மன்னே னளித்தசேய் தன்னைப்
　　பிருகதச் சுவனென வுரைப்பார் (13)

இருநில மளக்கு மொருதனிச் செங்கோ
　　லெறும்வலி முழவுறழ் தடந்தோட்
பிருகதச் சுவன்றன் பெட்புடை மைந்த
　　னியற்றி ரிடாச்சுவ னவன் சேய்
வரைநிரைத் தனைய கொடிநெடு மாடக்
　　கடையிளில் வான்றிறை யோடு
மரசுகண் டுயிலு மணிநெடு முன்றி
　　லப்பிர மேயனென் றுரைப்பார் (14)

தமனியத் தாமந் தாழ்ந்துமின் கொழிக்குந்
　　தடமுலை யரிமதர் மழைக்கண்
*அமைவுறழ் தோளா ரங்கனென் றுரைக்கு
　　மழகுடை யப்பிர மேயன்
இமிழ்கடல் ஞால மேத்திடும் புதல்வ
　　னியவரி யச்சுவ னவன்சேய்
கமழலக் துறைசூழ் கங்கைநா டளிக்குங்
　　கற்செய்தோட் கதிர்முடி நிகும்பன் (15)

புடைவளைத் துயர்ந்து வான்றெடு குடுமிப்
　　போகுயர் மணிமதிற் புரிசைக்
குடபுலத் தெழுந்த மதிதவழ்ந் தேறுங்
　　கோனகர் பெறுவதற் கிரந்தாங்
கடைதரு மரச ரிடம்பெறு துணங்கு
　　முன்றிலான் மடங்கலே றன்ன
மிடல்கெழு நிகும்ப னளித்தருண் மைந்தன்
　　சம்பவாச் சுவனெனும் வீரன் (16)

---

* அமைவுற தோளா ரரங்கன் (பி. பே.)

குயில்குலீங் திருந்து மாந்தளிர் கோதுங்
குழைமுகம் பொதிமலர் சோலை
வெயினுழைந் தறியா தெயிற்புறஞ் சூழும்
வியனக ரயோத்திநாட ளிக்குஞ்
செயிரறு சம்ப வாச்சுவ னென்போன்
றிங்களங் கண்ணியோன் பாதம்
மயர்வற வேத்தி யளித்தசே யருணைச்
சுவனெனும் வாகைவேற் குரிசில் (17)

வளர்முலைச் சாந்தம ழிக்கிடப் புரளும்
மணிநெடுங் குழையிளம் பிடியார்
உளமகிழ் தூங்க வாவுமான் றேரிற்
சேட்டிளம் பருதியி னுலவுந்
தளையவி ழலங்க றயல்வரு தடந்தோ
டிறலரு ணச்சுவன் றனையன்
களிமதஞ் செருக்குங் குருதிதோய் கோட்டுக்
களிற்றுவ னச்சுவ னைமால் (18)

வேர்கிளைத் தெறிக்கும் விரிநிலாத் தவழு
மிப்பிவாய் வெடித்தவாண் முத்தம்
வார்வடந் திளைக்கு மலையுறழ் திணிதோள்
மற்றவ னளித்தருண் மைந்தன்
பார்முழு தளித்துப் பொன்னுல கெய்திப்
பாய்திரை புரட்டுவா னதிநீர்
ஊர்வயப் புரவிக் களிக்குமாந் தாதா
வென்றிடு மொளிறுவேற் குரிசில் (19)

மணிகிடந் திமைக்கு நுண்டுகிற் றேரகை
மாழைமென் னோக்கியர் விரும்பும்
பிணிமுறுக் கவிழு மலங்கன்மாந் தாதா
வினிதினிற் பெற்றருண் மைந்தர்

அணிகிளர் பொன்னங் குன்றுறழ் வான்றோள்
அம்பரீ டன்புரு குச்சன்
இணைபிற ரில்லா வேனில்வேள் பொருவு
மிலங்கிலை வேல்முசு குந்தன் (20)

ஆங்கவர் தம்பி லாடகத் தடந்தோ
ளம்பரீ டன்றரு மைந்தன்
தூங்குறீஇக் குடக்காய் *மடற்குலைத் தெங்கின்
சொரிமதுப் பாளைபூ விரிக்கும்
தேங்கமழ் பொழில்சூழ் உத்தர குருவி
†னரசரைத் திறையிடக் கவர்ந்த
ஓங்குசீ ருவனுச் சுவனவன் மைந்த
னுலம்பொரு முயர்ந்ததோ ளிரதன் (21)

கைம்முகந் தெடுத்த நெய்மிதி கவளங்
களித்தெறி மும்மதக் களிற்றின்
வெம்மைவெங் கோடு தாக்கலு மிழிந்து
வீழ்தரு மரத்தனி ரென்னக்
கொம்மைவெம் முலைகள் சாடலு மிழிந்த
குங்குமச் சேதக மார்பின்
செம்மைசே ரிரத னளித்திடும் புதல்வன்
றெவ்வடு வேற்கையர் ‡விரதன் (22)

வேய்த்தலைத் தொடுத்த தேனிறு லுடைந்து
வீழ்தரு பசுநறு வளர்ந்த
காய்துணர்ப் பசிய கறிக்கொடி விசும்பிற்
கற்பகக் கோட்டினிற் படருஞ்
சேய்த்துமீ துயர்ந்த வளமலை நாடன்
றிறற்புரு குச்சனன் மைந்தன்
பேய்க்கணஞ் சூழு நெட்டிலைச் சுடர்வேற்
றிரிசதேச் சென்றிடும் பெரியோன் (23)

* மடற்லைத் தேங்கின் (பி. பே.) † அரசனை யிடுதிறை (பா. பே.)
‡ அரிதன் (பா. பே.)

கற்சிறை யழித்துக் கரையலைத் தொழுகுஞ்
சரையுவுங் கங்கையு முடைய
மற்படு திணிதோட் டிரிசதேச் சென்று
மன்னவ னினிதருள் புதல்வன்
வெற்பகங் கிழிய வேற்படை பணித்த
வென்றிகூர் முருகுறழ் தோற்றத்
தெற்படு சுடர்வே லெறும்வலித் தடக்கை
யேந்தல்சம் பூதியென் றுரைப்போன் (24)

பஞ்சிசூழ் கிடந்த பையர வல்குற்
பாவையர் விரும்பு சம்பூதி
நஞ்சணி மிடற்றுச் சாமிதன் வரத்தா
லளித்தரு ளுமவேற் குரிசில்
அஞ்சிறை யறுகா லேழிசைப் பாட
லளிவிருந் தூட்டடெக் குடைந்த
மஞ்சரி தவழும் பகட்டெழின் மார்பன்
வாகைவே லுழவன்மால் விருத்தன் (25)

அருவரைச் சார்ந்து மாரமு மகிலு
மருவிகொண் டிறங்குநீள் பொருப்பன்
முருகுறழ் தோற்றத் தெழில்கொண்மால் விருத்தன்
அளித்தருள் சூரிவேல் மைந்தன்
குரவையிட் டார்க்கும் பெருங்குரற் பேழ்வாய்க்
கூன்பிடர்ச் சங்கமுத் துயிர்க்கு
மருதநீள் வேலி யயோத்திநா டளித்து
வாழ்பவ னரண்ணிய னென்போன் (26)

மாற்றருஞ் சிறப்பி னங்கவன் புதல்வன்
கொள்ளைநீர்க குளத்திளில் வயலின்
ஈற்றுளைங் தலறுஞ் சுரிமுகப் பேழ்வா
யினவளை தவழ்ந்துமேய்ந் துறங்கும்

போற்றரும் வளங்கூர் மருதவைப் புடைய
புகழ்விட தச்சுவ னவன்சேய்
*கூற்றுமெய்ப் பதைப்பக் கோதைவே றுளக்கும்
விறலரி யச்சுவ னுமால் (27)

கரும்பறுத் தடைந்த கனேகுரற் சகடு
நெற்கதிர்ப் பண்டியு நெருங்கி
விரிந்திடம் பெருத வியனகர் புரக்கும்
விறலரி யச்சுவன் சிறுவன்
பருந்துவீழ் ஞாட்பிற் கூற்றெதிர்ப் படினுங்
பாயொளிப் பருதிவேல் திரியா
விரிந்திட வுடற்று மசுமனு வென்னு
மிசைதிசை யளந்திடும் வேந்தன் (28)

அரக்கிதழ் முளரிப் பொகுட்டினீற் செங்கா
லரசிள வன்னம்வீற் றிருக்குந்
திருக்கிளர் மல்லல் வளங்கெழு நாட்டு
வசுமனு வளித்திடுஞ் சிறுவன்
முருக்கிதழ்ச் செவ்வாய் முகிழ்முலை மகளிர்
முகத்தினை யுவவுவெண் மதியென்
றிரைத்துவண் டறைய வாம்பல்வாய் விள்ளு
மயோத்தியா ளியற்றிரி தனுவாம் (29)

வேறு

அலங்கிலை வேல் வசுமனுப் புரவிவேள்வி
யாற்றுழியின் முனிவரரை யன்பி னேக்கிப்
புலன்களடக் கியதவத்தில் வேள்வி தம்மிற்
பொருவில்சந் நியாசத்திற் பொலிந்த தென்னை
துலங்கவுரைத் திடுதிரெனப் பலன்வெஃகாது
நோற்றிடுத லருமறையின் றுணிவா மென்ன
வுலங்கெழுதோண் மைந்தனுக்கு மவுலி சூட்டி
யுறுதவத்தின் றலைநின்ற னுரவுத் தோளான் (30)

* கூற்றுமெய் பனிப்ப (பா. பே.)

ஆங்கவனற் றவனோக்கி மலரோ னெய்தி
யாயுளொரு நூறளித்தா னமல னன்றே
னோங்குதவந் தனைநோக்கி வியந்து பின்னு
மாயுளொரு நூறளித்தா னெளிசெய் பூணுன்
பூங்கமல முகையவிழ்க்குங் கடவுட் போற்றிப்
பொருவறுகா யத்திரியைப் புகன்று வெய்ய
திங்கதிர்மண் டலத்திருக்கு மெண்டோண் முக்கட்
டேவின்மல ரடிநீழற் சேர்ந்தா னன்றே (31)

## வேறு

அய்யசெங் கமலத் தணங்கனுர் குழலுக்
கூட்டிய காழகிற் புகையுங்
குய்வளக் கருணை யட்டமென் புகையுங்
குரோசமோ ரைந்திவிற் கமழுஞ்
செய்யபொன் மாட முடுத்தமா நகரத்
தினந்தொறு மிரவலர்க் களிக்கும்
வையகம் புகழுந் திரிதனு வாவின்
மைந்தன்வேற் சூரிய வண்ணன் (32)

ஆயிரம் பகுவாய் முழைஞ்சு கொப்புளிக்கு
மழல்விழிச் சுடிகைவா ளரவின்
மேயபா ரனைத்து மொருகுடை நிழற்று
மிடல்கெழு சூரிய வண்ணன்
சேயுயர் பறவைக் குன்றற வெறிந்து
தாருகன் கிளையொடுஞ் செகுத்த
பாய்கதிர் நெடுவேல் முருகுறழ் சீற்றப்
பணைப்புயச் சத்தியா தனனே (33)

ஆடக முளரிப் பொகுட்டில்வீற் றிருக்கு
மாரமென் முலைத்திரு மடந்தை
பாடுறு மந்தா ரகலம்வீற் றிருப்பப்
பார்பொது வறத் தளிபுரக்கு

மோடைமால் யானைச் சத்திய தனன்ற
னுயிர்நிக ரெழிலுடை மைந்த
னேடவிழ் நறுந்தார் மன்னவர் போற்று
மடலரிச் சந்திர னென்பான் (34)

பொய்ம்மையும் வெய்ய தீமையு மொழித்துப்
புலம்புகொண் டினையவெவ் வுலகு
மெய்ம்மையு மறனு நிறுத்திடுஞ் செங்கோல்
விறலரிச் சந்திரன் மைந்தன்
கைம்மைய ராகி யொன்னலர் மகளிர்
கலுழ்ந்தநீர்ப் பெருக்கினெல் வளர்ந்து
செய்ம்முகத் தோங்கச் சினவுவாள் விதிர்க்கு
*முரோகிதாச் சுவனெனத் தெரிப்பார் (35)

கருங்கொடிக் கவலை கிழங்ககழ் பரப்பிற்
கானவர் களிறுகோட் படுக்கும்
விரிந்தபல் வளங்கூர் கானக நாட
னுரோகிதாச் சுவனருள் விடலை
திருந்தலர் மடவார் பவளவாய்ச் செம்மை
சேல்விழிக் கேய்ந்துகட் கருமை
பொருந்துநுண் டுகிலுக் களித்திடச் சிரிக்கும்
புலவுவே லுரோகித னென்பார் (36)

உடைபடு கபோல மதசலக் கலுழி
யுவட்டெடுத் தொழுகுமால் யானை
பிடியென மதந்தீர்க் தோடவாள் விதிர்க்கு
முரோகிதன் பெற்றவேல் மைந்தன்
றடவரைக் குடுமி யிறுவரைத் தூங்குந்
தண்ணருப் பஃறலை யிருவின்
விடுகதிர்த் திங்கட் கோடுகீண் டுமுக்கும்
வியன்மலை நாடன்வேற் றுந்தன் (37)

* முலோகிதாச் சுவனென (பா. பே.)

திரைபொரு பரவை யனைத்தும்வெண் ணிறத்திற்
    சிறந்ததிம் பாற்கட லதனைப்
பொருவுற விளர்ப்பப் புகழ்நிலா விரிக்கும்
    புண்செய்வேற் றுந்துவின் மைந்த
னருவரைத் தரள மருவிகொண் டிறங்கு
    மசைநடைத் தென்றலம் பொருப்பும்
விரிகதிர்ப் பொன்னங் குடுமிமால் வரையு
    முடையனும் விற்றிறல் விசயன் (38)

மருவலர் மனைவாழ் மங்கையர் கழுத்தின்
    மங்கல நாணினைத் தாயர்
வெருவொடு நோக்கி நானையுங் காண
    விதிக்கெனத் தெய்வதம் பரவ
வெரியுமிழ் கதிர்வாள் கைத்தலத் தெடுக்கு
    மெறுழ்வலி விசயனன் மைந்தன்
கருதலர் வயிற்றிற் றீப்பட விழிக்குங்
    கல்செய்தோட் டிறல்கொள்கா ருகனே (39)

பொருமசத் தெதிர்ந்தோ ருயிர்குடித் தல்லால்
    மீள்கலாக் காருகன் புதல்வன்
விருகன்மற் றவன்சேய் கழனியிற் செந்நெல்
    வியப்பொடும் *வாழ்கென விடுத்துங்
கருநெடுந் தடங்கட் செய்யவாய் வெண்பற்
    கடைசியர் குரவையார்ப் பொழியா
மருதநீர் வேலி வளங்கெழு நாட்டு
    மன்னவன் வாகுவென் றுரைப்போன் (40)

கொழுமுகந் தாக்கி வயிறுநெக் குடைந்து
    குழைகருஞ் சேற்றக முழக்கி
கழனியிற் குடவாய்ச் சங்கமுத் துயிர்க்குங்
    கங்கைநீர் நாடன்வில் வாகு

* வாழ்கென வித்தும் (பா. பே.)

விழைவுறு மைந்த னுடைய ரேனும்
பெண்மையை யவாவமேக் குயர்வுற்
றழகுவீற் றிருந்து நாடொறுஞ் சிறக்கு
மம்பொன்வெற் பனையதோட் சகரன் (41)

விங்குபொற் றடந்தோட் சகரனுக் கெழில்கூர்
பிரபையின் றிடுவிறற் புதல்வர்
தேங்குநீர்ப் பௌவ மகழ்ந்திடுந் திறலா
ரறுபதி னுயிரர் சிறந்த
வாங்கவன் றணக்கு வேல்புரை தடங்க
ணம்கபட் டிளமுலைத் துவர்வாய்ப்
பூங்குழற் பானு வதியருள் சிறுவன்
*புகழ்சயஞ் சதனெனப் புகல்வா (42)

அடங்கலர் நகரந் தீக்குண வருத்து
மடலயிற் சமஞ்சதன் புதல்வன்
குடம்படு செருத்தல் பால்சுரந் தொழுகக்
குண்டுநீ ருழக்கிடு மெருமை
தடந்தொறுங் கழுநீர் மென்முகை மேய்ந்து
தாமரைக் கொட்டைவாய்க் குதட்டும்
படர்ந்தநீர் நாட்டு மன்னவர் வணங்கும்
பருதிவே லஞ்சுமா னுமால் (43)

அஞ்சுமான் புதல்வ னேக்கினுங் குழையு
மனிச்சமென் போதின்வில் லெறிந்த
பஞ்சினில் மிதிப்பின் முன்னையிற் சிவக்கும்
பாடகச் சீறடி மகளிர்
நெஞ்சுகூட் டுண்ணுந் திலீபன்மற் றவன்சேய்
கங்கைநீ ணிலத்தினிற் கொணர்ந்த
வெஞ்சலில் சீர்த்திப் பகீரத னென்ன
வுலகெலா மேத்திடுங் குரிசில் (44)

* புகழ்தரு சமஞ்சத னென்பார் (பா. பே.)

வண்சிறைச் சுரும்பர் பேட்டளி யோடு
மருவிய காமவெம் மயக்கிற்
கண்படை பொருந்து மாலைதாழ் புயத்துப்
பகிரதன் காதனன் மைந்தன்
விண்டொடர்க் தோங்கு மாலைவெள் ளருவிக்
குன்றினில் வருடைபாய்ந் துழக்குந்
தண்புன லுடுத்த கானக நாடன்
ருமவேற் குனுதனென் றுரைப்போன் (45)

ஆங்கவன் புதல்வ னுதுலர்க் கூட்ட
வட்டவெண் சோற்றுமா மலையைத்
திங்கறு வெள்ளிக் குன்றென வியக்கத்
தெருமரும் வளங்கொளுட் டுறையு
மோங்குசீ ருலகை யளக்குநா பாக
னவன்மக னுடையங் களிற்று
வாங்குவிற் சிந்து தீபன்மற் றவன்சே
யடலயு தாயுவா மன்னன் (46)

வரிவளை யுறங்கு நெடுமணற் குன்றத்
தஞ்சிறைச் சேவலோ டுடிக்
குருகினங் கமலக் காட்டிடை யொளிக்குங்
குளிர்புனற் பழனநா டுடைய
வருவரைத் தடந்தோட் டிறலயு தாயுச்
சிறப்புடன ளித்திடும் புதல்வ
*னிருதுவ னப்பேர்ப் புரவல னவன்சேய்
சுதாசனென் றெடுத்தியம் புவரால் (47)

அன்னவ னளித்த விறல்கெழு புதல்வ
னுடகப் பசியபொற் பிதிரின்
மின்னவிர் திதலை யணிந்துகண் ணுருத்த
வெம்முலை தமயந்தி கணவன்

* இருதுவனப் பேர்ப் புரலவன் (பா. பே.)

கன்னவி றிரடோன் மித்திர சகன்மற்
றவன்மகன் கனைகதி ரெறிக்கும்
பன்மணிச் சூட்டு வாளரா நெற்றிப்
பார்முழு தேத்துமச் சுமகன் (48)

மற்றவன் புதல்வ னுலகெலாம் வென்ற
நகுலன்மற் றவன்மக னெதிர்ந்த
கொற்றவர் மவுலி பூழிபட் டொழியக்
குரைகழற் ருளினு விடறும்
வெற்றிவெற் றடக்கைத் தயரத னவன்சேய்
விரிதிரைக் கடல்முகட் டெழுந்த
வொற்றையா ழியந்தேர் பண்ணவ னென்ன
வோசைபோ மதிரத னுமால் (49)

அதிரதன் புதல்வன் பருமணி யிமைக்கு
மாடகக் கொடிமதிற் குடுமி
மதியகடு ரிஞ்சும் வளநக ரரசர்
மணிமுடி தேய்த்தபொற் கழற்காற்
றதைமலர்ப் பைந்தார் *புனையும்விச் சுவக
னங்கவ னளித்திடுந் தனய
னெதிரெறி கட்டு வாங்கனென் றுரைக்கு
மெறும்வலித் தோளுடை யுரவோன் (50)

கரும்பெனத் திரண்டு கவின்வளர் மென்றோட்
கன்னியர் கண்ணொடு நெருங்கிச்
சுரும்புவீழ் மலர்த்தா ராங்கவன் புதல்வன்
றீர்க்கவா குப்பெயர்த் தோன்றல்
பொருந்தலர்க் கடந்த வாங்கவன் புதல்வன்
புரந்தரன் வெஞ்சமத் தஞ்சி
யிரிந்துவென் னொடுப்ப வாளமர்க் கடந்த
விரகுவென் றுரைத்திடு மேந்தல் (51)

* புனையு விச்சவனும் (பா. பே.)

வேறு

அனையகதிர் வேலுழவன் றந்த மைந்த
　　னரசர்மணி முடியுரிஞ்சி யலங்கு சோதிப்
புனைகழற்காற் றழும்பிருந்த வயனென் றேதும்
　　போர்வேற்கை முனைவன்முக்கட் புனிதற் போற்றி
வினையறரோற் றினிதருளு மைந்த னுமம்
　　வெள்வேலாற் றிசைபத்தும் வென்ற சீர்த்தி
கனைகடலு நெடுவரையும் வெண்மை தீற்றுங்
　　கதிர்மௌலித் தயரதனென் றுரைப்பர் மாதோ (52)

ஆங்கவனும் புதல்வரின்றி மகங்க ளாற்ற
　　வளியலம்பு பசுந்துளவோ னிராம னாகித்
தீங்கறவந் துதித்திலங்கை மடியமாட்டிச்
　　சீதையைமீட் டமரர்தொழுந் தேவை தன்னிற்
பூங்கடுக்கை வேணியற்குக் கோயில் கோலி
　　பூசனைசெய் தயோத்திநகர் புரந்து பின்னு
மோங்குமொரு குடைநீழ லிரைஞ் ஞாற்றோ
　　டொருபதினா யிரம்பருவ முலகு காத்தான் (53)

இருபதாவது
(சூரியன் மரபுரைத்த வத்தியாய முற்றிற்று)
ஆகத் திருவிருத்தம் (754)

---

## இருபத்தொன்றுவது
## இராமனவதரித்த வத்தியாயம்

---

என்றலும்வெண் மதிக்கண்ணி யிறைவன் பாத
　　மினிதேத்து மிராமனியற் சரிதை யாவு
மன்றவிரித் துரைத்தியென மகதி வீணை
　　வான்முனியு முயர்குடுமி வானந் தேய்க்கும்

குன்றிவிருஞ் சிறகரிந்த வயிர வொள்வாட்
குரிசிலுங்கேட் டலுமகிழ்ந்து குழைவி னேடுங்
கன்றுகுணி லாவிளவின் கனிகள் வீழ்த்துங்
காயாம்பூ வண்ணவிவை கழறு மன்றே (1),

விராய்மலர்ப்பூங் குழலிபங்கன் மகிழ்வி னெங்கும்
வெள்ளிமலைக் கீழ்க்கிடந்து விளரி பாடு
மிராவணனுக் காற்றலமென் றிமையோர் சித்த
ரியக்கர்முனி வரர்கவெறி திரைநீ ராடைத்
தராதலமே ழும்புரக்கு மரச ரோடுஞ்
சதுமுகத்தோன் பாற்கடலிற் சார்ந்து போற்றக்
கராமறியக் கதிர்நேமி பணித்து வேழங்
காத்தருளுந் திருநெடுமால் கழற லுற்ருன் (2)

வேறு

வாலிதிற் கேட்டி ரென்றன்
வடிவமோர் நான்கு கூறுய்ச்
சால்புறு முலகங் காக்குந்
தயரதன் புதல்வ ராகி
ஞாலமீ துதிப்ப நீவிர்
நனிமலர்க் கானின் வெற்பிற்
பால்படு குரங்கோ டெண்காய்
வருகென பணித்தல் செய்தான் (3)

டண்ணவ ரெவரு மவ்வா
றுதித்தனர் பருதி யோட்டிக்
கண்வழுக் குறுசெஞ் சோதிக்
கதிர்மணி முகடு வேய்ந்த
வண்ணலங் குடுமி மாட
முடுத்துய ரயோத்தி வேந்தன்
புண்ணியப் புதல்வ ரின்றிப்
புலம்பொடு மிருந்தா னன்றே (4)

வெளிறெரீந் தகன்ற கேள்விச்
சுமந்திரன் வேந்தை நோக்கி
யொளிறுவே லுரோம பாதன்
காத்திடு முலகம் யாவுந்
துளிமுகில் வறப்ப ஞானத்
துறைபடி கலைக்கோட் டண்ண
லளியுட னெய்தின் வானம்
பொழியுமென் றமைச்சர் சொன்னர் (5)

அறைதலு முருவ வாட்க
ணங்கலார் வேந்த னேவ
மறைபயில் முனிபாற் போகி
மார்பினிற் கோடு பூத்த
செறிதவ முனிவ ரென்ன
முனிவனை மயக்கஞ் செய்தாங்
கிறைதகர் தன்னி லுய்ப்ப
விரும்புயல் பொழிந்த தன்றே (6)

வேந்தர்கோன் மகிழ்ந்து தூய
மெய்த்தவ முனிவன் வேட்பச்
சாந்தையென் றுலக மேத்துந்
தன்னுடைப் புதல்வி தன்னை
யீந்தனன் முனியு மாங்க
ணிருந்தன னவனின் டெய்தி
ஞந்தக வுழவ னியு
நன்மகப் பெறுதி யென்றான் (7)

எனவுரைத் திடலும் வேந்த
னிமைப்பினி லுரோம பாதன்
றனிநகர்க் கெய்தி யாங்குத்
தவம்புரி கலைக்கோட் டண்ணல்

* வெளிதேறிந்தகன்ற கேள்வி (பா. பே.)

முனிவனைக் கொணர வன்றேன்
பரிமக முற்றிப் பின்னும்
வினையில்புத் திரகா மேட்டி
மேதக வாற்றி னனே (8)

ஆற்றிய தழலிற் றேன்று
மவியினை யணங்க ளூர்க்கு
வீற்றுவீற் றுக நல்கக்
கவுசலை விறல்கொள் வாலி
கூற்றையின் றனள்கை கேசி
குணப்பெருங் கடலை யின்றுள்
மாற்றிலா விருவர் தம்மை
சுமித்திரை வயிறு வாய்த்தாள் (9)

இராமன்வேற் பரதன் றாய
விலக்குவ ரியக்கர் வேந்தர்
பராவுசத் துருக்க னென்னப்
பழிப்பறு நாமஞ் சாத்தித்
தராதல முழுதும் போற்ற
சவுளமே முதல வாக
விராவுநற் கருமம் யாவும்
விழுமிதின் வசிட்டன் செய்தான் (10)

நறைகம ழலங்கன் மாலை
நம்பியை முதல மைந்தர்
பிறையென வளரு நாளிற்
கவுசிகன் பெட்பி னோடு
மறைகழ லவனி வேந்தர்
செருங்குபே ரவையி னெய்தி
*யிறையவன் போதக் தேத்தி
யிருக்கென விருந்து சொல்வான் (11)

* இறைவன்முன் (பா. பே)

அரக்கர்தீ வினையால் வேள்வி
யாற்றல னிடையூ றின்றிப்
புரப்பதற் குன்பா லுற்றேன்
புதல்வனை யளித்தி யென்ன
விரத்தலு முள்ள மாழ்கித்
தயரத விராம னென்னும்
வரைத்தடந் தோளி னானை
முனிபின்போய் வருதி யென்றான் (12)

என்னவெஞ் சிலையி ராம
னிலக்குவ னோடும் யார்க்கும்
பன்னருங் களிகொள் கேள்விப்
பழமறைக் கிழவன் பின்போய்க்
கொன்றுனை யெயிற்றுப் பேழ்வாய்க்
கோளரி வழங்குங் கானின்
மன்னனு மீரண்டு விஞ்சை
மறையொடு மருளி னானே (13)

நெடிபடு கானி னேகு
நெறியினோர் சாலை நோக்கி
விடலையி தென்கொ லென்னக்
கவுசிகன் விமலன் முன்ன
மொடிவறு தவஞ்செய் காலை
யுடற்றிய வில்வே ளங்க
மடலையி னெரித்த நாடொட்
டநங்கனுச் சிரம மென்பார் (14)

என்றவ னீங்கு மேல்வை
யோரிரு நகர நோக்கிக்
குன்றெனத் திரண்ட தோளா
னிவையெவை கூறு கென்ன

மின்றிகழ் வயிர வாளான்
விருத்திரா சுரன்ற னவி
பொன்றுதல் செய்த பாவம்
*போக்கிய தலங்க ளென்றான் (15)

†சூர்வளி யெறியுங் கானிற்
றுனிவிளி னேகு மேல்லை
யாரியன் றேன்றுங் கானம்
யாதுநீ யறைதி யென்னப்
போர்கெழு சுகேது வேதன்
பொன்னடிக் கமலம் போற்றி
வாரிற விங்கு கொங்கை
மங்கையை யினிதி னின்றான் (16)

ஓடரித் தடங்கட் செவ்வா
யொண்ணுந்தற் பணிகொள் மென்றோட்
டாடகை தன்னைச் சுந்தற்
களிப்பவத் தைய னல்லா
ளாடல்மா ரீச னோடுஞ்
சுவாகுவை யருளி னின்று
ளேடவிழ் நறுந்தார் சுந்த
னின்றுயிர் தொலைந்தா னன்றே (17)

தாடகை மைந்த ரோடுந்
தமிழ்முனி தன்னைப் பற்றப்
பிடுறு தவத்தோன் சீறிப்
பிறையெயிற் றரக்கி யாகிக்
கோடிவே முத்தி னுற்ற
பலத்தொடுங் கூடு கென்ன
நீடிருஞ் சாபம் பெற்ற
நிசாசரி வனமீ தாமால் (18)

---

* போக்கிய தகன்ற தென்றான் (பா. பே.)

† சூர்விளி யெரியுங் கானிற் (பா. பே.)

ஆங்க வடன்னை யைய
　　வணங்கென வுளத்தி லெண்ணா
நீங்குறும் விரோச னன்றன்
　　சிறுவியை மகவான் கொன்றான்
பாங்குடை வெள்ளி தாயைப்
　　பசுந்துழாய் முகுந்தன் கொன்றா
னீங்கிவை கருதி நீயு
　　மிவளுயிர் செகுத்தி யென்றான் (19)

அத்தலைச் செறுந ராவி
　　யயின்றுவெம் புலவு நாறு
முத்தலை யெஃக மேந்தி
　　முகிலென வுரறி யார்த்துப்
பைத்தலைச் சுடிகை நெற்றிப்
　　பார்முது குளுக்க வந்தா
டத்துவெங் குருதிப் பேழ்வாய்த்
　　தாடகை யென்பாண் மன்னோ (20)

ஈங்கிவ டன்னைக் கோறி
　　யெனமுனி யியம்ப வையன்
வாங்குவிற் பகழி யொன்றாற்
　　றாடகை யாவி மாய்த்து
நீங்கலு மொரைஞ் ஞூறு
　　வெங்கணை நெறியி னல்கி
யாங்கவை யுபசந் தானம்
　　புரியரு மறையு மீந்தான் (21)

அவ்வழி யகன்று செல்லு
　　மருநெறி யதனின் மற்றோர்
திவ்வியாச் சிரம நோக்கி
　　யாதிது செப்பு கென்னப்

பவ்வநீ ருலகந் தன்னோர்
பதத்தினிற் பொதிந்தோன் வைகு
மிவ்விடந் தன்னைச் சித்தாச்
சிரமமென் றிசைப்பா ரென்றான் (22)

ஆங்குநின் றேகி யைய
னருமகச் சாலை யெய்தித்
தீங்கறு முனிவ வேள்வி
செய்கென வியம்ப லோடும்
வீங்கிய கேள்வி போய
கவுசிகன் வேள்வி யாற்ற
வோங்குமா ரீச னோடுஞ்
சுவாகுவந் தமரி னுற்றான் (23)

ஏற்றவர் தம்மில் வெம்போர்ச்
சுவாகுவை யெரிவா யம்பிற்
*கூற்றினுக் குணவு நல்கிக்
கொடியமா ரீசன் றன்னைக்
காற்றின்வெம் பகழி யொன்றாற்
கடலிடைக் கவிழ்த்தி யாரும்
போற்றரும் வேள்வி முற்றப்
புரந்தனன் புலவு வேலான் (24)

கோவெடுத் தருந்தும் வைவேற்
குமரருக் காசி கூறிப்
பாவடிப் பரும யானைப்
பிடிமிசைப் பணைக்கை நீட்டி
மேவருங் கானம் யாவுங்
கடந்துவில் வீர ரோடுங்
காவுசூழ் சோணை யாற்றங்
கரைமிசை யினிது சென்றான் (25)

---

* கூற்றினுக் குணவு கல்க (பா. பே.)

இவ்விடம் யாவர் தேய
மென்றிட விராமன் கேட்ப
வவ்விய மவித்த சிந்தை
யருந்தவன் றெளிந்து சொல்வான்
றெவ்வருண் சுவைக்கும் வைவேற்
குசனெனுந் திறல்கொள் வேந்தன்
மவ்வலங் கூந்தற் செவ்வாய்
விதேகர்கோன் மகளை வேட்டான் (26)

ஆங்கவ ஞன்கு மைந்தர்ப்
பெற்றன னவரின் மூத்தோன்
விங்குதோட் குசனு பப்பேர்
விறல்கெழு வேந்தர் வேந்த
னேங்கெழின் மாட முற்று
மகோதய மென்ன வோதுந்
திங்கறு நகரங் கோலித்
திருவின்விற் றிருந்தா னன்றே (27)

கதிர்வடி வேற்கு சாம்பன்
கவுசாம்பி நகரஞ் செய்து
விதிமுறை யரசு செய்தான்
றார்த்தச ஞம வேந்தன்
மதியினேர் வியக்குந் தன்மா
ரணியமா நகரஞ் செய்தான்
*சிதைவறு வசுமா டஞ்சூழ்
கொடிகதிர் விரகஞ் செய்தான் (28)

இத்தலம் வசுவின் றேய
மஞ்சுவெற் பிடையிற் றேன்று
மத்தல மகத தேய
மன்னநீண் மலையி னின்று

* சிதைவற வசுமாடஞ்சூழ்
கொடிக்கிரி விரிஞ்சம் (பா. பே.)

முத்தமுந் துகிரும் வாரி
 *யகின்முரு டுருட்டி யோடுந்
தத்துநீர்த் தரங்கஞ் சிந்து
 மாநதி தானென் றுண்டால் (29)

அன்னமா நதியின் நீர்த்தத்
 தாடல்வேற் குசனு பற்குக்
கன்னலங் குதலைச் செவ்வாய்க்
 கிருதாசியுட் களிப்பி னீன்ற
கொன்னுனை வேற்கண் ணுரோர்
 நூற்றுவர் கொடியி னெல்கி
வன்னமே கலைக ளார்ப்ப
 வண்டுளர் மலர்கோய் தாரால் (30)

காற்றிறை யவரை நோக்கிக்
 காமனோ யுழந்து மாழ்கி
யூற்றுறு மின்பம் யாழோர்
 கூட்டத்தி னுறுதி ரென்னப்
போற்றலு மறுத்த வேற்கட்
 பூங்கிளி யனைய தீஞ்சொ
னூற்றுவ ருடலம் புக்கு
 நுடங்குகூ னுக்கி னுனே (31)

மங்கைய ரிதனைத் தந்தைக்
 கோதலு மனத்தி னெண்ணிப்
பங்கய மடந்தை யன்ன
 சோமதை பரிவி னேடுந்
துங்கநற் சூளிக் கீன்ற
 பிரமதத் தனுக்குத் தூய
சங்கின முழங்கி யார்ப்பத்
 தருமணம் புரிவித் தானல் (32)

---

* அகில் பூடுருட்டி யோடும் (பா. பே.)

பாம்புபைத் தன்ன வல்குற்
　　பாவையா ருடற்கூன் போகிக்
காம்பிலி தேயந் தன்னிற்
　　களிப்பொடு பிரம தத்த
னேம்பலி விருந்து வாழ்ந்தா
　　னிவைநிற்கக் குசனு பப்பேர்
வாம்பரித் தடந்தேர் மன்னன்
　　மகவினி தாற்றி னுனே (33)

அருமக மாற்று மேல்வை
　　யாடல்வேற் குசனுஞ் செய்திப்
பொருவறு மைந்த வொப்பில்
　　புதல்வரைப் பெறுதி யென்ன
*வரமளித்த துடலி னேடும்
　　வானநா டதனி லுற்றுன்
கருணைகூர் குசனு பன்சீர்க்
　　காதியை யினிதி னின்றுன் (34)

†ஆங்கவள் கவுசி கப்பே
　　ரணங்கொடு மென்னை யின்று
டங்கில்மற் றவளே தூய
　　செயிரறு கவுசி கப்பேர்
விங்குநீ ராறு யீண்டு
　　மேவின ளென்ன வோதி
நீங்கலுங் கங்கை யென்று
　　நெடுநதி தோன்றிற் றன்றே (35)

வள்ளலந் நதியை நோக்கி
　　வரன்முறை கூறு கென்னத்
தெள்ளிதின் மறைக டேர்ந்த
　　கவுசிகன் செப்ப லுற்றுன்

---

* வரமளித் துடலத் தோடும் (பா. பே.)

† ஆங்கவன் கவுசிகப் பேரணங்கொடும் என்னை யின்றுள் (பா. பே.)

கள்ளவிழ் மலர்மென் கூந்த
 லுமையினைக் கங்கை யோடு
மெள்ளரு மிமய வேந்த
 னினிதினளிற் பயந்தா னன்றே (36)
உமையினை யயன்மால் காணு
 தோங்கொளி யாகி நின்ற
விமயவிற் குழைய வாங்கு
 மீசனுக் கிந்தா னிந்த
†தமரவெண் டிரைநீர்க் கங்கை
 பாதலந் தரணி விண்ணி
னமர்தலா லுலகி னுள்ளோ
 ரமர்திரி பதகை யென்பார் (37)

திங்களங் கண்ணிப் புத்தேள்
 சிறப்பொடு முலக மீன்ற
மங்கையோ டொருநா ளுண்டு
 மருவலு மமரர் யாரு
மிங்கிவை யொழிதி யென்ன
 *வீர்ப்பவி ரியத்தை யைய
னங்கியங் கடவு டன்னைத்
 தரித்தியென் றருளின் விட்டான் (38)

செந்தழற் கடவுண் மெய்யுந்
 தியத்தலிற் றரிக்க லாது
மைந்துடைப் புவியி னுய்ப்ப
 மற்றது பொறுக்க லாற்று
துந்துநீர்க் கங்கை யாற்றி
 லுய்த்தலுங் கங்கை யாற்று
தந்தமில் சரவ ணத்தி
 னமைவுற விடுத்த தன்றே (39)

† தமர வெண்டிரைதாழ் (பா. பே.)
* விரப்ப வீரியத்தை (பா. பே.)

26

*உலகெலாங் கமலத் தோனே
மன்றசிற் றுதர வல்லி
குலமனை யவர்பால் மைந்தர்ப்
பேறுகலி ரென்று கூறி
நலனுடைக் கடவு ளோரை
வைதகன் ஞாலந் தன்னைப்
பலர்விழை கணிகை போல
வாழ்கெனப் பகர்ந்து போனள் (40)

சரவண மதனில் வெய்தாந்
தழலுமிழ் வடிவே லேந்து
முருகவே ளினிது தோன்றி
மொய்யமர் கடந்த வெற்றி
யெரியுமிழ் தறுகட் பேழ்வா
யவுணரை யிகலி னூறித்
தருமிழ லமரர் வைகத்
தானையங் காவல் பூண்டான் (41)

ஈங்கிது கிடக்கக் கங்கை
வரன்முறை யினிது கேட்டி
வாங்குவிற் சகர வில்வாழ்
மனைவிய ரிருவர் தம்மிற்
றீங்கெறி பிருகு வென்னுஞ்
செய்தவ னருளாற் பொன்னங்
கோங்கிள முலையாள் மற்றோர்
குமரனை யினிதி னீன்றாள் (42)

## வேறு

அறுபதி னாயிர மாடல் மைந்தரை
மறுவற மற்றவன் வயிறு வாய்த்தன
ளிறையசமஞ்சத னென்னு மைந்தனைச்
சிறுவரை யொறுத்தலாற் கானஞ் சேர்த்தினன் (43)

* உலகெலாங் கலத்தோ னேமன்றசற்றுதரவல்லி (பி. பே.)

ஆங்குச மஞ்சத னஞ்சு மானெனுந்
தீங்கறு புதல்வனைச் சிறப்பி னீன்றனள்
விங்குதோட் சகரன்வாம் புரவி வேள்விகள்
பாங்கினி லொன்றொழி நூறு பண்ணினன் (44)

மீட்டுமவ் வேள்வியின் விடுத்த வாம்பரி
பூட்டுவி லிந்திரன் புணர்ப்பின் வெளவுறு
வாட்டமில் கபிலமா முனிவன் வான்றவ
மீட்டுறு சாலையி னொளித்திட் டேகினன் (45)

தள்ளரும் பெரும்புகழ்ச் சகரர் வாம்பரி
யெள்ளரும் பெரும்புவி யெங்குங் காண்கிலார்
பள்ளநீர் வேலையைத் தொட்டுப் பாதலத்
துள்ளுறை கபிலன் மாட்டுறைதல் கண்ணுற்றார் (46)

தெள்ளிதிற் காண்டலுஞ் சினவு மன்னரைத்
தள்ளறு முனிமொழி சாம்ப ராக்கலும்
வள்ளறன் மைந்தரை வரவு காண்கலா
துள்ளநொந் தஞ்சுமான் செல்கென் றேவினன் (47)

அஞ்சுமான் பாதலத் தணைந்து மாதவன்
செஞ்சரண் பணிந்தவ னருளிற் செல்பரி
யெஞ்சலில் சகரனுக் கீந்து தந்தைய
ருஞ்சிட வருந்தவ முஞற்றி னனரோ (48)

வேறு

அருந்தவம் பன்னு ளாற்றி
யஞ்சுமா னென்னும் வேந்தன்
றிருந்தலர் புகழும் வேற்கைத்
திலீபனை யினிதி னீன்று
விருந்தின னாகி விண்ணோ
ரெதிர்கொள விசும்பிற் போனன்
மருந்தினு மினிய கேள்வித்
திலீபனும் வானஞ் சேர்ந்தான் (49)

அன்னவ னளித்த வெற்றிப்
பகீரத னன்பி னோடு
முன்னரும் பருவ முப்பா
னுயிரந் தவஞ்செய் காலைப்
பன்னரும் மறையோன் றோன்றிப்
பகீரத விழைந்த தென்ன
வுன்னருங் கங்கை யீந்த
வுலகினி னுறுதல் வேண்டும் (50)

மைந்தனும் வேண்டு மென்ன
வளித்துவா னதியின் டெய்தி
னெந்தையை யன்றி மற்றுத்
தரிக்குந ரில்லை யென்று
னந்தலில் பிரம னேக
நாமவேத் குரிசி றாய
சந்திர மௌலி யெய்த
வளப்பினுட் டவன்செய் தானே (51)

நீற்றொளி பழுத்த நெற்றி
நிமலன்வந் தெய்தக் கங்கை
யாற்றினை யளித்தி யென்ன
வருந்தவம் பெரிது மாற்றப்
போற்றருங் கங்கை யீசன்
புரிசடைக் காட்டு ளெய்தித்
தோற்றமின் றுக மன்ன
வீசனைத் தொழுது சொல்வான் (52)

கங்கையை யளித்தி யென்னக்
கடவுடன் சடையின் மீது
தங்குமோர் திவலை நல்கத்
தனியுமிழ் தரளஞ் சிந்தி

யெங்குநீர் பெருகி யோடிச்
 சன்றுவின் சாலை யெய்த
வங்கவன் குடங்கை தன்னு
 லள்ளின னருந்தி னுல் (53)

அருந்தலு மரசன் வேண்ட
 வரும்பெறற் கங்கை தன்னைப்
பெருந்தவன் செவியின் மீட்டும்
 விடுத்தலும் பெட்பி னேடுந்
திருந்தலர் கடந்த வைவேற்
 பகிரதன் றிண்டேர்ச் சில்லி
பொருந்துறும் வழியி னேகிப்
 பாதலம் புக்க தன்றே (54)

பாதலத் தெய்தி வேந்த
 ரடலையிற் படர்த லோடுந்
*தீதறு சகரர் யாருந்
 துறக்கத்தி னினிது சேர்ந்தார்
மாதவக் கிழமை பூண்ட
 மன்னனு மயோத்தி யுற்ற
விதிதன் காதை யென்னக்
 கவுசிக னியம்பி னுனே (55)

வேறு

என்றுயர் கங்கை வரன்முறை யுரைத்தாங்
 கேகுழி விசாலைமா நகரந்
துன்றவிந் நகரம் யாதென விராமன்
 சொற்றலுங் கவுசிக னுரைப்பான்
வென்றிவே லவுணர் தம்மொடுந் தேவர்
 கொடியவெஞ் சமந்தனி புரிந்து
பொன்றலும் பொன்று மருந்துவேட் டமரர்
 புணரியை பற்பகல் கடைந்தார் (56)

* தீதறு சகரர் யாரும் (பா. பே.)

மாயிரு ஞாலந் தாழியாய் மத்து
மந்தர மாமதி தறியாய்க்
காயும்வெவ் விடத்து வாசுகி நாணுக்
கடற்புனல் வெண்டயி ராக
ஆயிரம் பருவங் கடைதலு மாலம்
பிறப்பமால் முதலிய வமரர்
பாய்விடை யுயர்த்த பனிமதிக் கண்ணி
பண்ணவன் பதம்பழிச் சினரால் (57)

வெயிலுடன் முளைத்துக் கிளைத்தசெம் மேனி
விமலனுங் கெய்திமால் முதலாஞ்
செயிரறு தேவர் பருவரல் துடைத்துத்
திகழ்விட மருந்தின னகல
மயிலியல் பாகன் அருளினை வியந்து
மால்முத லாகிய தேவர்
பயிறரு கடலை மீளவும் வியந்து
பற்பல காட்கடைந் தனரால் (58)

மந்தரந் தாழ மாயவ னுமை
யுருக்கொடு வலியினுற் றுங்கி
யுந்துநீர்க் கடலைக் கடைதலு மோர்கை
கமண்டல மோர்கைதண் டேந்தி
*நந்தலில் தன்மந் திரிமுதற் பிறந்தார்
நாடகக் கூத்திய ராகும்
அந்தமி லரம்பை மகளிர்தெள் ளமுதோ
டறுபது கோடிவந் துதித்தார் (59)

நிலவுகொப் புளிக்கும் வெண்ணகைத் துவர்வாய்
நிகரெறி யரம்பையர் தமக்குச்
சிலதிய ரனந்த மகளிர்வந் துதித்தார்
திகழ்வளி மனத்திறுங் கடிய

* நந்தலி லதன்மந்திரி முதற்பிறந்தான் (பா. பே.)

கலினவாம் புரவி பிறந்தது பின்னர்க்
கருங்கடற் முழுவதுஞ் சிவப்பப்
புலரிட ரெழுந்த சேட்டிளங் கதிரிற்
கவுத்துவம் பிறந்தது பொலிவின் (60)

வியன்சிலை தருக்க ளோந்துமாங் குதித்த
விண்ணவர் முதலினோர் யாரும்
பயன்படு தேனுப் பிறந்தது மற்றோர்
பான்மதிக் குடையவ னுதித்த
தியங்குகாற் கோட்டு வரைநிக ரயிரா
வணப்பக டெழுந்தது பின்னர்த்
தயங்கொளி முகத்துக் காக்கைமீ துயர்த்த
தௌவையாங் குதித்தன ளன்றே (61)

பூங்கதிர்ப் பாப்பி யுலகெலாம் விளக்கும்
புண்ணியத் திங்களாங் குதித்த
தோங்குபைங் கனைக்காற் சேயிதழ்க் கமலத்
தொழுகொளி பரப்புபொற் பொகுட்டு
வாங்குநுண் ணுசுப்பிற் றிதலைபூத் தலர்ந்த
வனமுலைச் சேயரி நெடுங்கட்
டீங்குயிற் குதலைப் பொன்னுறழ் மேனித்
திருமக ளுதித்தன ளன்றே (62)

வாருணி நறவம் பிறந்தது பின்னர்
மற்றது நுகர்தலாற் றேவர்
சீர்கெழு சுரரா யினரஃ துண்ணா
ரசுரரா யினர்சிறந் தோங்கும்
ஆரமு துதித்த தலங்கொளி மணியும்
திருவையு மாயனுக் களித்தார்
ஏர்கெழு மமிர்த மெமதும தென்ன
வவுணரு மமரரு மேற்றார் (63)

ஏற்றவர் தம்மை மாயவன் விலக்கி
மோகினி யுருவொடு மெய்நித்
தோற்றிய வமுத முதலிய வெவையுஞ்
சுரர்தமக் களித்தலு மாற்ற
மூற்றிருந் தொழுகும் வச்சிரப் படையால்
அடல்கெழு மவுணரை யொறுத்தாங்
காற்றலின் மகவான் பொன்னுல கனைத்துந்
தனதடிப் படுத்தின னளித்தான் (64)

என்னுடைப் புதல்வர் வேரொடு மடிய
விகலுடைச் சூழ்ச்சியி னொறுத்த
வின்னுயி ரனைய வதிதிமைந் தரையின்
டொறுப்பவோர் சிறுவனை யருள்கென்(று)
அன்னமென் னடைய திதியரந் துரைப்பக்
காசிப னுயிரம் பருவ
மன்னிநீ புனித மாய்த்தவ மியற்றின்
மகப்பெறு வாயென வறைந்தான் (65)

ஆயிரம் பருவ நோற்பவ ளொருநாள்
அலைகுழல் விரித்துறங் குதலும்
பாயொளி வயிரப் படையினே னேக்கிப்
பைந்தொடி வயிற்றினுட் புகுந்து
சேயையேழ் கூறு யறுத்தலு மணங்கு
*சிதைத்திட லெனவிரந் திடலும்
மாயிரு விசும்பி னேழ்மருத் துவராய்த்
திரிவுற வரமளித் தகன்றான் (66)

அரும்பிளம் கொங்கைத் திதிமுனம் விரத
மாற்றுழி யிவ்விட மாகும்
பொருந்தலர் கடந்த விக்குவா குப்பேர்.
புரவல னம்புசை யென்னுங்

* சிதைத்திட லெனவிதிர்த்திடலும் (பா. பே.)

கரும்பினைக் கலந்தாங் களித்திடும் விசாலன்
கட்டிய நகரமீ தவன்றன்
பொருந்திய மருமான் சுமதியின் நகரம்
புரவுபூண் டிருந்தன னென்றான். (67)

கோசிக னிவ்வா றுரைக்குமேல் வையினிற்
கோதறு சுமதிவந் தெய்தி
யாசைக டோறுந் தன்புகழ் நிறுவு
மையனை யளவளாய்த் தழீஇக்கொண்
டேசறுந் தனது நகர்வயிற் கொணர
வியற்றிய விருந்தெதிர் விரும்பி
மாசறு முனியுந் தம்பியுந் தொடர
மிதுலையூர் மருங்கணைந் தனனால் (68)

கூன்புறக் கனிதாழ் கவிழ்குலை தூக்குங்
குறுங்கழுத் தரம்பையிற் றாவி
வான்படர்ந் தோங்குறு கமுகிளம் பாளைக்
கிழிதர வாளைபாய்ந் துழக்குங்
கான்படர் மிதுலை வளநகர் மருங்கோர்
கண்கவர் சாலையை நோக்கி
யூன்கெட நோற்ற முனிவவிவ் விடமே
துரைத்தியென் றிடமுனி யுரைப்பான் (69)

ஏர்கனிந் தொழுகு மிளமுலைத் துவர்வா
யகலிகை நகையிருந் தருந்த
வாரொலி கழற்கா லிந்திர னெய்தி
மருவுதல் கோதம னோக்கிச்
சீர்கெழு பலம்வீழ்ந் திடுகெனச் சபித்துச்
சேயிழை தன்னையு மின்றி
யார்தரு மடலைப் பாயலாய்ப் பன்னா
ளருபியா யுறைகெனச் சபித்தான் (70)

கோங்கிள முலையாள் முனிவவிச் சாப
மொழியுநாட் கூறென விராமன்
பூங்கழற் றுகளுன் மெய்யினிற் கதுவின்
போகுமென் றுரைத்தன னகலத்
திங்கறும் வலாரிக் கமரர்தென் புலத்தோர்
கூறதாய்த் திகழ்தர விசம்
வாங்கின ரமைப்பக் கற்பக நீழல்
வானவர் போற்றவிற் றிருந்தான் (71)

வேறு

தீதறு முனிவ னவ்வா றுரைத்தலுஞ் செம்மல் கேட்டுப்
போதறு கெதிரியி னையன் பொன்னடி துகள்சென் றெய்தக்
கோதமன் பன்னி சாப நீங்கிவெங் குருதி வேற்கண்
மாதுரு வாகி யாசி வழங்கித்தன் மகிணற் சேர்ந்தாள் (72)

வள்ளலு மிளைய கோவும் வான்றவ முனிவன் பின்போய்
அள்ளிலைப் பலவி னெற்றி யளிக்துவிழ் சுளையி னூறுங்
கள்ளயின் றிளஞ்சுருன் மந்தி கடுவனோ டிவிறி னோடும்
வெள்ளநீர்ப் படப்பை சூழு மிதுலைமா நகரம் புக்கார் (73)

சேட்டிளம் பருதிப் புத்தேள் செலவயர் கடவுண் மான்றேர்
ஓட்டற நிவந்த செம்பொற் சாலையு ளுலங்கொ டிண்டோள்
வாட்டிற லிளைய ரோடும் மறைமுனி யெய்த நோக்கித்
தாட்டுணைப் பணிந்து வெள்வேற் சனகனல் லிருக்கை
யீந்தான் (74)

அருகுறை குமரர் தம்மை யார்பிழித் தாம மார்பன்
பருகுவான் போல நோக்கிப் *பழமறைக் கிழவ போந்த
திருவினர் யாவ ரென்னத் தயரதன் சிறுவ ரீசன்
பொருசிலை மதுகை காண்பா னிவ்வழிப் போந்த தென்முன்
(75)

* பழமறைக்கிழவன் (பா. பே.)

விற்றேழிற் கொருவ னாய விராமனை விழைவி னோக்கி
மற்றடந் தோளாய் கேட்டி கவுசிகன் வரலா றென்னப்
பொற்றவிர் பொருவு மேனி *யகலிகை பொற்பி னின்ற
நற்றவக் கிழமை பூண்ட சதானந்த னவில லுற்றான் (76)

கற்றிரள் புரளுந் திண்டோட் காதிசே யுலகம் யாவும்
ஒற்றைவெண் குடையுள் வைத்துத் திகிரியோன் றுருட்டு [நாளில்
வெற்றிவேற் புளின ரோடும் வேட்டமேற் கொண்டு [கான்போய்
நற்றவ வசிட்டன் வைகுஞ் சாலையி னண்ணி னானே. (77)

அருந்ததி கணவன் வேந்தோ டளவளாய் முகமன் கூறி
விருந்தினி தளித்தி யென்னத் தேனுவை விழியி னோக்க
மருந்தினு மினிய வாய வான்சிறப் பியற்ற மன்னன்
திருந்துநற் றவத்தோ யிந்தத் தேனுவை யளித்தி யென்றான் (78)

என்றலு மறுப்ப மன்னன் றேனுவை யெதிர்ந்து பற்றத்
துன்றிய மயிர்க்கா ரேறும் யவனரைத் தோற்றி வெய்ய
வென்றிவேற் றானை மாட்ட வெஞ்சமத் தரசன் மைந்தர்
சென்றிட வுங்கா ரத்தான் முனிவரன் செகுத்தா னன்றே (79)

கூற்றமும் வெருவ வேந்தன் கொடுஞ்சிலை குழைய வாங்கி
யேற்றரு முனிவர்க் காற்றா திடந்தன னாகி மைந்தர்
நூற்றுவர் தம்மி லுய்ந்த மைந்தனை நோக்கி வையம்
போற்றுகென் றிமையத் தெய்தி புலனவித் திருந்து நோற்றான் (80)

இமையவிற் குரிசி லெய்தி விழைந்தமை யுணர்ந்தே னென்னு
வமைவருங் கடவுள் வாளி யளித்தலு மரசன் போந்து
கமையுடை வசிட்டன் மெய்யில் விடுத்தவெங் கணைகள்யாவுந்
திமிரமெய்க் கதிரிற் றண்டந் தியெழ விழுங்கிற் றன்றே (81)

* யகலிகை பொருப்பினின்ற (பா. பே.)

ஆங்கது கண்ட வேந்தன் அரசர்வெந் திறலை யெள்ளி
யோங்கழ லூட்டி யுண்ணு முனிவரை யுவந்து போகித்
தீங்கறு முனிவர் வைகுந் தென்புல மதனி லெய்திப்
பாங்குறத் தழலி னுப்ப ணுயிரம் பருவ நோற்றான் (82)

நோற்றலுங் கமலப் புத்தே ளெய்தின்வந் தெய்த மன்னன்
போற்றலு முவந்தி ராச முனிவரென் றுரைத்துப் போகக்
காற்றினை நுகர்ந்து செய்ய கண்முகிழ்த் தழலி னுப்பண்
ஆற்றரும் விரதம் பின்னு மாயிரம் பருவஞ் செய்தான் (83)

விழவுகண் டுயிலா வீதி யயோத்திநா டாளும் வேந்தன்
மழைநிகர் தடக்கை வண்மை வளர்திரி சங்கு வென்போன்
றொழுதகு வசிட்டற் போற்றி யுடலொடுந் துறக்க மெய்தப்
பழமறை தெரிந்தோ ரெச்சம் பண்ணுவித் திடுக வென்றான் (84)

என்னலு முனிவ னெல்லா *தென்றலும் புதல்வர்ப் போற்றி
மன்னவன் புரிதி ரென்ன மறுத்தலும் பிறர்பா லெய்தி
நன்மகம் புரிவ னென்ன நான்மறை வசிட்டன் சீறி
நின்னிலை திரிந்து மற்றோர் நீசனா யுறைதி யென்றான் (85)

களைகணா யுலகம் யாவுங் காத்திடுந் தலைமை நீங்கி
யுளமெலி வெய்திக் காதி மைந்தனுக் குற்ற கூறத்
தளரலி துறக்கத் துய்ப்ப னென்றருந் தவத்தோர் கூவ
வளர்தவ வசிட்டன் மைந்தர் மறுத்தலும் வைது கொன்றான் (86)

தழலிடை நறுநெய் பெய்து தனிமகம் புரியத் தேவர்
விழைவொடு மவிசைக் கொள்ளார் விடுத்தலும் வெகுட்சி [கூர்ந்து
தொழுதகை சுருவை யேற்றி வேந்தனைத் துறக்கத் துய்ப்ப
விழிதொழிற் றீரீன் டெய்த லெனவும்ப ரிழித்திட் டாரால் (87)

* தெனவவன் (பா. பே.)

சென்னிகி ழாக வீழும் திரிசங்கு வென்னும் வேந்தை
நின்னிலென் றமைத்து வானி னிறுவிலா சவன்றன் னேடும்
இன்னுமோ ருலகஞ் செய்வ னெனவுடுக் கணங்கள்
[விண்ணோர்
பன்னருஞ் சராச ரங்கள் சிற்சில படைத்தா னன்றே (88)

படைத்தலும் விண்ணோ ரஞ்சிக் கோசிகன் பால்வந் தெய்தி
யடற்கரும் வலத்தோய் நீயீண் டமைத்தவை யமையு
[முன்னந்
தடுப்பற படைத்த யாவுந் தராத்திரி சங்கு வோடும்
உடுத்தெரி யுலகின் பாங்கர் வதிகவென் றுரைத்துப் போனார்
(89)

கடவுளர் போய பின்னர்க் கவுசிகன் றுணைவி னேகி
குடதிசை யதனை நண்ணிக் கொடுந்தவ மியற்று மேல்வைப்
படிபுக ழும்ப ரீடன் பசுவினை மகவான் வௌவ
வடுவிலா ருசிகன் சேயை வான்பொருள் கொடுத்துக்
கொண்டார் (90)

பொற்றடந் தேரி னேற்றிப் புருடமே தத்துக் காக
மற்றடந் தோளான் கொண்ட மறைமுனி புதல்வ னோடும்
கற்றடிப் படுத்த விஞ்சைக் கவுசிகன் சாலை நண்ணப்
பற்றறு முனியை நோக்கிப் பாலக னழுதிட் டானே (91)

அழுதகங் குழையும் பாலற் கஞ்சலென் றினிது கூறிப்
பழுதறு முனிவ னீன்ற மைந்தரைப் பார்த்து நீவிர்
விழைவொடும் பசுவா யிந்த விடலையைக் காமி னென்னத்
தொழுதனர் மறுப்ப வேட ராகெனத் துணைவின் வைதான்
(92)

அந்தணன் புதல்வ னுய்ய வாங்கவன் செவியி னோடு
மந்திர மிரண்டு கூறி மறைமுனி விடுப்ப வேந்தன்
எந்திரத் தேரி லேற்றிச் சாலையி னெய்தி யூபக்
கந்தினி லார்ப்ப மைந்தன் கடவுண்மந் திரத்தை யோர்ந்தான்
(93)

அத்தலை யமர ரெய்தி யவியினை யடைந்தோ ரிந்த
வித்தகச் சிறுவன் றன்னை விடுக்கென விடுத்து வேந்தன்
பத்திமை வேள்வி முற்றிப் பதியிலி லடைந்தான் பின்றும்
பொய்த்தலைப் புகாத நெஞ்சப் புண்ணியன் றவத்தி
[னின்றான் (94)

காதிசே யாற்று கின்ற தவத்தினைக் கமலப் புத்தேள்
மேதக வியந்து போந்து மெய்த்தவ விருடி யென்ன
வோதின னகலப் பின்று மொழிவரும் புலன்கள் செற்றுத்
தீதெறிந் தழலி னுப்பண் செய்தவ மியற்றி னானே (95)

வேறு

வெண்ணிலாக் கதிர்கள் விழுதுவிட் டொழுகும்
பிறைவடஞ் சுமந்தற வீங்கி
வண்ணமென் சுணங்கு பூத்தெழுந் தோங்கும்
வனமுலைப் பொறையினி லந்தோ
நுண்ணிடை முரியு முரியுமென் றேங்கி
நூபுர மரற்றவெங் கூற்றம்
பெண்ணுருக் கொண்டு வருதல்போற் பெட்பின்
மேனகை யவ்வழிப் போந்தாள் (96)

*விளிம்புபூத் தெறிந்த மேகலை யொலிப்ப
மின்னென மென்மெல வொதுங்கித்
துளங்கிடை யொல்க மேனகை வரலுங்
கோசிக னருந்தவந் துறந்தாங்
குளங்கனிந் துருக வாங்கவ ளோடு
மொருபதி னாயிரம் பருவம்
அளந்தறி வரிய வின்னலம் பருகி
யமரரி னுளங்களித் திருந்தான் (97)

---

* விளிம்பு முத்தெறிந்த (பா. பே.)

மாயையின் கோட்பான் மேனகை யோடு
மருவினனெனத்தனை யிகழா
ஆயிரங் காத மகன்றவேற் றடங்க
ணமிழ்தினை யொல்லையின் விடுத்துப்
போய்வட திசையி னயிரம் பருவம்
பொறியவித் தருந்தவம் புரியச்
சேயநான் மலரோன் மாமுனி யெனப்பேர்
சிறப்பொடு மினிதளித் தகன்றான் (98)

முனிவரன் பின்னு மாயிரம் பருவ
மூச்சவித் தருந்தவம் புரியக்
கனியுறழ் திஞ்சொ லரம்பையை யமரர்
விடுத்தலுங் காதிசேய் முன்னந்
தனியவ ளெய்தப் பாறையா கென்னத்
தையலைச் சபித்தரு முனிவன்
புனிதநல் லொழுக்கம் பூண்டுகீழ்த் திசையிற்
போயின னருந்தவம் புரிந்தான் (99)

பருவமீ ரைஞ்னூ றருந்தவம் புரிந்து
*பாரணம் பண்ணுஞ்செஞ் சோற்றைத்
தருதியென் றமரர் கோன்மறை †யவனு
யிரத்தலுந் தயாவொடு மளித்துப்
புருவமத் திமையி னிருவிழி சேர்த்துப்
புலனொடு மூச்செழா தவித்துத்
திரமுறு முனிவ னயிரம் பருவந்
தீயிடை யருந்தவம் புரிந்தான் (100)

பேசருந் தவத்து முனிவர னுச்சிப்
பிளந்தழற் பிழம்பெழுந் தோங்கி
மாசறு புவனம் எங்கணும் புகையாய்
மண்டலு மடவன முகைக்கு

* பாரணம் வெஞ்சோற்றை (பா. பே.)
† யவனுப்ச் சாற்றலுக்தயாவொடு (பா. பே.)

மீசனுங் கெய்தி மகிழ்ந்தனம் பிரம
விருடிநீ தவமொழி கென்னப்
பாசடைக் கமலப் பொகுட்டினே னகலப்
பழமறை வசிட்டனே யடைந்தான் (101)

அன்னமா முனிவ னிவனென வுரைத்துச்
சனகனன் மரபுமாங் கியம்பிப்
பன்னருங் கேள்வி யுறுசதா னந்த
னிருத்தலுங் கவுசிகன் பருதி
தன்னுயர் குலத்தி னரசர்தந் தோற்ற
முழுவதுந் தரளவெண் கவிகை
மன்னவன் சனக னுணர்ந்துளங் களிப்ப
மகிழ்வுட னிரிதெடுத் துரைத்தான் (102)

வேறு

நல்லெழிற் புதல்வ சின்றி வரைமகட் போற்ற நங்கை
யல்லியங் கமலை யன்ன சிதையை யரிதிற் றந்தாள்
வல்லியோர் பாக னம்பொன் வரிசிலை நல்கி யிந்த
வில்லிறுத் தவற்கே யுன்றன் மெல்லியற் கொடுத்தி
யென்றான் (102)

எனப்புகன் றிலங்கு வைவேற் சனகனென் றுயர்த்
[தோன்றந்த
தனிச்சிலை கொணர்மி னென்னச் சகட்டினிற் கொணர்ந்து
[காட்ட
முனிக்கிறை கண்ணிற் றூண்ட முகினிறப் பவளச் செவ்வாய்ப்
பனிப்பிறை பூண்செய் தோளான் பருதியி னிழிந்து
[சென்றான் (104)

சென்றது மெடுத்து நாணிற் செறித்ததுந் திரண்ட
[செம்பொற்
குன்றவில் லனைய வல்விற் குழைத்தது மிறுத்த வாறும்
ஒன்றிடா விமையா நாட்டத் தமரரு முணர கில்லார்
என்றிடி னிமைத்து நோக்கு மனிதரோ விளிது காண்பார்
(105)

முருகுநறு் தோற்றத் தையன் மூரிவில் லிறுத்த லோடும்
உருதுபே ருவகை வெள்ள முவட்டெடுத் தொழுக வேந்தன்
கருணைகூர் முனியை நோக்கிக் கடிமண முடித்தற் கின்னே
தருநிக ரசோய வண்கைத் தயரற் குணர்த்து கென்றான் (106)

கோசிகன் விடுத்த வோலை காண்டலுங் குமர ரோடுந்
தூசுலாம் பருவ வல்குற் றெண்டைவாய் மகளி ரோடும்
மூசுவண் டரற்றுந் தண்டார்த் தயரதன் முனிவர் சூழக்
காசுகண் படுக்கு மாடக் கடிநகர் மிதிலை புக்கான் (107)

குடவளை யலறி யேங்கக் குணில்பொரு முரசு மார்ப்ப
யுடைதிரைக் கடலந் தானை யொளிறுவேற் சனகன் போந்து
தடமுலைப் பவளச் செவ்வாய்ச் சீதையைத் தழல்சான் றாக
மடலவிழ் துளவி னாற்கு நீரொடும் வழங்கி னானே (108)

உருவவோ டரிக்கட் செவ்வா யூர்மிளை யென்னு மாதை
யருவரை யனைய திண்டோ ளிலக்குவற் களித்து நாளும்
மருவலர்க் கடந்த வைவேற் குசத்துவ சன்றன் மக்கள்
இருவரைப் பரத னுக்குஞ் சத்துருக் கனுக்கு மீந்தான் (109)

மணவினை முடிந்த பின்னர் மன்னர்கோன் மைந்தர் சூழப்
பணிவரும் பவளத் தாற்றுச் செந்நெலம் படப்பை வேலி
யணிகெழு மிதுலை நீங்கி யகநகர்க் கேகு மேல்வைத்
துணிகதிர்ப் பரசு ராம னிராமனை நோக்கிச் சொல்வான் (110)

பாற்றினஞ் சுழலுஞ் சூலப் படையினோ னளித்த வில்லை
யாற்றல்கோ லிறுத்த தென்ன வணிமணி முறுவல் கோட்டி
யேற்றுநீ யிந்த வில்லென் றளித்தலு மிமைப்பி னேற்றிக்
கூற்றுறழ் பகழிக் கென்கொ *லிலக்குநீ கூறு கென்றான் (111)

* இலக்கரீ கூறு (பா. பே.)

ஈட்டிய தவங்க ளியாவு மெய்துகொன் றிடுதி யென்னப்
பூட்டிய பகழி யொன்றுற் *பொன்னகர்ப் புதவு மாற்றி
வாட்டிற லிளைய ரோடு மன்னெடுஞ் சிலையி ராமன்
சேட்டிளம் பருதி தாழு மணிமதி லயோத்தி சேர்ந்தான்

இருபத்தொன்றாவது
இராமனவதரித்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவித்தம் 867.

---

## இருபத்திரண்டாவது
## இராமன் வனம்புகுந்த வத்தியாயம்

---

நாகிளங் கமுகின் மிடறுகொப் புளிக்கு
நறவுபாய் வயல்விளிம் புடுத்த
கேகயத் தரசர்க் காணிய விருப்பிற்
பாதனு மிளவலுங் கிளர்ந்த
வோகையி னடைந்த காலையி னென்னு
ருதிரமுண் டுன்சுவைத் தொளிரும்
வாகைவே லரசன் சுமந்திரன் முதலா
மந்திரித் தலைவரோ டுரைப்பான் (1)

கற்பகக் கானத் தரசுவீற் றிருக்கும்
கடவுளு மேக்கற வெய்தப்
பற்பல கால முலகெலா மளித்தே
னினியொளிர் பருமணி மவுலி
யற்பினி னிராமற் கணிபெறச் சூட்டி
யகனில மவனடிப் படுத்தி
யெற்பெழுந் துடல முணங்கமா தவத்தி
னிருப்பதென் கருத்தெனா விசைத்தான் (2)

---

* பொன்னகர் புகவு மாற்றி (பா. பே.)

காந்தெரி கவிழ்க்குங் கடகநீண் முன்கைக்
காவலன் மொழியெதிர் விரும்பி
யாய்ந்தநூற் கேள்வி வசிட்டனை முதலோ
ரிராமனுக் காங்கது விளம்பி
யேந்தெழி னகரம் புனைகென முரச
மியம்பொலி கேட்டலுங் கூனி
பாந்தள்வாய்ப் படுத்த பறவையிற் பதைத்துக்
கேகயன் பாவைபா லடைந்தாள் (3)

மாற்றவன் மைந்தன் மணிமுடி புனைந்து
மாநிலம் புரக்கநின் மைந்தன்
ஏற்றுறை வருந்தி யிழிவுறு திராமற்
கெரிமணி மவுலிசூட் டிடுதல்
பாற்றினஞ் சுழலும் பருதிவே லரசற்
குரைத்துநீ விலக்கெனப் பணிப்ப
வேற்றடங் கண்ணி மன்னவ னுழைபோய்
முனிவொடு மென்மெல வுரைப்பாள் (4)

முன்னநீ தருவ லென்றநல் வரங்க
ளிரண்டுமீண் டுதவென மொழிய
என்னுயிர் தருதி யென்கினும் அளிப்பன்
கேட்கென விருநில முழுதும்
பன்னருஞ் சிறப்பிற் பரதனுக் களிப்ப
தொருவரம் ஈரேழு பருவம்
பொன்முடி துறந்து கானிடை யிராமன்
போவதோர் வரமெனப் புகன்றான் (4)

முரசொலி கேட்ட வசுணமென் புள்ளின்
மூச்சவிந் தொருவழி தேறிப்
பரதனுக் குலக மளிப்பனென் மைந்தன்
படர்வனம் புகாதளித் திடுகென்

நரசர்கோ ளிரப்ப மறுத்தலு மெய்ம்மை
யாவியிற் சிறந்ததென் றளித்துப்
பொருசிலை யிராமன் றனைத்தரு கென்னச்
சுமந்திர ளெடுந்தனி புகன்றான் (6)

மைம்முகில் கமலக் காடுபூத் தனைய
மணிநிற வண்ணன்முன் னெய்திக்
கைம்மலர்க் குவித்துச் சுமந்திர னழைப்பக்
கலினமான் றேரினி திவர்ந்து
தெம்முனைக் கடந்த சினவு வேற்காளைத்
தயரதன் மருங்குசென் றெய்தி
யெம்மையா ளுடையா யழைத்ததே னென்ன
விறைவனெஞ் சயர்ந்துசோர்ந் தனனால் (7)

கல்லும் வல்லிரும்பும் வெண்ணெயென் றுரைப்பக்
காழ்படு மனத்தகை கேசி
மல்லடு திணிதோட் பரதனுக் குலகம்
வழங்கினீ யேழிரு பருவம்
கொல்புலி வழங்குங் கானிடைத் திரியக்
கூறினா னுந்தையென் றுரைப்ப
வில்விழுங் குயர்தோட் செம்மலீ பணித்தல்
விலக்கல னெனத்தொழு தகன்றான் (8)

கோசலை யுறையுங் கோயிலு ளெய்திக்
கொற்றவன் பணியுரைத் துள்ள
மாசறத் தேற்றிச் சுமத்திரை யோடு
மன்னுழைப் போகெனக் கூறிப்
பூசல்வண் டறைதா ரிளையவ னோடும்
புரிசரம் பிரங்குதிங் குதலைத்
தேசுகண் படுக்குஞ் சீதைபின் றொடரத்
தயரதன் மருங்குசென் றடைந்தான் (9)

தயரதன் வருத்த நோக்கியுள் ளழிந்து
சுமந்திரன் றளர்வொடு மாழ்கி
யயர்வொடுங் கலுழ்ந்து கொடியகை கேசி
முகத்தினை நோக்கியீ தறைவான்
செயிரறு கடவுண் முனிவனல் லருளாற்
றிருவளர் கேகயத் தரசன்
உயிருடை யெவற்றின் பாடையு முணர்ந்தாங்
கொழுகுநா டன்னின்மற் றொருநாள் (10)

மற்றடந் தோளான் மனைவியோ டினிதின்
வைகிய மலரணைப் புறத்திற்
சிற்றெறும் பொழுங்கிற் சேறலு மரசன்
சேவடி கடக்கரி தென்ன
உற்றயல் மேவு மெறும்பு மற்றயலோ
ரெறும்புடன் வெகுண்டுரைத் திடுதல்
கொற்றவேன் மன்ன னுணர்ந்தன னகைப்பக்
கோற்றொடி நகைத்ததே னென்றாள் (11)

ஈங்கிது நுவலின் முடியுமென் னாவி
யியம்பல னென்னவு மறுத்துக்
கோங்கிள முலையாள் கூறுகென் றுரைத்து
முனிதலுங் கோவடு வேலான்
தீங்குறு முள்ளத் தரிவைதோ ஞாலத்திற்
றீதுவே றின்றென விடுத்தான்
ஆங்கவள் குலத்திற் றோன்றிய வுனக்கு
மருளுறு மோவென வறைந்தான் (12)

மழையுறழ் தடக்கைத் தயரதன் மனைவாழ்
மங்கையர் வயிறலைத் தேங்கி
யழுகுர லோதை கடையுக முடிவி
னார்கலி யுடைத்தென வொலிப்பக்

கழைகளி தறுகட் கடாக்களி றனையான்
காவலன் பணிதலைக் கொண்டு
குழைபொரு தடங்கட் கொடியொடு மிளைய
கோவொடும் வளநகர் கடந்தான் (13)

கொடிஞ்சிமான் றடந்தேர் சுமந்திரன் விடுப்பக்
கோனக ரழுதுபின் ஞெடரத்
தடந்திரைக் கரத்தா னவமணி கொழிக்குங்
கங்கையங் கரையினிற் சார்ந்து
தொடர்ந்துபின் செல்வோ ரறிவுறு வண்ணந்
துன்றிரு ளிடைமறந் தேகி
மடங்கலே றனையான் முனிவர ருறையுஞ்
*சாலையின் மகிழ்வுட னடைந்தான் (14)

அலத்தக மருட்டி வருந்துயர் காவி
னணிகொள்சி றடியணங் கோடும்
இலக்குவ னோடுஞ் செல்வுழிப் போந்த
குகனெடுந் தோழமை யெய்தி
யொலித்தடந் திரைநீர்க் கங்கையா றகன்று
பரத்துவற் கண்டவ ணொருவிச்
சிலைத்தழும் பிருந்த தடம்புயத் தண்ணல்
சித்திர கூடமெய் தினனால் (15)

கோதைவேற் றடக்கைத் தயரத னுங்குக்
கோசலை கேட்டியான் முன்னம்
ஏதமில் வேட்ட மாடுவா னெய்திக்
கங்குலி லிருடிதன் மகவைத்
தீதியல் விலங்கென் றெய்துவீழ்த் திடலுஞ்
சிறுவனன் மொழியினைக் கேட்டுக்
காதலோ டெடுத்து மற்றவன் றந்தை
கைக்கொடுத் துள்ளவா றுரைத்தேன் (16)

* சாலையின் மகிழ்வோடு மடைந்தான் (பா. பே.)

மத்தரின் மயங்கிக் கண்ணிலா முனிவ
　　னிறந்திடு மைந்தனைத் தழுவிப்
புத்திர சோகத் திறத்திநீ யென்னப்
　　புகையெழ வெனமுனிந் துரைத்துச்
சித்தமா ழாந்து பன்னியோ டெய்திச்
　　சிறுவன்வெந் தழல்புகுந் தவிந்தான்
வித்தக முனிவன் சாபமீ தென்ன
　　விளம்பின னயருமேல் வையினில் (17)

சித்திரக் கூடத் திராமனை யியது
　　செப்பிய சுமந்திரன் மொழியா
மத்திர மரசன் மார்பகம் பிளப்ப
　　விறத்தலுங் கனவுகண் டழுங்கி
முத்தவெண் கவிகைப் பரதனு மொன்னார்
　　முடைகமழ் குருதிவேற் றடக்கைச்
சத்துருக் கினனுங் கேகய மகன்று
　　தண்புன லயோத்தியி லடைந்தார் (18).

மற்றடந் திணிதோண் மைந்தர்கை கேசி
　　மலரடி வணங்கினர் நிற்ப
உற்றவை யனைத்து மாங்கவ ளுரைப்ப
　　வுருமுவீ ழரவென நடுங்கிப்
பெற்றவெங் கூற்றை முனிந்துபோ யரச
　　னடியின் வீழ்ந் தழுதுபே துறலுங்
கற்றவர் தெருட்டத் தாதையை வேள்வித்
　　தழலினிற் கடன்கழித் தனரால் (19)

கனகனு யுந்தை யளித்தவிவ் வுலகங்
　　காக்கென வசிட்டனை முதலோர்
தெளிவுற வுரைப்ப மறுத்தன னாகிச்
　　சித்ர கூடம்வந் தெய்தித்

தளையவிழ் கமலக் கண்ணனை வணங்கித்
    தந்தைவின் ணடைந்தமை சாற்ற
வுளமெலி வெய்திக் கலுழ்ந்துதன் ருறைக்
    குறுகடன் யாவையுங் கழித்தான் (20)

புரவுபூண் டுலக மளிப்பதுன் கடனிற்
    போற்றலென் கடனெனத் தொழுது
பரதன்விழ்ந் திரப்பத் தழீஇக்கொடென் வாய்மை
    பழுதுறு நீரெழு பருவம்
அரசனு யுலக மளித்திநீ யென்னப்
    பணிந்தவன் பாதுகை யிரண்டும்
எரிமணி யிமைக்கு மவுலியிற் புனைந்து
    நந்தியம் பதியிடை யிருந்தான் (21)

வேறு

சித்திர கூட நீங்கித் திசைமுக னனைய கேண்மை
யத்திரி யுறையுஞ் சாலை யடைந்தன சூயை யன்பிற்
கொத்தலர் மாலை சாந்தஞ் சானகி களிப்பக் கொண்டு
தத்துநீ ரருவிச் சாரற் றண்டகா ரணியஞ் சார்ந்தார் (22)

கழைபொரு துகுத்த முத்திற் கவையடி பெயர்ப்ப மாழ்கி
யுழையின மொதுங்குங் கானி னுறுதலு முருமுச் சீற்றத்
தழலுமிழ் குருதிப் பேழ்வாய் விராதனை யிமைபபை வெளவ
நிழலுமிழ் வாளின் வீட்டி நிலத்திடைப் புதைத்திட் டாரால் (23)

அங்கவ னெழுந்து *முன்னுள் தும்புரு வரம்பை தன்னாற்
பொங்குசீர்க் குபேர னிட்ட சாபம்போக் கினையென் றேத்தித்
தங்குதன் பதியி னேகச் சரபங்கன் றனக்கு மீளாத்
துங்கநன் முத்தி நல்கித் தொன்னெறிச் செல்லு மெல்வை (24)

---

* முன்னு னறும்புரு வரம்பை (பா. பே.)

பகலின்றேன் மெய்யிற் போர்த்துப் பாய்புலி திரியு மாபோல்
வசையறு முனிவர் வேடந் தாங்கியும் வனத்தி லுள்ள
நிசிசரர்க் கோற லென்கொ லிதியோ வென்று சீதை
வசிமுதற் படைக டாங்கல் வன்கண்மை யடுக்கு மன்றே (25)

என்னவோர் காதை யுண்டு கேட்டியெம் பெரும வென்னுத்
தன்னிரு கைகள் கூப்பிச் சானகி யுரைக்க லுற்றுன்
முன்னமோர் முனிவன் செய்த தவத்தினை யழிக்க முன்னிப்
பொன்னகர்க் கிறைவ னேர்வாள் முனிகையிற் கொடுத்துப்
போனான் (26)

மற்றது காத்தல் வேண்டி வயிரவாள் கையிற் கொண்டு
நற்றவன் கொடிகள் வன்புன்ன் மரங் குறைத் துப் பின்னர்
உற்றபல் விலங்கி யாவு மொறுத் துவாள் பிடித்த வாற்றுற்
பற்றுதீ நரகி லெய்திப் பருவர லுழந்தா னன்றே (27)

ஆதலால் வரிவில் லேந்தி யரக்கரை முனிந்து கோறல்
தீதென வுரைப்ப வையன் சீதைசொன் மகிழ்ந்து கேட்டு
மாதவர் தமக்கு முன்னம் வஞ்சின முரைத்த வாற்றுற்
பாதகர்க் கொல்லி னன்மை பயந்திடும் பழியு றுதல் (28)

அன்றியு மரச ரேகி தரிப்பதே யறமு தாகும்
மன்றலங் குழலா யென்ன வரிசிலை யிராமன் கூறித்
துன்றருந் தவத்தின் மிக்க சுதீக்கணன் வழிமுன் காட்டத்
தென்றமிழ் முனிவன் சாலை யணித்தெனச் செல்லு மேல்லை
(29)

தென்னெறி யதனின் மற்றோர் தாமரை மடுவிற் றெய்வ
நன் முழ வியம்பக் கேட்டு நண்ணுமோர் முனிவ னோடு
பன்றுமீ தென்கொ லென்ன மறைபயில் மாண்டு கண்ணன்
என்றுநன் முனிவ னிரு ளிருந்தவம் புரியு மேல்லை (30)

ஒத்தரு முனிவன் செய்யு மிருந்தவ மொழிப்பத் தெய்வக்
கூத்திய ரைவர் தம்மை வயிரவாட் குரிசி லேவ
வேய்த்தடந் தோளா ரெய்த முனியுளம் விழைந்து வாவி
நீத்தமோர் சாலை யாகத் தவத்தின னிறுத்தி யன்னோன் (31)

தீங்கரும் பனுக்குஞ் செஞ்சொற் றெரிவையர் நலனுண் டாட
வாங்கவர் சநியி னுடுமலையிம் முழக்க மென்ன
வாங்குவிற் றடக்தோ ளண்ணல் மற்றவை விரும்பிக் கேட்டு
நீங்குழி யிளவ லோடு மிராகவ னிகழ்த்த லுற்றான் (32)

வில்வலன் றுணைவ னைக வெய்யவா தாபி தன்னை
யொல்லையிற் றகர தாக்கி யொறுத்தலூன் புழுக்க லாங்குப்
புல்லிய மறையோர்க் கூட்டிப் போதுகென் றியம்ப
[வெய்யோன்
வல்லையின் முனிவன் விய வயிறுபோழ்ந் தேகு வானல் (33)

செந்தமிழ் மணக்குஞ் செய்வாய்க் குறுமுனி தனக்குத்
தீயோன்
வெந்திறற் றம்பி தன்னை யின்னணம் விருந்து செய்ய
அந்தமில் வலியோன் றன்னை யகட்டினு னறுத்த வெற்றி
மைந்துடை முனிவன் சாலை யீதென வழங்க லுற்றான் (34)

தமிழ்முனிச் சாலை யெய்தி யிறைஞ்சலுந் தவத்தின் மிக்கோன்
உமிழ்கதிர் வாளும் வில்லுந் தூணியு முதவக் கொண்டாங்(கு)
அமையுறழ் தோளி யோடு மையனு மிளைய கோவுங்
கமழலந் துறைசூழ் பஞ்ச வடியினிற் கடிது சென்றார் (35)

அவ்வுழி யெருவை மன்னன் சடாயுவந் தனுக வோடுஞ்
செவ்விசே ரிராம னோக்கி யாரைநீ செப்பு கென்ன
எவ்வெவர்த் திசையும் வென்ற தயரதன் றோழன் யானேன்
கவ்வையின் மரபின் செய்தி கேளெனக் கழற லுற்றான் (36)

ஆசறு தக்க னீன்ற வறுபது மகளிர் தம்மில்
ஏசறு மெண்மர் தம்மைக் காசிபர்க் கீந்தா னந்தப்
பாசிழை மகளிர் தம்மி லதிதிமுப் பான்முக் கோடி
தேசுறு மமரர் பெற்று டிதிதயித் தியரை யீன்றாள் (37)

தனுவயக் கிரீவற் றந்தாள் காளிகா ளிகன்றன் னோடும்
புனிதமா காகற் றநதாள் தாம்பிரை யென்னும் பூவை
செனிகிர வுஞ்சி பாசி திருதராட் டிதியி னோடுங்
கனிமொழிச் சுகியென் றேதுங் கன்னியர் தம்மைப்
பெற்றாள் (38)

பாசிபா சத்தை யீன்றாள் செனிபருந் துவண மீன்றாள்
தேசுடைக் கிரவுஞ்சி யென்பாள் கூகையைச் சிறப்பி னீன்றாள்
ஆசற வுயர்ந்த சீர்த்தித் திருதராட் டிதிங்ல் லன்ன
மேசறு கேமிப் புள்ளுக் காரன்ன மிவற்றை யீன்றாள் (39)

வேறு

சுகியென வுரைப்பா ணசையினைத் தந்தாள்
நகைதொழும் வீந்தையைத் தந்தாள்
துகளறு குரோதை வசையரி மிருகி
சுவேதைமா தங்கிசார்த் தூலி
திகழ்தரு சுரசை கத்துருச் சுரபி
பத்திர மதையுடன் சிறப்பின்
வகைபடு மிருத மந்தையை யீன்றாள்
மிருகினீள் மிருகமீன் றனளே (40)

உரைத்திடு மிருக மந்தைவெங் கரடி
சவரிமான் கவரிமா ஞுயிர்த்தாள்
நிரைத்தசீர்ப் பத்திர மதையிரா வதையை
யீன்றன ளிராவதை நிகரில்

வரைக்கிணை யயிரா வதத்தினை யின்று
ளரிக்குரங் களித்தனள் மானம்
பரித்தசார்த் தூலி மந்தியோ டழல்வாய்
பாய்புலி தன்னையின் றனளே (41)

சொற்றமா தங்கி மாதங்க முயிர்த்தாள்
சுவேதைதிக் கயத்தினைப் பெற்றாள்
மற்றைய சுரபி ரோகணி யொடுகந்
திருவியை மகிழ்ந்தினி தளித்தாள்
உற்றகந் திருவி குதிரையை யளித்தா
ளுரோகணி பசுவினைப் பெற்றாள்
பற்றுறு சுரசை நாகங்க ளீன்றாள்
கத்துரு பன்னக முயிர்த்தாள் (42)

மனுவென வுரைப்பான் முகத்தினின் மார்பிற்
றுடையினில் வழங்குறு காலிற்
புனிதமா மறையோர் வேந்தர் நல்வணிகர்
பின்னவர்த மைப்பொறை யுயிர்த்தாள்
அனலையென் றுரைப்பாள் தருக்களைப் பயந்தாள்
விநதையென் பவளரு ணனையும்
துணைவிளிற் பறக்கும் புள்ளர சினையும்
துகளற வினிதிலின் றனளால் (43)

அருணனென் றுரைப்போ ளருள்செய் சம்பாதி
தன்றொடன் சடாயுவென் றுரைக்கும்
எருவையின் வேந்தா மென்னையும் ஈன்று
ளெனமகிழ்ந் தினிதெடுத் துரைத்து
வரிசிலை யுழவ நிற்புறங் காத்தங்
கிருக்குவ மனன்றயல் வனத்தின்
விரிசிறைப் பறவை யேகலு மிராமன்
விழைவொடு மாங்கமர்ந் தனனால் (44)

### வேறு

சென்றவ னிருக்கு மேல்வைச்
    சிலைத்தழும் பிருந்த திண்டோள்
குன்றினை நோக்கி யாசை
    கூர்ந்துசூர்ப் பனகை யென்னும்
வன்றிற லரக்கி போந்து
    மானிட வுருவ மெய்தி
யின்றெனை மருவி யாவி
    தருகென விரந்து சொன்னாள் (45)

அய்யனு மசதி யாடிச்
    சினமொழி யறையு வேல்வைப்
பையர வல்குற் செவ்வாய்ச்
    சீதைபாங் கெய்த னோக்கிக்
கையினு லரக்கி வெளவ
    வினையவன் கண்டு காதும்
வெய்யவண் மூக்குங் கொய்தான்
    கரனடி வீழ்ந்து சொன்னாள் (46)

அவ்வுரை கேட்ட லோடு
    மழலெழ வுருத்துப் பொங்கித்
தெவ்வடு கரனும் விற்றா
    டணனும்வேற் றிரிசி ராவும்
வெவ்வழற் சூல மேந்தி
    விரிகடற் றனை யோடும்
எவ்வெலாத் திசையுஞ் சூழ்போந்
    திராமனை யமரி னேற்றார் (47)

ஏற்றவ ருடலம் புன்றோ
    லிறைச்சியென் பிருண் மூளை
வீற்றுவீற் றாக வீழ
    வெஞ்சிலை கல்வி காட்ட

ஆற்றிருந் தொழுகுங் கண்ணா
    ளிலங்கையி னெல்லை யெய்தி
யாற்றலங் குருதி யொள்வா
    ளிராவணற் கறியச் சொன்னாள் (48)

கேட்டலும் வெகுளி யோடு
    காமமுங் கிளர்ந்து பொங்க
வாட்டிற வரக்கர் கோமான்
    மாமனல் லிருக்கை யெய்தி
யூட்டரக் குண்ட செவ்வா
    யொண்டொடிச் சீதை காணத்
தீட்டரும் படிவ மானாய்ச்
    செல்கென மறுத்துச் சொல்வான் (49)

மறையுரு வாக முன்னர்
    வாளெயிற் றரக்கர் மற்றுங்
கிருவரோ டிராமன் முன்ன
    ரெய்தலு மவன்கை யம்பாற்
பொருவரு மென்னோ டெய்தி
    யிருவரும் பொன்றல் செய்தார்
வெருவியான் மாயை தன்னா
    லிலங்கையின் மேவி னேனால் (50)

கத்துரு மகவா னன்னக்
    கருப்பென வினதை யென்னும்
மைத்தடங் கண்ணாள் வெள்ளை
    யென்றலும் மைந்தர் செய்யும்
வித்தகச் சூழ்ச்சி தன்னால்
    வினதையைத் தாசி யாக்க
வத்தலைக் கலுழ னன்னை
    யருஞ்சிறை நீக்க வெண்ணி (51)

மேவிடு நெறியி லீராறி
யோசனை யகன்ற மேனிப்
பாவடிக் களிறு மன்னப்
பரப்புறு மாமை யொன்றுஞ்
சேவடி யுகிரி னள்ளிப்
பழுமரஞ் சேர்த லோடும்
ஆவென யாரு மார்ப்ப
வதன்பனை யொடிந்த தன்றே (52)

நூறியோ சனையி னுற்ற
பனையினை நொய்திற் கவ்விச்
சேறலு மதனிற் சேரும்
வாலகில் லியராந் தீதில்
ஆறறி முனிவர் தம்மை
மென்மேல வகற்றி விண்போய்
ஊறமு தெகுத்துத் தாயர்க்
குதவிவன் சிறையுந் தீர்த்தான் (53)

ஆங்கவன் வதிந்த வாலிற்
றீத்தலை யாற்று கின்ற
தீங்கறு தவத்திற் றீரே
னென்றலு மரக்கன் சீறி
வீங்குதோட் கரனைக் கொன்ற
தகப்பனன் விளம்பு ஞான்று
மீங்குவந் துரைத்தே னென்று
மறுத்திவை போல்வ சொன்னாய் (54)

எங்கைதன் செவியு மூக்கு
மிகலின்றி யறுத்த வெய்யோன்
மங்கையை வவ்வ மானாய்ச்
சென்றவன் மயக்கி டாயேற்

றுங்கனீள் மவுலி கொய்ல
    னென்றலுந் துனுக்க மெய்தி
யங்கவன் முன்ன மம்பொன்
    மானுரு வமைந்து சென்ருன் (55)

பொற்பினி ரேய்க்கும் புள்ளிப்
    பொறியிள மானை வெளவி
யற்பினிற் றருதி யென்ன
    விராமனுக் கமிர்தச் செவ்வாய்க்
கற்பினுக் கரசி கூறத்
    தொடர்தலுங் கடிதி னோட
விற்பழுத் துமிழிம் வெய்ய
    கணையொன்றால் வீழ்த்தி னானே (56)

வீழ்தரு பொழுதிற் சீதா
    யிலக்குவ வென்ன வீழும்
ஆழ்துயர் மொழியைக் கேட்ட
    வணியிழை யிளைய கோவை
வாழியெங் கோமான் செய்தி
    கண்டிவன் வருதி யென்னத்
தாழிருந் தடக்கை யையன்
    தளர்வொடுங் கடிதிற் போனான் (57)

இருவரு மகன்ற வற்ற
    நோக்கிய விலங்கை வேந்தன்
அருமறை பறையு முக்கோற்
    பகவனா யருகி னெய்தத்
திருவனை யாயன் வேள்வித்
    தீயினி லொளிப்பச் செந்தீ
மருவரு மாயா சீதை
    வகுத்து முன்விடுத்த தன்றே (58)

சீதையென் றிலங்கை வேந்தன்
 சில்லியந் தடந்தே ரேற்றிப்
போதலுஞ் சடாயு வெம்போர்
 புரியவெவ் வாளில் வீழ்த்தி
மூதெயி லண்ட கோள
 முகடுய ரிலங்கை யெய்தி
மாதினை யசோக நீழ
 லரக்கியர் மருங்கு வைத்தான் (59)

ஈங்கிவை நிற்க வெய்து
 மிலக்குவ னிராமன் செய்ய
பூங்கழல் வணங்கி யாங்க
 *னுற்றவை புகல லோடும்
வாங்கிய சிலையோன் சாலை
 மருவின னணங்கைக் காணு(து)
ஏங்கிவெய் துயிர்த்து மாழ்கி
 யெங்கணுந் துருவிப் போனன் (60)

அறைகழல் வீர ரெய்து
 நெறியினி லமரர் கோமான்
சிறையரி வரையின் வீழ்ந்த
 சடாயுவை திகைத்து நோக்கிப்
பெறலருங் கற்பிற் சீதைக்
 குற்றவை பேசு மேல்வை
மறிதலு மவற்குச் செந்தீக்
 கடன்கழித் தகன்றூர் மன்னே (61)

நொச்சிமென் போது வின்னு
 மிருளினுண் புனற்குச் செல்லும்
†அச்சனாங் கையில்வில் லேந்து
 மிலக்குவ னோர்மு கிப்பேர்

---

* உற்றவை பேசமேல்லை (பா. பே.)
† அச்சனங் கயில்வில் லேந்த (பா. பே.)

நச்செயிற் றரக்கி மூக்கு
நாக்கொடுங் கொய்த பின்னர்
கச்சமால் களிறு போல்வார்
*கவந்தன்வாழ் நகரம் புக்கார் (62)

மையல்மால் யானை யாதி
விலங்கெலாம் வயிற்றி னூடு
கையரிக் கொண்டு பெய்யுங்
கவந்தனைச் செகுப்ப வன்னோன்
மொய்கழ லியக்க னாகி
முறையிரிற் பணிந்து போற்றி
யையன்மீர் சவுரி தன்பா
லடைகென வடைந்தா ரன்றே (63)

அருந்தவத் துணங்கு மேனிச்
சவரியு மடகு மூலம்
விருந்தளித் தண்ணல் கேட்டி
விரிதலை மதங்க வெற்பிற்
பொருந்தினன் சுக்கி ரீவ
னவனொடு நண்பு பூண்டு
திருந்தலர்ச் செகுத்தி யென்ன
வுரைத்துநன் முத்தி சேர்ந்தாள் (64)

வேறு

மைய கார்நிற வண்ணனு மிளவலு மணிதாழ்
ஐய தண்புனற் பம்பைமா நதிமருங் கனுமன்
பொய்யில் வாய்மைகேட் டளவளா யவனொடும் போந்து
செய்ய தாமரை நாயகன் மதலைபாற் சேர்ந்தார் (65)

தணிப்ப ருந்திறற் சுக்கிரீ பனைத்தழல் சான்றாய்ப்
பிணித்த வன்பினிற் பெட்பொடுந் தோழமை கொள்ள
வணக்கு வெஞ்சிலை கொடுங்கணை வாலிமார் புருவப்
பணித்தி யென்றலும் பங்கயக் கண்ணனேர்ந் தனனால் (66)

* கவந்தன் வாழ் கானம் புக்கார் (பா. பே.)

வாலி நிண்டிற னுரைக்குவன் மகிழ்ந்துகேட் கென்னச்
சீல மெய்திய சுக்கிரீ வன்றெளிந் துரைப்பான்
ஆல மென்னமா யாவியென் றுரைத்திடு மவுணன்
கால னன்னவோர் வாலியைக் கடுஞ்சமர்க் கழைத்தான் (67)

ஆங்க வன்றனைத் தொடர்ந்துபோய்ப் பாதலத் தணைந்து
விங்கு தோளுடை யவுணனை தாருயிர் விட்டி
யிங்கு ருமையி னிறந்தன னெனமனத் தெண்ணி
நீங்கு பாதல மடைத்தியா னெடுநகர் புகுந்தேன் (68)

வாலி யாருயிர் மறிந்தன னென்றெனக் கமைச்சர்
கோல நீண்முடி சூட்டலுங் கொடுந்தொழில் வாலி
காலி னுற்பில மடைத்திடுங் கல்லினை யுடைத்தெதன்
பால டைந்தியா னிரப்பவும் பருவரல் வினைத்தான் (69)

*மந்தி ரத்தினைக் கடலினை மற்றெருழிற் கழைத்துத்
துந்து மிப்பெய ரரக்கன தாருயிர் தொலையா
வுந்தி மேலெடுத் தெறிதலு மதங்கருற் றுறையும்
இந்த மாதவச் சாலையி னெய்தி வீழ்ந் ததுவே (70)

மதங்க மாமுனி யாங்கது நோக்கியவ் வாலி
கதங்கொ டிங்குறிற் கதிர்முடித் தலையொரு நூறு
விதம்ப டத்தனி தெறிக்கென வெகுண்டுரைத் தனனுல்
அதிர்ந்து வாலியிங் கணைவுறு னெனவிவ ணமர்ந்தேன் (71)

துந்து மிப்பெய ரரக்கன தென்பிது துனைவின்
அந்த ரத்தெடுத் தெறிகென விரவிசே யறைய
மந்தி ரக்கிரி யனையதை மணிவிரற் றலையால்
உந்த வையிரண் டியோசனை யொல்லையே கியதே (72)

காழ்கொண் டோங்கியெண் டிசையினுங் கவடுவிட் டுயர்ந்த
வேழ் மராமர முருவிட வெய்கென விராமன்
ரூழ்த டக்கையி னுற்றலங் தடஞ்சிலை குனித்துப்
பாழி மாமர முருவிட வோர்கணை பணித்தான் (73)

* மந்திரத்தினுற் கடலினை மதிற் றமர்க் கழைத்த (பா, பே.)

வில்வி ழுங்குதோ ளையன தாற்றலை வியந்து
கொல்சி னத்தவா லியைக்கதிர் சேயறை கூவ
மல்வி னுலவன் னிவன்வலி தொலைத்தலு மாமரந்(து)
ஒல்லை மீண்டஃ துரைத்தலு மிராகவ னுரைப்பான் (74)

வேறுகண்டில னுங்களை யென்றுவில் வீரன்
ஊறு தேமலர்ப் பிணையலோன் றணிந்தம ருடற்றச்
சேறி யென்றலும் வாலியைச் சென்றுபோர்க் கழைப்ப
வேறி ரண்டெதிர்ந் தமர்புரிந் தாலென வேற்றூர் (75)

ஏற்ற வெஞ்சமர் புரிதலு மிராமன்வில் வணக்கி
பாற்றி னஞ்சுழன் றுன்னலர் நிணப்புலால் பருகி
யூற்ற ருந்துநெய்த் தோருமிழ் பகழியொன் றுகைப்பக்
கூற்று மஞ்சுறும் வாலிதன் னுயிர்குடித் ததுவே (76)

பருதி வானவன் மைந்தனவ் வுலகடிப் படுத்துப்
புரவு பூண்டிடப் பொழிகதிர் மணிமுடி புனைந்து
கருவி வான்பொழி காலமாங் கொழிந்திடு காறு
மருவி தூங்குயர் பிரச்சிர வண்மலை யமர்ந்தார் (77)

சிறந்த மல்லலந் திருவினு லிரவிசேய் நன்மை
மறந்த னன்கொலென் றிளவலை விடுத்தலும் வணங்கி
யறங்கி டந்தொளிர் நெஞ்சினன் கிட்கிந்தை யடைந்தாங்
குறைந்த வெய்யவன் மைந்தனுக் கியாவையு முரைத்தான்
(78)

இரவி காதல னிளவலோ டிராமன்மாட் டெய்தி
விரைவின் வானரத் தலைவரைக் குணக்கினு மேற்கும்
பரவு முத்தர திசையினும் பனிமொழி யணங்கைத்
துருவி யொல்லையின் மீள்கெனத் துணைவிளின் விடுத்தான்(79)

அங்க தன்றிறற் சாம்பவன் நீலனென் றனையுந்
துங்க வெம்படைத் தலைவர்சூழ் வரச்சுட ராழி
மங்குல் வார்குழன் மடவரற் களிக்கென வழங்கிச்
சிங்க வேறென வநுமனைத் தென்றிசை விடுத்தான் (80)

நெடிப டுங்கொடுங் கானமும் வரைகளு நீங்கிப்
புடைகொள் வான்பில மருங்கினி லெய்தலும் போதந்
திடர்வி ளைத்திடு மவுணனை யிராவண னென்ன
வடல்வி ளைத்தவ னுருயி ரங்கதன் செகுத்தான் (81)

அங்க தன்முந்த லாகிய வானரத் தலைவர்
சிங்க வேறெனப் பிலத்துவா ரத்திடைச் சென்று
கங்குன் மேய்ந்தொளிர் கதிர்மணிக் குப்பைகால் விரிக்கும்
துங்க மாநக ரிட த்திலோர் தோகையைக் கண்டார் (82)

கண்ட வானர ருளமிறும் பூதுறக் கருதி
வண்டு பாட்டயர் வணரிருங் கூந்தலி யாரை
யண்ட ரூர்நிகர் நகரம்யார் *நகரரும் பவளம்
விண்டு கூறென மின்கொடி மென்மெல மிழற்றும் (83)

மயனெ னுந்திற லவுணர்கோன் வரத்தினுன் முன்னம்
வெயில்செய் பொன்னினிற் செய்திடும் விழுநக ரீது
பயிலு மன்னவன் விசும்பிடைப் பனிமதி முகத்துக்
குயிலை வெளவிய கோனக ரதனில்விற் றிருந்தான் (84)

அச்ச ணங்குவேல் மயனுடை யாருயிர் மடிய
வச்சி ரப்படை யெறிந்துவா னவற்கிறை யகலச்
செச்சை யங்குழற் றிருநிக ரேமைக்கிந் நகரம்
பச்சை மாலுந்தி பூத்தவன் பரிவுட னளித்தான் (85)

* நகரம் யாநகர் (பா. பே.)

தாமச் செப்பெனப் பணைத்துயர் தாளமென் கொங்கை
யேமை யென்பவ ளிங்கக ரென்வயி னளித்துக்
காமர் வானுல கடைந்தன ளென்றலுங் கவிகள்
தாம வோதியாஞ் செங்கெறி காட்டெனத் தொழுதே (86)

அஞ்ச னப்புயல் தூதர்நீர் பிலமகன் றேகச்
செஞ்ச வேவிழி புதைக்கெனச் செங்கையாற் புதைப்ப
*விஞ்சை போன்றவ ளுரைத்தலும் வெம்பில மகன்று
மஞ்சு கண்படு மயேந்திர வரையின்வந் தடைந்தார் (87)

ஆங்க ணெய்திய வங்கதன் முதலிய வீரர்
கோங்க மென்முலைக் கொம்பினைக் கண்டில மின்றி
வீங்கு போரிடைச் சடாயுவைப் போலவீய்ந் திலமென்
றேங்கு மாற்றங்கேட் டிருந்தசம் பாதியி துரைப்பான் (88)

எம்பி வீந்தமை கூறுமின் னென்னலுங் கவிகள்
நம்பி ராகவ னன்மனைக் கிழத்தியை யரக்கன்
வெம்பு காட்டிடை வவ்வலுஞ் சடாயுமுன் விலக்கத்
தும்பை மோலியான் சுடர்மணி வாளினுற் றுணித்தான் (89)

மாழை நோக்கியைக் கொண்டவ னேகலும் வருந்திப்
பாழி யம்புயத் திராகவன் பருதிசே யோடுந்
தோழ மைக்கொடு வாலியைத் தொலைத்தர சளிப்ப
வேழை போமிட நாடுமென் றெங்களை விடுத்தான் (90)

என்ன வோதலு மெருவைவேந் துளங்கசிந் துருகி
முன்னம் யானுமென் றம்பியு மொய்கதி ருலகின்
மன்னு வான்பறந் திடுதலும் வருந்துமென் றம்பி
தன்னை யென்னுடைச் சிறையினுற் றயாவொடுங் காத்தேன் (91)

* விஞ்சை யொன் றவள் (பா. பே.)

வெய்ய வன்கொடுங் கதிரினல் மென்சிறை கருகி
மைய லோடுமிம் மயேந்திர வரையினில் வீழ்ந்து
பையு ளுற்றன னெம்பியெவ் வுழிப்படர்ந் தனனே
வையன் மீரஃ தறிந்தில விவ்வுழி யமர்ந்தேன் (92)

யான்ப யந்தருள் சுபாரிச னுனெனக் களிப்பான்
வான்ப படர்ந்துயர் மயேந்திர வரையின் மேவுதலும்
ஊன்ப டர்ந்தவே லிராவண னேரணங் கோடு
கான்ப டர்ந்தன னேகலுங் கனன்றுபோய்ப் பிடித்தான் (93)

பொருந்த வெளவலு மிராவணன் புரந்தருள் கென்ன
வருந்திக் கூறலு விடுத்திவன் வந்தவை புகல
திருந்து மாதவர் சீதையுந் தனளெனச் செப்பல்
பரிந்து கேட்டனன் பார்வைக்குந் தோன்றின னென்ருன் (94)

முன்னி சாசரர் முனிவர விராகவன் றாதர்
மன்னி நின்சிறை மாண்புடன் முளைத்திடு மென்னப்
பன்னி ஞனெனப் பகர்தலும் பண்டுபோற் சிறகர்
துன்னி நன்கினின் முளைத்திட ராமனைத் துதித்தான் (95)

சீதை யாண்டுறை யிலங்கையுட் சேர்ந்தன னென்ன
வோதி விந்தவச் சடாயுவுக் கிருகைநீ ருகுத்துக்
காதல் கூர்தரும் வானரர்க் கின்னுரை கழறி
யேத மற்றிடு மெருவைவேந் தேகின னன்றே (96)

துன்று வார்சிறை யெருவைவேந் தேகலுந் துவன்றி
நின்று வீரரு ளிரைந்தபே ருவகைய ராகி
வென்றி மாருதத் திரைக்கடல் கடக்கென விளம்பக்
குன்றின் மீதிவர் கோட்புலிப் போத்தெனவி வர்ந்தான் (9

வேறு

அங்கண் வானுல கனைவு
    மயேந்திர வரையினின் றனுமன்
திங்க ணின்முடி யுரிஞ்சச்
    செல்வழி மகபதி யொறுப்ப
மங்குல் சேர்வழி நீருண்
    மறைந்தமைந் நாகமென் னுழையிற்
றங்கி யேகென வதனைத்
    தடக்கையின் றடவந்து போனான் (98)

திரைசெய் தெண்கடன் முகட்டிற்
    கலுழனிற் செல்லுமா ருதியைச்
சுரசை யென்பவள் தடுப்பத்
    தன்னுடைப் பேருடல் சுருக்கி
விரைவின் வாய்வழி போகி
    மெய்ங்கிழும் வல்வுபே ரரக்கி
குருதி வாயிடைப் புகுந்து
    குடர்பறித் திலங்கையிற் குதித்தான் (99)

கன்னி மூதெயி லுடுத்த
    கடிநக ரிலங்கைகாத் தோம்பு
மின்னு நக்கவா ளெயிற்ற
    வணங்கின்வெங் கொடிற்றினிற் றுக்கி
அன்ன மாநகர் முழுது
    மங்கையிற் கனியென நோக்கி
வன்ன மேகலை யணங்கைக்
    காண்கில னுய்வருந் துற்றான் (100)

திங்க ணீள்வடிம் பிடறு
    சிணைமல ரசோகனன் னிழலின்
மங்கு லூரடொளி யெறிக்கு
    மாபூத்தமென்கொடி போல்

வெங்கண் வாளெயிற் றகல்வா
யரக்கியர் மருங்குவீற் றிருக்கு
நங்கை வாண்முக நோக்கி
நன்னுதல் சீதையென் றுணர்ந்தான் (101)

அன்ன காலையி னெய்தி
யரக்கர்கோ னிரப்பவு மறுத்த
கன்னி மாதவக் கொழுந்தின்
கற்புடை மாட்சிமை நோக்கி
துன்னு கங்குலின் யாருந்
துயில்வுழி யாழிகைக் கொடுத்துப்
பொன்னின் வார்சிலைக் குருசில்
புகன்றவை யாவையும் புகன்று (102)

ஆங்கு நின்றெழுந் தனுமன்
றடகைப் பசுந்தளி ரீன்ற
தேங்கொ ளொண்மலர் பொதுளுஞ்
சோலைகள் யாவையுஞ் சிதைப்ப
வீங்கு தோளினர் வில்லர்
கிங்கரர் வெஞ்சம ருடற்ற
வோங்க லன்னதோள் வலியா
லன்னவ ராருயி ரொறுத்தான் (103)

கயிலை மால்வரை யெடுத்தோன்
பணித்தலுங் கடற்படைத் தலைவர்
அயிலெ யிற்றவா ளரக்க
*ரைவரு மமைச்சர்தம் மைந்தர்
வெயிலெ றிக்கும்வா ளுழவ
ரெழுவரும் வெஞ்சம ருடற்ற
உயிர்கு டித்தவர் புண்ணீ
ரொழுகிட வுடல்பிழிந் தெறிந்தான் (104)

* ஐவரு மமைச்சர்தங் குமரர் (பா. பே.)

மீட்டும் வாளெயிற் றரக்கன்
 விடுத்தருள் சம்புமா லியைத்தன்
றேட்டு னைப்பெரு வலியாற்
 றொலைத்தலு மிலங்கையர் பெருமான்
பூட்டு வெஞ்சிலைக் குமர
 னக்கனைப் போர்க்கெதிர் விடுப்பச்
சேட்டி ளங்களி றனையா
 னழலெழ நிலத்தொடுந் தேய்த்தான் (105)

வயிர வாட்படை யுழவன்
 *மறங்கெட வரிசிலை குனிக்கப்
புயனி றத்தலெங் தழற்கண்
 ணிராவணி யமர்க்கெதிர் புகுந்து
வெயிலெ றித்தழல் கலிழ்க்கும்
 விரிஞ்சன்வெம் படையினில் வீக்கி
யயிலெ யிற்றவா ளரக்கன்
 முன்னரவ் வநுமனை யுய்த்தான் (106)

ஆரை நீயெனமு னிவுற்
 றரக்கரைக் கிளையொடு மறுப்பான்
வீர வெஞ்சின முரைத்த
 வில்லிதன் றாதன்யா னின்னை
சோர்வில் கற்புடை யணங்கை
 விடாயெனி லுன்னுடல் துணியா
விரு ளுன்கவை பேய்க்கும்
 வழங்குமவ் விராகவன் பகழி (107)

என்று மாருதி யுரைப்ப
 விராவண னெரிதினிற் குரங்கைக்
கொன்று நீக்குமி னெனலும்
 வீடணன் றாதரைக் கோறல்

---

* மறங்கொட வரிசிலை குனித்த (பா. பே.)

வென்றி யின்றென விலக்க
வாலினில் வெண்டுகில் சுற்றி
மன்ற வெங்கனல் கொளுத்தி
வல்லையின் விடுக்கென வுரைத்தான் (108)

அன்ன வாறுவெவ் வரக்கர்
வாலிடை யாரழல் கொளுத்தக்
கன்னி மூதெயி லுடுத்த
கடிநக ரிலங்கைதீ மூட்டி
யன்ன மேகலை யணங்கைப்
பணிந்துசூ ளாமணி வாங்கிப்
பின்னர் வெண்டிரைக் கடருய்
மகேந்திரத் தடைந்தனன் பெரியோன் (109)

வாலி மைந்தனைத் தொழுது
மாதினைக் கண்டமை விளம்பி
பீலி மாமயி லகவு
மதுவன மழித்தனன் பெயர்ந்து
நீல மால்வரை யனைய
நெடியவன் சேவடி வணங்கிச்
சாலி மீன்பெருங் கற்பிற்
றையலைக் கண்டமை பகர்ந்தான் (110)

பகர்ந்த மாருதி பின்னும்
பரிவொடும் வேறிருந் தேந்தி
முகிழ்ந்து வீங்கிள முலையாள்
வழங்கிய மொய்சுடர் மணியைப்
புகழ்ந்து நல்கலு வாங்கிப்
பொருப்புறழ் தடம்புயம் பணைப்ப
மகிழ்ந்து கண்மணி குளிர்ப்ப
நோக்கினன் வரிசிலை யிராமன் (111)

ஒற்றை யாழியந் தடந்தே
 ரூர்பவன் மைந்தன்மு னடப்பக்
கொற்ற வெஞ்சிலைக் குரிசில்
 குறுக லாருயிர் குடிக்கும்
வெற்றி வாளுடை யிளவல்
 பின்வர விரைவினிற் போதந்
தெற்று தெண்டிரைச் சுருட்டு
 மிரங்குநீர்க கடற்கரை யிறுத்தான் (112)

இருபத்திரண்டாவது
இராமன் வனம் புகுந்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 979

---

## இருபத்து மூன்ருவது
## இராவண வதை யத்தியாயம்
## (இராவணனைக் கொன்ற வத்தியாம்)



அள்ளற் கருஞ்சேற் றிடைப் பெடையோ
 டலவ னுடுஞ் சிறுகுழியைக்
கள்வா யுயிர்க்கு நறும்புன்னைத் தாது
 தூர்க்குங் கடற்கரை வாய்
வள்ளல் கடலந் தானையொடு
 மிறுத்தல் கேட்டு வல்லரக்கன்
தெள்ளு மறைநூற் றுறைபோய
 தேர்ச்சித் துணைவ ரொடுந்தேர்ந்தான் (1)

அன்ன காலை விடணன்போ
 ரரக்கர் கோமான் முகநோக்கிக்
கன்னிக் கற்பி னுருவ மைந்த
 கமலத் தடங்கட் சானகியை

யின்னே விடுத்தல் கெறியெனலு
　　மிலங்கை வேந்தன் முனிந்துரைப்ப
மின்னு நகுவேல் விடணன்போந்
　　திராம னுழையின் மேவினன் (2)

கல்லுங் கருங்கட் பெண்ணாக
　　நடந்த கமலக் கழற்காலோன்
மல்லார் தடந்தோள் விடணனை
　　மதிநாற் றுறைபோய் மாருதிதன்
சொல்லாற் றேறி யிலங்கைநகர்க்
　　கிறைநீ யென்னச் சுடர்பரப்பி
எல்லோன் போல விருடுருவு
　　மெரிமா மவுலி சூட்டினன் (3)

உரவுத் திரைநீர்க் கடலடைப்பான்
　　வருணர்ப் பழிச்சி யுயர்கரையின்
விரியுந் தருப்ப சயனத்தின்
　　மேவி யோரேழ் நாளேற்ப
வருணன் போதந் திலனாக
　　வெகுண்டு வரிவெஞ் சிலையினெடும்
புருவச் சிலைகால் குனிந்திடலும்
　　புகைந்த வோரேழ் புணரியுமே (4)

கரைகொன் றிரங்கு கடல்புகைய
　　வருணன் வெருவிக் காகுத்தன்
விரைமென் கமலத் தாட்பணிந்து
　　வேலை யடைப்பா னுரைத்தேகச்
செருவேக் கறவுற் றுயர்திணிதோட்
　　செம்ம னளனு லணைகட்டிப்
பருதி மான்றே ரெதிர்தடுக்கும்
　　சுவேத வரையின் பாலிறுத்தான் (5)

இறுத்த தானை யிடைப்புகுந்த
சுகசா ரணரை யெதிர்பற்றிச்
செறுத்த கழற்கால் வீடணன்போய்ச்
செங்கட் கரியோன் முன்னுய்ப்ப
வொறுத்த நீது விடுத்தியென
விடுப்ப வொற்றர் பணிந்தேகிக்
கறுத்த நெஞ்சி லிலங்கையர்கோ
னறிய வனைத்துங் கட்டுரைத்தான் (6)

கரிய திரைவா ருதிசிவப்பக்
கடைக்கண் சிவந்தோன் றனைக்காண்பான்
றிருகு சினத்த வாளரக்கன்
செம்பொன் மணிக்கோ புரமிவர
வரைகொன் றுயர்ந்த மணித்தடந்தோ
ளரக்கற் காண்பான் மணிவண்ணன்
இரவி தடந்தேர்ச் செலவகற்றுஞ்
சுவேத வரையின் மீதிவர்ந்தான் (7)

வெள்ளிப் பொருப்பை யெடுத்தபுய
ளிவனு மென்ன வீடணன்போர்
வள்ளற் குரைத்தல் கேட்டிடலு
மணிக்கோ புரத்தின் மிசைதாவிக்
கள்ளக் கொடிய வரக்கனெடுஞ்
செருவேற் றவன்றன் கதிர்முடிகள்
தள்ளிச் சயங்கொண் டிராமனடி
தாழ்ந்தா னிரவி காதலனே (8)

விலங்கற் றிணிதோ ளங்கதனை
யிராமன் றூது விடுப்பவவன்
இலங்கை நகரி னிடையெய்தி
யிகல்வா ளரக்கன் முன்னுறலும்

அலங்கல் வடிவா ளிராவணனு
 மாரை நீகோலென வுன்றன்
புலங்கடேய வாலநியிற் பிணித்தோன்
 புதல்வ னெனப் புகன்றான் (9)

என்ற வோடு மிலங்கைகக
 ரெரித்த கவியான் டுளதென்ன
உன்றன் சிறுவன் விக்கவகப்
 பட்டவிழிவி னுளங் கொதித்துக்
கன்றி யுயர்வா னரத்தலைவர்
 கடியக் கானத் திடையொளித்துப்
பொன்றி யதுவோ வுய்ந்ததோ
 வறியே னந்தப் புன்குரங்கே (10)

பொற்பிற் காசை வீடுத்தியெனப்
 புகல மறுத்திப் புன்குரங்கை
மற்போ ரரக்கர் கோறிரென
 வந்தோ ராவி யறமாய்த்து
வெற்பார் தடந்தோ ளங்கதனு
 மிராம னுழையின் விரைவினிற்போய்க்
கற்பா டழித்தப் புயத்தரக்கன்
 செய்தி யனைத்துங் கட்டுரைத்தான் (11)

வேறு

செங்கட் புலிப்போத் தனவங் கதன்செப்பு மேல்வை
கங்கைக் கிறைவன் றனைவிற்கடற் றானை சூழ
வெங்கட் கொடிபோர் மிடைகின்ற விலங்கை மூதூர்
மங்குற் புறம்போ குயரிஞ்சி வளைந்து கொண்டார் (12)

கரைகொன் றிரங்கு கடலிற் கலிவெள்ள மெய்திப்
புரிசைப் புறத்தி லிறுத்தார்க் கின்ற பூசல்கேட்டு
வரைகொண்ட திண்டோ ளரக்கன் றிறல்மள்ள ரியாரும்
பொருவெஞ் சிலைக்கைப் பெரியோ ரெடும்போ ரினேற்றார் (13)

கம்பார் களிற்றுப் பிச்சங்கன் கனன்று செல்லச்
சம்பாதி வெற்பொன் றெறிந்தானவன் றன்னை மாய்த்தான்
வம்பார் மலர்த்தா ருவின்மாருதி போத லோடும்
வெம்பா வுயிர்போ கிவிழுந்தனன் சம்பு மாலி (14)

வெஞ் வேற்பி ரதபனன் றன்னுயிர் வீய வெம்போர்
ஒன்னார் வணங்கு நளனேர்கதை கொண்டு மாய்த்தான்
கன்னுடு திண்டோட் டபனன்றனைக் காய்ந்து கேசன்
பொன்னுட் டுமாதர் நலங்கூட்டு ணப்போக்கி னானே (15)

வின்னுங்க லிங்கு திணிதோ ளுடைமித் திராக்கன்
றன்னங்கம் விழ விறல்வி டணன்றண்டின் மாய்த்தான்
மன்னற் கிளையோன் விருப் பாக்கனை வாளி யொன்றாற்
றென்னம் புலத்தோர் விருந்தேற்பச் செலுத்தி னானே (16)

வெயில்கான் றிருள்சிய்த் தெழுவெங்கதிர்ச் செல்வன் மைந்தன்
அயில்வேற் பிரகத் தனைவெங்களத் தாவியுண்டான்
றுயிலாத வென்றி மயிந்தன்பொரு தோம ரத்தால்
வயவெஞ் சிலைவச் சிரமுட்டியை வாகைகொண்டான் (17)

அழல்வெம் பகுவாய்த் திறலக்கினி கேது வோங்கும்
எழுவொன் றுதிண்டோள் வலிரச்சமி கேதுவொன்னார்
தொழுமெச் சகோபன விராழிச் சுதக்க னென்றுங்
கழிவெஞ் சினத்தா ருயிருண்டனன் கங்கை நாடன் (18)

சுடுவெஞ் சினத்த வயமீளி துமிந்த னென்போன்
அடல்கூர் சனிப்பிர பன்றனை தாவி கொண்டான்
கடலுஞ் சுவற்றுங் கனல்வெங்கட்டு சேனன் வெய்ய
மீடல்வித் துன்மாலி யுயிர்விண்ணகத் தேற்றி னானே (19)

இவ்வா றிராம னெரிதும்பி யிலங்கு வைவேல்
வெவ்வா யரக்கர் தமைவிற்கொடு நூழி லாட்டும்
அவ்வே லைதன்னிற் றிரைவேலையி னாழி வெய்யோன்
செவ்வான் களம்போற் குடபாலுறச் சென்றுசேர்ந்தான் (20)

கங்குற் பொழுதி னிருதர்க்கிறை காதன் மைந்தன்
வெங்கைச் சிலையின் கணைமாரி விலக்கி யன்னோன்
துங்கக் கொடிஞ்சிற் றடந்தேர் துகளாக வீசிச்
சிங்கக் கொடும்போத் தெனவங்கதன் சீறி யார்த்தான் (21)

மான்றே ரழிந்த திறலிந்திர சித்து வானின்
மீன்றோய் படலத்தின் மறைந்து வெகுண்டு நோக்கிச்
சான்றோர் புகழுந் தனிவிற்கைத் தலைவர் தம்மேல்
ஊன்றோய்னை பகுவா யரவக்கணை யுந்திப் பார்த்தான் (22)

செங்கட் பனைக்கைக் கொலைவேழஞ் சிலம்பி நூலிற்
றங்கிச் சிமிழ்ப்புண்டு கிடந்தென்னத் தம்பி யோடும்
பொங்குந் தழல்வாய்ப் புயங்கக் கணைதோள் பிணிப்ப
வெங்கட் களத்திற் கிடந்தானிகல் வென்றி வீரன் (23)

வேறு

செய்யதா மரைக்கணான் செய்தி நோக்கிய
வெய்யவன் காதலன் வெகுளி மீக்கொள
ஐயிரு தலைவர்போ*யரக்கன் மைந்தனைக்
கையினிற் கவர்கெனக் கடிதிற் றாண்டினான் (24)

*அரக்கதன் மைந்தனை (பா. பே.)

தூண்டிய மாருதி முதல தூயவர்
தேண்டினர் வானிடைச் செல்ல வெய்யவன்
காண்டலுங் கணைகளால் விழ்த்தித் தாதைபால்
மீண்டனன் புகுந்தமை விளம்பி னனரோ (25)

தாதையு மைந்தனைத் தழுவி யொற்றராற்
சீதையைக் கொணர்ந்தவர் செய்தி காட்டென
வோதலும் புட்பகத் தேற்றி யொல்லைபோய்ப்
போதரி நெடுங்கணாள்*புலம்பக் காட்டினன் (26)

அரிறப வுணர்ந்தன னழுங்க லியெனத்
திரிசடை மனங்கொளத் தெருட்டத் தேறிய
புரிகுழ லணங்கினைக் காக்கும் புன்மையோர்
மருமலர்ச் சோலையிற் சிறைவைத் தாரரோ (27)

ஒளியிழந் திலர்முக முயிருண் டாமெனத்
தெளிவொடும் வீடணன் செப்பு மேல்வையிற்
களியொடுந் தடஞ்சிறைக் கலுழ னெய்தினன்
றுனியெயிற் றரவுதன் றொடர்ச்சி விட்டதே (28)

தாள்வரை முடிமுதற் றழும்பு தீர்ந்துயர்
கோள்விடு மதியெனக் குமர ருய்ந்தெழ
நீளிருஞ் சிறையினு லிவி யேகினன்
றேள்வலி யாலயிழ் தெடுத்த தோன்றலே (29)

முருகுறழ் செவ்வியோர் குனித்த மொய்ம்புடை
வரிசிலை நாணொலி மடித்த வாயுடைப்
பருதிசேய் முதலிய படைஞ ரார்ப்பொலி
யுருமென விராவணன் செவியி னுற்றவே (30)

*புலம்பக் காட்டினன் (பா. பே.)

கேட்டலு மிராவணன் கிளர்ந்த தானைமேற்
பூட்டுவிற் புகைநிறக் கண்ணன் போகென
வாட்டிற லொடுஞ்செரு மலைய மாருதி
தாட்டுணை பிடித்தனன் றரையி னென்றினான் (31)

கச்சையம் புகர்முகக் களிநல் யானைபோல்
வச்சிரத் தெயிற்றவன் மலைய வாலிசேய்
நச்சுவா ளவன்கையிற் பறித்து நாண்மலர்ச்
செச்சைதாழ் முடித்தலைச்*சிதற விசினான் (32)

மாருதிக் ககம்பன னுடைந்து வான்றவழ்
கார்நிறத் திராவணற் குரைக்குங் காலையிற்
பார்புதைத் தெழுமிருள் பருகிப் பாய்திரை
யார்கலி யகடுகிண் டருக்கன் றோன்றினான் (33)

எரிகவிழ்த் திணைவிழி புகைய வேற்றெதிர்
வருபிர கத்தனைக் கீழை வாயிலிற்
குருதிவாய் வழியுகக் குத்தி வீழ்த்தினான்
நிருதர்வெங் கூற்றெனத் திரியு நீலனே (34)

அகம்பனன் றிரிசிராப் பசாச னுடல்வேல்
நிகும்பனொள் வாளதி காய னிள்கும்பன்
நகுங்கதிர் வேலிரா வணிக ராந்தகன்
றிகழ்ந்தவேல் மகோதரன் தேவ ராந்தகன் (35)

ஈங்கிவர் முதலிய தலைவ ரெண்ணிலர்
வாங்கிய வில்லினர் மடித்த வாயினர்
வீங்கிய தோளினர் வெகுண்ட நெஞ்சினர்
பாங்கினி லளப்பரும் படையொ டேகவே (36)

*சிதற வெட்டினான் (பா. பே.)

மாற்றலர் வயிறெரி தவழ்ந்து மாழ்குறக்
கூற்றமுங் கண்புதைத் தஞ்சக் கொல்சினத்
தேற்றுரி முரசின மிடியி னார்ப்பெழ
வாற்றல்சா லிராவண னமரி னெய்தினன் (37)

கொய்யுளைச் கவற்பரி கோடி பூட்டிய
வையமூர்ந் தடுகணை மழைபொ ழிந்திடும்
வெய்யனைக் காண்டலும் வெகுண்டு மாருதி
யெய்யெனு மளவையயி னெதிர்ந்து கூறுவான் (38)

வேறு

கருந்தடங் கண்ணி பங்கன்வாழ் கயிலை
யெடுத்தநின் புயவலி காண்பான்
பொருந்தின னெனது மார்பிடை யொருகாற்
குத்தென நின்றுபோ ரிரப்ப
விரைந்தெனை முன்னர்க்*குத்துகென் றரக்கன்
வெற்புறழ் மார்பெதிர் கொடுப்ப
விருந்தடங் கிரியி னசனிவீழ்ந் தென்ன
குத்தின னெறுழ்வலி யநுமன் (39)

எறுழ்வலி தடக்தோண் மாருதி புடைப்ப
விழிபெருங் குருதி கான்றுழுக
வறிவழிந் தொல்லை யுணர்வுவந் தெய்தி
யாற்றலங் கவியினை வியப்பக்
கறைகெழு வேலோய் நின்முறை யென்மேற்
குத்தெனக் கல்செய்தோ ணிமிர்த்துக்
குறுகினின் றண்ட கோளகை வெடிப்ப
வனுமன்மேற் குத்தினின் றார்த்தான் (40)

வாய்விழி குருதி பொழிதர வனுமன்
மண்ணிடை மயங்கிவீழ்ந் தயரப்
பாய்புலிப் போத்தின் அமர்க்கெதிர் புகுந்த
நீலன்மேற் பரிகொடேர் கடவிக்

*விருந்திலை முன்னர் (பா. பே.)

காய்கனற் பகழி யொன்றினல் விழ்த்திக்
கவிக்குலத் தலைவரைத் துரந்து
சேயுறம் கொற்றத் திலக்குவன் றடந்தோட்
சிலைத்தொழில் வியந்தெதிர் புகுந்தான் (41)

அல்லியங் கமலக் கடவுளே யாக
வஞ்சன வண்ணனே யாகக்
கொல்சின வடலேற் றண்ணலே யாகக்
குறுகலர்க் கடந்தயா ளுக
வில்லின லிவனை வெலற்கரி தென்ன
வெண்ணிணச் சேற்றெருடுங் குருதி
பில்குநெட் டிலைவே லெறிந்துவார் கழற்கா
லிலக்குவன் மார்பகம் பிளந்தான் (42)

குருதிவேல் பாயக் களத்திடை விழ்ந்த
வரசிளங் கோளரி தன்னை
யிருபது கையும் வருந்துற வெடுத்து
மெடுப்பரி தாகினின் றசையுந்
திருவிலி முகங்கள் பத்தினுங் குருதி
சிந்திடக் குத்திவிழ்த் தனுமன்
வரிசிலை யிளவ றனையெடுத் தேகி
மணிநிற வண்ணன்மு னுய்த்தான் (43)

எய்துமவ் வேலை வேல்படு மயர்ச்சி
யிளவறீர்ந் தெழுந்துநின் றிறையன்
செய்யபங் கயத்தா டொழுதன விற்பச்
சிலைத்தொழிற் கொருவனென் றுரைக்கும்
ஐயசெங் கமலக் காடுபூத் தனைய
வஞ்சனக் கொண்டல்கண் சிவந்து
வையமேத் தெடுக்கு மனுமன்மே லிவரா
விராவண னுேடமர் மலைந்தான் (44)

காற்றுறழ் கடுப்பிற் கலினமான் றடந்தேர்
கழைகளி கவுண்மதக் களிறு
பாற்றிரைக் கவரிக் கூந்தன்மாத் தறுகட்
பாய்புலிப் போத்தென வயவர்
வீற்றுவீற் றுக மறிதர விராமன்
வரிசிலை குனித்தலும் வெகுண்டு
கூற்றுமெய்ப் பனிப்ப வனுமன்மே லரக்கன்
கொடுங்கணை பொழிந்துநின் றூர்த்தான் (45)

மாருதி மருமம் பிளந்திட வரக்கன்
வடிக்கணை தொடுத்தமை நோக்கிக்
கார்முக விநோத விருதர்கோன் கவசங்
கனலுமிழ் படைக்கலந் தடந்தேர்
ஊர்தரு பாகன் வரிசிலை யனைத்து
மோரொரு பகழியாற்* றுணித்துத்
தார்புனை மவுலி யொருபதுங் கணையாற்
றள்ளிமற் றீங்கிவை புகல்வான் (46)

கூந்தன்மான் றடந்தே ரணிந்தபொற் கவசங்
கொடுஞ்சிலை யடுங்கணைப் புட்டில்
காந்தெரி கவிழ்க்கும் படைக்கல மின்றி
நின்றனை சீதையைக் கடிதின்
ஈந்துநின் னுவி யுய்தியே லுய்தி
யன்றெனி லின்றுபோய் நாளைப்
போந்துவெங் களத்தி லின்னிளை யோடு
விளிதியேல் போகென விடுத்தான் (47)

வெள்ளியம் பொருப்பு மெடுத்தவ னுணஞ்
சுமக்கல னுகிவெய் துயிர்த்துப்
பள்ளநீர் வேலி யிலங்கையி னெய்திப்
பரிவுட னமைச்சரோ டெண்ணி

*துமித்த எனவும் பாடம் (பா. பே.)

யெள்ளரு மதுகைக் கிணையிலாக் கும்ப
கன்னனைப் படுதுயி லெழுப்பி
யள்ளிலைச் சூலந் திரித்துமா ருடர்த
மாவியுண் டிடுகென விடுத்தான் (48)

விடுத்தலு மிமைப்பிற் செருக்களத் தெய்தி
வானர வீரரை யள்ளி
மடுத்துவாய்ப் படுத்துக் கவுட்புடைக் குதட்டி
மலர்க் கதிர்ப் பருதிசேய் தன்னைப்
பிடித்துய ரிலங்கை புகுதலுந் தடங்க
ணரக்கியர் பெய்தமென் சாந்தி
னடுத்தமெய்த் துயர்தீர்ந்*திரவிசே யரக்கன்
மூக்கொடுஞ் செவிபறித் தகன்றான் (49)

திருகுவெஞ் சீற்ற மடங்கலே றனையான்
செவியொடு மூக்கினைக் கவர்ந்த
விரவிகா தலனைத் தொடர்ந்துவெங் களத்தி
னேற்றவ ருயிர்பிழிந் துண்டு
வருதலு மிராமன் கொடுமரங் குழைத்து
வடிக்கணை பற்பல தூண்டி
யருவரைத் தடந்தோண் மருமநீட் சென்னி
வீற்றுவீற் றுய்விழ வறுத்தான் (50)

களத்திடைக் கும்ப கன்னனை யிராமன்
†றடிந்தமை கேட்டுவல் லரக்க
னுளத்திடை வெகுளி மீக்கொளக் கண்ணி
னெழுகும்வெங் கனற்சிகைக் கதுவி
துளிப்புயல் வறப்பக் கனன்றதி காயன்
றன்முக நோக்கிநீ துணைவி
னளப்பருஞ் சேனை சூழ்வரச் செல்கென்
றறைதலு மடுகளத் ததிர்ந்தான் (51)

---

*துயர்தீர்ந் திரவி சேய்வனை (பா. பே.)

†கடிந்தமை கேட்டு (பா. பே.)

பொருப்புறழ் தடந்தோள் வானர மெழுநா
றுருவவோர் பொழிகதிர் வேலாற்
செருக்களத் தெறியு சுராந்தகன் றன்னை
†யங்கதன் பரிவொடுஞ் செகுத்தான்
உருத்துவக் துடற்றுந் தேவராந் தகனை
யனுமனோர் குத்தினு லொறுத்தான்
பருப்பத மதனுன் மகோதர னுவி
பறிந்திட வெறிந்தன விலன் (52)

மாருதி சினவித் திரிசிரா வங்கை
வாள்பறித் தவன்றலை துமித்தான்
போர்முகத் திடபன் மத்தனைக் கதையாற்
புகையெழப் புடைத்துயிர் குடித்தான்
கார்முகங் குழைத்து மலரயன் கணையா
லிலக்குவ னமரர்கண் களிப்ப
கேரலர்க் கடந்த திறலதி காய
னெடுந்தலை துமித்துநின் றார்த்தான் (53)

கறங்குதெண் டிரைநீ ருலகெலாம் வென்ற
கதழ்சினத் தடலதி காய
னிறந்தமை கேட்டு நிருதர்கோன் சினவி
யிந்திர சித்தினை*விடுப்பச்
செறிந்தகூ ரிருள்வாய் வெஞ்சம ருடற்றித்
திசைமுகன் பகழியா லிராமன்
மறங்கொள்போ ரிளவல் வானரத் தலைவர்
யாரையு மண்ணிடை விழ்த்தான் (54)

வரிசிலைக் கல்வி யுருவெடுத் தனைய
வாளெயிற் றரக்கன்வெஞ் சமரிற்
புரிதொழி லனைத்து மிராவணற் குரைத்துப்
பொங்குபே ருவகையி னிருப்ப

---

*இந்திர சித்தினை (பா. பே.)

†அங்கதன் பரிவொடுஞ் சிதைத்தான் (பா. பே.)

நிருதர்புங் கவனும் வீடணன் சாம்பன்
றுணையினி வீகரில்போ ரனுமன்
அருகுசென் றெய்தி நீர்பிழைத் தமையா
லிறந்திலர் யாருமென் றறைந்தான் (55)

மெய்புகு கருவி மாற்றுறு மதகந்
*துணிபடு மெய்பொருந் ததக
மெய்திய தழும்பு தீர்த்திடு மதக
மின்னுயி ரளித்திடு மதக
மையகேள் வெள்ளி வரைக்குநல் விடப
இரிக்குநாப் பண்ணினி தமரு
மையனு மருத்து வரையினுனி போய்க்
கொணர்கென மாருதி பாய்ந்தான் (56)

பாய்தலு மதனில் மருந்துகாண் கிலனாய்ப்
பருவரை பறித்துவந் துய்ப்பச்
சேயதா மரைக்கட் செல்வனை முதலோர்
துயிலுணர்ந் தாரென வெழுந்தார்
ஏயவம் மலையை மாருதி முன்ன
ரிருந்துழி வைத்துமீண் டெய்தக்
காய்சினங் கதுவி யிரவிசேய் முதலோர்
கடிமதி லிலங்கைதீ மடுத்தார் (57)

அன்னது கேட்டு நிருதர்கோன் கும்ப
கன்னனன் மைந்தரை யழையா
மின்னகு சுடர்வேற் றலைவரோ டேகி
வெஞ்சமர் புரிகென விடுப்பக்
கன்னவி றிரடோட் குரக்குவெஞ் சேனைக்
கனைகட லுடைதரக் கலக்கிக்
கொன்றனை யயில்வேற் கப்பணஞ் சிதறிக்
கூற்றமஞ் சுறவெதிர் மலைந்தான் (58)

* துணிபடு மெய்பொருந் ததக (பா. பே.)

அங்கதன் சினவி யகம்பன னென்று
மரக்கனுக் கமருல களித்து
வெங்கன லன்ன பிரசங்கனை மறலி
விருந்தெதிர் செல்கென விடுத்தான்
செங்கைவள் ளுங்கிரா லடுசினத் துவிதன்
சுரோணிதக் கண்ணனைச் செகுத்தான்
பங்கமில் யூபாக் கனைத்திறல் மயிந்தன்
பறவைகூட் டுணவுயிர் படுத்தான் (59)

நள்ளிருள் விழுங்கிக் கதிரெதி ரெடுக்கும்
பருதிசெய் நாகிளம் பிறைதாழ்
வெள்ளெயிற் றகல்வாய்க் கும்பன்வான் மகளிர்
நகைவிருந் தயின்றிட விடுத்தான்
கொள்ளைவண் டறைதார் நிகும்பனைத் திறல்கூ
ரனுமனோர் குத்தினிற் கொன்றான்
வள்ளலோர் கணையா லடல்புரி மகரக்
கண்ணனை யாருயிர் மாய்த்தான் (60)

ஈங்கிவை யரக்கன் செவிமுத லுறலு
மிந்திர சித்தினை விடுப்ப
வாங்கவன் மாயா சீதையை விறல்கூ
ரநுமன்முன் றடிந்திகல் வேள்வி
திங்கறப் புரிவா னிகும்பலைக் குறலு
மாருதி திருமறு மார்பன்
பாங்குவந் தரக்கன் புரிந்தமையுரைப்பப்
பருவரற் கடலின்விழ்க் தயர்ந்தான் (61)

ஆயபோழ் தனும னுரைத்தல்கேட் டைய
வழுங்கிடே லிராவணி வஞ்ச
மாயையிற் சீதை வகுத்தனன் றடிந்து
மகஞ்செய்வா னிகும்பலைக் ககன்றான்

மேயவவ் வேள்வி முற்றுறி னம்மால்
வெல்லுத லரிதம ருடற்றித்
தியனைச் செகுப்பா னிளவலை விடுத்தி
யென்றுவி டண்ன்றெளிக் துரைத்தான் (62)

உரைத்தலுங் கமலத் தடங்கணு னிளவ
லொல்லைபோ கெனத்தொழு தேகி
வரைத்தடந் திணிதோ ளனுமன்மே லிவர்ந்து
வானர வீரர்பின் றொடர
வரக்கர்கோ னிளவல் கனன்றுமு ணடப்ப
வரன்விழித் தெரித்தழுப் புரத்திற்
செருக்களஞ் சிவப்பச் சிறிதுகண் சிவக்குஞ்
சேவக னிரும்பலை சேர்ந்தான் (63)

அருமறைத் தக்கன் புரிமகங் கணங்க
ளழித்தென வடல்சினத் தரக்கன்
புரிதரும் வேள்வி வானரத் தலைவ
ரழித்தலும் புண்டிறந் தன்ன
வெரியுமிழ் தறுக ணரக்கர்கோன் சிறுவ
னிமைகரிந் தழலுக விழித்துப்
பருதிமான் றடந்தே ரணையபொற் றேரிற்
பாய்புலிப் போத்தென விவர்ந்தான் (64)

அந்தரத்தமர ரிமைப்புறுக் கண்க
ளிமைத்துவான் றுறந்தன ரகல
மந்தரம் வெடிப்ப மாதிரத் தலைவர்
வயிறெரி தவழ்ந்துநின் றேங்கக்
கந்தடு புழைக்கைத் திக்கயம் வெருவிக்
களிமதந் துறந்துகான் படர
விந்திரன் பகைஞ னண்டகோ ளகையு
மிடிதர வரிவிலு ணெறிந்தான் (65)

களத்தெதி ரேற்ற வோரொரு கவிகட்
    காயிர மாயிரங் கணைகள்
துளைத்தவல் விசையி னேமியங் கிரியுந்
    துளைவினி னுருவிவின் படர
வளைத்தலைப் புகுது மரவெனச் சிலபோ
    யனுமன தாகமூ டுருவத்
*தளிப்புய லேழுங் கடையுகத் திறைக்குந்
    தாரைபோற் கணைமழை பொழிந்தான் (66)

கூற்றுமெய் பனிப்ப வரக்கர்கோன் விடுத்த
    கொடுங்கணை யாவையுங் கணையால்
மாற்றிவா ளரக்கன் மருமனீள் தடக்கை
    மணிமுடி நுண்டுகள் படுத்திக்
காற்றுறழ் புரவிக் கலினமான் றடந்தேர்
    களிற்றினந் துணித்தவெங் குருதி
யூற்றிருந் தொழுகக் கவந்தமாட் டயர
    விலக்குவ னுறுகணை பொழிந்தான் (67)

இந்திரன் மருமம் போழ்ந்தது மறலி
    யிருளின் நீஞ்சுவை யறித்த
தந்தரத் தியங்கும் புட்பக வூர்தி
    யார்த்தவெம் புனலினு டியது
செந்தமழ் கடவுள் பழுவெலும் பொடித்த
    தாயவெந் தீமுகப் பகழி
மந்தரத் தடந்தோண் மாருதி மருமம்
    போழ்ந்திட வலி தினின் விடுத்தான் (68)

உருகெழு தோற்றத் தனுமன்மார் பகலத்
    துடற்றுவெம் பகழிபோந் துருவக்
குருதிகான் றிடலு மிலக்குவன் புருவத்
    தொடுமுயர் கொடுஞ்சிலை குழைய

*ஊடுருவக் களிப் புயல் (பா. பே.)

வரிசிலை யற்ற தார்தரு பாகன்
மறிந்தனன் வாம்பரி மறிந்த
விரைசெலம் மாண்றேர் சிதர்ந்ததவ் வரக்கன்
வியனக ரிலங்கையிற் புகுந்தான் (69)

ஓரிமை யொடுங்கு முன்னரோர் தடந்தேர்
பண்ணுறுத் தொல்லையி லிவர்ந்து
போர்முகத் தெய்திக் கவிக்குல மனைத்தும்
போன்றவெங் கணைமழை பொழியுங்
கார்நிறத் தரக்கன் கொடிஞ்சிமான் றேரிற்
கவனவாம் புரவிக ளனைத்தும்
பாரிடை மறிய வீடண னெதிர்போய்ப்
பாழியங் கதையினாற் புடைத்தான். (70)

நரைவிடை யூர்ந்த கடவுளும் மலர்மே
னான்முகக் கடவுளும் வியப்ப
வருவரைத் தடந்தோ ளிந்திர னிகழ்ந்த
வரசியல் கிடைத்ததென் றுவப்பத்
திரையெறி குருதிப் புனல்பரந் தோடிக்
கருங்கடன் முழுவதுஞ் சிவப்ப
விரவுநன் பகலு மூன்றுநா ளொழியா
திருவரும் வெஞ்சமர் விளைத்தார் (71)

அந்தரத் தமரர் மலர்மழை பொழிய
வாடகப் பொருப்பினைக் குழைத்த
சந்திர மவுலிக் கடவுளா மென்னத்
தடஞ்சிலை குழைவுற வாங்கிக்
கந்தடு புழைக்கைக் கடாக்களி றனைய
விலக்குவன் விசும்புகாத் தருளும்
இந்திரன் கணையா லிராவணி சென்னி
யிருநிலத் தறுத்துவீழ்த் தினனால் (72)

விண்ணவ ரியக்கர் விஞ்சையர் முனிவர்
 வானவர் வியந்தன ரேத்தக்
கண்ணகன் ஞால முழுவதுங் களிப்பக்
 கார்முகக் கல்வியின் றுறைபோ
மண்ணல்சே வடியி னிளவல்போய் வணங்க
 வாய்பிழிக் குறுந்துளி பிலிற்றுந்
தண்ணறுங் கமலக் கண்ணனுண் மகிழ்ந்து
 தழுவினின் ருசிகூ றினனால் (73)

சங்கிவை சீற்க விராவணி யமரி
 னிறந்தமை யொற்றர்போ யிசைப்பத்
தூங்கிசை மிழற்றுந் திவவியா ழுயர்த்தோன்
 றுன்பவா ரிதியில்வீழ்ந் தழுந்திப்
பாங்குறை பரித்தேர் வெஞ்சினக் களிறு
 பதாதியென் றுரைக்குநாற் படையும்
வீங்குநீர் வேலிப் புவிமுது குளுக்க
 வெஞ்சமம் புரிகென விடுத்தான் (74)

ஆயிர நாவோ ரளப்பினும் வருந்தி
 யெண்ணினு மெண்ணுதற் கரிதா
மேயமோர் மூல பலத்தினை யிராமன்
 வில்விளை யாட்டயர்ந் தெளிதிற்
காயும்வெங் களத்திற் கடிகையோ ரேழிற்
 கனல்விழிப் புலவுநா றழல்வாய்ப்
பேயும்வெங் குறுந்தாட் பூதமு ·முவப்பப்
 பெய்கணை மாரியி னறுத்தான் (75)

உரவுநீர்த் தரங்கக் கடற்பெருந் தானை
 சிதைந்தமை யொற்றர்போ யுரைப்பப்
புருவம்வா ணுதலி னேறின *விழிந்த
 விழிகளோ ரிருபதும் புகைந்த

* விழித்த விழிகளோ ரிருபதும் (பா. பே.)

வருவரைத் தடந்தோ ளிருபதும் பணியா
வண்டகோ ளகைமுக டளந்த
வெருவிவா னவர்க ளோடின ரரக்கன்
வெகுளியென் றுமென நினைந்தே (76)

பொருப்புறழ் தடந்தோள் மாபெரும் பக்கன்
மகோதரன் பொருநரைக் கடந்த
வுருப்பவெஞ் சினத்த திறல்விருப் பாக்க
னுடையம் புகர்முகப் பருஉத்தாண்
மருப்புடைத் தடக்கை வாரணந் தடந்தேர்
வாம்பரி பருதிவா ளுழவர்
இரைத்தெழு கடலி னார்த்துமுன் செல்ல
விகலமர் வேட்டெதி ரெழுந்தார் (77)

மூவகை யுலகுந் தனதடிப் படுத்த
முழவுறழ் தடம்புயத் தரக்கன்
வாவுமான் றேரின் மதிக்குடை நிழற்ற
வயங்குவெண் சாமரை யிரட்டக்
கோவெடுத் தருந்துங் குருதிவா ளவுணர்
குற்றுடை வாள்சுமந் தேகத்
தேவர்மெய் நடுங்கித் திசைதொறும் வணங்கச்
செருக்களத் தொல்லையி னடைந்தான் (78)

ஆயிரஞ் செருவின் மறலியைப் புறங்கண்
டமர்பெறு தருஞ்சமம் வேட்டு
மாயிரு ஞால முழுவதுந் திரிந்த
*வாகைவேற்றி.றல்விருப் பாக்கன்
காய்கதிர்ப் பருதிச் சிறுவனை யெதிர்ந்தோர்
கதையினுற் புடைத்தலும் வெகுண்டு
தீயுமிழ் தறுகண் பிதுங்கிவா ளரக்கன்
மறிதரச் சென்னியை யெறித்தான் (79)

* வாட்கை வேற் றிறல் (பா. பே.)

உலகெலாம் விழுங்கு மறலிகா வென்ன
வுமிழ்கொடுந் தழற்சிகை பரப்பி
யிலகுவாள் விதிர்த்துக் கேடகந் திரித்து
மகோதரன் களத்தெதி ரேற்பக்
கொலைபழுத் தொழுகுங் குருதிவா ளோங்கிக்
கூன்புறப் பலகைகைக் கொண்டு
மலையும்வெஞ் சமத்தின் வாலிதன் றனேவன்
மற்றவன் றலைதுமித் தெறிந்தான் (80)

கங்கமுங் கழுகு மார்க்கும்வெங் களத்திற்
*கவிக்குலத் தலைவரைத் துரத்தி
சிங்கவே றென்னக் கொடுஞ்சமர் விளைக்கு
மாபெரும் பக்கன்முன் சென்று
துங்கமால் வரையிற் றிரண்டதோள் வலியாற்
சோர்வுற நிலத்திடை வீழ்த்தி
யங்கதன் சினவி யாளரிப் போத்தி
னுங்கவ னுடல்பிளந் தளைந்தான் (81)

தானையந் தலைவர் விளிந்தமை நோக்கித்
தழலெழ விழித்துவல் லரக்கன்
வானிடை பூத்த வுடுக்கணஞ் சிதற
மற்றைய வண்டமும் வெடிப்பத்
†தேன்வழி கமலப் பொகுட்டினி துறையுந்
தேவனுஞ் செவித்தலம் புதைப்பப்
பாவிறச் சங்க மொருபதுந் தனது
பாழிவாய் தொறுமடுத் தொலித்தான் (82)

பையரா கெற்றிச் சுடிகையிற் கிடந்த
பார்முகங் கிழியவோ ரெட்டு
மைதவழ் சூடுமி வரைபறித் தெறியும்
வானரத் தலைவர்க ளெவரும்

---

* கவிக்குலத் தலைவரைத் தரந்து (பா. பே.)
† தேனவிழ் கமலப் பொகுட்டினி (பா. பே.)

*கையிணை முழுந்தாண் மருமநீள் சென்னி
யெங்கணுங் காய்கணை செருகி
யெய்யெனக் கிடப்ப வுலகெலாம் வென்ற
விராவண விருஞ்சிலை குழைத்தான் (83)

மற்றவை நோக்கி யிலக்குவன் சினவி
வடவரை யனையவிற் குழைத்துப்
பொற்றடந் திணிதேர் வலவனீள் சென்னி
பொங்கழற் கணையினால் வீழ்த்திப்
பற்றலர் முதுகு கண்டலர் நெடுங்கண்
சிவப்பறுப் பணைப்புயத் தரக்கன்
கொற்றவெஞ் சிலைக ளொருபதுந் துமியக்
குருதிதோய் கணையினா லறுத்தான் (84)

பாடகத் தொடர்ச்சிப் பழவினை சிமிழ்ப்புப்
பற்றறப் பசும்புய லனையான்
ஆடகப் பசும்பொற் செய்யதா மரைத்தா
ளரணமென் றடைந்தபே ரறிவின்
விடணன் வெகுண்டோர் கதையினா லடித்து
வெஞ்சினத் தரக்கர்கோன் கடவுங்
கோடுயர் பசும்பொற் கொடிஞ்சியந் தடந்தேர்க்
†குரகத மனைத்தையுங் கொன்றான் (85)

கொடிஞ்சியந் தடந்தேர்க் கொய்யுளைப் பரிகண்
மறிதலு மிரணியற் செருக்க
மடங்கலே றனைய விராவணன் சினவி
வாய்மடித் தெயிறுதின் றுரப்பி
விடங்கவிழ்த் தெரிகால் கடரிலை நெடுவேல்
வீடணன் மேலெறிந் திடலுங்
கடங்கவிழ் கரடக் கரிநிக ரிளையோன்
கணையினா லாங்கது துணித்தான் (86)

---

* கையிணை முகந்தாள் (பா.பே.) † குதிரைக ளனைத்தையும் (பா.பே.)

புய்ஙிறம் விளர்ப்பக் கருகிய மேனி
புலவுவா யரக்கர்கோன் சினவி
வெயிலினை யிமைத்துக் கொலைத்தொழில் பயிற்றி
வெவ்விடத் தோய்யில்மேற் பூசி
மயறுளம் வருந்த வளப்பினுட் சமைத்து
வரத்தினன் மறையொடு மளித்த
வயிலினை யெறிய வுரம்பிளங் திளையோன்
மண்மிசை வீழ்ந்துயி ரயர்ந்தான் (87)

கலினமான் றடந்தேர் கொணரவல் லரக்கன்
கடிமதி லிங்கையிற் புகலும்
மலையுறழ் தடந்தோண் மாருதி முன்போல்
*மருத்துமா மலைகொணர்ந் திடலும்
அலகில்சீர்ச் சுசேனன் மருந்தினை யளிப்ப
வையன்முன் போலவுய்ந் தெழுந்தான்
சிலைவிழுங் குயர்தோ ளிராமன்மா ருதியைத்
தழுவிமற் றீங்கிவை தெரிப்பான் (88)

உற்றுழி யாவி யுதவினர்க் குயிரை
நிகர்பொரு ளுண்டெனி லன்றோ
மற்றொரு கைம்மா றளிப்பரென் றுவப்ப
மருத்துமா மலையினை மீட்டுங்
கற்றடந் திணிதோ ளனுமன்முன் போல
வைத்திவண் கடிதுவந் துறலும்
வெற்றிவே லரக்கன் வேறொரு மணித்தே
ரிவர்ந்துவெங் களத்திடைப் புகுந்தான் (89)

மலரய னடவு மெகினமென் புள்ளும்
வலியழிந் திரியமோ தியது
நிலவுவெங் கதிரோன் பரிகடேர் துரந்து
நேமியங் கிரிவலம் வந்த

* மருத்துமாமலை கொணர்ந்துய்ப்ப (பா. பே.)

*தலதறு புவன முழுவதுந் திரிந்த
தாயவிண் ணிடைப்பரந் துலவுங்
கலினமான் றடந்தேர் கடவிவல் லரக்கன்
கவிக்குல மீரியவந் தேற்றான் (90)

தேரினின் றரக்கன் கொடுஞ்சமம் விளைப்பச்
சிலைத்தழும் பிருந்ததோ ளிராமன்
பாரினின் றுடற்ற லரிதென வயிரப்
படையுடைக் குரிசில்மா தலியை
யூர்பொலந் தடந்தே ரிமானுக் குதவு
கென்றலு மொல்லையி னீழிந்து
கார்வயி றுடைக்குங் கூம்புடைத் தடந்தேர்
கார்முகக் குரிசில்முன் கொணர்ந்தான் (91)

அந்தரத் தமரர் வலிகெட வுடற்று
மிராவண னோடமர் மலைதற்
கிந்திர னளித்த கொடிஞ்சிமான் றடந்தே
ரிவர்கென மாதலி வணங்கக்
கந்தடு புழைக்கை யெறும்வலி பருஉத்தாட்
களைகளி கடாக்களி றனையான்
மந்தரத் திவரு நிறையுளைத் தறுகண்
வாளரிப் போத்தென விவர்ந்தான் (92)

விண்ணவ ரளித்த தேரிவ ரிறையும்
வெஞ்சின தரக்கர்தங் கோவும்
மண்ணினின் வெற்பின் மாதிர மெட்டின்
வானவர் தானவ ருறையுங்
கண்ணகன் விசும்பிற் றிரிந்துதாங் கற்ற
†கார்முக விஞ்சைகள் காட்டி
யெண்ணியெவ் வுலகும் வெருவொடுந் தளர
வேழுநா ளிராப்பகன் மலைந்தார் (93)

* அலகறு புவனம் (பா. பே.)
† கார்முகக் கல்விகள் (பா. பே.)

மைத்தகார் கமலக் காடுபூத் தனைய
மணிநிற வண்ணன்விற் குனித்துப்
பத்துடைத் தலையுந் தோள்களுந் துமிப்பப்
பண்டுபோன் முளைத்தம ருடற்றக்
கைத்தலம் விரித்துக் கைகளுந் தலையு
மாயிரங் கால்கடி தகற்றி
யத்தவெற் பென்ன விரவிதேர் மருள
வாடமர்க் களத்திடைக் குவித்தான் (94)

கனைகடற் குவமை யுரைத்திடி லந்தக்
கனைகட லலதுவே றில்லைப்
பனியிரு விசும்பிற் கிணையெடுத் துரைப்பிற்
பனியிரு விசும்பலா தில்லை
வனைகழ லிராம னிராவண னுடற்றும்
போரினுக் கிணைவகுத் துரைப்பின்
அனையபோ ரிராமன் இராவண னுடற்றும்
அருஞ்சம ரன்றிவே றிலையால் (95)

என்றுவா னவர்கள் துதியெடுத் திசைப்ப
விராகவ னிருஞ்சிலை குழைத்து
மன்றலங் கமலத் தயன்படை விடுப்ப
மழவிடை யுயரிய கடவுட்
குன்றெடுத் தோங்குந் தடம்புயத் தரக்க
னுரம்பிளந் தாருயிர் குடிப்பப்
பொன்றினி னிலத்தின் வீழ்ந்தன னமரர்
பூமழை பொழிந்துநின் றார்த்தார் (96)

ஆர்த்தன ரமரர் விஞ்சைய ரியக்க
ரருமறை பாடிநின் றுடித்
தார்த்தனர் மலரால் மெய்ம்மையு மறனுந்
தோமறத் தலையெடுத் துயர்ந்த

வேர்த்துடல் புழுங்கி பொய்ம்மைபோ யொளித்த
விழுமறை யொழுக்கமெவ் வுலகும்
போர்த்தது திங்க டோறும்ம் மாரி
பொழிந்திடச் சிறந்ததெவ் வுலகும் (97)

தாமரைக் கண்ணன் அருளின்வீ டணனைத்
தகைபெறு விராவணற் கினிதின்
ஈமநற் கரும மியற்றுதி யெனலு
மியாவையும் விரைவினி லியற்றித்
தேமலர்த் துளவோன் சேவடி வணங்கி
நிற்றலுந் திருமறு மார்பன்
காமர்வண் டறைதார் இலக்குவ னிவற்குக்
கதிர்முடி புனைகென வுரைத்தான் (98)

ஒழுகொளிப் பருதி வெண்மதிக் கடவுண்
மாநில முள்ளநாட் காறும்
பழமறை யனைய விராகவன் சரிதை
யுலகினிற் பயிலுநா ளளவுங்
கெழுமணித் திகிரி திசைதிசை யுருட்டிக்
கிளர்மதி லிலங்கைகாக் கென்ன
மழவிடை யன்ன வீடணற் கிளவல்
வாளொளி மணிமுடி கவித்தான் (99)

இருள்வயி ருர்ந்த வெங்கதிர்க் கடவுள்
சிறுவனை முதலிய வெவர்க்குங்
குருமணிக் கலன்க ளளப்பறு நிதிய
மறுப்பவுங் கொள்கென வழங்கி
வரையுறழ் தடந்தோள் வீடணன் போந்து
வள்ளருள் வணங்கலு மகிழ்ந்து
செருமலி தினிதோ ளனுமனோ டேகிச்
சீதையைக் கொணர்கென விடுத்தான் (100)

அன்னது கேளா வரக்கன்மா ருதியோ
டசோகநீள் வனத்திடைப் புகுந்து
கன்னியங் கற்பி னணங்கினே வணங்கிக்
களிப்பெருஞ் சோபனம் விளம்பிப்
பொன்னவிர் மணிப்பூஞ் சிவிகையி னேற்றிப்
புணர்முலே யரக்கியர் சூழ
வென்னேயா ளுடைய வன்னேயை யிராம
விருந்துழிக் கொணர்ந்துமுன் விடுத்தான் (101)

அருந்தவக் கற்பிற் கரசினே நோக்கி
யெனதுசிர் கெடாதருஞ் சமத்திற்
றிருந்தலர்ச் செகுத்து மீட்டன ளின்மே
னசையினல் மீட்டில னினக்குப்
பொருந்துழி யேகென் றுரைத்தலு மணங்கு
பொங்கழ லினேயவன் றருகென்
றிரங்கிட வள்ள லருளினு லினேயோ
ரியற்றிய வெரியிடைப் புகுந்தாள் (102)

அங்கியங் கடவுளி ராமன்முன் னெய்தி
யரக்கன்முன் கவரவந் துறலும்
பொங்குநீள் வேள்வித் தழற்புக வளியன்
புணர்த்திய மாயையை யரக்கன்
மங்கையென் றெண்ணிக் கொணர்ந்தன னந்த
மாயையின் டிழிந்ததென் னிடத்திற்
றங்கிய சீதை யிவளவன் றீண்டிற்
சாம்பராங் கற்பின்வெந் தழலால் (103)

ஐயுறே லிந்த வணங்கினைக் கொள்கென்
றங்கியங் கடவுளு மலர்ந்த
செய்யதா மரைமேற் புளிதறு முக்கட்
டேவனுந் தயரத னென்னும்

பொய்யெறி புலமை யரசனு முரைப்பப்
பூங்கழுற் சென்னியின் வணங்கி
வெய்யவாட் டடங்கட் சிதையை யிராமன்
மேதகத் தெளிந்துகைக் கொண்டான் (104)

பரதனைத் தாயோ டிகழ்ந்திடு முனிவு
தீர்ந்துறும் பரிதியங் குலத்தின்
உரிமைபூண் பதற்கோர் வரமளித் திடுகென்
றிராகவன் றெழுதுரைத் திடலும்
வரையுறழ் தடந்தோள் மார்பகத் தொடுங்க
மைந்தனைத் தழுவிவாள் வேந்தன்
அரசிளங் குமர வஃப்பரி தாகு
மவ்வர மளித்தன னென்றான் (105)

ஆள்வழக் கறநீண் டம்பலைத் தொழுகு
மயில்விழிப் புலோமிசைக் கணவன்
றுளதா மரைக்கட் குரிசிலோர் வரநீ
கேட்கெனத் தசமுகன் விடுத்த
வாளியால் மறிந்த கவிக்குல மனைத்து
முய்ந்திடும் வரமளிக் கென்ன
நீளிருந் தடக்கை யிராகவன் கேட்ப
விந்திர னேர்ந்ததனை தளித்தான் (106)

விட்புலத் தமரர் மறைதலுங் கணையால்
வீந்திடும் கவிக்குல மனைத்துங்
கட்புலங் களிப்ப விராமனை நோக்கி
யுய்ந்துளங் களித்தவா ளரக்கன்
புட்பக மளிப்ப விளையவ னோடும்
புணர்முலை யணங்கொடு மிராமன்
நட்புடைக் கவிக டம்மொடு மிவர்ந்து
ளலிகடற் சேதுவை யடைந்தான் (107)

இருபத்திமூன்றாவது
இராவணன் வதை யத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 1086

## இருபத்து நான்காவது
## இராமன் சிவலிங்கப் பிரதிட்டை பண்ணின வத்தியாயம்.

---

*சேதுவி னெய்தி வரிசிலை யிராமன்*
*சினகர மணிபெறக் கோலி*
*யாதியு முடிவு மறிவுரு விலிங்கந்*
*தன்பெய ராலினி தமைத்துத்*
*தூதுளங் கலிவா யணங்கொடு மீனவ*
*றன்னெடுஞ் சூழ்ந்துநின் றிறைஞ்சித்*
*தாதவிழ் மலர்தூய் நெஞ்சகங் குழைத்துத்*
*தடங்கணீ ரொழுகிடத் துதிப்பான்.* (1)

*அருவமா யுருவா யநாதியா யொன்று*
*மைம்பெரும் பூதமாய் வேறாய்த்*
*தெரிவரும் பொருளாய்த் தெரிபவை யாகிச்*
*செங்கண்மா லயனென வுரைக்கு*
*மிருவருங் காணு மறைப்பொரு ளாகிச்*
*சகத்தினை யியக்கியு மியங்காக்*
*கரியது வாகித் துரியமாய்த் துரியா*
*தீதமாங் கடவுளே போற்றி* (2)

*நீற்றொளி பழுத்து வெள்ளியங் கிரிபோ*
*லிலவுமிழ் மேனியாய் போற்றி*
*கூற்றனை யுதைத்துச் சிறுவனை யளித்த*
*குரைகழற் றுளினாய் போற்றி*
*பாற்றினஞ் சுழலு மூவிலைச் சூலப்*
*படையுடைக் கடவுளே போற்றி*
*மாற்றல ருறையு முப்புர மெரித்த*
*வாணகைக் குரிசிலே போற்றி.* (3)

பையர வணையி லறிதுயி லமர்ந்த பண்ணவன்
முகின் முலை முயங்கி
யையனை யளித்த கடவுளே போற்றி
யாதியம் பரமனே போற்றி
மையுறழ் கூந்தல் வருமுலைத் துவர்வாய்
மலைமகள் கொழுநனே போற்றி
பொய்யிகழ்ந் துணரும் புண்ணிய ருளத்திற்
புகுந்திடும் புனிதனே போற்றி (4)

என்றுநாத் தழும்ப விதயநெக் குருக
விராகவ னேத்தலு மிரங்கிப்
பொன்றிகழ் சடையு மிலகுழைக் கண்ணும்
புலியத ளுடையுமெண் டோளு
மன்றலங் கூந்தற் கவுரியோர் பங்கு
மாயுயர் மழவிடை யுயர்த்து
குன்றவிற் குழக னுங்கவ னமைத்த
கோதறு மிலிங்கமூ டெழுந்தான் (5)

குரவரைப் பிழைத்தோர் கள்ளுநர் நறவங்
குடித்தவர் கொலைத்தொழில் புரிவோர்
மருவிமற் றிவரோ டிணங்குநர் முதலாம்
பாதக ரேனும்வந் தெய்தித்
திரையெறி நன்னீர்ச் சேதுவி னுடித்
தெளிந்துநீ யமைத்தவிவ் விலிங்கம்
பரவுறிற் பாவ முழுவதுந் தீர்ந்தென்
பதமலர் நீழல்வீற் றிருப்பார் (6)

அங்கண்மா ஞால மழியினு மழியாச்
சேதுவி னிமகிழ்ந் தமைத்த
பொங்கொளி யிலிங்கத் தகன்றிடா துறைவ
லென்னவோர் வரம்புகன் றருளி

மங்கையோர் பங்கன் மறையவி டணைனும்
வானரத் தலைவருஞ் சூழச்
சிங்கவே றனையான் புட்பக மிவர்ந்து
கிட்கிந்தை மருங்குசென் றடைந்தான் (7)

அடைதலு மிரவி சிறுவனிற் கிழமை
பூண்டிடு மயில்புரை நெடுங்கண்
மடநடைத் துவர்வாய்த் தாரையுந் தீஞ்சொன்
மாசறு மதிமுக ருமையுந்
தொடர்வுறு மற்றைக் கவிக்குலத் தலைவர்
துணைவியர் யாவருஞ் சூழப்
படர்தரு விமான மிவர்ந்துசா னகிதன்
பதமல ரிறைஞ்சியேத் தெடுத்தார். (8)

தமிழ்முனி மனையாள் வினவில்யான் செய்த
தகுதிக ளனைத்துமோ துகினும்
இமிழ்கட லடைத்த துரைத்திடேல் முனிவ
ணங்கையி னேற்றருந் தியதால்
அமிழ்தினு மினியா யென்றரு முனிவர்
சாலைக ளனைத்தையுங் காட்டிக்
கமழுலந் துறைகு முயோத்தியர் வேந்தன்
பரத்துவன் சாலைகண் ணுற்றான் (9)

பழுதறு மறைதேர் பரத்துவா சன்சேர்
சாலைகண் ணுறுதலும் பரமன்
ஒழுகொளி விமான மிழிந்துசென் றெய்த
வுயர்தவ முனியெதிர் போந்து
தழுவிநன் கியம்பி யாசன மளித்துத்
தாமரைக் கண்ணனே முதலாய்
உழையுறு மெவர்க்கு நெஞ்சகங் களிப்ப
வுவப்பொடு நல்விருந் தளித்தான். (10)

தெள்ளுநான் மறைதேர் முனியொடு நெறியிற்
கவிக்குலந் தின்றுளங் களிப்பக்
கள்ளறு தொழுகுங் கனிகளுங் கிழங்குங்
காய்களு முறுவரம் பெற்று
வள்ளல்மா ருதிபோய்ப் பரதனுக் கென்று
நல்வர வுரைக்கென விடுப்ப
வுள்ளமு முரையும் பிற்பட வனுமன்
விரைந்துபோய்ப் பரதனுக் குரைத்தான் (11)

இருபத்துநான்காவது
இராமன் சிவலிங்கப் பிரதிட்டை பண்ணின
வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 1097.

---

## இருபத்தைந்தாவது
## இராமன் முடி சூடின வத்தியாயம்.

---

உரைத்தமா ருதியைத் தழுவியுள் ளுவந்து
மான்மதச் சேற்றொடுங் குவவி
யரைத்தசாந் தகலத் தப்பிய தென்ன
வகங்குளிர்க் தன்னைய ரோடும்
வரைத்தடந் திணிதோ ளிளையவனோடும்
வாட்டிறற் பரதன்விற் றானை
நிரைத்தெதிர் கொள்ளப் புட்பக மிவர்ந்து
நீவிற வண்ணனுங் கடைந்தான் (1)

அடைந்தகார் வண்ணன் வணங்கிய பரத
னகங்குளிர்ந் திடவெடுத் தணைத்து
மடங்கலே றனைய விலக்குவ னோடு
மன்னையர் மலரடி வணங்கித்

தடங்கொடா மறையோன் மனத்தினி லளித்த
வசிட்டனைத் தாழ்ந்தினி திருப்பக்
குடங்கையி னெடிய கண்ணிமா மியர்தாள்
வணங்கலுந் தழுவியுட் குழைந்தார் (2)

செயிரறு நந்திக் கிராமமாங் கெய்திச்
சிலைத்தழும் பிருந்ததோட் குமரர்
மயிர்வினை முடித்து வாசநீ ராடி
வெண்டுகில் மாலைசாந் தணியா
வுயிர்நிகர் நண்பி னிரவிசேய் குகன்வே
லரக்கர்கோ னெடுமினி துறைந்து
வெயில்கெட விமைக்கும் புட்பக மதனை
யளகையர் கோனுழை விடுத்தார் (3)

அய்யனும் பரதன் றேர்விட வீளவ
லவிர்மணிக் கவிகைமேற் கவிப்ப
பொய்யறு மரக்க னிலக்குவ னோடும்
பொலங்கொள்வெண் சாமரை யிரட்ட
வெய்யவன் மைந்தன் சத்துருஞ் சயத்தின்
மேற்செல வானர ரெவரு
மையல்வா ரணத்தின் மறுடரிற் போத
மணிமதி லயோத்திசென் றடைந்தான் (4)

ஏர்குடி யிருந்து சுணங்குபூத் தலர்ந்த
விளமுலைத் தொண்டையந் துவர்வாய்த்
தாரையை முதலாம் வானர மகளிர்
மாமியர் குழாத்தொடுந் தழுவக்
கார்புறங் கொடுக்குங் கருங்குழற் சீதை
கதிர்மணிச் சிவிகையி னேறிப்
பார்புகழ்ந் தேத்து மயோத்தியி னிராமன்
பயில்தரு முறையுளிற் புகுந்தான் (5)

கங்கையை முதலா நதிப்புன லோரேழ்
கலைகடற் கடவுணீ ரனைத்துஞ்
சிங்கவே றனைய வநுமனே முதலோர்
கொணர்தலுஞ் செழுமறை வசிட்டன்
மங்கல முழவங் கறங்க நீராட்டி
மடங்கலந் தவிசினி லிருத்தி
யங்கதும் மேனி யணக்குட னிராமற்
கவிரொளி மணிமுடி புனைந்தான் (6)

இருபத்தைந்தாவது
இராமன் முடி சூடிய வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 1103.

---

## இருபத்தாறுவது
## அகத்தியன் இராவணன் மரபுரைத்த வத்தியாயம்.

---

மரகதக் கொண்டன் மணிமுடி சூடி
மகிழ்வுட னிருக்குநா டன்னிற்
பரவருந் தவத்தி னகத்தியன் முதலாய்ப்
பகர்ந்திடு முனிவரர் யாரும்
விரைவினி லெய்தி வாழ்த்தலு மையன்
வியப்புடன் பூசனை புரிய
வுரவுநீர்க் கடலோ ரேழையும் பருகுந்
தமிழ்முனி யீங்கிவை யுரைப்பான் (1)

இந்திர சித்தை யிருபது பணைத்தோ
ளிராவணன் றனையிகல் விளைக்குங்
கந்தடு புழைக்கைக் கடாக்களி றனைய
*கும்பகன் றனைக்களப் படுத்தி

---

* கும்பகன்னனைக் களப்படுத்தி (பா. பே.)

யுந்துல கேழும் வாழ்ந்திட வளித்தா
யென்றலு முரவுவே லிராம
னந்தமில் சீர்த்திக் குறுமுனி யோடு
மகங்குழைந் திங்கிவை யுரைப்பான் (2)

வெள்ளியங் கிரியை வேரொடும் பிடுங்கு
மரக்கனை முதல்விளம் பாம
லெள்ளருந் திறல்கூ ரிந்திர சித்தை
யியம்பிய தேவனவன் றிறலுந்
தெள்ளருஞ் சீர்த்தி யரக்கர்தந் தோற்ற
முழுவதுஞ் சாற்றுதி யென்னக்
கொள்ளைவன் டறைதா ரிராகவ னுரைப்பக்
குறுமுனி யாங்கவை யுரைப்பான் (3)

குமரிவண் டரற்றுந் தாமரைக் கிழவன்
குமரனற் புலத்திய னென்போன்
றிமிரநீண் மாயை கடந்துநற் றவஞ்செய்
திரணவிந் துவினுயர் சாலை
யமைவுட னெய்தித் தவஞ்செய்கா லத்தி
லம்பகட் டிளமுலைத் துவர்வா
யிமையவர் மாத ரளப்பில ரெய்தி
யிர்ம்புன லாட்டயர்ந் தனரால் (4)

ஆங்கவர் தம்மைப் புலத்திய னோக்கி
யாயிழை *மகளிரா ரெனினு
மீங்கினி யெய்திற் கருப்பமுற் றிடுக
வென்றலு மவர்வெரீ யகல
வோங்குசீர்த் திரண விந்துவின் மகவீ
துணர்ந்திடா தாங்கணெய் துதலுங்
கோங்கிள முலையான் கருப்புமுற் றிடத்தன்
றந்தைபாற் குறுகியீ துரைத்தாள் (5)

* மகளிர் யாரேனும் (பா. பே.)

உரைத்தலுந் திரணவிந்துவென் றுரைப்போன்
புலத்தியற் குவப்பொடு மந்த
விரைக்கருங் குழலைக் கொடுப்பமற் றவளும்
விச்சிர வாவினை யீன்றாள்
பரத்துவன் மகளை யாங்கவன் வேட்டு
வயிச்சிர வணன்றனைப் பயந்தான்
வரைப்பரு மறைதேர்வயிச்சிர வணன்மூ
வாயிரம் வருடநோற் றனனால் (6)

குறுந்துளி தூற்றுங் கங்கைவார் சடையோன்
கோதறு முனிதவ னோக்கிச்
செறிந்திடு மியக்கர் வேந்தனு கென்னச்
செப்பின னகறலும் வேந்தன்
பறந்துசெல் விமான மளித்தன னேகப்
பரிவொடுந் தந்தையை வணங்கி
யுறைந்திடு நகரொன் றளிக்கென விலங்கை
மாநக ருறைதியென் றுரைத்தான் (7)

தொன்றுதொட் டரக்கர் வாழ்வுறு மிலங்கைத்
தொன்னகர் தன்னிடைக் குபேர
னென்றருஞ் செல்வத் தமர்ந்தன னென்ன
வுவப்பொடும் வரிசிலை யிராம
னன்றறி முனிவ புலத்திய னளிக்கு
முன்னமு ளாண்மதி யெயிற்று
வென்றிசே ரரக்க ருளர்கொலோ வவர்தங்
காதையை விளம்புக வென்றான் (8)

வேறு

முன்னங் கமலப் பொகுட்டின்
முதல்வன் சிலரைப் படைத்தாங்
கன்னோர் தம்மிற் சிலரை
யியக்க ரெனப்பே ராக்கிப்

பின்னுஞ் சிலரை யரக்க
　　ரெனப்பே ரளித்தான் வருண
மன்னுங் கேதி யோடும்
　　*பிற்கே(கி) வலிய ருனன் (9)

ஆலக் கருஞ்சே றுமிழு
　　மலங்கு சுடர்வேற் கேதி
கால ஞேடும் பிறந்த
　　கதிர்மென் கொங்கைப் பயையைச்
சால வதுவை யாற்றி
　　மின்னுக் கேசன் றன்னை
வேலை யிடத்திற் பிறந்த
　　விடமா மென்ன வுயிர்த்தான் (10)

மருவார்க் கிடியே றென்ன
　　வயவாள் மின்னுக் கேசன்
றரையாள் சக்தி மகளாஞ்
　　சால கடங்க டையை
முருகார் மாலை சூட்டி
　　யுயிர்போன் முயங்கு நாளிற்
கருவுட் கொண்டவ் வரக்கி
　　கவின்மந் தரத்திற் கலந்தாள் (11)

மைதோய் பைம்பொற் குடுமி
　　வரையின் வயிறு வாய்த்து
வெய்ய காமங் கனற்ற
　　மின்னு கேசற் றொடர்ந்து
தைய லேக லோடுந்
　　தனியே கிடந்தச் சிறுவன்
பையு ளூற்றுக் கலுழ்தல்
　　பரமன் கண்ணிற் கண்டான் (12)

---

* பிறகே வலியன் (பா. பே.)

ஏய சிறுவன் றன்னை யெம்மா னருளி னேக்கி
தாயி னளவி னின்றே வளர்க வென்னச் சாற்றி
யாய வரக்கன் றனக்கோ ரம்பொன் னகர மளிப்ப
வேய்மென் றடந்தோட் கவுரி விழைவி னிதனைப் புரிவாள் (13)

அரக்கர் மகளிர் கருப்ப மடைந்த ஞான்றே பெறவும்
விருப்பி னீன்ற வன்றே மக்கள் விரைவின் வளர்ந்து
பரித்த தாய்பொன் றிடவும் பவழச் செவ்வாய்க் கவுரி
யுரைத்தற் கரிய வரமாங் குதவி யிறையோ டகன்ருள் (14

வேறு

அறுசீராசிரிய விருத்தம்.

கர்சைமால் யானையின்றேல் போர்த்தாடுங்
கடவுளரு ளினிதிற் பெற்ற
*பச்சிரத்தங் கொப்பளிக்குங் குருதிவேற்
சுகேசனெ னு மரக்க னெந்தை
யிச்சையுட னினிதளித்த மாநகரில்
வாழுநா ளியக்கர் கோன
னச்சிலைவேற் கிராமணித னன்மகளைச்
சுகேசனுக்கு நல்கி னனே (15)

ஈற்றுனைந்த சிறுதும்பி மேன்மேற்போய்ப்
பறந்திடுமீர்ஞ் சிறையி னுற்ற
காற்றினலம் வருமருங்குற் றேவநதி
சுகேசனெடுங் கலந்து வெய்ய
†மாற்றெரியு மாலியவான் சுமாலியொடு
மாலிதனை வயிறு வாய்த்தாள்
கூற்றும்வெரு வருந்திறலோர் ‡கொடுந்தழலி
னின்றுதவங் கோலி னரால் (16)

* பச்சிரத்தங் கொப்புளிக்கும் (பா. பே.)
† மாற்றெரியும் மாலியவான் (பா. பே.)
‡ கொடுந்தழலு ணின்றுதவம் (பா. பே.)

மற்றவர்தந் தவநோக்கி மறைக்கிழவன்
மகிழ்ந்தனவிர் வரங்கேட் கென்னப்
பற்றலரை வென்றுலக மெங்குடைக்கீழ்
வைக்கவருள் பாவி யென்னப்
பொற்றசெழுங் கமலத்தோ னவையளித்து
நீங்குதலும் புவனம் யாவுங்
கொற்றமுற வடிப்படுத்தி விச்சுவகன்
மாவொடிவை கூற லுற்றான் (17)

விண்ணகர்போ *லெழிறிகழும் விழுத்தகுநன்
னகரமொன்றீங் கியற்று கென்னக்
கண்வழுக்குக் கதிரொளிகால் திரிகூட
மால்வரையி னுடலக் கண்ண
னண்ணவொரு நகரமுன மமைத்தனனுங்
கமர்திரென நவிற லோடும்
பண்ணியல்வாம் பரித்தடந்தே ரரக்கரொரு
மூவருமப் பதிபுக் காரால் (18)

*கந்திருவர் குலத்துதித்த கயனெடுங்கண்
ணருமதையாங் கன்னி வேற்கட்
சுந்தரியி னமுதமொழி கேதுமதி
வசுதையெனுஞ் சுடர்வே லுண்கட்
பைந்தொடிமா தரையின்று ளாங்கவரோர்
மூவரையும் பருதி வேற்கை
மைந்துடைமா லியவானுஞ் சுமாலியுமா
லியுமுறையின் வதுவை செய்தார் (19)

மாலியவான் ருேள்புணர்ந்து சுந்தரிவச்
சிரமுட்டி யெச்ச கோபன்
காலநிக ருன்மத்தன் †விருபாக்கன்
றுயில்வோரைக் கடிவோன் மத்த

* கந்தருவர் குலத்துதித்த (பா. பே.)
† விருப்பாக்கன் (பா. பே.)

ஞலங்கர் துன்முகனோ டனலையெனு
மணங்கினையும் வயிறு வாய்த்தாள்
சீலமுறு கேதுமதி சுமாலியைத்தோய்ந்
தீன்றவரைத் தெரிக்க லுற்றும் (20)

விகடனுயர் பிரகத்தன் விறற்கால
கார்முகன்வெம் பாசக் கன்னன்
இகல்செயகம் பனன்றண்டன் சங்கிருதி
புகைக்கண்ண னெழிற் பிரசங்கன்
நிகரில்சுபா ரிசனோடு கைகசிக்கும்
பினசிவே னெடுங்கட் செவ்வாய்ப்
பகையமுத முறழுமொழிப் *பாவைபுட்போற்
கடையென்னப் பகர்வ ரன்றே (21)

மாலியென வுலகேத்தும் வல்லரக்கன்
வசுதைவன முலையிற் றோய்ந்து
சீலமிகு நீலனொடு மனலனரன்
சம்பாதி யென்னுந் தீதிற்
கோலமணி முடியரக்கர் நால்வரையு
மினிதுயிர்த்தான் குறுகார்ச் செற்று
ஞாலமுழு வதும்வெருவ மாலியவான்
கொடுங்கோன்மை நடாத்து நாளில் (22)

விண்ணவர்வெவ் வரக்கர்புரி கொடுந்தொழிலுக்
காற்றாது கயிலை மேவித்
தண்ணிலவு கதிர்க்கற்றை யமுதுறைக்குந்
தாழ்சடையோன் சரணம் போற்றிக்
கண்ணறைய ராமரக்கர் மூவரையுங்
கடிந்தெமக்குக் களைக ணாகி
யண்ணலினி தளித்திடென விரந்திடலுங்
கறைமிடற் றெம்மடிகள் கூறும் (23)

* பரவையுட்பொற் கடையென்ன (பா. பே.)

தூயநறு மலர்தூவி வழிபாடு
  புரிந்தருளுஞ் சுகேசன் மைந்த
ராயிரம்வெம் பிழைசெயினு மாங்கவரைக்
  கோறலெமக் கடுப்ப தன்றாற்
றீயரைக்கொல் கெனமாலைப் பணித்தனவிர்
  விரைந்தாங்குச் சென்மி னென்னப்
போயமரர் குறையுரைப்ப நெடியோனு
  மதற்கியைந்து போமி னென்றான் (24)

அவ்வுரைகேட் டயினெடுங்கட் புலோமிசைவெம்
  முலையானை யணைக்கும் பாகன்
கவ்வையொழிந் தமரர்தொழுவிண் ணாடு
  புகவிளைந்த கருமம் யாவும்
வெவ்வினைத்தா துவருரைப்ப மாலிமுத
  லரக்கருளம் வெகுண்டு கேட்டுப்
பவ்வநெடுங் கடற்றானை புடைசூழப்
  பண்ணவரூர் வளைந்து கொண்டார் (25)

வேறு

திருந்தலர் புகுந்த மாற்றஞ் செவித்தலை வெதும்பிக் கேட்டுக்
கருங்கடற் சிவப்ப வந்தக் கவுத்துவ மணிந்த மார்பன்
முருங்கெரி கவிழ்க்குஞ் செங்கண் மூசிவெங் கலுழ னூர்ந்து
வருந்தலி ரமர ரென்ன வானம ரழுவத் துற்றான் (26)

தோற்றமு முடிவு மில்லான் றாண்டுபுட் சிறகர் வீசுங்
காற்றினு லரக்கர் சேனை கவிழ்த்தலு மாலி வெம்போ
ரேற்றுவெங் கலுழ னஞ்சி யிரியவெங் கதையா லெற்றக்
கூற்றுறழ் திகிரி யேவி யவன்றலை குறைத்திட் டானே (27)

மாலிவெங் களத்தின் வீழ மாலிய வான்வந் தெய்தி
வேலினு லெறிய வையன் விலக்கிமற் றதனைப் பற்றி
யாலமே யனையார் மெய்யி னெறிதலு மயர்ந்து வீழ்ந்து
சூலமொன் றெடுத்துப் பின்னுந் தோன்றன்மேல் விடுத்து
  [நக்கான் (28)

நக்கவா ளரக்கன் பின்னுங் கலுழன்மே னடந்து செல்லச்
செக்கர்வா னனைய செங்கேழ்ச் சிறைவிசைக் காற்றின்
[மொத்துண்
டொக்கவோ டுடைந்து வெய்ய வுலவைசேர் சருகிற் சிந்தி
மைக்கட லிலங்கை நீங்கிப் பாதல மருங்கு புக்கான் (29)

பாதலத் துறையு நாளிற் பாசிழைப் பரும வல்குற்
காதளந் தொளிறும் வேற்கட் கேகசி வதுவை யாற்றத்
தீதறு வானைத் தேடித் திரிவுழி யியக்கர் வேந்தைப்
போதரக் கண்டு கோனுன் பாதலம் புகுந்து சொல்வான் (30)

நச்சயில் பொருவு முண்க ணணங்கைகை கசிநீ கேட்டி
விச்சிர வாவை மேவி விறன்மகப் பெறுதி யென்னப்
பச்சிளங் குரும்பை மானும் பணைமுலைக் கழைகொல்
[மென்றோட்
செச்சைதாழ் கூந்தல் போந்து தெய்வமா முனியைக்
[கண்டாள் (31)

நாணொடு மீண்டு புக்க நங்கைநீ யாரை யென்ன
வேணவா வோடு நின்ற னருளினல் விறலின் மிக்க
மாணுடை மைந்தர் தம்மை வயிறுவாய்த் திடுவான்
[போந்தேன்
பூணருந் தவத்தோ யென்னப் புணர்ந்திவை யுரைக்க லுற்றான்
(32)

பொன்புரை திதலை பூத்த பொம்மல்வெம் முலையாய்க் கேட்டி
நன்பக லணைந்த வாற்றா னனிலம் வெருவச் செய்யும்
வன்புடை மனது வெய்ய மைந்தரைப் பெறுதி யென்ன
வன்பொடு வணங்கி நின்போ லருமக வளித்தி யென்றாள்
(33)

கன்னலு மமுதுங் கைப்பக் கனிந்தமென் குதலை கேட்டிப்
பின்னர்நீ யுயிர்க்கு மைந்தன் பெட்பொடு மென்போ லீண்டு
மன்னுமற் றுன்பாற் றோன்றி வரம்பெறு மாயு ளெய்தி
யுன்னருங் குணத்த னாகி யுலப்பினுள் வாழ்வ னென்றான் (34)

இருபது கரமுஞ் சென்னி யீரைந்துந் தாங்கு கின்ற
திருவிலி தன்னை முன்னஞ் சிறப்பொடும் வயிறு வாய்த்துக்
கருவரை யனைய கும்ப கன்னனை யின்று பின்னு
முருவவோ டரிக்கட் சூர்ப்ப நகையையு முயிர்த்தா ளன்றே (35)

விடணன் றன்னைப் பின்னும் வியப்பொடு மீனிதி வின்றுங்
கோடரிக் கண்ணு ளந்த மைந்தரை யுவந்து நோக்கி
சேடமை திருவின் மிக்க வியக்கர்கோன் செல்வ மெய்த
நீடிருந் தவங்க ளாற்றி நின்மின்க ளென்னப் போனார் (36)

ஐந்தழ னடுவி னின்றே ராயிரம் பருவஞ் சென்றால்
மைந்துடைச் சென்னி பத்தி லொன்றறுத் தழலில் மாட்டி
வெந்திற லரக்கன் பத்தாஞ் *சென்னியும் வெட்டு மேல்வை
வந்துசெங் கமலப் புத்தேள் வரங்கொளென் றுரைத்த
லோடும் (37)

விஞ்சைய ரவுணர் சித்த ருரகர்விண் ணவர்க டம்மாற்
றுஞ்சுத லன்றி யெல்லா வுலகமுந் துணைவில் வெல்ல
வெஞ்சமத் தற்ற சென்னி தோளிவை மீள வெய்தக்
கஞ்சநாண் மலரோய் நல்கென் றிரத்தலுங் கடவு ளீந்தான்
(38)

வீடணன் முன்ன ரெய்தி வேண்டுவ கேட்டி யென்ன
நாடொறுந் தரும சிந்தை யெய்துகா லுலவா தாவி
பீடுற நல்கென் றேதப் பிதாமக னளிப்ப விண்ணோர்
மாடுறு கும்ப கன்னற் குயர்வரம் வழங்க லென்றார் (39)

என்னலு மரக்க னுவில் வாணியை யேவி யெந்தை
யின்றுவேற் கும்ப கன்ன வரமொன்று வேண்டு கென்ன
மன்னுநித் திரைதா வென்று மருண்டவன் கேட்ப நல்கிப்
பொன்னவிர் கமலப் புத்தேள் தன்னுல கதனிற் புக்கான் (40)

---

* சென்னியும் விட்டு மேல்வை (பா. பே.)

ஊழ்வினைப் பயத்தால் மாந்தர்க் கொழியருல் வரங்கள் [பெற்றுப்
பாழியம் புயத்தார் மற்றோர் படர்வனத் தெய்து மேல்வைச்
சூழ்கடற் பருதி யொள்வாட் சுமாலிதன் மைந்த ரோடும்
வாழியென் றேத்தி யன்னோற் றழீயிவை வழங்க லுற்றான் (41)

கொடிமதி லிலங்கை மூதூர் கொள்கென மறுத்தல் [கேட்டாங்
குடல்சின வுருமே றன்ன பிரகத்த னுருத்து நோக்கி
யடல்கெழு மவுணர் தம்மைத் துணைவரென் றெண்ணு [தன்னோர்
மிடைதரு துறக்கம் விண்ணோர் விரகினிற் கொண்டிலாரோ (42)

ஆதலாற் கோடி யென்னு*மருட்பிர கத்தன் றன்னை
மேதகு குபேரன் பாற்போ யினிதினில் வேண்டு கென்ன
மீதுசென் றியம்பலோடு மியக்கர்கோன் றந்தைபாற் போய்த்
தாதினுற் றசக்கிரீவன் சொன்னவை யாவுஞ் சொன்னான் (43)

அளகைமா நகரில் நீபோ யமர்தியிவ் விலங்கை தன்னைத்
தனையவி பூலங்கற் றிண்டோட் டசக்கிரீ வற்கு நல்கென்
றுளமகிழ் தந்தை கூற வுவப்பொடு மளித்துப் போனான்
வளமிகு மிலங்கை தன்னின் முடிகவிழ்த் தரக்கன் வாழ்ந்தான் (44)

மின்னுநர்க் கால கேயன் விறைவொடும் வதுவை யாற்றத்
தன்னுடைத் தங்கை சூர்ப்ப னகையினை தயாவி னல்கி
மன்னிய கானின் வேட்ட மாடலு மயனோ டெய்துங்
கன்னலங் குதலைச் செவ்வாய்க் கன்னியைக் கண்டு சொல்வான் (45)

ஈங்குநீ யாரை யென்ன மயனென்பே னேமை யென்னும்
பூங்குழ லணங்கைப் புல்லிப் பொருவில் துந்துமி மாயாவி
*யாங்குல மைந்த ரோடு மம்பலைத் தகன்ற வாட்கட்
கோங்கிள முலைசே ரிந்தக் கோதையை யினிதி லீன்றேன் (46)

---

* யாங்குறு மைந்த ரோடும் (பா. பே.)

மேயபீ யாரை யென்ன விச்சிர வாமுன் வீன்ற
நேயநன் மைந்த னென்று நிகழ்த்தலு மயனன் போடு
காயெரி சான்றாய் மண்டோ தரிதனைக் களிப்பி னல்கிப்
பாய்கதிர்ப் பருதி வேலும் பரிவுட னளித்துப் போனான் (47)

முருக்கிதழ் முத்த மூரல் முகிழ்முலைக் கன்னி யோடு
மரக்கர்கோ னிலங்கை யெய்தி யன்புட னிருக்கு நாளின்
விரைச்செழுந் தெரியன் மார்பின் விரோசனன் புதல்வியீன்ற
திருக்கொள்வச் சிரச்சுவாலை *தனைக்கும்ப கருணன்
[சேர்ந்தான் (48)

ஆடல்வேற் சயூட னன்பி னளித்தருள் சாமை தன்னை
வீடணன் விதியின் வேட்டு மேதக வொழுகு நாளி
னேடவிழ் கூந்தன் மண்டோ தரியிக லிலங்கை வேந்தன்
பீடுறு மகிழ்ச்சி யெய்த யிராவணி தன்னைப் பெற்றான். (49)

கனைகுரல் முகிலி னார்த்துக் கலுழ்தலான் மேகநாத
னெனுமுயர் நாமம் பெற்றுங் கெரியென வளரு நாளில்
வனைகழ லரக்கர் கோனை மன்பதை வருத்த லென்னுத்
துனைவினி லளகை வேந்தன் றாதினு லுரைத்தல் செய்தான்
(50)

தூதுவ னரக்கன் முன்போ யுன்னுடைத் துணைவன் வெய்ய
மாதவம் புரிந்து திங்கட் கண்ணிசேர் வரத னோடு
மேதமில் நண்பு பூண்டா னின்னையு முலகுக் கெல்லாந்
தீதிழைத் தருளே லென்னுச் செப்பினே னென்ன லோடும்
(51)

வெஞ்சம மென்னில் வெய்ய விரிதழற் பிழம்பு கக்கி
நஞ்சுகொப் பளிக்கும் வாய்வாட் டடறூரிகி நாம வேலான்
றுஞ்சலில் விடையா னோடுந் தோழமைக் கொண்டா
[னென்னி
லஞ்சுவன் கொல்லோ வென்று வவன்றலை துணித்து
வீழ்த்தான் (52)

---

* தனைக்கும்ப கன்னன் சேர்ந்தான் (பா. பே.)

விழ்ந்தவ னுடலை வெய்ய வரக்கற்கு விருந்து நல்கித்
தாழ்ந்தவெம் மனத்துப் பேழ்வாய்க் கதழ்சினத் தரக்கர்
[கோமான்
சூழ்ந்ததன் சேனையோடு மமைச்சொடுந் தொலைவில்
[விண்ணோர்
வாழ்ந்திடுங் கயிலை மூதூர் மருங்குற வளைந்து கொண்டார்
(53)

கொடிமதில் வாயி லோரைக் கொன்றுவா ளரக்கர் கோமான்
முடிசிதர்ந் தொதுங்க வெய்ய மாணிபத் திரனை மோதி
யுடல்சினக் *குபேர னுவி யுலைந்திட வடித்து வீழ்த்திச்
சுடர்செய்புட் பகவி மானந் துணைவிலிற் கவர்ந்து போனான்.
(54)

இருநிதி யியக்கர் வேந்தன் றயரொழித் திமைப்பி னெய்தி
விரிகதி ரெறிக்கும் பைம்பொன் னளகையின் மேவ
[வெய்யோன்
பொருவருங் கிரியி லிங்கிச் சரவணம் புகுது மேல்வைத்
தெருவொடு விமான நிற்ப வரக்கர்கோன் சிந்தை செய்தான்
(55)

இத்தலை யெய்த வெந்தை யிறைவியோ டமர்ந்தா னென்ன
மைத்தகு மிடற்று நந்தி விலக்கவாண் முகத்தை நோக்கிக்
கைத்தலம் புடைத்து வெய்யோ னகுதலுங் கனன்று நந்தித்
துய்த்தலைக் குரங்கா லுன்சீர் தொலைகவென் றுருத்து
[வைதான் (56)

வைதலுந் தசக்கிரீவன் வான்றொடர் கயிலை வெற்பை
வெய்தினி லெடுப்ப வேந்தை விரற்றலை நுனியா லூன்றப்
பையுளுற் றழுது மாழ்கிப் பரமனைப் புழிச்சி வெய்யோ
னேதுணர் சாம கான மறிவொடும் பாட லுற்றான் (57)

---

* குபேரனுவி ஆவியுலந்திட (பா. பே.)

ஆயிரம் பருவ மிவ்வா றழுதலா லரக்கர் கோனுக்
கேவுற வியம்பு நாம மிராவண னென்றுங் கூறி
மாய்வறு வரமு நல்கி விடுப்பவா ளரக்கன் போந்து
மீயுய ரிமைய வெற்பின் மேவியோ ரணங்கைக் கண்டான் (58)

கண்டுநீ யாரை யென்ன வந்தணன் களிப்பி னேடு
மண்டரேத் தெடுப்ப வின்ற வருட்குசத் துவச னென்பே
னெண்டரும் வேத மோது மவர்க்கிடை பிறந்தே னென்னை
தண்டலின் மறையோர் வேத வதியெனச் சாற்றி னால் (59)

சொல்லருந் தந்தை தன்னைத் தோன்றியோ ராக்கன்
[கொன்றான்
முல்லைசால் கற்பி னன்னை முனியொடு முடிந்தாள் யானுங்
கல்லெலிர் வேலை நாப்பட் கண்டுயில் நெடியோன் றன்னைப்
புல்லும்வான் றவஞ் செய்கின்றேன் புலவுவே லரக்க
[வென்றாள் (60)

என்றலும் வலிதின் வெய்யோன் பற்றுமீர்ங் குழலை நங்கை
தன்றுணைக் கையா லீக்கிக் கிளையொடுஞ் சாம்ப ராகிப்
பொன்றிட வுன்னை யெய்தும் பிறப்பினிற் புரிவே னென்னக்
கன்றிய வுளத்தி னேடுங் கனலின்விழ்ந் தாவி மாய்ந்தாள் (61)

கோற்றொடி யிறந்த பின்னர் கொல்புலி யனைய வீரன்
போற்றரு மருத்து வப்பேர்ப் புரவலன் சாலை நண்ண
வீற்று வீற்றுக விண்ணோர் பறவையின் வெருவிப் போக
வேற்றமர்க் கெழுதி யென்ன மருத்துவ னெழுந்து வந்தான் (62)

வெஞ்சின மொழிதி யென்ன முனிவரர் விலக்க மன்ன
னெஞ்சலில் சாலை யெய்த விராவண னிகழ்ந்து போனா
னுஞ்சவா னவர்கள் மீட்டு முயர்மக முடித்துக் காக்கை
யஞ்சிறை யன்ன மஞ்ஞைக் கருள்வர மளித்துப் போனார் (63)

காதியை யனைய வெம்போர்க் கருதுதுற் சந்தன் றன்னைத்
நீதுற வரக்கன் வென்று திசைகடற் ருனை சூழத்
*தாதுனும் புறவு வைகுந் துகிற்கொடி மாடத் துச்சி
யாடவன் றடந்தேர் தேய்க்கு மயோத்திமா நகரஞ் சேர்ந்தான் (64)

வேறு

அனரன்ரியன் போர்வேண்டிய வரக்கன்முன மெய்திச்
சினவெங்கணை பொழியத்தனி தேர்நின்று மிழிந்தே
பனையொத்திடு கையானனி யடிப்பப் பதைபதையா
நினைவுற்றயர் தலும்வெய்யவ னிருபன்றனை நக்கான் (65)

மன்னற்கியல் படுபோரிடை மடிதல் வயங்கோட
லென்னத்தனி யெண்ணுதெனை யெள்ளிச்சிரித் தமையாற்
றுன்னுற்றவென் மரபின்னொரு தோன்றனனி தோன்றி
யுன்னைச்செகுத் திடுவானென வைதாருயி ரொழிந்தான் (66)

ஆற்றலொடுங் கொடியோன்பில மடையப்புகு மேல்வைத்
தோற்றுமிசை பயில்மாமுனி யரக்கன்முனந் தோன்றி
சாற்றும்பில வழியின்றிது தழல்கால்வடி வேலோய்
கூற்றின்னகர்க் கேகும்வழி யீதென்று குறித்தான் (67)

என்னுமுனி கூற்றேடுமீவ் வுரைகூறின னேகப்
பைந்நாகரோ டமர்செய்குதல் பனிவெங்கடல் கடைதல்
பின்னுகுமென் றடல்கூர்தரு பிறைவாளெயிற் றரக்கன்
னென்னுத்திசை சென்றூர்கழ னமனோடமர் செய்தான் (68)

காற்றின்கணை வெய்யோன்றனைக் கனலின்கணை கொல்லுங்
கூற்றின்கணை முதலாகிய கணையைக் கணைகோலி
மாற்றிச்சமர் புரிவேலையி னஞ்சித்திறன் மறலி
யேற்றம்பிறி தல்லாதுயர் யமதண்டமெ டுத்தான் (69)

---

* தாதுனும் புறவு வைகும் (பா. பே.)

அக்காலையின் மலரோனவ னெய்தாவட லரக்கன்
மிக்கான வரந்தாலிது விடலென்று விலக்க
மைக்கார்நிறக் கூற்றம்வெரு வோடுமறைந் தோடப்
புக்கானிலங் கையின்மீட்டுமம் புலிப்போத்தன வரக்கன் (70)

வேறு

துணிகதிர் நெடுவே லிராவணன் பிலத்திற்
றுன்னிவா ழுரகரைத் துரந்து
மணிமதி னகரில் வைகிடு நிவாத
கவசரை வாளம ரேற்ப
வணிகிளர் கமலத் தயனவ ணெய்தி
யாங்கவர்க் கிராவண னோடு
மிணையறு நட்புச் செய்தலு மாங்க
ணொன்றெழீத் திங்கணு ளிருந்தான் (71)

விரைவினன் னகர நீங்குழிக் கால
கேயரில் வித்தியுச் சிகுவன்
செருவினி லேற்ப வயனுயிர் செகுத்தத்
தேனுவைக் கண்டிடப் போற்றி
வருணனூர் புகுந்து மைந்தரை வென்று
வனப்புடை மாதரைக் கவர்ந்து
பொருவரு மிலங்கை புகுந்துசூர்ப் பணகை
தனைக்கர னூர்புகுத் தினனல். (72)

அருவரைத் தடந்தோ ளிராவணி யெண்டோ
ளந்தண னருளினு லடர்க்குஞ்
செருவினி லெவர்க்குந் தெரிவுறு தொளித்துச்
செருச்செயு மாயையு மொன்னர்
வெருவர வோங்குந் திரிதரு தேரும்
நிகும்பலை வேள்வியிற் பெற்று
மருவின னவனே டிலங்கையிற் புகுத
வீடணன் வணங்கின னுரைப்பான் (73)

வெருவர லின்றி மதுவென வுரைக்கும்
வெந்திற லவுணனீங் கெய்திப்
பொருவரு கும்பி னசியினைக் கவர்ந்தா
னென்னலு மிராவணன் புழுங்கி
யுரைபெறு தானைக் கடலெனச் சூழக்
குரோணிகா லாயிரத் தோடு
மருவலுங் கும்பீ னசியிரந் துரைப்ப
மதுவொடு மரக்கர்கோ னட்டான் (74)

பாழியந் தடந்தோண் மதுவொடுஞ் சூழ்ந்த
பலகிளைப் பரப்பொடு மரக்கன்
மாழைமென் னோக்கின் புலோமிசைக் கணவன்
மாநகர் தனதடிப் படுத்த
விழியங் கனிவா யியக்கிய ரமரர்
கின்னரர் மிதுனம்விற் றிருக்குஞ்
சூழ்சுடர்ப் பருதி போக்கற நிவந்த
கயிலையிற் றனைவின்வந் தடைந்தான் (75)

வேறு

கள்ளூற் றிருக்கு நறுமலர்ப்பைங்
காவி னரக்கனி றுத்திடலும்
பிள்ளைத் தென்றல் நறவுயிர்த்துப்
பிரிந்தா ருயிர்மேற் றனிநடப்ப
வெள்ளி விழிற் கதிர்பரப்பி
விழ்வோர் பிரிந்தோ ராருயிரை
யள்ளி யுண்ணுந் திங்களொடு
மடைந்த தந்தி மதுமாலை (76)

குணக்கும் விசும்பும் முகம்விளர்ப்பக்
குருக்குந் திங்கட் கொழுந்தன்பாத்
தணக்கு மகளிர் மார்பனைத்துங்
கவர்ந்து தரள வடந்தாங்கி

யணக்கு முலைமேற் ,றீயிழைக்கு
மாலைப் போதி னடலரக்கன்
வணக்கு மருங்குன் மடவார்தங்
காம மெண்ணி வருந்துற்றான் (77)

குடபாற் பிறந்த குழந்தைமதிக்
கொழுந்திற் பொழிய நிலாக்கற்றை
வடவா முகம்போ லுடல்வெதுப்ப
மம்ம ரோடு மடலரக்கன்
கடல்வாய்த் தோன்றி யமுதுயிர்க்குங்
கதிர்வெண் முத்த வடம்பரியா
வுடலுஞ் சிலைவேள் வின்மையினை
வியந்து வருந்தோ டுறைபோழ்தின் (78)

வேறு

விளிம்புறத் தூக்குஞ் செழுஞ்சுடர்க் கற்றை
மேகலை மனுவுட னிமைப்ப
விளம்பிறை வடந்தாழ்ந் தேர்குடி யிருந்த
விளமுலை வெற்பினைத் தாங்கித்
தளர்ந்திடு மிடுகு நுசுப்பென விரங்கித்
தவளவாய்க் கிண்கிணி புலம்ப
வளர்ந்தறி வரிய கருங்குழன்மீதி
னஞ்சிறைத் தும்பி பாட்டயர (79)

கண்கவர் வனப்பிற் கதிர்சுரந் தொழுகு
கடல்வயிற் றரித்தவாண்முத்த
வொண்கதிர் முறுவ லிளைஞராருயிரை
வேரொடு மகழ்ந்தொளி பரப்ப
விண்குடி வாங்க மேக்குயர்ந் தோங்கு
*வெம்முலை யுலகெலாங் கவரப்
பண்கனிந் தொழுகு மென்மொழிக் குதலை
பாகொடு தோழமை கொள்ள (80)

* மென்முலை யுலகெலாம் (பா. பே.)

காவியங் குமிழுங் கடந்தெறி தடங்கண்
கடியகூற் றினைமுத லமர
ராவியுண் டுமிழ்ந்து செவ்வரி யொழுகி
யயிலொடுக் தோழமை கொள்ளா
வேவினை முனிந்து கொலைத்தொழில் பழுத்துத்
தவக்குறும் பொன்றற வெறிந்து
மாவகிர் மருட்டி மதர்வைகொப் பளித்து
வள்ளைவார் குழைமிசை நடப்ப (81)

கரையெறி கடல்வாய்க் குளித்தமுத் திமைக்குங்
காஞ்சிசூழ் கைவள ரல்கு
*லுருவமே கலையி னியற்பறக் கைபோ
யுயர்திசை முழுவதுங் கவரத்
திருவநீள் புருவக் கொடிமதன் பிடித்த
சிலையென வழகு கண்படுப்ப
விரியிருள் பருகு சேட்டிள மதியின்
விழுத்தகு வாணுத லிலங்க (82)

வேறு

வன்னமுலை மாதரடி யிடுதனி வாழ்த்தப்
பொன்னசல மொத்துவளர் பூண்முலை சுமந்தே
மின்னிடை வருந்துமென மேகலை யிரங்க
வன்னமெனு மென்னடை யரம்பையவண் வந்தாள் (83)

வந்திடு மரம்பையை யிராவணன் மகிழ்ந்து
பைந்தளிர் மருட்டிய பதத்துணை பிடித்துச்
செந்துவ ரிதழ்க்கனி திருத்தக வளித்தே
யுய்ந்திட வெனைத்தனி புரக்கென வுரைத்தான் (84)

என்னலுநின் முன்னவ னிதிக்கிழவ னின்ற
மன்னனள கூபர னெனைத்தனி வரித்தா
னுன்னுடன் மணப்பது தகாதென வுருத்துக்
கன்னல்புளித் தென்னநனி கட்டுரை புகன்றாள். (85)

* உருவமே கலையினயர்ப்பற (பா. பே.)

சில்லென கிளிக்கிளவி கேட்டருளில் தீயோ
னல்குல்பகர் வோற்குமுறை யோவென வறைந்தே
வல்லையி னடைந்துவலி திற்றனி பிடித்துப்
புல்லியமு தன்னமயில் போககனி துய்த்தான். (86)

ஆங்கவன் விடுத்திடலு மாரமுத மன்னுள்
கோங்கு முலைமாது ளகூபரனை நண்ணி
யிங்கிவை யியம்பவவ னின்னுமிது போலும்
தீங்குசெயி னவன்றலை தெறிக்கவென வைதான் (87)

அய்யகம லம்பொதி யவிழ்ப்ப வரிமான்றேர்
வெய்யவ னுதித்திடலு வெந்திற லரக்கன்
மொய்யம ருடற்றுபல தானைபுடை மொய்ப்ப
மையிலம ரர்பதியில் வந்தனன் வளைந்தான் (88)

இந்திரன் முகுந்தனுழை யெய்தியிவை கூற
வெந்திற லரக்கனுயிர் விட்டிடு காலம்
வந்திடுவ னின்றுறல் தகாதென மறுப்ப
வந்திலுயர் வான*வ ரருஞ்சமரில் நின்றார் (89)

வேறு

விண்ணவர் கடலந் தானை வெருக்கொடு முறிய வெற்றி
யண்ணலஞ் சுமாலி வெம்போர் புரிதலு மழன்று சீறி
நண்ணிய வசுக்க டம்மி*னவையில்சா வித்தி ரிப்போர்ப்
பண்ணவன் கதையினாலே சுமாலியைப் படுத்திட்டானே (90)

அள்ளிலை வயிரப் பைம்பூ ணிராவண னழன்று சீறிக்
கொள்ளைவெம் பகழி வாங்கி மலையினிற் குரீஇமொய்த் [தென்ன
வெள்ளைமால் யானை மேலும் விண்ணவற் கிறைவன் ]மேலு
யெள்ளிட விடமின் றென்னச் சிலைகுழைத் தெய்திட் டானே (91)

* அருஞ்சமரி லுற்ளூர் (பா. பே.)

இந்திரன் வருணன்காற் றுக் கிறைவன்வெங் கூற்ற சங்கி
நந்திலி னளகை வேந்த னுமவேல் நிருதி தண்ணென்
சந்திர மவுலி யன்றோர் மருத்துவத் தலைவர் தாக்கி
வெந்திற லரக்கர் கோனை வளைந்துவெம் பூசல் செய்தார் (92)

தாப்புலி யனைய சிற்றச் சயந்தனை மேக நாதன்
யாப்புறுத் திடுதற் கெய்தி விகற்பவு லோமன் போந்து
காப்பனென் றெடுத்துப் போகிக் கடலிடை யொளிப்ப [வெய்யோன்
பாப்பணைப் பள்ளி யான்றன் முன்னவன் பால்வந் [துற்றான் (93)

வச்சிரப் படையால் வெய்ய வரக்கரை மறிய வாட்டிக்
கச்சையங் களிற்றிற் றேன்றுங் கதிர்முடி யமரர் கோனை
நச்சர வணியும் புத்தே ணல்கிய மாயை தன்னு
விச்சையில் மேக நாதன் யாப்புறுத் திதனைச் செய்வான் (94)

இந்திரன் றன்னை வவ்வி யிராவணி யிகலி னேற்ற
யந்தமி லமரர் யாரு மமர்தொலைந் தோட மோதித்
தந்தைமுன் னுய்ப்ப வெய்யோன் றுனையங் கடலி னோடு
மெந்திரப் பொறிசே ரிஞ்சி யிலங்கையின் வந்து [சேர்ந்தான் (95)

இன்னவை யமரர் கூற வீர்ங்கம லத்தின் மேய
முன்னவ னிலங்கை யெய்தி முகமனன் கியம்பி விண்ணோர்
மன்னனை விடுதி யென்ன ஙீகும்பலை மகத்திற் றேன்றும்
பொன்னெடுந் தேரி னெய்திற் பொன்றிடா வரநல் கென்றான் (96)

அவ்வர மலரோ னல்கி யருளிலிங் கிரனை மீட்டுச்
செவ்விசே ரரக்க னும மிந்திர சித்தென் ருேதி
யெவ்வெலாத் திசையும் போற்று மிந்திர னயர்ச்சி நீர
மவ்வலங் கரிய கூந்தல் வாணிதன் கேள்வன் சொல்வான்
(97)

ஆள்வழக் கறுக்கும் வேற்க ணகலிகை முலையிற் ருேய்ந்த
நீளிரும் பாவந் தன்னால் நெடுந்துய ருழந்தா யிது
வேள்வியோன் றியற்றத் தீரு மென்றலும் வேள்வி யாற்றி
வாளொளித் துறக்கம் புக்கான் மலரயன் மறைந்து போனன்
(98)

என்றரு முனிவன் கூற விராமனுங் கியம்ப லுற்ருன்
குன்றினை யெடுத்த திண்டோ ளிராவணன் குறுகும் போரில்
வென்றமை யன்றித்தோற்ற துண்டெனில் விளம்பு கென்னத்
*தென்றமிழ்த் தெரித்த செஞ்சொன் முனிவரன் செப்ப
லுற்ருன். (99)

பொன்வரை விழுது விட்டா லன்னதோர் பொற்பு வாய்ந்து
மன்னுமா யிரங்கை யோடும் வாளமர்க் களத்தி னெய்துந்
துன்னுபே ரருச்சு னன்றன் சூழலி னிராவ ணப்பேர்
மன்னவ னெய்தி யன்னேற் காண்கலான் வல்லை மீண்டான்.
(100)

நருமதை யாற்றி னுடி வெண்மணற் குன்றி னன்கி
னரனுடைப் பூசை யாற்றி யிராவண னமரு மேல்வை
மருவுமா யிரம்பொற் கையால் வரநதி தடுத்து வேந்தன்
பொருவரு மகளி ரோடும் பூம்புன லாட லுற்ருன் (101)

குடபுலத் தெதிர்ந்து தெண்ணீர் வருதலு மரக்கர் கோமா
†னடுதிறற் சுகனைக்கண்ணு லறிகெனத் தூண்ட வன்னேன்
மிடலுடை யருச்சுனப் பேர் வீரியன் கரத்தா லாற்றை
யடலொடுந் தடுத்து நீராட் டயரநீ ரெதிர்ந்த தென்ருன்(102)

---

* தென்றமிழ்க் கோத்த (பா. பே.)
† அடுதிறற் சுதனை (பா. பே.)

சீற்றமுந் தானும் வேறு தெரிக்கிலா வரக்கன் சீரீ
யேற்றலு மருச்சு னப்பே ரேந்தலீர் குடைந்து மூழ்குங்
கோற்றொடி யவரை யஞ்ச லென்றுவெங் குருதி வெள்ள
மூற்றிருந் தொழுகும் வெய்ய கதையொடு முருத்து வந்தான். (103)

வருதலு மரக்கர் கோமான் வாய்மடித் தெயிறு தின்றுங்
கிருபது கரத்தி னாலு மெடுத்தொரு கதையா லெற்ற
வெருவர லின்றிக் காத்த வீரியன் கதையா லெற்ற
வருவரை வீழ்ந்த தென்ன வஞ்சவிற் கிடைபோய் வீழ்ந்தான் (104)

வீழ்ந்தவா ளரக்கன் றன்னை விரைவின்யாப் புறுத்தி மன்னன்
றாழ்ந்துதன் சேனை வாழ்த்தத் தன்னகர் புகுது மேல்வை
யாழ்ந்தநூற் கேள்வி மிக்க புலத்திய னரசர் போற்றி
வாழ்ந்திடு கென்று வெய்யோன் வன்சிறை நீக்கி னானே (105)

தளர்வொடு மிலங்கை யெய்தித் தன்கிளைப் பரப்பி னோடு
மளிமுரல் தாம மார்பன் சிலபக லமர்ந்த பின்னர்க்
களியொடும் வெம்போர் வேட்டுக் கதழ்சினக் களிறு போலக்
கிளரொளி மாடஞ் சூழ்ந்த கிட்கிந்தை நகரி னுற்றான் (106)

வாளமர் வேட்டு வந்தேன் வாலியெங் குளனோ வென்ன
வாளரி யேறு போலு மிராவண னறையத் தாரை
நீள்கட னான்கு மெய்தி நீறணி கடவுள் செய்ய
தாளிணை வணங்கப் போனான் வல்லையேற் சார்தி யென்றாள். (107)

என்றலு மரக்கன் றென்னங் கடலினி லிமைப்பி னெய்தி
வன்றிறல் வாலி பின்போய்ப் பற்றலு மறங்கொள் வாலி
குன்றனான் றன்னை வாகு மூலத்திற் குழையச் சேர்த்தித்
துன்றுநாற் கடலுந் தாவிக் கிட்கிந்தை சூழல் சேர்ந்தான் (108)

அவ்வுழி யரக்கர்கோனை விடுத்துநீ யாரை யென்னச்
செவ்விதின் முகங்கள் பத்துங் கோட்டிநா ணேடுந் தீயோ
னெவ்லொத் திசையும் வென்ற விராவண னென்போ [னுன்றன்
கவ்வையில் தோழ னென்ன யெரிகரி யாகச் சொன்னான் (109)

ஆங்கணோர் திங்கள் வைகி யடல்புனை யரக்கர் கோமான்
வீங்குநீர் வேலை சூழ்ந்து வெண்மதி நெற்றி தோயு
மோங்குசீ ரிஞ்சி முற்றி யொள்ளொளி மாடம் போர்த்த
தீங்கறி யிலங்கை தன்னிற் சேர்ந்தினி திருந்தா னென்றான் (110)

பாரினில் விசும்பினீண்ட பாதலத் திணையி லாத
மாருதி யிருப்ப வாலிக் கிரவிசே யஞ்சி மாழ்கிக்
கார்வரை யிடங்க டோறு மொளித்ததென் கழறு கென்னச்
சீர்கெழு மிராமன் கேட்பத் தென்றமிழ் முனிவன் சொல்வான் (111)

வேறு

கேசரி யென்னுங் கவிக்குலக் கிறைவன்
*மனைவியாங் கிடபுரைச் செவ்வா
யாசறு வனப்பி னஞ்சனை வயிற்றி
னளிக்கவ தரித்த வஞ்ஞான்றே
மாசறு கனியென் றிரவியை யிராகு
வவ்வுழிப் பாய்தலு மிராகு
தேசுறு மகவாற் குரைப்பநாற் கோட்டுத்
திக்கய மூர்ந்தவ னடைந்தான் (112)

இந்திர னடவும் பகட்டின் மேற்றுவ
வெரியுமிழ் வச்சிரப் படையால்
நந்தலின் றெய்து நாகிளங் கவியின்
கொடிற்றின்றேற் றுக்கலு மிறப்ப

* மனைவியாங் கிடைபுரை செவ்வாய் (பா. பே.)

மைந்தன்வியந் தமையா லுலவைவந் தெய்தி
வரியியங் காமலெவ் வுயிரு
மெந்திரப் பொறிபோ லின்றிட வியற்ற
மலரய னுங்கண்வந் திறுத்தான். (113)

கையினல் கமலப் பொகுட்டுறைக் கடவு
ளீவலுங் காற்றிளஞ் சிறுவ
னுய்தடி பரவ வச்சிரப் படையோ
னனுமனென் ருருபெயர் பகர
வைதுண ரீசன் முதலிய தேவ
ரனைவருந் தத்தம படையால்
மெய்யினி லூறு படாவரத் தோடும்
வீய்ந்திடா வாயுளு மளித்தார் (114)

கஞ்சனை முதல தேவர்கண் மறையக்
காற்றிறை கையினுற் றுங்கி
யஞ்சனை கையிற் கொடுத்தன னகல
வனுமனவ் வரத்தினல் முனிவ
ரெஞ்சுமா றியற்ற வன்னவ ரிராம
னிணையடி சேர்ந்திடு மளவுஞ்
செஞ்சவே தனது வலியினை யறியா
திருக்கெனச் சீறினர் சபித்தார் (115)

திறல்புனை யருக்க ரச்சென வுரைக்குந்
தீதறு கவிக்குல வேந்தன்
அறனுடை வடபால் மகளிராந் தலத்தின்
னண்ண லு மணங்குரு வெய்த
மறனுடை மகவான் முன்னரும் பின்ன
ரிரவியு மணத்தலா லன்னோன்
விறல்கெழு வாலி தன்னொடும் விளங்கு
சுக்கிரீ வன்றனைப் பயந்தான் (116)

தாமரைக் கிழவ னருளினற் பின்னுந்
தன்னுரு வெய்தியக் கவிவேந்(து)
ஏழுற நாளுஞ் சிறந்தகிட் கிந்தை
யெய்தியா ருயிருலந் திடலும்
நாமவேல் வாலி தனைக்கவிக் கிறையாய்
நன்முடி கவிப்ப மற்றவனுங்
காமரு தடந்தோ ளிரவிசேய் தன்னைக்
கதழ்சினத் தொடுதுரந் தனனல் (117)

ஆங்கவ னமைச்சர் மாருதி தனது
வலியினை முனிவர ரறைந்த
தீங்குறு சாபத் தாலுண ராது
திரிந்தன னெனவிவை கூறி
வாங்குவிற் றடக்கை யிராமனுக் காசி
வழங்கிமா முனிவர ரோடு
நீங்கருந் தவத்துக் குறுமுனி நிகரில்
பொதியவெற் படைந்தன னென்றான் (118)

இருபத்தாறுவது
அகத்தியன் இராவணன் மரபுரைத்த வத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 1221

---

## இருபத்தேழாவது
## இராமன் வைகுந்தமடைந்த வத்தியாயம்.

---

என்றலு முனிவ னியாழ்முனி யோடு
மிந்திரன் கேட்டிட முகுந்தன்
மன்றநல் லிராமன் பின்னிமைத் ததுவும்
வைகுந்த மடைந்திடுஞ் செயலும்
நன்றுற வுரைத்த படியெமக் கிசைத்தி
யென்றலு நவையறு சூதன்
தன்றுணைக் கையால் வியாதனை வணங்கித்
தயாவொடு மினிதெடுத் துரைத்தான் (1)

ஐயசெங் கமல மீதுழ்க்கத வடைப்ப
வாக்கித முரம்பல்வாய் மலர
வெய்யவன் *குடபால் கடல்குதித் திடலும்
விற்றெழில் பழுத்ததோ ளிராமன்
செய்கடன் முற்றித் திங்களித் துவர்வாய்
சீதையோ டருந்துயில் புரிந்து
மொய்கதி ரிரவி முளைத்தலு மீசற்
பழிச்சிவேத் தவையினுட் புகுந்தான் (2)

புகுதலும் பரத விலக்குவ ளிளவல்
புண்ணிய வசிட்டனை முதலாந்
தகவுடை முனிவர் சுமந்திரன் முதலாய்ச்
சாற்றிய மந்திரித் தலைவர்
பகல்கெட விமைக்கும் பருமணி மவுலி
விடணன் பருதிசேய் முதலோ
ரகமகிழ் வோடுந் தத்தமக் கினிதி
னமைத்தபொன் னாசனத் திருந்தார் (3)

அடற்கரும் வெற்றிக் கிணையறு சனகன்
கேகய னடற்பிர கத்தன்
மடக்கொடி சீதை தன்னைவா ளரக்கன்
வவ்வின னென்னவேற் பரதன்
படைத்துணை யழைத்த கூற்றுறழ் மொய்ம்பிற்
பலவகைப் பாடைமன் னவர்கள்
கொடைக்கட லிறுக்குந் தடக்கைவே லிராமன்
கோதறு வேத்தவை யடைந்தார் (4)

சனகனை முதலா மன்னவர் தம்மைத்
தழீக்கொடு முகமனன் கியம்பிப்
பனையுறழ் தடக்கைக் களிறுவாம் புரவி
பாய்பரித் தேருயர் வீதியம்

குடபால் கடல் குளித்திடலும் (பா. பே.)

புனையுகற் கலன்கள் விலைவரம் பறியாப்
பொற்றுகி லளவற வழங்கிக்
கனைகழ லிராமன் விடைகொடுத் தருளக்
காவலர் யாவரும் போனார் (5)

நனந்தலை யுலக மொருகுடை நிழற்று
நம்பிதன் னோடும்வேற் சனகன்
கனம்படி கூந்தற் சீதைதன் னிருக்கை
சேர்ந்துதன் கண்பனி யுகுத்து
மனங்களி கூர்ந்து வாகைவேற் பரதன்
வழிவிடுத் தயோத்தியி னெய்த
வனம்படி தடஞ்சூழ் வயல்விளிம் புடுத்த
வணிகெழு மிதுலையி னடைந்தான் (6)

கேகயத் தரச னிலக்குவன் பின்போய்
விடுத்திடக் கேகய மடைந்தான்
சேகெறி காசிக் கிறையவ னிளையோன்
விடுத்திடத் தன்னகர் சென்றான்
வேகவெம் பரித்தே ரேனை மன் னவர்கள்
வீடண னோடுசுக் கிரீவன்
போகுயர் நெறிபோய் விடுத்தனர் மீளத்
தத்தம பதியிடைப் புகுந்தார் (7)

அலர்கெழும் பருவம் பின்னுமொன் றகல
வரக்கர்கோ னிரவிசே யனும
னிலகுபொற் கழற்கா லங்கதன் சாம்பன்
குகன்முதல் யாவரு மகிழ
விலகிவில் லுமிழும் பலகலன் காம
விழுநிதிக் குப்பைகள் வழங்கி
மலர்மகள் கொழுநன் விடையினி தருளத்
தத்தம பதிமருங் கடைந்தார் (8)

தகைமலர் கூந்தற் குழைபொரு தடங்கட்
டாரையை மதிமுக ருமையை
முதலிய வெவர்க்கு மளப்பரு நிதிய
மொய்கதிர் கலன்பல வழங்கி
மதுமழை பிலிற்று மலர்குழற் சீதை
விடையினி தளித்தலும் வணங்கி
கதிர்மணிச் சிவிகை யூர்ந்துகிட் கிந்தை
நகரினுங் கவர்கடி தடைந்தார் (9)

நீங்கருஞ் சிறப்பிற் புட்பக விமான
நீளிற மாயன்முன் னெய்தித்
தீங்கறு நிதிக்கோ னினக்கெனை யளித்தா
னென்னலுந் திருமறு மார்ப
ணுங்கது நேர்ந்து நினைப்புழி யென்மாட்
டணுகென விடுத்தலும் விமான
மோங்குசீர்க் குபேரன் றன்னுழை யெய்தி
யுவப்பொடு மிருந்ததை யன்றே (10)

கருங்கழுத் தீன்ற வெள்ளிவெண் பாளைக்
காய்க்குலைக் கமுகநீள் வனத்திற்
பருந்திருந் துயரு மேழ்நிலை மாடப்
பான்மதிப் பயங்கொண்முற் றத்திற்
செருந்தில்தாழ் வாவிக் கரைகளிற் பளிக்குத்
திண்ணையி னுயர்ந்தசெய் குன்றின்
முருந்தவெண் மூரற் சீதையோ டாடி
முகினிற வண்ணனின் புறுநாள் (11)

கொம்புறை வாழ்க்கைக் குயில்குடைந் துகுத்த
பூந்துகள் குவிமணற் குன்றி
னம்பர முழுதும் பொற்றுகள் சொரிந்த
வாறெனச் சொரியவந் தளிர்கள்

செம்பொன்மென் றகட்டின் பொற்பினைக் காட்டத்
திருவனில் படப்பைகள் யாவும்
வம்பலர் தூற்றத் தணந்தவர் துயர
வந்தது *பங்குனிப் பருவம் (12)

பங்குனிப் பருவம் வருதலு மையன்
பராரைமென் சாந்தணி யாக
மங்கலும் மேனிச் செய்யவாய்ச் சீதை
யம்பகட் டிளமுலை யுழக்கத்
திங்கள்வெண் மதியைத் தெளித்தன வாவித்
தலந்தொறுந் திங்குயிற் குதலை
மங்கைய ரோடு வாசநீர்க் குடைந்து
மதுமலர்ச் சோலைதோ றமர்ந்தான் (13)

பட்டிகை யுடுத்த பங்கய வல்குற்
படர்முலைப் பவளவாய்ச் சீதை
யிட்டிடை மெலிய நுண்டுகிற் றுகை
யிருநிலந் தைவரப் பெயர்ந்து
கட்டழ குடைய காளையோ டாடிக்
காமர்மென் செழுமலர்க் கொய்து
வட்டிகைத் தீட்டு மோவமு நாண
மாதவிப் பந்தரி னடைந்தாள் (14)

மடலவிழ் பெண்ணைக் குரும்பையை நோக்கும்
வள்ளலை முனிந்துபைந் தோகை
படைமலி நெடுங்கண் சிறிதுசேப் பூரப்
பைந்துழாய் துயல்வரு தோளா
னடிமலர் நீவித் தொழுததை முனியி
னுய்யுமா றரிதென விறைஞ்ச
விடுகதிர் முத்து முருந்தமு நாண
வெண்ணிலா நகைமுகிழ்த் தனளால் (15)

---

* பங்குனித் திங்கள் (பா. பே.)

அழிந்துதேன் குமிழி யெழமலர்ப் பொகுட்டி
ஞேசலிக் கின்றபா லன்னங்
கழிந்தபே ரன்பிற் பெடையொடுந் துயிலுங்
கழனிசூழ் கோசல நாடன்
*ஞெழிந்துமட் டொழுகு நாண்மலர்க் கோதை
துணைமுலை மணந்திடு நாளிற்
கொழுந்துணர் கொழுதி மாங்குயில் லேனைக்
கூவவந் திறுத்தது வேனில் (16)

வேறு

வண்ணக் கழுநீர் மாலையுடன்
மலயச் சாந்த மெய்யணிந்து
தண்ணங் கமலத் தடங்குடைந்து
தகைபா ராட்டிச் சனகியொடு
மண்ணல் செம்மாந் தின்புறலு
மிளிவாய்த் தும்பி யருங்கைதைச்
சுண்ண மாட முருகுயிர்த்துத்
தோன்றிற் றந்தண் முதுவேனில் (17)

நான நெய்யிற் கருநெல்லிச்
சாற்றி னன்கி லீராடிக்
கான்வாய்ச் சுரும்பர் முருகுயிர்க்குங்
கலவைத் தொய்யில் முலைக்கணிந்து
தேன்வா யுயிர்க்குங் கோதையொடு
நம்பிச் செம்பொற் கிழிநிலையிற்
பான லுண்கட் கூத்தியர்வாய்ப்
பாடல் கேட்டு மகிழ்வுற்றான் (18)

அந்தண் கழுநீர் நறவருந்தி
†யளிமென் பிள்ளை கறிகற்குங்
கொந்து கமழு மல்லிகைப்பூங்
குழுங்கண் மாலை சுவற்புரளச்

* வழிந்தமட் டொழுகு நாண்மலர்க் கோதை (பா. பே.)

† அளிமென் பிள்ளை கறிகற்கும் (பா. பே.)

செந்தார் பசியக் கிள்ளைமொழித்
தெய்வத் திங்கள் வாண்முகத்து
நந்தா விளக்கின் முத்தநகை
†யிருந்து மாந்தி நயப்புற்றான் (19)

முல்லைப் போது முறுவலிப்ப
முகிழ்மென் காந்தள் கைகுலைப்ப
மல்ல லோங்கு கனமுகட்டி
னிமையாக் கருங்கண் மயிலாலக்
கொல்லுங் கூற்றிற் பிரிந்தவர்மேல்
வாடை நடப்பக் கடல்குடித்துக்
கல்லென் றிடித்துத் துளிபிலிற்றிப்
புகுந்த தந்தண் கார்காலம் (20)

தண்ணொண் முத்து வடநீக்கி
தழல்வெம் பொறியுண் பேரொலியின்
வண்ணச் செங்கேழ் மயிர்ப்போர்வை
போர்த்து நரந்தம் வடிகொண்ட
சுண்ண மாடிச் சண்பகமென்
றுணர்ப்பூந் தாமங் கமழுமுடித்
தண்ணல் வளியு மிடைபோழா
முயக்கி னணங்கோ டின்புற்றான் (21)

*பருக்காற் செந்நெற் கொழுங்கதிர்கள்
பவளக் கோவைத் துணர் தூக்கக்
குருத்து விரிக்குங் கோழரைய
வரம்பை சுமந்த கூன்புறக்காய்
விரித்த மென்றோற் சிறைப்பறவை
யணில்வாய்க் கொண்டு மேவுதுணைக்
கருத்த தழல்வாய் வாடையொடுங்
கூதிர்க் கால மணைந்ததால் (22)

---

* பருத்தாட் செந்நெற் (பா. பே.)

† விருந்து மாந்தி (பா. பே.)

மயிர்வாய்க் கூந்தற் பிடியூர்ந்து
வள்ளை புரட்டு மதர்நெடுங்கண்
வெயில்கொப் பளிக்கு மருமணிப்பூண்
மகளிர் போந்து விளைசெறுவிற்
பயிலு மன்னத் தொடுமொதுங்கி
பைந்தாட் செந்நெற் கதிர்சூடிக்
கயவாய் வாளைப் பகடுழக்கும்
புதுநீ ராடிக் களிப்புற்றார் (23)

கவைத்தா ளலவன் கிளைத்தகுழிக்
கழைக்கண் வெடித்த பருமுத்தங்
குவித்துத் தூர்க்குஞ் செழும்பழன
விளையாட் டயர்ந்து குவளைக்கண்
செவித்தா ரகற்றுஞ் சிதையொடுந்
திண்டோட் செம்மல் செம்மாப்புற்
றுவப்பி னோடு முறைநாளி
னுற்ற துடற்றுப் பனிக்காலம் (24)

பளிதச் சுண்ண முகிரளைந்துப்
பருக்கா ழார நறுந்துகளின்
வளவிற் றிதலை முலையணிந்து
வடிக்கண் கரிய மையெழுதி
நளிகொன் றேங்கு குரூஉப்புகைதாழ்
நகைவெண் முத்த மஞ்சத்திற்
றுளவ நெடுமால் சீதைமுலைக்
குவட்டி னுள்ளந் துவக்கொண்டான் (25)

வேறு

*பூந்துகள் கரிய வட்டிப்
பொற்புவிற் றிருந்த மார்பிற்
சாந்தகங் கிழியச் சாடித்
தடமுலை யுழக்கு நங்கை

* பூந்துகள் கமழ வெட்டி (பா. பே.)

யேந்தலோ டிருக்கு நாளின்
வலம்புரி சூற்கொண் டென்ன
மாந்தளி ருறழு மேனி
வாணுதல் கருப்ப முற்ருள் (26)

ஐயசெங் கமல மன்ன
முகம்விளர்ப் பெய்த வம்பொற்
*றெய்யில்வெம் முலைகள் வீங்கத்
துடியிடைக் கண்ணிற் ருேன்ற
மையவாங் கரிய கூந்தல்
கரியமட் சலாகை யுண்டு
மெய்மலிந் துயங்க நாளும்
விழுத்தகு வயாநோ யுற்ருள் (27)

திருந்தெழிற் குழையுந் தோடு
மொளிகெழு திருவில் வீசக்
கருங்கண்வெம் முலைக டாங்கி
நுசுப்பிறு மென்று காமர்
வருந்துநாய் நாவி னன்ன
மலரடிச் சிலம்பு பம்ப
முருந்திள முறுவற் சீதை
யிராகவன் முன்ன ருற்ருள் (28)

வந்தடி வணங்கி நின்ற
வணரிருங் கூந்தற் செவ்வாய்ப்
பைந்தொடி தன்னைப் புல்லிப்
பவளவாய்க் கனியை மோந்தாங்
கந்தமி லுவகை யோடுங்
குறங்கின்வைத் தமுதச் செவ்வாய்ச்
செந்திரு வயாநோய் தன்னல்
விழைந்ததென் செப்பு கென்ருன் (29)

---

* தொய்யின் மென் முலைகள் (பா. பே.)

என்றலு நாணி ேனாடு
மெழில்புனை யெருத்தங் கோட்டி
நன்றறி முனிவர் தங்கள்
பன்னியர் மருங்கு நண்ணிப்
பொன்றரு நிதிய நல்கிப்
போந்திட வேண்டு மென்னக்
குன்றனு னோர்ந்து புல்ல
வெண்ணையிற் குழைந்திட் டாளே (30)

அத்தவெற் படைந்த வெய்யோ
றுதயவெற் படையுங் காறுங்
கத்திகை கருமென் கூந்தற்
காம்புறழ் பசிய மென்றோள்
முத்தக முரிஞ்சு பொம்மன்
முகிழ்முலைப் பவளச் செவ்வாய்
மைத்தவழ் கரிய வுண்கண்
மங்கையோ டாடி னானே (31)

வேறு

புலரியி லைய னங்கையோ டெழுந்து
பூம்புன லாடிவெங் கதிர்கா
லிலகொளி திங்கட் கண்ணியோற் போற்றி
யெண்ணலா திறையொடு முணங்கும்
விலகிவில் லுமிழும் வேத்தவை யதனின்
மடங்கலந் தவிசின்மே வுதலு
முலகெலா முழன்று திரியுமா கதரு
மொற்றரு மவ்வழி யடைந்தார் (32)

எங்கணுந் திரியு மாகதர் தம்மிற்
பத்திரன் றனையிறை நோக்கி
யங்கண்மா ஞாலத் தென்செயல் யாரு
முரைக்குமா றறைகுதி யெனலும்

பொங்கிய தரும வொழுக்கினின் னெறியிற்
    பொற்பினில் விறலினி னினக்குத்
துங்கநீ ளுலகி னிணையிலை யென்னச்
    சொல்லுவ ரெனத்தொழு துரைத்தே (33)

பின்னுமொன் றுரைப்ப ருலகினி லரக்கன்
    வவ்விய பெய்வளை தன்னை
மன்னின னென்ன வென்றலு மொற்றர்
    வாண்முக மெந்தைநோக் குதலு
மன்னது சரத மெனவவ ருரைப்ப
    வேத்தவை யகன்றுவ ளகத்திற்
றன்னுடைத் துணைவ ரோடுமாங் கெய்தி
    யிலக்குவ னோடிது சாற்றும் (34)

தொக்கபே ருலகம் பழித்தவை யொழியாத்
    தோமுறு மாந்தரை யாரு
மக்களிற் பதடி யென்குவர் சீதை
    மாண்புடைப் பத்தினி யேனும்
பொக்கம தறைவோர் செல்வமே போல
    முனிவரர் சாலையிற் போக்கித்
தக்கபே ருணர்வோய் மீள்கென விளவல்
    தாமரைக் கண்பனி யுகுத்தான் (35)

வெற்புறழ் தடந்தோ ளிளையவன் பொலந்தேர்
    சுமந்திரன் கொணர்கென விடுப்ப
பொற்புறு மணித்தே ராங்கவன் கொணரப்
    பூங்குழ லுறையுளி னெய்திக்
கற்பினுக் கரசைத் தொழுதுமா முனிவர்
    சாலைகண் ணுற்றிவண் மீள
வற்புட னெழுகென் றுரைத்தலு மகிழ்வுற்
    றுய்தொடித் தேர்மிசை யிவர்ந்தாள் (36)

கோமதி யென்னு நதிக்கரை யெய்திக்
கூரிருட் கங்குலாங் கமர்ந்து
காமரு கதிரோன் றோன்றிய பின்னர்க்
கங்கையங் கரையினிற் புகுந்து
நாமவேற் றடக்கைச் சுமந்திரன் றன்னை
யவ்வுழி நிறுவின னம்பி
யேமுறு மம்பி தன்னிலா யிழையோ
டெறிதிரைக் கங்கையா றகன்றான் (37)

கங்கைமா நதியைக் கடந்து வான்மீகி
கருதருஞ் சாலையி னணித்தாய்ச்
சிங்கவே றனைய விலக்குவ னெய்திச்
சீதையை வணங்கியீ துரைப்பான்
மங்கைகே ளரக்கன் வவ்விய நின்னை
மனையக மீட்டும் வைத்திடலா
லங்கண்மா ஞாலம் பழித்ததென் றுணர்ந்தாங்
காரியன் றுறந்தன னென்றான் (38)

என்றலுங் கற்பிற் கரசிவெய் துயிர்த்தாங்
கிருகணீர் முலைமுகட் டொழுகப்
பொன்றினள் போல விருநிலத் தயர்ந்து
புலம்பொடு மொருவழி யெழுந்து
நன்றுநங் கேள்வ னருளென வெண்ணி
நாப்புலர்ந் துள்ளழிந் தாயன்
கொன்றநீள் மரம்போ லெழினலம் வாடிக்
குற்றுயி ரொடும்பதை பதைத்தாள் (39)

*அழுமெழுந் துயிர்க்கு நிலத்திடை புரளு
மஞ்சன வண்ணவோ வென்று
தொழுமுய ரூழின் வலியினை வியக்குந்
துணையெவ ரென்றுகை நெரித்து

---

* அழுதுவெய் துயிர்க்கும் (பா. பே.)

விழுமிளை யவன்றன் வாண்முக நோக்கி
விடுத்தமை சரதமோ வென்னு
மழலையங் குதலைச் சிதையை நோக்கி
யிலக்குவன் மற்றிவை புகல்வான் (40)

மாழைமென் னோக்கி துயருறல் நினது
கற்புடை மாட்சியை யிந்த
வாழிரு ழுலகி னியாவரு முணர
வாரியன் றுறந்தன னன்றி
யூழினை யாரே யுப்புறங் காண்பா
ரென்றுகண் ணூற்றிருந் தொழுகச்
சூழிமால் யானை யிளவன் போகிச்
சுமந்திர னிருந்துழி யடைந்தான் (41)

வலைப்படு மடமான் பிணையென வயரு
மயிலைவான் மீகிகண் டிரங்கி
யலக்கமுற் றழுங்க லன்னை நீ விதியை
யாருள ருலகினில் வென்றார்
கலக்கநீ ருகுத்து மாகுமா றென்கொல்
கலங்கலை யென்றுளந் தேற்றி
நலத்தகு சாலைத் தவம்புரி மடவார்
கையடை யாகநல் கினனால் (42)

அண்ணலை யெண்ணி நோற்றுயர் சிதை
யருந்தவ மகளிரோ டிருப்ப
வண்ணவெஞ் சிலைக்கை யிளையவன் றடந்தேர்ச்
சுமந்திரன் வாண்முக நோக்கி
யெண்ணம்வே றின்றி வினைத்தவிச் செயலா
லிறந்துபா டுறுவன்யா னென்னக்
கண்ணிறைந் தொழுகு புனலினைத் தனது
கையினாற் றுடைத்திவை புகல்வான் (43)

அருந்ததிக் கணவன் றவப்பெருஞ் சாலை
தவிற்றுரு வாசன்வந் தடையப்
பருந்துவிழ் நெடுவேற் றயரதன் சென்றேன்
பாலர்தம் மாயுளுந் திறனும்
திருந்தநீ யுரைத்தி யென்றலு முனிவன்
றேவரோ *டேற்றம ரடைந்து
பெருந்தவப் பிருகு மனைவிகை யடையாய்ப்
பிறையெயிற் றவுணர்சென் றடைந்தார் (44)

உடல்சினத் திகிரிப் படையினேன் பிருகு
மனைவியை யொறுத்தலு முனிவ
னடுசினங் கதுவி நீயுநின் மனையை
யளப்பினுட் பிரிந்துமா ரிடனுய்ப்
படுதுய ருழத்தி யென்றலு முகுந்தன்
பையுளுற் றவிர்மதிக் கண்ணி
விடையுயர் கடவுள் சேவடி வழுத்த
மெல்லியல் பாகன்வந் தடைந்தான் (45)

பன்றியாய் முன்ன மளப்பினுட் டேடிக்
காண்கலாப் பங்கய மலர்த்தா
ளின்றியான் காணப் பெற்றன னென்று
விருகணீர் வாரவேத் துதலு
முன்றனைப் பிருகு வுரைத்தவெஞ் சாப
மொழிவதற் கிராமனு யரக்கர்
பொன்றிடத் தோன்றிச் சிதையைப் பிரிந்து
பாற்கடற் பொருந்துதி யென்றான், (46)

ஆங்கவ ரின்றன் மைந்தரின் மூத்தோ
னலைகடல் விளிம்புடுத் தோங்கு
தீங்கறு முலகம் பதினொரா யிரமாண்
டொருகுடை நீழலிற் செலுத்தி

* ஏற்றமருடைந்து (பா. பே.)

நீங்குதன் னுருவிற் பொருந்துவ னென்ன
நிகழ்த்துதல் கேட்டன னதனற்
கோங்கிள முலையைத் தணந்தன னென்னக்
கோமதி நதிமருங் கடைந்தான். (47)

தத்துநீர்த் தரங்கக் கோமதி கடந்து
புலரியி னயோத்தியிற் சார்ந்து
முத்தவெண் கவிகை யிராமனைத் தொழுது
புரிந்தவை யாவையு மொழிந்து
வித்தக மூன்று நாளவை யுருது
வெறுநிலத் தயர்வொடு மிருப்பி
னெத்தலத் துள்ள வுயிர்களு முய்யா
திறந்துபா டுறுமென வுரைத்தான். (48)

எழுவுறழ் தடந்தோ ளிலக்குவ னுரைத்த
மொழியினை யிகந்திக லிராமன்
மழையுறழ் தடக்கை நிருதனு டோறு
மறையவர்க் காயிரம் பெற்றம்
விழைவுட னளிக்க வொருவனுக் களித்த
பசுவினை யுணர்கலான் வேறோர்
பழமறை முனிக்கு நல்கமுன் பெற்றோன்
பசுவினைத் துருவின னறிந்தான். (49)

கனகல நகரின் மறையவன் மனையைக்
கண்டுதன் பசுவெனத் தொடர
முனிவரர் தம்மி னெனதென தென்று
மூரிவேல் மன்னவன் கோயிற்
புனைமணி வாயி லெய்தியோர் பகற்போ
திருப்பவும் புகல்பவர்ப் பெருமல்
வனைகழல் வேந்தை யோந்தியா கென்ன
வைதுதம் பதியினிற் போனர். (50)

மன்னறு மீர்வாள் புரைமுது கோந்தி
வடிவினிற் பலபகல் கிடந்து
பொன்னவி ராழிக் கண்ணனல் லருளாற்
புண்ணியத் துறக்கவீ டடைந்தான்
றுன்னுமோர் பகலின் வேத்தவை யுருதோ
னெய்திய துயரிது தோன்ரு
லின்றுமோர் காதை கேட்டியிவ் வுலகாள்
நிமியென வுரைக்குமோர் வேந்தன் (51)

சீர்கெழு வசிட்ட முனிவனைப் போற்றித்
தீர்க்கசத் திரமெனு மெச்ச
மேர்பெற வெனக்குப் புரிதியென் றுரைப்ப
முனிவர னிந்திரர்க் கெச்சம்
வேரியந் தொடையோ யியற்றிமீண் டெய்திப்
புரிவனென் றேகலும் வேந்த
ஞரியர் புகழுங் கவுதமன் றன்னு
லருமக மினிதினிற் புரிந்தான் (52)

அவ்வழி யரசன் கடையினில் வசிட்ட
னமர்தலு மெய்தியேத் துருமற்
றெவ்வடு வேலான் கண்படை புரியச்
சினவிநான் மறையுணர் முனிவ
னெவ்வெலாத் திசையும் வென்றவே விறைவ
னிறந்திட வைதலு மிறைவன்
செவ்விதிற் றுயில்வோற் ‡சபித்தமா முனியு
மிறக்கெனச் சீறினன் சபித்தான் (53)

*ஒருவருக் கொருவர் சாபவாய் நெருப்பி
னுருயி ருலந்தன ரொழியப்
பொருவரும் வசிட்ட னுடற்பொறை நீங்கிப்
†புண்ணியக் கமலவீட் டுறையு

---

* ஒருவருக் கொருவர் சாபமா நெருப்பின் (பா. பே.)
† புனிதமென் கமலவீட்டு றையும் (பா. பே.)
‡ சபித்தலான் முனியும் (பா. பே.)

மருமறைக் கிழவ னருகுவங் தெய்த
மித்திரர் வருணனுக் கன்பு
தருமக வாகி யோளியி னன்றிப்
பிறக்கெனச் சாற்றினன் விடுத்தான் (54)

உருவவொண் கதிர்கால் மித்திரர்ப் புணர
வுருப்பசி யெய்திடு மேல்வை
வருணனுங் கெய்தி வனமுலைப் போகந்
தருகென மறுத்தன ளாகத்
திருவமே கலைநிற் குரித்து விரியத்தைச்
செழுங்குடத் துய்ப்பனென் றிடலு
மருமலி குழலா ளுேந்தன ளேக
வருணனைக் குடத்தினுள் விடுத்தான் (55)

விடுத்தபொற் குடத்தி னகத்தியன் றோன்ற
மித்திரா வருணியென் றுலக
மெடுத்திடு பெயரின் வசிட்டனுங் குதித்தா
ரிலவித ழுருப்பசி யென்று
மடக்கொடி தன்னை மித்திர னோக்கி
மானுட வேந்தனைப் புணர்கென்
றடுத்துரை புகன்று நிமியினை யமரர்
கண்ணிமை தொறுமமர் கென்றார் (56)

நிமியுடற் பேணி யருமக முடித்து
நிகரறு முனிவரர் யாரு
மமையுமவ் வுடலை யரணியின் மதிப்ப
மிதியெனு மரசனுங் குதித்தான்
கமையுடை ஞானச் சனகனென் பதுவும்
விதேகனென் பதுவும்வார் கழற்கா
லுமிழ்கதிர் வேலா னுமமென் றைய
னுரைத்தலு மினையவ னுரைப்பான் (57)

பொருவருங் குருவோ டெதிர்முனி யாது
பொறுத்திலன் வேந்தனென் றுரைப்ப
வருவரைத் தோளா யருளினற் *போர்த்த
வரசனற் காதைகே ளென்னத்
திருவமர் யயாதி தெய்வயா னையைச்சீர்
சிறந்தசன் மிட்டையைச் சேர
மருவுசன் மிட்டைப் புருருவைப் பயந்தாள்
மற்றவ ளேதுவினை யின்றாள். (58)

தேங்குழற் றெய்வ யானையை வெறுத்துச்
சிறந்தசன் மிட்டையைப் பொருந்தும்
விங்குதோள் வேந்தைச் சுக்கிரன் கிழவ
னுகெனச் சபித்தலும் வேந்தன்
பாங்குறை மைந்தர் தம்மொடு மெனது
கிழவுருப் புரிக்கென யாரும்
வாங்கலர் மறுப்ப பூருமற் றதனை
வவ்வயாண் டாயிர மகிழ்ந்தான். (59)

ஆயிரம் பருவ மகளிரோ டின்புற்
றமர்ந்தபின் கிழவுரு வதனை
யேயநன் மைந்த னளித்திட வாங்கி
யிளமையம் மைந்தனுக் களித்து
மாயிரு ஞாலம் புரக்கென மவுலி
பூருவைச் சூட்டிமற் றெதுவை
தூயநன் மவுலிக் குரியைநீ யல்லை
யென்றுயர் துறக்கமே யினனல். (60)

என்றட லிராமன் வேத்தவை யெய்தி
மகிழ்வொடு மிருந்திடு மேல்வைப்
பொன்றருந் தவத்துப் பார்க்கவச் சவனர்
முதலிய முனிவரர் புகுத

---

* அருளினற் பொறுதத (பா. பே.)

வென்றிவேற் குரிசில் பூசனையாற்றி
போந்ததென் விளம்புதி ரென்ன
நன்றறி முனிவ ரிராகவற் காசி
நவின்றிவை புகறன்மே யினனல் (61)

கூற்றுறழ் மொய்ம்பிற் கோபநன் மைந்தன்
மதுவெனுங் கொல்சினத் தவுண
னீற்றொளி பழுத்த பவளவார் வேணி
நிருமலக் கடவுளை நாளும்
போற்றலு மொன்னுர் கடற்படை விழுங்குஞ்
சூலமொன் றளித்திறை போக
மாற்றெரி கும்பீ னசிமுலை புணர்ந்து
வயங்கெழு மிலவணற் பயந்தான். (62)

பயந்திடு மிலவ னுச்சுரன் கொள்ளப்
பாய்கதிர்ச் சூலமும் வழங்கி
வயங்கெழு கதிர்வேல் மதுவெனு மவுணன்
வருணலோ கத்தினி லடைந்தான்
கதம்படு கோதா விரிக்கரை யுடுத்த
தேயமாண் டருந்தவர் கவல்வுற்
றயங்கிட வருத்திப் பறவையின் விலங்கி
னளப்பில வோர்பக லுண்பான். (63)

ஆங்கவ னிழைக்குந் தீவினைக் காற்று
தடல்கெழு மிராவணற் செகுத்த
வாங்குவிற் கல்வி கேட்டிவ ணடைந்தே
மற்றவர்ச் செகுத்தரு ளென்னத்
தீங்கறு முனிவ ருரைத்தலு மிராமன்
றிறல்கெழு சத்துருக் கினனை
யோங்கெழிற் செம்பொன் மணிமுடி கவித்துத்
தழீஇயின னுச்சிமோந் துரைப்பான் (64)

அவுணர்கோ வீச னளித்தவெஞ் சூல
மெடுக்குமுன் னறிவுரு தடைந்தாங்
குவரியின் மதுகை யிடவரை மாயோ
னுறுத்தவிக் கணையினுற் கொல்கென்
றிவர்வொடு நல்கி விடையளித் திடலுந்
துணைவர்தஞ் சேவடி யேத்திக்
குவலைய முழுக்கத் தானைமுன் செல்லக்
கோட்புலிப் போத்தென நடந்தான் (65)

திறல்கெழு தானைக் கடலுட னேகித்
திங்களொன் றதரிடைக் கழிப்பி
மறைமுழு துணர்ந்த தவத்துவான் மீகி
மாதவச் சாலையி னெய்திக்
குறைவறு பூசை முனிவர னுற்றக்
கொண்டுள மகிழ்ந்ததற் கயலே
யுறையுமிச் சாலை யாதென வினவ
வருந்தவ னுவகையோ டுரைப்பான். (66)

மறங்கெழு சுதாசன் றவத்தினு லீன்ற
மித்திர சகனெனு மன்னன்
சிறந்திடு வேட்ட மாடலு மாங்கோ
ரரக்கனு மரக்கியுஞ் சேர்ந்து
பிறங்கெயிற் றகல்வாய்க் கொல்சினப் புலியும்
பெட்டையு மாய்ப்புணர்ந் திடலு
நிறங்கிளர் கணையாற் பெட்டையைக் கொல்ல;
வரக்கன்வெம் புலியுரு நீத்தான் (67)

புலியுரு நீத்த வெஞ்சின வரக்கன்
புரவல வுனக்குமோர் தீமை
நலிதர விளைப்ப னென்றவ னேக
நாமவே லிறைநக ரடைந்து

மலைவற மகமொன் றியற்றிடு போழ்தின்
    மறைபயில் வசிட்டனல் லுருவி
னிலகெயிற் றரக்கன் போந்துவெந் தசையோ
    டுணர்வுநல் கெனவிறை நொந்தான் (68)

அன்னவல் லரக்கன் மடைத்தொழி லாள
    னுருவினி லடைந்துமா னுடர்தந்
துன்னுசெந் தசையை யினிதினி லட்டுத்
    தூயவெஞ் சோற்றொடுங் கூட்டி
மன்னவன் கையின் வழங்கமற் றவனும்
    வசிட்டனுக் குணர்கலா தளிப்ப
வுன்னரு நரரூ னளித்தலான் மன்ன
    வரக்கனு யுறைகெனச் சபித்தான் (69)

மன்னனும் வெகுண்டு முனிவனைச் சபிப்ப
    வார்புனல் கொள்மத யந்தி
தன்னரு ளோடும் விலக்கவப் புனலைத்
    தாண்மிசைப் பெய்தலும் வேந்தன்
பன்னுகன் மாடப் பாதனு நாம
    மருவுறப் பன்னிரு பருவ
மின்னவா றிருந்து பின்னர்நின் னுருவ
    மெய்தென முனிவர னிசைத்தான் (70)

ஆங்குவேன் மன்னன் பன்னிரு பருவ
    மடுசினத் தரக்கனு யமர்ந்து
தீங்கில்கோ கன்னத் திறையவ னருளாற்
    றீத்தொழில் புரியுமவ் வுருவ
நீங்கியீங் கிருந்து ங்கர று வேள்வி
    யியற்றிய சாலையி தென்று
னோங்குமக் கங்குல் புலருமுன் சீதை
    மைந்தரோ ரிருவரை யுயிர்த்தாள் (71)

குசத்தினன் முனிவன் றடவலு முன்னோன்
　　குசனெனும் பேரொடு மமர்ந்தா
னிசைத்தகல் லிலவங் கொடுதட வுதலா
　　லிலவனு யினனவற் கிளையோன்
வசைப்படா விழுச்சீ ரிளவலம் மைந்தர்
　　பிறத்தல்கேட் டுவகையின் வருந்திப்
பசுத்தவேழ் புரவித் தேரினோ னுதிப்ப
　　முனிவரர் தம்மொடும் படர்ந்தான். (72)

பின்னுமேழ் வைகல் மேற்றிசை நோக்கிப்
　　பெயர்வுழி பார்க்கவச் சவனன்
றன்முக நோக்கி யிலவண னுற்றல்
　　சாற்றுதி யென்னலு முனிவன்
மன்னனுங் குலத்தி னுதித்திடும் புவனுச்
　　சுவனருண் மைந்தன்மாந் தாதாப்
பொன்னுல கெய்தி நின்றர சுரிமை
　　பாதிதந் தருளெனப் பகர்ந்தான். (73)

மண்ணுல கதனி லிலவணுச் சுரன்றன்
　　வலிதொலைத் திடாதநீ கொல்லோ
விண்ணுல காள்வை யென்றுவிண் ணவர்கோன்
　　விளம்பலும் வெகுண்டில வணன்பால்
நண்ணிவெஞ் சமரேற் றிடுதலு மீச
　　னல்கிய சூலவேல் பணிப்ப
வெண்ணருஞ் சேனை யோடுமாந் தாதா
　　*வெறிந்திட முருக்கிமீண் டதுவே (74)

என்றலுஞ் சேனை முழுவது மாங்க
　　ணிறுவிவில் லிலக்குவற் கிளையோன்
வென்றிவே லவுணன் வேட்டமேற் படர்ந்து
　　மீள்தலு முயர்பொலங் குடுமிக்

* வெரிந்திட முருக்கி (பா. பே.)

குன்றுகொண் டிறந்தா லன்னவான் புரிசைக்
கோபுர வாயிலிற் குறுகி
நின்றெதி ரேற்ற வெஞ்சினத் தவுணன்
றன்னொடு நெடுஞ்சமம் புரிந்தான். (75)

விண்ணக டுரிஞ்சிப் போகுயர் கோட்டுத்
தருவினை வேரொடும் பிடுங்கி
யண்ணன்மே லடிப்பச் சிறிதுமெய் தளரா
விராகவ னளித்தவெங் கணையால்
நண்ணிய வவுண னுருயிர் வவ்வி
நிற்றலு நாண்மலர்ப் பொகுட்டுப்
பண்ணவன் முதலோர் புகழ்ந்தனர் சூலம்
பசுபதி யிடத்தின்மே வியதால் (76)

வளங்கெழு சூர சேனனு டென்ன
நாட்டினுக் கொருபெயர் வகுத்து
விளங்கெயி லுடுத்த பதியினை மதுரை
யென்றுமோர் விழுப்பெயர் புனையா
வளந்தறி வரிய புகழ்கிடந் துறங்கு
மன்னகர் தன்னிலீ ராறு
துளங்கலில் பருவ மிருந்தடிப் படுத்தி
யிராகவற் றொழுவெழுந் தனனுல் (77)

எழுந்துதன் சேனைக் கடல்புடை நடப்ப
விலக்குவற் கிளையபோ ரேறு
தொழுந்தவ நெறியி னுயர்ந்தவான் மீகி
சாலையிற் றனிவினி லடைந்து
தழங்கொலி யாழி யிராகவன் சரிதை
மைந்தர்பாட் டயர்தல்கேட் டுருகி
முழங்குவார் முரசங் கண்டுயின் றறியா
முதுநக ரயோத்தியி னடைந்தான் (78)

சொரிதிறை யளந்து வெயிற்கதி ருடுத்த
தொடிக்கைமென் றலையணை யாக
வரசுகண் டுயில முரசுகண் டுயிலா
வருங்கடி வாயிலேழ் கடந்து
வரிசிலை யுழவன் மலர்ப்பதம் போற்றப்
பரதனைப் பணிந்திலக் குவன்றன்
விரைமலர்ப் பாதந் தொழுதில வணனை
வென்றமை விரித்தெடுத் துரைத்தான் (79)

ஆங்கது கேளா விராகவன் மகிழ்வுற்
றளப்பில் வான்சிறப் பியற்றித்
தீங்கறு புதல்வ வேழ்பக லிந்தத்
திருவளீண் காவையின் வைகி
யோங்கெயி லுடுத்த மதுரையிற் செல்கென்
றுரைத்தலு மேழ்பக லுறைந்து
வாங்குவிற் றடந்தோ ளிளையவன் வளங்கூர்
மதுரைமா நகரடைந் திருந்தான். (80)

கடையளந் தறியா விடுதிறை சொரிந்து
காவலர் கையணைத் துஞ்சுங்
கொடிபுனை வாயில் மருங்கினோர் மறையோன்
புகுந்துமெய் குழைந்துநைந் தழுது
வடிவுடை யென்றன் காதல னுயுண்
மடிந்திடு காலையி னன்றி
யிடையினி லிறந்தா விராகவன் செங்கோ
*லிழுக்கலா லடைந்ததென் றினைந்தான். (81)

வேதியன் மொழிகேட் டிராகவன் வசிட்டன்
காசிபன் விணைமா முனிவன்
கோதமன் காத்தி யாயன் மார்க் கண்டன்
மவுற்கலன் கோதில்சா பாலி

* இழுக்கினு லடைந்த தென்று (பா. பே.)

தீதெறி வாம தேவனென் றுரைக்குந்
திருத்தகு முனிவரை நோக்கி
யாதினாற் புகுந்த திருவெனக் கேட்ப
வினைமா முனிவர னிசைப்பான் (82)

வேறு

மருவுங் கொடிய கலியுகத்தி
னன்றி வாளா பின்னவர்கட்
குரிய தவமிவ் வுகந்தன்னி
லூஞற்றல் தீதந்நெறி யிகந்திட்
டரிய தவமோர் பின்னவனீண்
டாற்றா னின்றா னதலினாற்
றெரியு மறையோ னிளஞ்சிறுவ
னிறந்தா னென்னச் செப்பினான் (83)

வள்ளல் கடவுட் புட்பகத்தை
நினைப்ப வரலு மதினிவர்ந்து
தெள்ளு திரைநீ ருலகனைத்துந்
தேடித் தென்னம் பொருப்பெய்திக்
கள்ளார் கமல வாவியகன்
கரையி னாலிற் றலைகீழா
யுள்ளா னாகித் தவஞ்செய்வோர்க்
கண்டு நீயா ருரையென்றான் (84)

உடலி னோடுந் துறக்கத்தி
னுறுவான் றவமீண் டுஞற்றுகின்றே
னடையு மென்பே ருயர்சம்பு
பின்னோன் யானென் றறைந்திடலுந்
தடறு நீக்கி வடிவாளா
லன்னோன் சென்னி தடிந்திடலும்
விடயத் துள்ளம் போக்காது
மறையோன் வீய்ந்த மகனாய்ந்தான் (85)

விண்ணோ ரிராமன் றனைவரங்கேட்
டென்ன வியந்த மைந்தனுயிர்
*நண்ண வரநீ யியற்றிடுமி
னென்ன நாம வடிவாளா
லண்ணால் பின்னோன் றலையொறுத்த
காலத் துய்ந்தா னருஞ்சிறுவன்
றெண்ணீர் ரகத்துட் குறுமுனிசெய்
தவங்காண் பதற்குச் சேருநியால். (86)

என்று தேவ ரிராமனுட
னியம்பி மதிதாழ் பொதியநெடுங்
குன்ற மெய்திக் குறுமுனிக்கு
வரமீய்ந் தகலக் கோவிழுங்கும்
வென்றி வேற்கை யிராகவன்புட்
பகத்தி னிழிந்து வேதியன்முன்
சென்று போற்றிக் குறுமுனியுஞ்
செங்கோழ்க் கலனென் றளித்தனனால் (87)

உலகம் விளக்குங் கதிரோனி
லொடிப்பக் கதிர்விட் டுமிழாச
மலையப் பொருப்ப வளித்தவன்யார்
வழங்கு கென்ன வுரைத்திடலு
மலைநீர் பவ்வக் கடலேழு
மழன்று வெய்ய புகைமண்டச்
சிலைகால் வளைத்தோய் கேட்டியெனத்
திருமா முனிவன் செப்புவான் (88)

இலகு தருமந் திறம்பாத
விரண்டா முகத்தி னீரைம்பா
னலகு பொருந்தும் யோசனைத்தா
மரிய காட்டிற் செழுங்கமல

* நண்ண வரநீ ரளித்திடுமென் (பா. பே.)

மலருந் தடத்துள் வேற்றுடலொன்
றிருப்ப மருண்டு நோக்குதலு
நிலவுக் கதிர்கால் மானமொன்று
நெடுவா னகத்துட் தோன்றியதால் (89)

கொல்லுங் கூற்ற மிருந்தாலுங்
குவளைப் பொருவு மதர்நெடுங்கண்
வல்லி போல்வார் வளைக்கரத்தின்
மணிக்காற் கவரி பொதியவிழ்ப்ப
வொல்லை யிழிந்தோர் கடவுள்புகுந்
துணங்குங் குணபந் தனையருந்திச்
செல்ல னோக்கி யிழிதொழிலீ
செய்வ தென்கொல் புகலென்றான். (90)

குடக்காய் தாங்கு முடத்தெங்கம்
பழமூழ்த் தீந்தேன் கொப்பளிக்கு
மடற்பூங் கமுகின் மிசைவிழ
வாளை குதிக்கும் விதர்ப்பநாட்
டடற்கோ வரியை நிகர்சீற்றச்
சுவேத னருள்கூர் சுவேதனையுந்
தடக்கார் முகத்துக் கொருவனெனுஞ்
சுரதன் றனையுந் தந்தனனால் (91)

தந்தை யிறப்பச் சுவேதனெனுந்
தாம வடிவேற் சிறுவனுக்காங்
கந்தார் மவுலி புனைந்திடலு
மறிவின் விக்கத் தாலினையப்
பைந்தார்ச் சுரத னனைக்குமுடி
கவித்துப் படர்கா னிடையெய்தி
மைந்தார் சுவேத னீரைஞ்ஞா
றுண்டு தவத்தின் மருவினான். (92)

அடையுந் தவத்தி னுடனீங்கிக்
கமலப் புத்தே ளுலகடைந்து
மிடையும் பசியா லுழந்தரசன்
மலரோ னேடு மிதென்கொலென
வுடலம் வீக்கித் தவம்புரிந்த
வாற்ரு லுற்ற துன்னுடலைத்
தொடரிற் பிணித்த ஞமலியெனத்
துய்த்தி யென்ன வுரைத்தனனுல் (93)

உடலம் வீக்கித் தவம்புரிந்த
பாவ மெந்நா ளொழியுமெனக்
கடவுள் கமலப் பொகுட்டுறைவோ
னேடு கேட்பக் கலனல்கி
விடயத் துள்ளம் போக்காத
வெளிறில் கேள்வி யகத்தியனை
யடையிற் றீரு மெனவுரைத்தா
னன்னேன் யானென் றறைந்தனனுல் (94)

என்று கூறிச் சுடர்மணிப்பூ
ணெனக்கு நல்கு மேல்வையினிற்
றுன்று பாவ மகன்றருந்து
குணபந் தோன்ரு தகன்றெளிப்ப
மன்றல் கமழுங் கற்பகப்பூ
மாலை மார்ப னெனையேத்திப்
பொன்ருழ் விமானந் தனிலேறிப்
புத்தேள் விசும்பிற் போயினனுல் (95)

அன்னே னளித்த வருவிலைப்பொற்
கலமீ தைய வெனலோடும்
பன்னு மொருநா ரேசனையும்
படர்கா னுய துரைத்தியென

நன்னர்க் கேள்வி யருமறையோ
 னவில்வான் மனுவி னுயர்மைந்தன்
மன்னு மிக்கு வாகுவென்போன்
 மைந்த னெருநூற் றுவர்ப்பயந்தான் (96)

மைந்தர் தொண்ணூற் றென்பதின்மர்க்
 கிளையோ னுலகை வருத்துதலாற்
றந்தை தண்ட னெனுநாமஞ்
 சாற்றி யுயர்சை வலத்துக்கும்
விந்த வரைக்கும் நடுவினுற்ற
 தேயம் வழங்க வடல்வேந்த
*னந்து மதுமா வென்னுமொரு
 நகரம் புனைந்தாங் கிருந்தனனால் (97)

வெளிறில் கேள்விச் சுக்கிரனை
 யரச னுக்கி வியப்பினெடு
மொளிறு வடிவேற் றண்டனந்த
 வுலகங் காத்து வருநாளில்
வளையார் மென்றே ளாசையெனும்
 வெள்ளி மகனை வலிதாகக்
களிகூர்ந் தன்பிற் கரந்திடலுங்
 கன்னி தந்தைக் குற்றுரைத்தாள் (98)

வேறு

மண்டுநீர் வளங்கூர் தேய
 மறைமுனி சாபந் தன்னுற்
றண்டகா ரணிய மாகிக்
 கிடந்தது சனங்க ளெல்லாம்
விண்டவ னுறைத றன்னால்
 வியன்சனத் தான மாகி
யண்டரூர் போன்ற தைய
 வவ்விட மென்று சொன்னான் (99)

* நந்து மதுமா னென்னுமொரு (பா. பே.)

வில்லுந் துயிர்கூற் றுண்ண
    விருந்திடும் வெள்வேல் தாங்கும்
வள்ளறென் பொதிய வெற்பின்
    மாதவ னருளி னோடுங்
கள்ளயின் றினவண் பாடு
    மென்மலர் களுலி யோங்கு
மள்ளலங் கழனி சூழ்ந்த
    வயோத்திமா நகரஞ் சேர்ந்தான் (100)

முடியொடு முடிகள் தாக்க
    வுதிர்ந்தபொற் றுகளின் மூழ்கிப்
படிநில முழுதுந் தேவ
    ருலகினிற் பசும்பொன் னாக
வடிதொழ வேந்த ரீண்டு
    மவையினி லண்ண லெய்தி
வடிவுடை யிளைஞர் செய்ய
    வாண்முக நோக்கிச் சொல்வான் (101)

ஆய்மறை கூறு கின்ற
    வரும்பெற லிராச சூய
மேய்வுறப் புரிதல் வேண்டு
    மென்றலு மிளையோன் சொல்வான்
றுயென நின்னை யெண்ணிச்
    சரண்புகு மரசர் கையில்
மேயநன் பொருளை வவ்வி
    மகஞ்செய்தல் விழுமி தன்றால் (102)

அயமக மாற்ற லெந்தைக்
    கடுத்ததம் மகத்தால் முன்னங்
துயருறு கொடிய பாவந்
    தொலைந்தநற் காதை கேட்டி

பயனுடை யுடல முன்னூ
　　றியோசனைப் பரந்து நீண்டு
வியனுடை யுலகை வென்றான்
　　விருத்திர னென்னும் வெய்யோன் (103)

சுட்ர்பொறி சிதறும் வெங்கண்
　　விருத்திரன் றுரப்ப வோடி
யுடல்சின வயிர வாளான்
　　னேமியோற் குரைப்ப வன்னோ
னடல்கெழு போரி லுன்றன்
　　வச்சிரத் தமர்வ னென்ன
மிடலொடு மகவான் மீண்டு
　　விருத்திர னோடு மேற்றான் (104)

தாரைக டோறும் வெய்ய
　　சுழலுமிழ் வயிர வாளா
லார்கலி நடுவ ணிற்கும்
　　விருத்திர னகலத் தோச்சப்
பாரில்வீழ்ந் தவுணன் வீயப்
　　பற்றிய பிரம கத்தி
சீர்கெழு வயமே தத்தாற்
　　றீர்ந்தனன் விண்ணோர் வேந்தன் (105)

என்றலு மிராமன் சொல்வா
　　னிளனெனும் வேந்தர் வேந்தன்
மன்றலங் காவின் வேட்ட
　　மாடுவான் மருவி மல்லற்
குன்றவிற் குமரன் பெண்ணாய்க்
　　கோதையோ டாடு கின்ற
துன்றருஞ் சரவ ணத்திற்
　　சேனைபின் றொடரச் சென்றான் (106)

சரவணத் தெய்து கின்ற
    விளறுயர் தானை யோடு
மரவுபைத் தன்ன பைம்பொன்
    னம்பகட் டல்கு லேந்தி
வரையென வளர்ந்து வீங்கு
    வருமுலை மங்கை யாகி
முருகவிழ் கூந்தற் செவ்வாய்க்
    கவுரியை முறையிற் ருழ்ந்தான் (107)

ஓர்மதி யமுதச் செவ்வா
    யொள்ளிழை மடந்தை யாகி
யோர்மதி புருட னுகி
    யுறைகென வரமீந் தேக
வாரொலிக் கழற்கால் வேந்தன்
    மகளுரு வாகிச் சேனை
யேர்கெழு மகளி ராகிச்
    சூழ்வர வேகி னனே (108)

செலவயர் கானின் மற்றோர்
    திருவநீள் வாவி தன்னி
னிலகொளித் திங்க ளின்ற
    புதனிருந் தவத்து நீங்கி
யலர்முலை யஞ்சி லோதி
    யினையினை யாங்கு நோக்கிக்
குலவிய யாழோர் கூட்டப்
    புணர்ப்பினுற் கூடி னனே (409)

மற்றவ ளோடும் வந்த
    மகளிரை யாழோர்க் கீந்து
கொற்றவேற் புதனென் றேதுங்
    குருசிலவ் விளையி னேடு

முற்றிழை யாகுந் திங்கண்
　　முயங்கிவேந் தாகுந் திங்கள்
மற்றவ னோடு நின்று
　　மாதவ மியற்றி னனே. (110)

இன்னணந் திங்க ளீரைந்
　　திறத்தலு மிளையென் றோதுங்
கன்னிவேற் புரூர வாவைப்
　　புதனுக்குக் களிப்பி லீன்று
துன்னிய மற்றைத் திங்க
　　ளாணுரு வாகித் தோன்ற
மன்னவ ரிருவர் முன்னு
　　மருத்துவ முனிவன் வந்தான் (111)

மருத்துவன் திங்கள் சூடும்
　　வானவன் மகிழ்ச்சி யெய்தத்
திருத்தகு புரவி வேள்வித்
　　தீதற வியற்றுங் காலை
யுருத்திர னெய்தி யென்று
　　மாணுரு வுறுதி யென்ன
வருத்திகூ ரிள னு முன்போ
　　லாண்டகை யாயி னனே (112)

ஆணுரு வதனிற் பெற்ற
　　வடற்சய விந்துத் தன்னை
வேணவா வோடு வெய்யோன்
　　குலத்துறு வேந்த னுக்கி
யாணர்மா துருவ நாளி*
　　லீன்றிடு புரூர வாவை
நீண்மதிக் குலத்து வேந்தாய்
　　நெடுமுடி சூட்டி னனே (113)

---

* நாணமா துருவ நாளில் (பா. பே.)

இளனெனும் வேந்தர் வேந்த
விருங்கட லுலகுத் கெல்லாங்
*களைகணு யுலகங் காத்துக்
கதியினி லிருந்த வாற்றல்
வளைமிகு மிவுளி மேதம்
புரிகுவன் வல்லை யென்ன
வுளமகி ழிளவற் கோதி
வெதிரிகாச் சிரமத் துற்றான் (114)

கோமதிக் கரையி னெய்திக்
கூந்தன்மா வினையோன் போக்க
நாமவெம் பருதி மைந்தன்
விடணன் முதலோர் நண்ணப்
பூமக ளனைய பொற்பிற்
சிதையாய்ப் பொன்னிற் செய்து
தூமலர்த் துளவ மாயன்
பரிமகந் தொடங்கி னானே. (115)

பருவமொன் றிவுளி மேத
மீராகவன் பண்ணு மேல்வை
பொருவில்வான் மீகி யெய்திச்
சானகிப் புதல்வர் தம்மை
யிருடிகள் வேந்த ரெய்துந்
தலந்தொறு மிசைந்த காதை
தெரிவுறப் பாடி நீவிர்
†தெரிதரு மேல்வை தன்னில் (116)

மரகத வண்ணன் கேட்டு
வம்மின்க ளென்ன வெய்தி
இருபது சருக்க மாகத்
தினந்தொறு மியம்பி யண்ணால்

* களைகணு யுலகுங் காத்து (பா. பே.)
† திரிதரு மேல்வை தன்னில் ஷை

தருபொருள் கவர்தல் நும்மை
யாரெனிற் றகைவான் மீகி
பொருவின்மா ணுக்க ரென்னப்
*புகன்மின்க ளென்னப் போனர் (117)

மைந்தர்தீம் பாடல் தன்னை
மறையவ ருரைப்ப வையன்
றந்திடு கென்னப் போந்து
தந்திரி யுணர்ந்து பாடு
மெந்திர மிடறீ தென்ன
வுணர்கலா திராமன் காதை
நந்தலில் குமரர் பாட
வியாவரு நயத்தல் செய்தார் (118)

கைகளு முகமுங் காலுங்
கண்களுங் கமலம் போலு
மையவாண் முகிலிற் றேன்று
மைந்தரை மனதி னேக்கி
யையன்மூன் றுருவா யிங்ங
னடைந்தனன் கொல்லோ வென்று
வொய்யென வரசர் யாரு
முளத்தினி விறும்பூ துற்றூர் (119)

இன்னண மைந்தர் பாடுந்
தன்னுடைச் சரிதம் யாவும்
மன்னவ னிராமன் கேட்டு
மைந்தரென் றுளத்தி னெண்ணி
பொன்னொரு கோடி நல்கப்
புனத்திடைத் தவஞ் செய்கின்றோர்
நன்னிதி கொள்ளிற் பாவ
நண்ணுமென் றுரைத்துப் போனர் (120)

---

* புகலுமி னென்னப் போனர் (பா. பே.)

சீதையை நாளை யீண்டுக்
கொணர்ந்துதீ யூட்டி யுண்னு
மாதவர் வேந்தர் வெய்ய
வானர ரரக்கர் காண
வேதமோன் றின்றிச் சூளிற்
கொள்வன்யா னென்ன வேந்தன்
றாதரால் வான்மீ கற்குச்
சொல்லவாங் கவனு நேர்ந்தான் (121)

ஓதிய வழிநா டன்னி
லரக்கரொள் ளிலைவேல் வேந்தர்
*தீதெறி முனிவர் வெய்ய
வானரர் செறிந்து வைகு
மேதகு மவையில் ஞாலம்
வியக்கும்வான் மீகி வேற்கட்
சீதையோ டெய்த நோக்கி
யாவருஞ் சிந்தை யுற்றார் (122)

பற்பல பாடை மாக்கள்
யாவரும் பரிவு கூற
வற்பொடுங் கலுழ மேல்வை
யருளின்வான் மீகி நாளு
மெற்பெழ நோற்ற யாவு
மீங்கிவள் பிழைத்தா ளென்னிற்
பொற்பறச் சிதைந்து யானு
நரகிடைப் புகுவே னென்றான். (153)

கலைபயில் முனிவ சீதை
கற்பினுக் குயர்ந்தா ளாகு
முலகெலாந் தெளிய வேண்டி
யுரைத்தன னெனினும் வென்றிச்

---

* தீதறி முனிவர் (பா: பே.)

சிலைவலான் பாதம் போற்றிச்
சேயரி நெடுங்கட் சீதை
மலர்தலை ஞால நோக்கி
யிங்கிவை வழங்க லுற்றாள். (124)

முல்லைசால் கடவுட் கற்பின்
வழிநின்று முழுவ மேய்க்குங்
கல்செய்தோ ளிராமன் செய்ய
கழலிணை நிறம்பே னாயின்
மல்லலம் பூமி தேவி
வழியெனக் களித்தி யென்னச்
சொல்லலும் பூமி விள்ள
மணியணைத் தோன்றிற் றன்றே (125)

தோற்றிய வலங்கு செம்பொற்
சுடர்மணித் தவிசின் மீது
கோற்றொடிச் சீதை தன்னைப்
பூமகள் குடங்கை தாங்கி
யேற்றினள் கொண்டு போக
யாவரு மிரங்கி மாழ்கப்
பாற்றினஞ் சுழலும் வேற்கை
யிராகவன் பரிவிற் சீறி (126)

மண்ணுல கனைத்து மின்னே
வடிக்கணை யதனிற் போழ்ந்து
பண்ணமைக் குதலை தீஞ்சொற்
பாவையைக் கவர்வே னென்னு
வண்ணறன் னுளத்தி னெண்ணு
மமைதியி னயன்வந் தெய்திக்
கண்ணகன் ஞாலந் தன்னைக்
கடிந்திட லென்னச் சொல்வான் (127)

தேங்கம ழுஞ்சி லோதிச்
சீதைவை குந்தஞ் சேர்ந்தாள்
வாங்குவிற் றேருளாய் நீயும்
வைகுந்த மடைந்தா லன்றி
யாங்கவட் புல்ல லொல்லா
தறையும்வான் மீகி யென்னப்
பூங்கழற் றேவரோடு மலரயன்
போயி னனே. (128)

ஏந்தலு முள்ள மாழ்கி
மைந்தரை யிருகைப் பற்றி
யாய்ந்தநூ லினொடு ரோடு
*மமந்தனர் வழிநா டன்னிற்
கூந்தன்மா வேள்வி முற்றிக்
குலமறை யவர்க்கும் வெள்வேல்
வேந்தர்க டமக்கு நன்கின்
விடைநல்கி யயோத்தி சேர்ந்தான். (129)

அளவறு மகங்க ளாற்றி
யாருயிர்த் தொகைகட் கெல்லாங்
களைகணு யிராமன் செங்கோ
னடத்திடுங் காலந் தன்னிற்
றளர்வுறு மூப்பாற் றாய
கவுசலை முதல தாய
குளமகிழ்ந் தாவி நீங்கித்
தயரத னுழையிற் சேர்ந்தார் (130)

தாயரை யிமத் தேற்றித்
தழல்படு கரும மாற்றி
யேயநற் பிண்டி யாதி
யாவையு முடித்த பின்னர்ப்

---

* அமர்ந்தனர் வழி (பா. பே.)

பாய்வயப் புரவி கோடி
  பழமறைக் கார்க்கன் கையின்
மாயிரு ஞாலம் போற்றுங்
  கேகயன் வரவிட் டானே. (131)

வந்தமா முனிவன் றன்னை
  யெதிர்கொண்டு வழுத்தி யையன்
*முந்தநீ புகுந்த தென்கொ
  லறைகென முனிவன் சொல்வா
னந்தலி லிசையில் வாட்போர்க்
  கின்னர னல்கு மைந்தன்
சிந்துவின் மூன்று கோடி
  சேனையோ டிருக்கின் றனல் (132)

அன்னவன் றன்னை வென்றே
  யாங்கவ னுளுந் தேய
முன்னடிப் படுத்தி யென்ற
  னுறுதுயர் துடைத்தி யென்னப்
பன்னருஞ் சிறப்பின் மிக்க
  கேகயன் பகர்ந்தா னென்ன
மன்னவன் †பரதன் மைந்தற்
  கணிமுடி வணங்கு சொல்வான் (133)

பரதநீ யாங்க ணெய்திச்
  சிந்துதீ ரத்தின் பாங்க
ருரைபெறுமி யாழோர் தம்மை
  வென்றுயர் மைந்தர் தம்மை
யரசரா யாங்க னுய்த்து
  வருகென வவையிற் போற்றி
விரைசென்மான் றேரி னேறி
  வில்லுடைப் பரதன் போனன் (134)

---

* அந்தில் நீ புகுந்தது (பா. பே.)

† பரதன் மைந்தர்க்கு (பா. பே.)

பாகடு பரும யானைப்
　　பரதனன் மைந்த ரோடுங்
கேகயந் தன்னி லெய்திக்
　　கிளர்முடி வேந்தர்ப் போற்றி
யாகவந் தன்னி லேற்றக்
　　கின்னர ராக முற்றுங்
காகமுங் கழுகு முண்ணக்
　　காலவெங் கணையாற் கொன்றான். ((35)

தாரைவேற் றக்கன் றன்னைத்
　　தக்கக மென்னு நாட்டிற்
சீர்கெழு மவுலி சூட்டிச்
　　சிறந்தபுட் கலனென் போனைப்
பூரியர் பொருந்தல் செல்லாப்
　　புட்கலா வர்த்தந் தன்னி
லேர்கெழு முடிவைத் தையாண்
　　டிருந்திடப் படுத்தி னானே. (136)

மைந்தரை யாங்கண் வைத்து
　　வார்கழற் பரத னென்று
மிந்திர திருவன் போதந்
　　திராமனை வணங்கி யேத்தி
தந்திரர் செகுத்த யாவுஞ்
　　சாற்றலு மகிழ்ச்சி கூர்ந்து
கந்தடு களிநல் யானைக்
　　காகுத்த னுரைக்க லுற்றான். (137)

இலக்குவன் மைந்தற் காய
　　தேயநீ விளம்பு கென்ன
நலத்தவங் கதற்குங் காரா
　　பதமெனுந் தேய நன்றாந்

தலத்திரி லிணைமற் றில்லாத்
 தகைபெறு மல்லல் தேயஞ்
சிலைத்தொழில் சித்திர கேது
 வமர்ந்திடச் சிறந்த தாமால். (138)

என்றியற் பரதன் கூற
 விராகவன் மகிழ்ச்சி கூர்ந்து
மன்றனல் லோரை தன்னில்
 வால்வளை முரச மார்ப்ப
வென்றிவே லினைய கோமான்
 மைந்தர்க்கு விறைவி னேடும்
பொன்றிகழ் மவுலி சூட்டி
 யவ்வுழிப் போமி னென்றான் (139)

வேறு

அங்கத னேடு மிலக்கு வன்காரா
 பதத்தடைந் தங்கதி யென்னுந்
துங்கமா நகரொன் றமைத்துமைந் தனையத்
 தொன்னக ரத்திடை யிருத்தித்
தங்கியோர் பருவ முலகடிப் படுத்தித்
 தானையங் கடலொடும் போந்து
சிங்கவே றனைய வரிசிலை யிராமன்
 சேவடி தொழுதுவிற் றிருந்தான் (140)

சந்திர கேது தன்னெடும் பரதன்
 மல்லல்தே யத்திடை சார்ந்து
சந்திர காந்தி யெனுநக ரமைத்துத்
 தாமவேன் மைந்தனை யிருத்தி
மைந்துட னேர்யாண் டந்நக ரமர்ந்து
 வாம்பரிக் கடலொடும் போந்தங்
கிந்திர திருவா மயோத்தியி னெய்தி
 யிராமன தடிதொழு திருந்தான் (141)

திருமகண் *முலைக்கண் கிளைத்திடு தழும்பிற்
சிலைத்தழும் பிருந்ததோ விராமன்
புரவிமா மகமோர் பத்திலி தாற்றப்
பூசுரர்க் கிருநிதி வழங்கி
யுரவுநீர் வேலி யுலகெலாம் பதினே
ராயிரம் பருவமோர் குடைக்கீழ்த்
தருமமுந் தவமு மெய்ம்மையு மேன்மேற்
றழைப்புறப் புரந்தன னன்றே (142)

இன்னணம் பதினோ ராயிரம் பருவ
மிராகவ னரசளித் திடலு
மன்னிய காலன் மாதவ ருருவாய்
மணிமதில் வாயிலி னெய்திப்
பொன்னெடும் வேற்கை யிராகவற் கெனது
வரவுரைக் கெனவிலக் குவன்போ
யன்னவா றுரைப்பக் கொணர்தியென் றிடலு
முனிவனை யவ்வழி யுய்த்தான். (143)

முனிவரன் மகிழப் பூசனை யாற்றி
யிராகவன் முகமனன் குரைத்து
வினையறு தவத்தோய் போந்தமை யென்கொல்
விளம்பென விளம்புமேல் வையினி
லெனையரா யிறுமீண் டடைந்திடிற் கொல்கென்
றிசைத்தலு மாங்கது நேர்ந்து
வனைகழ லெம்பி யெவருமீங் குறுமல்
வாயினி லிருக்கென விருந்தார். (144)

அலகில்பல் லுயிரு மொறுத்திட வுன்னி
யளித்திடு காலன்யான் கடலி
னிலகெயிற் றரவிற் றுயிலுமேல் வையினி
லவுணரோ ரிருவர்வந் துதிப்ப

---

* முலைக்கண் டிளைத்திடு (பா. பே.)

மலைசமத் தவரைக் கொன்றவ ருடலால்
மேதினி வகுத்தயன் றனைநீ
யுலகெலா மீள வுந்தியங் கமலப்
பொருட்டினி லுதித்திடப் பணித்தாய் (145)

அன்றுநீ படைத்த வுலகினில் வருத்து
மரக்கரை வேரொடுங் களைய
மன்றலம் பசுந்தார்த் தயரதன் மகவாய்
வந்துவல் லரக்கரைத் தொலைத்தாய்
சென்றன பதினோ ராயிரம் பருவஞ்
சிறந்தவை குந்தமா நகரி
லொன்றிட வேண்டில் வருதிமற் றிங்ங
னுறைதியே லுறையென வுரைத்தான் (146)

உரைத்தலு மிராமன் றனதுபே ருலகி
னுறுவதற் குள்ளநேர்ந் துவப்புற்
றுரைத்தமென் சாந்தி னகங்குளிர்ந் திருக்கு
மேல்வையி னலிநகர்க் கடையிற்
றிருத்தகு தவத்தி னுறைதுரு வாசன்
சிலைத்தொழி லிலக்குவன் முன்னம்
வருத்துவெம் பசியோ டெய்தியென் வரவு
மன்னவர்க் குரைக்கென வுரைத்தான் (147)

அமைதியன் றென்ன விலக்குவன் கூற
வழமெழ வெகுண்டுமா முனிவன்
கமழலம் பொழில்சூ ழிங்கக ரோடு
மிராமனைக் கனற்றுவ னெனலு
மிமிழ்கடன் ஞாலத் தொடுமிரா கவனை
யெரிப்பதின் னியானிறப் பதுவே
தமரினைப் புரப்போர் கடனென முனியைத்
தாமரைக் கண்ணன்முன் னுய்த்தான் (148)

உய்த்தலுங் காலன் மறைந்திட வைய
னுபசிட தப்பொரு டேர்ந்து
தத்துவ முணர்ந்தோய் வந்தவா றென்கொல்
சாற்றென வாயிரம் பருவ
மெய்த்தவ விரதம் பூண்டுண வொழிந்தே
னடிசிலீ வழங்கென விளம்ப
பைத்தலை யரவி னறிதுயில் கூறும்
பண்ணவ வின்னமு தளித்தான் (149)

இன்னமு தருந்தி முனிவர னேக
யிராகவன் மனங்குழைந் திரங்கித்
துன்னுபே ரவையுட் கலுழ்ந்தன னிருப்பச்
சுடர்முடி யிலக்குவ னெய்தி
யுன்னுடை வாய்மை வழுவுறு தென்னை
யொறுக்கென வுரைத்திட வசிட்டன்
மன்னவ துறத்த லொறுத்ததா மென்ன
வழங்கலு மூர்ச்சனை யடைந்தான் (150)

கரையழி வெள்ளந் தன்னிடைப் பிறழ்ந்து
கண்மணி நீங்கிட விழித்துப்
பொருவரு மாவி துறந்துவேற் றுடல
முய்யுமோ போதியென் றுரைப்பச்
சரையுமா நதியி னகன்கரை யெய்தித்
தருப்பையி னிருந்துமூச் சவித்தாங்
குரையுணர் விறந்த யோகினி லெய்திப்
பிரமரந் தரத்துயி ருய்ந்தான் (151)

விண்ணவ ரியக்க ரிந்திரன் முதலோர்
விரைவின்வந் தெய்திவண் டுளவத்
தண்ணறன் ஞன்கு கூற்றிலோர் கூறு
வந்ததென் றடிமல ரிறைஞ்சிக்

கண்ணகன் விமானத் துடனுட னேற்றிக்
காமர்வை குந்தமுற் றிடலும்
வண்ணவிற் குருசில் மாலொடும் பாலிற்
பால்கலந் தெனமரு வினனுல் (152)

விலக்கரு நிலவுக் கதிரினைச் சிறந்த
வெண்மதி பிரியினும் யாவுந்
துலக்குறும் வெய்யோன் கதிர்தணந் திடினுஞ்
சுடுதழல் வெம்மைதீர்ந் திடினு
மிலக்குவற் பிரிந்தோர் கணப்பொழு தேனு
முய்ந்திடே னுய்ந்திடே னென்ன
வலக்கணுற் றையன் பரதனை மவுலி
கவித்துல களித்தியென் றுரைத்தான். (153)

அய்யனிற் பிரிந்து முய்குவன் கொல்லோ
வடியனே னிம்மொழி யறையேல்
வய்யகம் புரப்ப மைந்தரை மவுலி
வனைகெனப் பரதனுங் குரைத்துச்
செய்யதா மரைக்கட் சத்துருக் கினற்குங்
குகனுக்குஞ் சிறந்தவி டணற்கும்
பொய்யெறி வாய்மை யிரவிகா தலற்கும்
பொறித்திடு முடங்கல்போக் கினனுல். (154)

முடங்கலிற் றீட்டும் பாசுர முணர்ந்து
முழுவலி துயின்றதோ ளினையோன்
மடங்கலே றனைய சுவாகுவை வளங்கூர்
மதுரையின் மணிமுடி சூட்டி
யடங்கலர்க் கடந்த சத்துருக் காதி
வித்தியா தேயமாள் கென்ன
மிடைந்தொளி பரப்பு மணிமுடி சூட்டி
வெஞ்சிலை யிராமனைக் கண்டான். (155)

செங்கதிர்ச் செல்வ விளிதினி லளித்த
  *தேம்படு புகழுடைக் குரிசில்
அங்கதன் றனக்கு மணிமுடி சூட்டி
  யணிமதி லயோத்தியி னடைந்தான்
கொங்கவிழ் நறுந்தார்க் குகனும்வீ டணனுங்
  கொற்றவர் யாவரும் போந்து
பங்கயத் திருவின் படர்முலை யுழக்கும்
  பகட்டெழின் மார்பனைத் தொழுதார். (156)

†கண்சிறைப் படுத்துங் கவின்குடி யிருந்த
  வுத்தர கோசலந் தன்னில்
விண்டொடு புரிசைக் குசாவதி நகரிற்
  குசனைநீண் மணிமுடி மிலைச்சி
யெண்படு தென்னங் கோசல நாட்டிற்
  சரவதி யென்னுநன் னகரின்
மண்டமர் கடந்த வில்வளைச் செங்கேழ்
  மணிமுடி யினிதினிற் புனைந்தான் (157)

வேறு

விறல்கெழு மரக்கர் கோனை யனுமனை யெண்கின் வேந்தை
யறைகழல் மைந்த னோடுந் துமிந்தனை யைய னோக்கி
யுறைதிர் நும் பதியி னென்ன முகமனோ டுரைத்துப் போக்கி
மறைபுகல் வேள்வித் தீயை மனத்திடை யினிது சேர்த்தி (158)

கார்புறங் கொடுக்குங் கூந்தற் கரும்புறழ் குதலைத் தீஞ்சொ
லூர்மிளை முதலா யுள்ள கொழுந்திய ரயோத்தி யுள்ள
வேர்கெழு மடவார் நாட்டு மடந்தையர் யாருஞ் சூழ
மாரியி னெழுந்த மஞ்ஞைக் குழாமென மருங்கு சென்றார் (159)

* தேம்படு தணர்ப்புயன் குரிசில் (பா. பே.)

† கண்சிறை படுத்துக் கவின்குடி (பா. பே.)

சுரந்தொளி யொழுகும் பைம்பூண் சுடருமிழ் மைந்த ரோடு
மரந்தினப் பிறந்த செம்பொ னருப்பிள முலையாள் பாலர்
பரிந்துகோ லூன்றிச் செல்லும் பண்புடைக் கிழவ ராதி
விரிந்தவந் நாட்டி னுள்ளோர் வியனக ரதனின் வாழ்வோர்
(160)

நால்வகைத் தோற்றத் துள்ள சராசர நண்பு பூண்டோர்
பால்படு மரக்கர் மற்றை வானரர் பரிந்து சூழச்
சாலுமைம் படையு மைந்த ருருவினிற் செல்லத் தாவின்
றேலுநற் றருமஞ் சீர்த்தி யிருநிதி முன்ன ரேக (161)

திருமகள் பூமி வெற்றிச் சயமகள் தொடர்ந்து செல்ல
வருவிலை யொண்பட் டார்த்தாங் கங்கையிற் குசப்புல்
[லேந்திப்
பரதனு மிளைய கோவும் பருதிசே யோடுஞ் செல்ல
முருகவிழ் துளவத் தண்ட ரிராமன்மு னடந்து சென்றார்
(162)

தாப்புலி யனைய வெற்றித் தம்பியர் சனங்க ளாரு
நீப்பறச் சூழ்ந்து செல்ல நெடுந்திரைக் கடலி னுப்பட்
பாப்பணைத் துயில்வோன் றாயப் பாய்திரைச் *சரையுண்மேய
கோப்பிரத் தான மென்னுந் துறையினிற் குறுகி னானே
(163)

அண்ணல்பின் றொடர்ந்து செல்லுஞ் சராசர மனைத்து
[மேற்கக்
கண்வழுக் குறுசெஞ் சோதிக் கதிர்மணி விமானங் கோடி
யெண்ணில கொணர்ந்து விண்ணாட் டிந்திரன் முதலோர்
[சூழத்
தண்ணறுங் கமல வீட்டிற் சதுர்முக னுங்க னுற்றான் (164)

சரையுமா நதியி னய்யன் றம்பிய ரோடு மெய்தி
யுரியவா சமனஞ் செய்யா வுற்றவவ் வுடலி னோடும்
விரைகமழ் துளவத் தண்டார் விண்ணவ னுடலி னூடு
கரையெறி நீரினீர் போய்க் கலந்தெனக் கலந்திட் டானே
(165)

* சரையு மேய (பா. பே.)

முருகவிழ் தருவி வீழ லிந்திரன் முதல விண்ணோர்
மருமலர் தூவி யார்ப்ப வாசமென் கமலப் புத்தே
ளருமறை பாடி யாட முனிவர ராசி கூறத்
திருமலர் மார்பன் போற்று மலரய னோடு செப்பும் (166)

அற்போடு மென்னோ டுற்ற சராசர மனைத்தும் வைகப்
பொற்புடை யுலக மொன்றுங் களிக்கெனப் பூவின் மேலோன்
கற்பக நாட்டின் வைகிக் கடவுளர் பணிந்து போற்றப்
பற்பல வூழி கால மமர்கெனப் பணித்திட் டானே (167)

ஆன்றபே ரறிவின் மிக்க விரவிசேய் முதலோர் யாருந்
தோன்றிய தெய்வ தத்த முடமுரு மினிது தொக்கார்
தேன்றரு பொழில யோத்தி மைந்தருந் தெரிவை மாரு
மான்றிகழ் மான மூர்ந்து தருநிழல் வைகி னாரே (168)

சீர்கெழு மயோத்தி நாட்டிற் செறிமலப் புழுவை யாதி
பேர்பெறு மரனும் புல்லுங் கற்களும் பேசா நின்ற
வேர்பெறு சராச ரங்க ளியாவையு மான மூர்ந்து
வார்கழற் றேவ ராகித் தருநிழல் வதிந்த தன்றே (169)

திருமக ளாய சீதை சிறந்தபா தலத்தி னின்று
மருமலித் துளவோன் மார்பில் வந்திருந் தரசு செய்யப்
புரிகுழற் பூமி யோடுங் கலுழனி லிவர்ந்து போகி
யருமறை முழக்கந் துஞ்சா வைகுந்தத் தமர்ந்து வாழ்ந்தான் (170)

வண்டொடு ஞிமிறுந் தேனுந் தும்பியும் வழிந்த தீந்தே
னுண்டுதேக் கெறிந்து பாட வொண்பொதி யவிழ்க்குஞ் [செய்ய
முண்டகப் பொகுட்டின் மேய முனிவன்வான் மீகி யோடு
மண்டநீண் முகட்டின் மேய வண்ணன்மா நகரஞ் சேர்ந்தான் (171)

விரியல்வெண் டோட்டுக் கைதை விரைகமழ்ச் சுண்ணஞ் [சிந்திப்
பொருகடற் புலவு போக்கும் புண்ணியச் சேது தன்னி
லரனுடை யிலிங்க பூசை யாற்றிவிட் டின்பம் பெற்றோன்
றிருவமர் காதை கேட்டோர் சிவனடி நீழல் சேர்வார். (172)

## வேறு

வள்ளவாய்க் கமல வாவியங் கரையின்
வாளைபாய்ந் துழக்கிய வயலிற்
புள்ளிவெண் முகட்டுக் கவட்டடி யலவன்
புரைபடக் கிளைத்தசேற் றளையில்
வெள்ளிவாய்ப் பாளை விரிந்தமுத் துதிர்க்கும்
விரிபுன லயோத்திநா டளிக்கு
மள்ளிலை நெடுவே லிராகவன் மைந்த
ராடல்வேற் குசனெடு மிலவன் (173)

பின்செலு மேக மன்றென வாரிப்
பெரும்புனல் குடித்துயர் கொண்டல்
மண்படு வரையிற் றவழ்தலு மற்றோர்
களிறென வயக்கரி பாய
மின்பொதி வயிறு கிழிந்துமுன் னுண்ட
வெள்ளநீ ரருவியிற் பொழியும்
பொன்பொதி யிமயப் பொருப்புடைக் குசன்றன்
புதல்வன்வே லதிதியென் றுரைப்பார் (174)

## வேறு

மழைசூன் முதிரா வகடுளைந்து
வாய்விட் டலறப் பிடியென்ன
முழையூ டுறங்கும் வாளுளைகள்
சிலைக்கு மூரி மலைநாடன்

றமையுஞ் சீர்த்தி யதிதியருண்
மைந்த னென்னர் தசைவீக்கி
பொழியுங் குருதி வாய்மடுக்கும்
போர்வே ளிடதன் புலிபோல்வான் (175)

**வேறு**

பாட்டுவண் டரற்றுந் தோட்டிளங் கமலப்
பருமுகை வெடித்தபூந் தடமும்
பேட்டுவண் டணைத்துச் சுரும்புகண் டுயிலும்
பெய்மலர்ச் சோலையு முடுத்துச்
*சேட்டிளம் பருதி தழும்பெழ நிவந்த
விஞ்சிசூழ் திருநக ரளிக்கும்
வாட்டிற லிடத ளளித்திடு மைந்த
னளனெனும் வாகைவே லுழவன் (176)

ஆலைபாய் துழனி முகிலென வொலிக்கு
மகன்வயிற் றலைதொறும் வளர்ந்த
பால்வயிற் றிளங்காய்ப் பசுங்கதிர்ச் செந்நெல்
பாளைவாய்க் கமுகினை மறைத்து
மேலுயர் வளங்கூர் மருதநா டளிக்கும்
நளனெனும் வேந்தர்கோன் மைந்தன்
ஞாலமோ ரேழு மொருகுடை நிழற்று
நபனெனு நாமவேற் காளை (177)

பழம்படு சடைத்தாற் றிளம்பெருங் கமுகின்
பரியநல் வாளைபாய்ந் துழக்கும்
தழைந்தவான் புகழ்சேர் மருதநா டளிக்குந்
தாரைவே னபனருண் மைந்தன்
றெழிந்துபட் டொழுகு மாலைதாழ் தடந்தோட்
டோன்றல்புண் டரீகன்மற் றவன்சேய்
செழும்புகழ்ச் சுதையா லுலகெலாந் தீற்றுங்
கேமதன் னுவாவெனுஞ் செல்வன் (178)

---

* சேட்டிளம் பருதி தழும்புற நிவந்த (பா. பே.)

நெட்டிலைக் கரும்புஞ் சாலியுந் துவைத்து
நெளிமருப் பெருமைமேய்ந் துறங்கும்
மட்டுவார் கழனி விளிம்புடுத் தோங்கும்
வளங்கெழு மருதநீர் நாடன்
கட்டழ குடைய வவன்மான் றேவா
ணீகன்மற் றவன்மகன் களத்தி
னெட்டலர் நெய்த்தோர் மடுவென நிறைக்கு
மொளிறுவேல் பீனகு வாமால் (179)

குண்டலந் திளைக்குங் குழைமுக முளிரிக்
கொடிச்சியர் கிளிகடிந் தோச்சும்
பண்டரு கிளவி கேட்டுவா னவர்கள்
கின்னரர் பாட்டினை வெறுக்குந்
தண்டலில் வளங்கூர் செழுமலை நாடன்
பீனகு வளித்தருள் தனயன்
மண்டல வேந்தர் மணிமுடி யுரிஞ்சி
வழன்றதாட் சகச்சுவா வென்பார் (180)

வலைத்தலைக் கிழித்த பருவராற் கன்று
வாளையம் பகட்டொடு தாவக்
குலைத்தலைப் பாளைக் கொழுமடற் கமுகின்
குறுங்கழுத் துடைந்துதே னொழுகி
யலைத்தெறி தரங்க வாவியிற் பாயு
மகன்வய லயோத்திநா டளிக்குஞ்
சிலைத்தடந் திணிதோ ளாங்கவன் மைந்தன்
றிறலுடைக் குத்திர வலோகன் (181)

கூத்தியர் கதுப்பி னறுமணம் விரிக்குங்
கொழுமலர்ப் படப்பைசூழ் கிடந்த
வேத்தரு மல்லற் றிருநக ரரச
ரிறைஞ்சிடுங் குத்திர வலோகன்

வாய்த்தருண் மைந்தன் முரபி டப்பேர்
மன்னவ னுங்கவன் புதல்வன்
றேத்துறை தெவ்வர் வழுத்திடுங் கழற்காற்
சந்திர சிரசுவென் றுரைப்போன் (182)

வாயுமிழ் சிலம்பி நூல்வலந் தென்னக்
கூன்முது கிருல்வலை விரித்துப்
பாய்திரைக் கடலிற் பரதவர் கவரப்
பருமணி யிப்பிவந் தடையும்
மாயிருஞ் செல்வம் வழங்குநீர்ச் சேர்ப்பன்
சந்திர சிரசுவின் மைந்த
னுயுநூற் கேள்வித் திறல்கெழு பானுச்
சித்திர னெனவறை குவரால் (183)

திரிமருப் பிரலை யேறழுத் தாக்கித்
தின்றிடுஞ் சிறுபுலி வெருவக்
கரிமருப் பினையும் பறித்துவெம் மடங்க
லுண்டிடுங் *கானக நாடன்
உருகெழு சீற்றப் பானுசித் திரனென்
றுரைத்திடு மன்னவன் மைந்தன்
பருதிவேற் றடக்கைச் †சுதாவுவென் றேத்தும்
பார்புகழ் மன்னனென் றுரைத்தான் (184)

இன்னநற் காதை படித்துளோர் கேட்டோ
ரெழுதினோ ரினிதென வியந்தோர்
பன்னெடுங் கால மிந்திர திருவிற்
பார்பொது வறத்தனி புரந்து
பொன்னக ரெய்தி யரம்பையர் தெய்வப்
புணர்முலை திளைத்திட வாழ்ந்து
பின்னல்வெண் டிரைதாழ் கங்கையஞ் சடையோ
னடிநிழல் பெட்பின்விற் றிருப்பார் (185)

இருபத்தேழாவது.

இராமன் வைகுந்த மடைந்த வத்தியாயம் முற்றும்

ஆகத் திருவிருத்தம் 1406

---

* கானநா டனுக்கு (பா. பே.) † சுதாயுவென்று (பா. பே.)

## இருபத்தெட்டாவது
## சந்திரன் மரபுரைத்த வத்தியாயம்
## (சந்திர வங்கிச முரைத்த வத்தியாயம்)

**எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியர் விருத்தம்.**

பருதிநன் மரபி னெம்பிரா னடியார்
யாரையு மினிதினிற் பகர்ந்தாய்
விரிகதிர்த் திங்கண் மரபினிற் றோன்றி
வெள்விடைப் பாகனைப் பழிச்சுங்
குருதிவே லரசர் யாரையு முரைத்தி
யென்னலுங் கூன்முது காமை
யுருவுகொள் கடவு ளிந்திரன் மகதி
யாழ்முனி யுகந்திட வுரைப்பான் (1)

பாளிலாச் சொரியுங் கலைமதிக் கடவுள்
பரிவொடு முயிர்த்திடுஞ் சிறுவன்
வேலில்வே ளனைய புதனவன் மைந்த*
னேக்கினர் விழிகவர் வனப்பிற்
றேன்மழை பொழிந்தா லன்னதீங் குதலை
யுருப்பசி நசையுறு திண்டோண்
மானவேற் றடக்கைப் புரூரவா வென்று
மதியுறழ் தனிக்குடை வள்ளல் (2)

சிந்துரம் பூத்த சிறுபிறை நெற்றிச்
செவ்வரிக் கருங்கயன் மழைக்கட்
பந்தணி காந்தண் முகிழ்விரற் செவ்வா
யுருப்பசிப் படர்முலைத் தழுவி
யந்தமில் சீர்த்திப் புரூரவா வென்போ
னளித்தருள் வேற்படை மைந்தன்
கந்தடு சீற்றக் கடாக்களி றனைய
வாயுவென் றுரைத்திடுங் காளை (3)

---

*நோக்குநர் விழிகவர் வனப்பின் (பா. பே.)

## வேறு

ஆயு வென்றுல கேத்திய வறைழல் வேந்தன்
வேய்ம ருட்டுதோட் பிரபையென் றுரைத்திடு மெல்லென்
சாயன் மங்கைவெம் முலைமணந் தீன்றருள் தனயன்
மாயி ரும்புவி வழுத்துசீர் மானவே னகுடன் (4)

நரலை மாக்கட லுலகம் புகழ்ந்திடு நகுடன்
றரைநெ கிழ்த்திடுங் கடாமலை யுரிபுனை தடந்தோட்
பரமன் சேவடித் தாமரைப் பணிந்தருண் மைந்த
னிருநி லம்புகழ் யயாதியென் றிசைத்திடு மேந்தல் (5)

அள்ளி லைக்கதிர் வேற்படை யயாதியென் றறைவோன்
*வெள்ளி நல்கிய தெய்வயா னையைமுன் வேட்டாங்
கெள்ள ருந்திறல் விடபரு வாவினி தீன்ற
வள்ளி நுண்ணிடைச் சன்மிட்டை முகிண்முலை மணந்தான் (6)

எவ்வெ லாத்திசை யும்புகழ்ந் தேத்துசீ ரெதுவும்
கவ்வை நீர்ப்புவி காத்தருள் வேற்றுரு வசுவுங்
கொவ்வை யங்கனி மருட்டுவாய்க் குதலையந் தீஞ்சொற்
றெய்வ யானையென் றுரைப்பவ ளீன்றருள் சிறுவர் (7)

அச்ச ணங்குவேற் றுருகுவுந் திறல்கொள்வேன் மனுவெங்
கச்சை மால்களி றனையவெம் பூருவுங் கவினிச்
செச்சை கொட்டிய விளமுலைத் தீங்கனித் துவர்வாய்
நச்சு வேல்விழிச் சன்மிட்டை நல்கிடு மைந்தர் (8)

தெய்வ யானையைத் தீர்ந்துசன் மிட்டையென் றுரைக்குங்
கொவ்வை வாய்ச்சியை நசையுறு மியாதியைக் கொதித்து
வெவ்வ முற்பொறி விழியுக வெள்ளியென் றுரைப்போ
னெவ்வ முற்றுவன் கிழவுரு வெய்திடச் சபித்தான் (9)

* வெள்ளி நல்கிய தெய்வயா னையைமணம் விரும்பி (பா. பே.)

உருவ மைந்தரென் கிழவுரு வாங்கிநும் மிளமை
தருதி யென்றலு நால்வருந் தனித்தனி மறுப்ப
வெரிபொ லங்கழற் புருருவாங் கிசைந்தன னளிப்ப
மரும லர்க்கணை வேனில்வே ளெனவடி வமைந்தான் (10)

பருவ மாயிர மகளிர்த மின்னலம் பருகி
யுருவு பூண்டிடு மிளமைதன் மைந்ததனுக் குதவி
மருவு மூப்பினை வாங்கியம் மைந்தனெவ் வுலகும்
புரவு பூண்டிடப் பொழிகதிர் மணிமுடி புனைந்தான் (11)

தெனனந் திக்கினிற் றென்னனு கெனத்துரு வசுவா
மன்னர் மன்னனை மணிமுடி புனைந்துதென் கீழ்பாற்
பொன்ன வாங்கழ லெதுவினைப் புரத்தியென் றளித்துப்
பன்னு மேற்றிசை யளிக்கெனத் துருகுவைப் பணித்தான். (12)

கடக ளிற்றினை நிகர்தரு மனுவெனுங் காளை
வடபு லத்தினைக் காக்கென மணிமுடி கவித்துக்
கொடியி டைத்துவர் வாய்ச்சிய ரோடுகான் குறுகி
யுடலம் வாடநோற் றியாதியாங் குயர்கதி யடைந்தான் (13)

தரைபு கழ்ந்தசி ரெதுவிவி தளிக்கருள் தனயர்
வரைகொண் மார்புடைச் சகத்திர சித்துவண் குரோட்ட
னிருபர் போற்றிடு நீலசி தப்பெயர்க் குரிசி
லிரகு வென்னுமோர் நால்வரென் றினிதியம் புவரால் (14)

மோட்ட ராமுடிக் கிடந்தபார் பரித்துமூ வுலகுந்
தீட்டு வண்புகழ்ச் சகத்திர சித்தெனுந் திறலோன்
சேட்டி ளம்பிறைக் கண்ணியோற் றொழுதருள் சிறுவன்
வாட்டி றற்சத சித்தெனு மன்னவர் திலகன் (15)

## வேறு

†நெடுவெண் கவிகை நிலாக்கொழிப்ப
நிணங்கால் வடிவேற் சதசித்த
னடுவெம் புலிப்போத் தனையதிறற்
சிறுவ னடற்கே கயனவன்சே
யுடலுஞ் செருவென் றுரைத்திடினு
மொன்ன ருதிரம் பருகியல்லாற்
*றடாறு புகுதா தொளிர்வடிவேற்
றரும னென்னச் சாற்றுவரால் (16)

அன்னோன் மைந்தன் றீம்பாலு
மமுதம் புளிப்பத் தித்திக்குங்
கன்னற் குதலை மடமாதர்
காம னென்ன மயல்கூரு
மன்னன் றரும நேத்திரனு
மவன்சேய் விளங்கு மணிப்புயத்தாற்
பொன்னங் கிரியின் வனப்பழித்த
போர்வேற் கீர்த்தி யெனும்வேந்தன் (17)

‡அரசு குவிந்துத் திறையளக்கு
மோதை யம்பொற் குணில்பொருமு
முரசு முழங்கு மோதையினை
யவிக்கு மம்பொன் முற்றத்து
விரைசென் மான்றேர்க் கீர்த்தியெனும்
வெள்வேஃற் கானை யருண்மைந்தன்
புரசை யானை வேல்வேந்தர்
போற்றும் புகழ்ச்சஞ் ஞக்கினனே (18)

அன்னோன் முன்னைப் பவத்தினிலோர்
புறவ மாங்கோர் பாசுபதன்
பொன்னங் கமலப் பதத்துகடன்
மெய்யிற் பொருந்தப் பட்டதனுல்

*தடாறுபுகுதா தொளிர் வடிவாள் (பா. பே.)
† நெடுவெண் கவிகை (பா. பே.) ‡ அரசு குவித்து (பா. பே.)

மன்ன னுகி யெவ்வுலகு
  மதிவெண் குடைக்கீட் டளிபுரந்தாங்
கொன்னர் வணங்கு மயிட்டுமா
  னென்னும் புதல்வன் றனையுயிர்த்தான் (19)

வேறு

கத்திகைக் கருமென் கூந்தற்
  கன்னியர் விரும்புந் திண்டோட்
பத்திர சிரேணி யென்போன்
  மயிட்டுமான் பயந்த மைந்தன்
முத்தவெண் கவிகை மன்னர்
  முடிமணி கிழிக்கும் பொற்றுட்
டுத்தம னென்னும் வெல்வேற்
  றேன்றன்மற் றவன்றன் மைந்தன் (20)

அன்னவன் மைந்தன் றிங்கட்
  கூன்புறத் தணவ வோங்குந்
தென்வரைச் சாந்து மாதர்
  திரண்முலைச் சுவடு நீங்காக்
கன்னவின் றுயர்ந்த திண்டோட்
  டனகன்மற் றவன்றன் கானி
யென்னிலத் தரசும் போற்றுங்
  கிருதவி ரியனென் பாரால் (21)

வேறு

கலிநிலைத் துறை.

ஏத்து வார்கழ லாங்கவன் மகரானி வணனை
யார்த்து வன்சிறைப் புகுத்தியெவ் வுலகமு மடர்த்த
கார்த்த வீரிய னுகுமக் காவலன் றனக்குக்
கோர்த்த வண்புகழ்க் குமரரோர் நூற்றுவ ருளரால் (22)

வீர மைந்தரோர் நூற்றுவர் தம்மில்வெற் சூரன்
சூர சேனன்போர் விட்டுணி *கிருட்டிணன் றலங்கு
மார மார்லிகைச் சயத்துவ சன்றனோ டவர்
பார னைத்தையுந் தமதிணி தோளிலிற் பரித்தோர். (23)

வெற்றி வேற்சயத் துவசன்மா லன்பினன் விறல்கூர்
மற்றை நால்வரு மதிவகிர்க் கண்ணியான் மலர்த்தாட்
பொற்ற தாமரைப் போதினில் வழிபடும் புனித
ருற்ற வன்பினோ டவர்சயத் துவசனுக் குரைப்பார் (24)

திங்க ளங்குலத் துதித்தவர் யாவருஞ் சிறந்த
கங்கை சூடித னன்பினர் நீயது கருதாய்
மங்குல் போன்மெனு நிறத்துடை மாலடி பழிச்சி
யங்கண் மாநில முழுவது மிகழுமென் றறைந்தார் (25)

அறைந்த வையன்மீர் வம்மின்கள் முனிவர்பா லணுகிச்
சிறந்த தேதெனத் தேர்குது மெனச்சயத் துவசன்
றுறந்த வேழ்பெரு முனிவரைத் தொழுதுரைத் திடலுங்
கறங்கு போற்சுழ லைம்புலன் கடிந்தவ ருரைப்பார் (26)

யாவ ரெப்பெருந் தேவரைப் பழிச்சின ரேனும்
பாவ டிக்களி றுரித்தவர் பழிச்சிய தாமால்
மூவ ராகிமுத் தொழில்களு முறைமுறை யியற்றுந்
தேவ தேவனைப் பொருளினுஞ் சிறந்துநிற் பதனால் (27)

அரசர் விண்டுவின் கூற்றினி லவதரித் ததனால்
விரைசெய் தண்டுழாய் முகுந்தனை விண்ணவர் கோவைப்
பரவ வேண்டுநான் மறையவர் பசுபதி கூற்றின்
வருத லாலரன் சேவடி வழுத்துதல் வழக்காம் (28)

---

* இட்டிணன் றாக்கு (பா. பே:)

தேவர் மாயனை யசுரரு மரக்கருஞ் சிறந்த
தாவ ருந்திறல் வயிரவக் கடவுளைத் தகைசா
லோவி னல்லிசை யாழினோ ரியக்கரோண் மதியை
வீவில் விஞ்சையர் வாணியைப் பழிச்சுதல் வேண்டும். (29)

*ஓடிவில் சாத்திய ரிரவியைக் கின்னர ருமையைக்
கடவுண் மாதவர் மகேசனைக் கமலவிட் டயனை
யடல்ம னுக்கள்பார்ப் பதியைமா யவனையில் லறத்தோர்
தொடர்பி னேத்துமெத் தேவையா யினுந்தொழல்
[வேண்டும் (30)

பிரம சாரிய ரயனைவை கானசம் பிடித்தோர்
பருதி வேந்தனைப் பற்றறத் துறந்திடு மெதிக
ளருள்பு ரிந்திடு மகேசனைப் பூதங்க ளரனைக்
கருத ருங்கணை மைங்கரன் றனைத்தொழல் கடனும் (31)

பலபி தற்றியென் பங்கயக் கடவுளை முதலாக்
குலவு நீள்சினைத் தருக்களை யிறுதியாய்க் குறித்த
வலகில் பல்லுயி ரெவைக்கும்வெண் ணீறணிந் தாடுங்
கலவ மாமயில் பங்கனே யாதியாங் கடவுள் (32)

என்று நான்முக னெமதுளத் திருளெறிந் திசைத்தான்
மன்ற லந்துழாய் முகுந்தனை யிவன்வழுத் திடினுங்
கொன்றை சூடியைப் பழிச்சிய தாமெனக் கூற
நன்றெ னத்தெளிந் தரசர்தம் பதியினண் ணினரால் (33)

அரச ரைவரு மகளில மளித்திடு நாளில்
வெருவ ருந்திறல் விதேகனென் றுரைபெறு மவுணன்
கரைசெய் மாக்கடற் படையொடு மிகவுளங் கனன்று
பொருக ளத்திடை மன்னரோ டெதிர்ந்தமர் புரிந்தான் (34)

---

*ஓடிவில் சாக்கியர் (பா. பே.)

சூர னென்பவ னுருத்திரன் வெங்கணை தொடுப்ப
வாரு ணப்படை சூரசே னன்றனி வழங்க
வீர விட்டுணி விரிஞ்சன்வெம் படையினை விடுப்ப
போர்செய் கிட்டிணன் வாயுவின் கொடுங்கணை பொழிந்தான் (35)

விட்ட விட்டவெங் கணையெலாம் விலக்கிவா ளவுணன்
வட்ட வெஞ்சிலை குழைத்தலும் வருசயத் துவசன்
கட்ட முற்புகை கான்றெரி கணைகதி ராழி
தொட்டு மற்றவன் மணிமுடிக் கருந்தலை துணித்தான் (36)

வெய்ய தானவப் பகைப்படுத் தடுகள வேள்வி
செய்து முற்றிய சயத்துவ சனுக்கருள் சிறந்து
மையில் கோசிகன் மாலுள மகிழவோர் வேள்வி
யெய்தி யாற்றின னுங்கவ னெழுமையுந் துடைத்தான் (37)

மற்றை மன்னவர் நால்வர்க்கு மகத்தியன் வசிட்ட
னற்ற வம்புரி யத்திரி கவுதம னண்ணி
கற்றை வார்சடைக் கண்ணுத லுவப்பாகல் வேள்வி
முற்று வித்தன ரவர்களு முத்திவீ டடைந்தார் (38)

உரைத்த மைந்தரிற் கிட்டிண னுயிர்த்தருண் மைந்தன்
வரைத்த டம்புயன் வசணனை யாதியாச் சேடன்
பரித்த பாரினைத் தமதுதோள் வலியினாற் பரிக்கு
மரத்த வேலுடை மைந்தர்நூற் றுவர்தமை யளித்தான் (39)

மால்வி யப்புறு சயத்துவ சன்றரு மைந்தன்
கால சங்கனீ ரைம்பது காதலர்ப் பயந்தான்
சாலு மைந்தரின் வீதிகோத் திரனெனுந் தக்கோன்
பால லோசன னருளினு லனந்தனைப் பயந்தான் (40)

## சந்திர வங்கிச முரைத்த வத்தியாயம்

அனந்த னென்றுல கேத்திய வரசிளங் குமர
னனந்த லேப்புவி முழுவது நளிகதிர் பரப்புந்
தினஞ்செய் வோனெனத் திகிரியோன் றுருட்டிவான் மகளிர்
மனங்க வர்ந்திடு துர்ச்சயன் றனைமகிழ்ந் தளித்தான் (41)

கருப்பு வெஞ்சிலே யகற்றிய காமனென் றெவரும்
விருப்ப மெய்துறு துர்ச்சயன் விழிக்கவர் வனப்பி
னருப்பு வெம்முலே யம்பலேத் தொழுகும்வாட் டடங்கட்
டிருக்கண் டன்னவோர் சேயிழை முகிழ்முலே மணந்தான் (42)

கற்பின் விக்கமுங் கதிர்முலே விக்கமுங் கவின்செய்
பொற்பின் விக்கமும் பூத்தமென் பொலங்கொடித் தடந்தோ
ளற்பின் விக்கமுற் றணைந்திடு நாளின்மற் றொருநாள்
வெற்பின் விங்கிய திரள்புயன் யமுனேமே வினனுல் (43)

அன்ன மாநதிக் கரையினி லமிழ்துரு வெடுத்துப்
பொன்ன வாஞ்சுணங் கரும்பிய புணர்முலே தாங்கிக்
கன்னன் மென்மொழி யுருப்பசிப் பெயரொடுங் கவினி
மின்னி ளங்கொடி மென்மெல வொதுங்குதல் கண்டான் (44)

கண்ட கண்வழி யுணர்வுபோய்க் கதிர்முலே கலப்பக்
கொண்ட வன்பினி லறிவழிந் தரசிளங் குமரன்
கெண்டை யந்தடங் கட்கடை யின்னருள் கிடைத்துத்
தொண்ட னென்மொழி கேட்டியென் றிரந்திவை சொல்வான் (45)

பொன்செய் கம்மியர் கைசெயாப் பூண்சுமந் தோங்கி
மின்செய் நுண்ணிடை வருத்திய வெம்முலேத் திருவே
கொன்செய் வேல்விழி கோடியன் கோடியன் வளிய
னென்செய் கேனெனத் தொழுதலு மிளநகை முகிழ்த்தாள் (46)

நிதலை கொப்பளித் தோங்கிய வனமுலைத் தீஞ்சொல்
மதர்வை நோக்கித வின்னகை வாயில்பெற் றரசன்
புதுந றுத்துளி பருகிவீழ் பொன்னிறச் சுரும்பர்
ததையு மென்மலர் மாதவிப் பந்தரிற் சார்ந்தான் (47)

வண்ண மேகலை விக்கற வளர்ந்த தேர்த்தட்டுந்
தண்ணந் தாமரை கவற்றிவேல் தாங்கிய மதியு
மண்ணல் வெஞ்சிலை வேணிக ரரசிளங் குமரன்
கண்ணி மைப்பற நோக்கலிற் கடவுளர் போன்றான் (48)

அரைக்க லாதபூந் தேய்வைகோட் டிளமுலை யகன்ற
வரைத்த டம்புயத் துட்புகுந் தொளித்திட மருவி
யிரைத்து வண்டுறுப் பூங்குழ லணங்கொடு மிறைவ
னுரைக்க நெஞ்சிடை யுன்னவொண் ணுனல முற்றான் (49)

பிதிர்சு ணங்கணி வனமுலை விசும்பிடைப் பிரியன்
விதலை யெய்துவ னென்றலும் விண்ணவர் நலனு
மதிர்தி ரைக்கட லமிர்துநீ யணைதொறும் பயக்கும்
புதுந லத்தினு மினியகொல் போகலே னென்றான் (50)

அழகு கண்படு மவிர்மதி வாண்முகத் தணங்கின்
றழுமுற் றெய்திடாக் குவிமுலைத் தடத்திடை மூழ்கி
யுழுவ லன்பொடும் பலபக லுவந்துவே லரசன்
முழுவு கண்டுயி லாததன் முதுநக ரடைந்தான் (51)

அடைந்த மன்னவன் வேலில்வே ளங்கையால் வருந்திக்
கடைந்த செப்பெனக் கதிர்முலைப் பணைமருள் கழைத்தோட்
குடங்கை யுள்ள மைந் தடங்கலாக் குவளையந் தடங்கண்
மடந்தை வைகிய வுவளகத் தடைந்தனன் மாதோ (52)

கற்ப ருங்கலம் புகுதரு கணவனை வணங்கி
யெற்பி ரிந்துநீ யெவ்வழிப் படர்ந்தனை யெனலும்
வெற்பின் வீங்கிய தடம்புயன் வெள்கின னுகி
நிற்ப மூரல்பூத் தணங்கனு ளுணர்ந்திவை நிகழ்த்தும் (53)

ஊடு கின்றிலன் வெருவவீ யுருப்பசி முலைமேற்
கூடு தீவினைத் தவிர்ந்திடக் கண்ணுவற் குறுகி
நீடு வேள்விக ளியற்றெனை நெஞ்சழிந் துருகி
வாடி மன்னவன் கண்ணுவன் *மருங்குவந் தடைந்தான் (54)

அரங்கக் கூத்திய ரணிமுலை முன்றிலிற் றிளைப்ப
விரிந்த் தீயினைத் துடைக்குநல் விதியுரை யென்னத்
திருந்து மாதவம் புரிந்திவண் சேர்கென வரச
னிரங்கு பூங்குயி லொலிவரு மிமயவெற் படைந்தான் (55)

அய்ய செங்கதி ராதவ னெனக்கதி ரெறித்து
மையெ றிந்தொளிர் பன்மணி குயிற்றிய மாலை
கய்யி னேந்தியோர் கின்னரன் புகுதலுங் கனன்று
செய்கொள் வேலுடைத் துர்ச்சய னமர்க்கெதிர் நேர்ந்தான் (56)

காம னன்னவோர் துர்ச்சயன் கனன்றுவா ளுருவித்
தூம வேலுடைக் கின்னரற் றுளைந்தவன் கொணர்ந்த
தாமங் கைக்கொடு தளிரியற் பவளவாய்த் தீஞ்சொல்
வாம மேகலை யுருப்பசி பான்மனம் வலித்தான் (57)

கமழ லந்துறை சூழ்வருங் கங்கையங் கரையின்
யமுனை மாநதித் தீரத்தி னேமகூ டத்தி
னமரர் நாட்டினிற் றேடியு மறுதுகொப் பளிக்குங்
குமுத வாய்ச்சியைக் †காண்கலா னுயுளங் கொதித்தான் (53)

வேனில் வேனிகர் துர்ச்சயன் விரைவினி னெய்தித்
தேன ளாயசொற் றிலோத்தமை வெள்குறப் பசிய
கான லந்துழாய் முகுந்தனா ருவில்வருங் கரும்பை
மான தப்பெரு வாவியிற் கண்டுள மகிழ்ந்தான் (59)

* மருங்குபோ யடைந்தான் (பா. பே.)
†காண்கல னுகியுட் கொதித்தான் (பா. பே.)

மலரின் மேலுறை கடவுளும் வானவர்க் கிறையும்
புலமை மேம்படு கின்னரர் புகழ்ந்துமுன் னளித்த
விலைவ ரம்பரி யாதபொன் மாலையை வியவா
வுலக மேத்தெழி லுருப்பசி முலைமுகட் டணிந்தான். (60)

திங்கள் வெண்மணித் தலத்திளிற் செந்தளிர்க் கொழுதிக்
கொங்கு யிர்ப்பமென் குயில்குடைந் தாடுதண் டலையில்
மங்குல் கண்படு மால்வரைச் சாரலின் மன்ன
னங்கை யம்பகட் டிளமுலை நன்னல நுகர்ந்தான். (61)

வாரு டுத்தமென் முலைத்தடப் புயத்துற மருவி
ஞரந் தட்டினு மாயிரக் காதம்விட் டகன்று
சோரு நெஞ்சினர் போலவுள் ளாருயிர் துடியா
விர வெண்மதிக் கஞ்சிவின் னாதினி திருந்தான். (62)

மணக்கும் பல்பக லோர்நொடி வனமுலை மருமந்
தணக்கு மோர்கண மூழிநா ளாமெனத் தயங்கித்
துணர்த்த கோதையுந் தோன்றலு மொழுகுநாட் டேவர்
புணர்ப்பி னுற்செழும் பூங்கொடி யீங்கிவை புகல்வாள். (63)

கைத வந்தெறு கண்ணுவ னென்னைநீ கலந்து
பைத லுற்றவெவ் வினையறப் பகர்ந்தவை யனைத்துஞ்
செய்தி டாமையா லென்னொடு நின்குலந் தீய
வைது கொன்றிடு மென்னவு மனமருண் டிருந்தான் (64)

வள்ளல் பெட்பற வேற்றுருக் கொண்டிடு மடந்தை
யுள்ள நோக்கிவெங் கூத்திய ருளத்திடை குணிக்குங்
கள்ளம் வேதனுங் கணிப்பரி தெனநசை நீங்கி
வெள்ளி வீழ்என வருவி தூங் கிமையவெற் படைந்தான்(65)

வளிய ருந்தியோர் பன்னிரு பருவமா தவஞ்செய்
தளிகொ ளைஞ்சுடைக் கணனுவன் மருங்குவந் தடைந்து
துளிகொள் கண்ணினன் றீவினை துடைக்கென வுரைப்ப
நளிகொள் கண்ணியாய் நடுங்கலென் றீங்கிவை நவில்வான்
(66)

மாசு பூத்தொளிர் தீவினை துடைக்குமா மருந்து
காசி யல்லதை யில்லெனக் கண்ணுவ னுரைப்பத்
தேசி கன்றிருத் தாளிணை பணிந்துநீ தெறிந்த
வாசில் கேள்வியா னனந்த *கானனத் தடைந்தான் (67)

காசி மாநகர்க் கேகவோர் கழல்பெயர்த் திடுமுன்
பேசு பாவமா யிரமடிப் பின்னிட வேகி
வீசு தெண்டிரைக் கங்கைநீர்ப் படிந்துவெண் ணீறு
பூசு மேனியான் பூங்கழல் போற்றிசைத் திருந்தான் (68)

முத்தி கண்படு காசியின் முழுவுறழ் தோளான்
பைத்த பாம்பணி விமலனைப் பலபக லிறைஞ்சித்
தத்து வந்தெரி கண்ணுவன் றவவன மெய்தித்
கைத்த லங்குவித் தாங்கவன் கழலிணை தொழுதான் (69)

தொழுத மன்னனைத் தடவந்து துகளறு முனிவன்
பழுதி லின்பதிக் கேகெனப் பதிமருங் கெய்தி
யழகு கண்படு மம்பகட் டிளமுலைத் துவர்வா
யுழுவ லன்புடை மனைவியோ டுவந்தினி திருந்தான் (70)

கருணை யங்கட லாகிய கண்ணுவ முனிவ
ளிருநி லம்புகழ் துர்ச்சயன் மருங்குசென் றெய்தி
யரிய மாமக மாற்றுவித் தகன்றன னவன்சேய்
விரைகொள் தார்முடி மேவலர் வணங்குகப் பிரீதன். (71)

வேறு

முன்னர்யா மெடுத்துக் கூறு
முழுவலித் துயின்ற திண்டோள்
மன்னவன் குரோட்டு வென்னும்
வரிசிலை யுழுவன் மைந்தன்
பன்னக முடியின் வைகும்
பார்பொது நீக்கி யாளுந்
துன்னலர் வணங்கி யேத்துந்
துவசனி யாகு மென்றே. (72)

* ஆனந்தக் கானகத் தடைந்தான் (பா. பே)

நச்சிலைக் குடுமி வெள்வேற்
றுவசனி நாம மைந்தன்
கச்சையங் களிநல்வி யானைக்
கழிப்புலால் சுவைத்து வேந்தர்
பச்சிரத் தங்க ளுண்டு
பசிப்பிணி யகற்று மொள்வாட்
செச்சையங் கண்ணி சூடுந்
திண்புய மூர்த்தி யென்பார் (73)

கலைச்செரு விளைக்கு மல்குற்
கன்னியர் கதித்த பொம்மன்
முலைச்செரு விளைக்கு மார்பின்
மூரிவேல் மூர்த்தி மைந்தன்
மலைச்செரு விளைக்கும் யானை
விசங்குவா மவன்றன் மைந்தன்
சிலைச்செரு விளைக்குந் திண்டோட்
சித்திரத் தேர னுமால் (74)

திருவிருந் தகன்ற திண்டோட்
சித்திரத் தேரன் மைந்த
னிருநில மளக்குஞ் செங்கோ
லியற்சசி விந்து வாகு
மரவுபைத் தேந்து ஞால
மளித்தரு ளவன்றன் மைந்தன்
*பிருதுவே யச்சு வென்ன
வுயர்நிலம் பேசு மன்றே (75)

ஆங்கவ னருளு மைந்த
னுடல்வேற் பிருது கன்ம
னிங்கிவன் புதல்வன் வேள்வி
பார்க்கவ னிவன்றன் மைந்தன்

* பிருதிவி யச்ச வென்ன வுயர்நிலம் (பா. பே.)

வாங்குவில் விழுங்கு திண்டேோள்
மன்னவர் மவுலி தேய்த்துப்
பூங்கழல் சிவந்த வெற்றிப்
புரவலன் பிருது வென்போன் (76)

சூடாதுநீள் குறைதுந் தூய
கொழுநிதிக் குப்பை துஞ்சும்
வடாதுநற் றமிழ்நூற் கேள்வி
வாய்ந்திடுந் தெனுது முற்றும்
விடாதுதா னுடைமை பூண்ட
விறல்கெழு பிருது மைந்தன்
கடாமலை யனைய சீற்றப்
பிருதுசத் தமனுங் காளை. (77)

நெடுமதி நெற்றி தோய்ந்து
நீள்கதிர்ச் செலவு மாற்றுங்
*கொடுமதிட் புரிசை சாய்த்துக்
கூர்நுனை மழுங்கு கோட்ட
வடுதிறற் களிறு போலு
மாங்கவ னருளு மைந்தன்
மிடலுடை யுசனு மன்னேன்
விறன்மகன் சிதெடு வென்போன் (78)

மற்றவன் மைந்தன் வெள்வேற்
கவசன்மற் றவன்றன் மைந்தன்
கொற்றவர் மௌலி தேய்த்துக்
குரைகழல் விளங்கு நோன்றுள்
வெற்றிவேற் றடக்கை சார
விருத்தனுங் கவன்றன் மைந்த
னொற்றைவெண் கவிகைச் செங்கோ
லுறுவிய னென்பர் மாதோ (79)

* கொடுமுரட் புரிசை (பா. பே.)

கைந்நிறை யெஃக மேந்திக்
களிறுவீழ் ஞாட்பி னேற்ற
பொன்னகர்க் கிறையை வென்று
விசும்பினிற் புரவு பூண்ட
மன்னவன் வயிரத் திண்டோ
ளுருவியன் மைந்தன் வாழ்த்தி
யென்னிலத் தரசும் போற்றும்
விதர்ப்பனென் றியம்பு மேந்தல் (80)

முலைபொரக் குழைந்த பைந்தார்
முழுவலி துயின்ற திண்டோள்
விலகிவில் லுமிழும் பைம்பூண்
விதர்ப்பர்கோ னளித்த மைந்தர்
கலையுணர் கிருத னுள்வாட்
கௌசிகன் கனக னாக
வுலகடிப் படுத்தி வென்ற
வொளிறுவே லுரோம பாதன் (81)

அறந்தலை மணக்குஞ் செங்கோ
லரசரி லுரோம பாதன்
பிறங்குசீர் மைந்தன் வெள்வேற்
பெப்புரு வவன்றன் மைந்தன்
கறங்குநீர் வேலை ஞாலங்
கனைகழ லினிது காக்கு
மறந்துயில் வயிரத் திண்டோண்
மன்னவன் விருத்தி யென்பான் (82)

கலையற வீங்கி யோங்குங்
கைவள ரல்கு னல்லார்
முலைமுகங் குளிரத் தூங்கு
முத்தம்வெண் ணிலவு காலு

மலேபொரு திணிதோட் சந்தன்
விருதிசே யவன்றன் மைந்த
விலமுகப் பூண்செய் மார்பன்
விச்சுவ சமனென் பாரால் (33)

மடல்வயி றுடைத்துத் தீந்தேன்
†வழிதரு மாலே மார்பன்
மிடல்கெழு வயிரத் திண்டோள்
விச்சுவ சமன்றன் மைந்த
னுடலும்வெஞ் சமத்தி னென்று
ருன்சுவைத் துதிர மாந்து
மடல்கெழு வயிர வொள்வாட்
சுமந்துவென் றறைவ ரன்றே (84)

விழுதுபட் டொழுகு முத்த
வெண்ணிலா மாலே தாழு
மெழுவுறழ் குவவுத் திண்டோட்
சுமந்துவி னெழில்கொண் மைந்தன்
கழுதுகை கொட்டி யால
வொன்னலர்க் கடிந்த வாய்வாள்
முழுதுல கொருகோ லோச்சு
நளனெனு மூரி வேலோன் (85)

அல்லவை கடிந்து நாளு
மறந்தலே வளர்க்குஞ் செங்கோற்
கல்லுறழ் திணிதோள் வெற்றிக்
*கௌசிகன் கருணே மைந்தன்
கோல்புலி யணேய சோதி
யாங்கவன் குமரன் றாய
தொல்புகழ் படைத்த சோதிட்
டுமனெனச் சொல்லு வாரால் (86)

---

*வெற்றிக் கேசிகன் (பா. பே.)
† வழிதரு மாலே மார்பின் (பா. பே.)

கடலிலம் புரக்கும் வெய்ய
　　கடாக்களிற் றுழுவ னுய
வடல்கெழு மன்னேன் மைந்தன்
　　வபுட்டுமா னவன்றன் மைந்தன்
குடிபுறங் கூவ வொன்னுர்
　　கொடிமதிற் குடுமி கொண்ட
மிடல்கெழு வயிரத் திண்டோள்
　　விறற்படை பிரம மேதி (87)

அருட்கடன் பூண்ட செங்க
　　ணுடல்வே லன்னேன் மைந்தன்
றிருக்கிள ரம்பொன் மோலிச்
　　சிதர னவன்றன் மைந்தன்
முருக்கிதழ் முத்த மூரன்
　　முகிழ்முலை யின்சொ னல்லார்
விருப்புறுங் காம னன்ன
　　விகாதெனன் றுரைப்ப ரன்றே (88)

இடங்கர்வெங் கராமோ டுடி
　　*யெறிதிரைக் கிழிய வோடுங்
கிடங்கர்சூ ழொன்னு ரிஞ்சிக்
　　†குடுமிகொள் கிருத்தன் மைந்தன்
மடங்கலேற் றனைய சீற்றக்
　　குணியவன் மைந்தன் வெய்ய
விடங்கவிழ்த் தொளிறும் வைவேல்
　　விருட்டிணி யென்பர் மாதோ (89)

மூழிவாய்த் தாமஞ் சூடி
　　மார்பக முழுதுங் கொண்ட
விழ்முலைத் துணைக டாக்கி
　　விழுத்தழும் பிருந்து வீங்கும்

* எறிதிரைக் கிழிய மோதும் (பா. பே.)
† குடுமிகொள் கிருது (பா. பே.)

பாழியந் தடந்தோள் வேற்கை
விருட்டிணி பயந்த மைந்த
னேழையர் கிழியிற் றீட்டு
மெழினிரு விருத்தி யாமால் (90)

*கரிமருப் பீன்ற கைதைக்
கானக நாடன் மன்னர்
வெருவர வரிவில் வாங்கு
விறனிரு விருத்தி மைந்தன்
குருதிகொப் பளிக்கும் வேற்கைத்
தெசாருக னவன்றன் மைந்த
னிரவலர் மகிழ யாவு
மீய்ந்திடுந் திறலா ரோகன் (91)

மொய்சமத் தெதிர்ந்தோர் மேனி
முதுமரப் பொந்திற் றோன்ற
பெய்கணை மாரி சிந்தும்
பெருந்திற லவன்றன் மைந்தன்
வெய்யசி மூத னன்னோன்
விறலுடைச் சிறுவ னோங்கு
மையல்மா வியானை யன்ன
வயங்கெழும் விகுதி யாமால் (92)

வெண்டலைப் புலவு வாட்கை
விகுதிதன் மைந்த னன்னோர்
புண்டலை தோய்ந்து காதம்
புலான்மணங் கமழும் வைவேல்
மண்டல வேந்தர் வேந்தன்
பௌசுவ னவன்றன் மைந்த
னெண்டிசை புரக்குஞ் செங்கோ
னவாச்சுவ னென்பர் மாதோ (93)

* கருமருப் பீன்ற (பா. பே.)

யாழிசை மிடற்ற செங்க
    ணிருங்குயி லகவுஞ் சோலை
*சூழ்தரு மருத நாட்டு
    நவாச்சுவ னளித்த தோன்றல்
தாழியங் குவளைக் கண்ணார்
    நசையுறு தாமஞ் சூழ்ந்த
†பாழியந் திண்டோள் வெற்றித்
    தயரதன் பகடு போல்வான் (94)

வாலரி கழுவுஞ் செந்நீர்ப்
    பாய்ந்துவண் கமலத் தோடு
சாலியும் வளரு மல்லற்
    றகைபெறு மருத நாடன்
மால்வயக் களிறு போலுந்
    தயரத னளித்த மைந்தன்
காலவேற் சகுனி யன்னோன்
    மகனுயர் காந்தி யென்போன் (95)

சோறுவாய்த் திறந்த செம்பொற்
    றொகுமடற் கைதை சாயா
வேறுநீர் முத்தஞ் சிந்து
    மிருங்கடற் சேர்ப்ப னுய
விறுசேர் காந்தி மைந்தன்
    றேவர னவன்சேய் விண்ணோ
ராறறி மறையோர் போற்ற
    வறம்புரி தேவ பக்கன் (96)

இலைத்தொழிற் றெய்யி நீட்டி
    யெழில்குடி யிருந்து விங்கு
மலைக்கவின் கொண்ட கொங்கை
    மங்கையர் கணங்க னன்ன

---

* சூழ்தரு மருத நாடன் (பா. பே.)
† பாழியந் தடக்தோள் (பா. பே.)

சிலைத்தொழிற் றேவ பக்கன்
சிறுவன்வேன் மதுவா மன்னேன்
குலக்குறு மைந்தன் வெற்றிக்
குரவச னென்பர் மாதோ (97)

மணிக்குடம் பதித்த தன்ன
வருமுலை மகளிர் வேட்பத்
துணைப்புய மழகு காட்டுங்
குரவச னளித்த தோன்றல்
கணிப்பரு மனுவென் றோதுங்
காளைமற் றவன்றன் மைந்தன்
புணர்த்தபூந் தாம மார்பிற்
புருகுச்ச னென்பர் மாதோ (98)

தூக்குபொன் மணிநா வென்றுந்
துயில்விழித் தசைதல் செய்யா
மேக்குயர்ந் தோங்கும் வாயில்
விறற்புரு குச்சன் மைந்த
னுக்கடை புரட்டிச் சிந்து
நச்செயிற் றரவம் போலுங்
கோக்களி றனைய வெற்றிக்
குறுகலர்ச் செற்ற வஞ்சன் (99)

அஞ்சுவின் மைந்தன் போரி
லடையல ருதிர மாந்தி
நஞ்சுகொப் பளிக்கும் வைவேற்
சாத்துத னவன்றன் மைந்தன்
வெஞ்சமத் திடியே றன்ன
வேல்விருட் டிணியு மிக்க
மஞ்சுறழ் தடக்கை வெய்ய
மறங்கொளந் தகனு மென்பார் (100)

### வேறு

முத்து விரித்த முலைமுற்றத்
　　துயர்பூங் கரும்பு துணித்தெழுதி
பைத்த வரவ வல்குலார்
　　வழங்கு மதுரைப் பதிவேந்த
னத்தம் பொருதோள் விருட்டிணிதன்
　　மைந்த ரடல்வேன் மித்திரனென்
றுரைத்த திறல்கூர் சனியென்போ
　　னன்மித் திரனென் றுரைப்பாரால் (101)

### வேறு

பாற்கடல் சிவப்ப வெழுந்தசெம் மணித்தோள்
　　மித்திரன் பயந்திடு மைந்த
னூற்கடல் கடந்த நசிக்கின னவன்ற
　　னுவலருந் திறலுடை மைந்தர்
வேற்கடற் றனைச் சத்திரா சித்தும்
　　வெம்பரித் தேரமர்க் களத்தி
னேற்குந ராவி கூற்றினுக் களிக்கு
　　மியற்பிர சேனனு மென்பார் (102)

கூற்றிருந் தாலுங் கூர்நுதிச் சுடர்வேற்
　　சனியெனுங் கொற்றவன் புதல்வன்
மாற்றலர் மவுலி தேய்த்தொளி பிறங்கும்
　　வார்கழற் குருசில்சத் தியகன்
போற்றுநன் மைந்த னென்னல ருதிரப்
　　புலான்முடை யோசனை கமழும்
பாற்றினஞ் சுழல்வேற் சாத்தகி யவன்சேய்ப்
　　பழுதிலாச் சஞ்சய னென்பார்
(103)

ஆங்கவன் புதல்வன் குனியவன் மைந்த
னடையலர் புணர்ந்திடு மகளிர்
கோங்கிள முலையிற் றெய்யிலுங் கலனுங்
குங்குமச் சேதகக் குழம்பு
நீங்கிடி னல்லா னெய்முகந் தோயா
தழலுமிழ் நெட்டிலைச் சுடர்வே
லோங்குசீர் பரப்பி யுலகெலாம் விளக்கு
முகந்தர னெனவுரைக் குவரால் (104)

வேறு

குங்குமச் சேறு தோய்ந்த
குறிஞ்சிப்பூங் கோதை போலு
மங்கலும் திதலை பூத்த
வரும்பிள முலையி னல்லார்
பைங்கணைக் காம னென்னப்
பகரன மித்தி ரப்பேர்ச்
சிங்கவே றனையான் மைந்தன்
றிகழ்பிருச் சினியென் பாரால் (105)

வேறு

கொழுங்குடர் தெவிட்டி நிணப்புலால் குதட்டுங்
குருதிவேற் பிருச்சினி மைந்தர்
பழுங்கனுற் றென்னர் வெருக்கொள நடவும்
பாய்பரிச் சுவர்க்கனுங் களத்தி
னெழுந்துவெங் குறுத்தாட் பூதமும் பேயு
மீருள்வாய்ப் பெய்துநின் றூடக்
கழுந்துநாண் கொளுவி வரிசிலைக் குழைக்குங்
கல்செய்தோட் சித்திர கனுமே (106)

ஆங்கவர் தம்மிற் சுவர்க்கனன் மைந்த
னறனெறி யொழுகுமக் குரூரன்
திங்கறு மவன்சேய் தேவவா னுகு
மவன்மகன் விச்சுவச் சேனன்

வாங்குவிற் றிணிதோ ளாங்கவன் மைந்தன்
வாகைவேற் பிருதுவு மொன்று
ரோங்கெயி லிடிக்கும் வேழவித் தகனென்
றுரைத்திடும் விப்பிரு துவுமே. (107)

உலகமோ ரேழுந் தனதடிப் படுத்து
மந்தக னுயிர்த்திடு மைந்தர்
நிலவுவெண் கவிகைக் குகுரனுங் களத்தி
னேரல ரிருள்வாய்க் குதட்டிப்
புலவுநா றழல்வா யள்ளிலை வேலாற்
*புரந்தரன் பகையறத் துறந்த
வுலகறு சீர்த்தி வளர்பய மான
னென்றிடு மரசனு மாதோ. (108)

களிறமழத் தாக்குங் கடுங்குரற் சீய
மனையவெங் குகுரனன் மைந்தன்
வெளிறெறி கேள்வி விருட்டிணி யென்போ
னுங்கவன் விறல்கெழு மைந்தன்
ஒளிறுவேற் றடக்கைத் திறல்புனை கபோத
வுரோமனு மவன்மகன் சாந்தன்
†வளறுதோய் திண்டோள் விலோமக னவன்சேய்
நபனென வறைகுவ ரன்றே. (109)

பையராச் சுடிகை நெற்றியிற் கிடந்த
பாரினில் மன்னவ ரிட்ட
கையுறை யெழுதக் கைவலித் தேடு
கனைந்திடுங் குப்பைகள் குவிந்து
வெய்யவன் றடந்தே ரோட்டற நிவந்த
வாயிலா னவன்விறன் மைந்தன்
வையமோ ரேழு மொருகுடை நிழற்று
மன்னவ னனுவெ வுரைப்பார். (110)

---

* புரந்தரன் பகையறத் துரந்த (பா. பே.)

† அளறுதோய் திண்டோள் (பா. பே.)

உருமென விடிக்கும் பெருங்குரல் வேழத்
திளமருப் புழுநிடுந் தழும்பு
மரிவையர் முலைக்கோ டழுந்திடுந் தழும்பு
மாரமு மணிந்திடு மார்பிற்
பொருவருந் தடந்தோ ளனுவினன் மைந்தன்
புலால்கமழ்ந் தரத்தநீ ரொழுகி
யெரியுமிழ்ந் திலங்கு மலங்கிலை நெடுவே
லானகத் துந்துமி யென்பான் (111)

இலைத்தொழின் மதாணி யிமைக்கு நீண்மார்பி
னனக துந்துமி மக்கண்
மலைத்தடந் திணிதோட் டிறல்கொளா குகனு
மானவேற் றடக்கைமித் திரனு
மலைத்தெறி தரங்கக் கருங்கட லெனநீண்
டரிபரந் தொழுகும்வாட் டடங்கட்
சிலைக்கரும் புருவத் திரிமதி யென்னுந்
திங்களிக் குதலையாந் திருவும் (112)

மித்திர னென்போன் பொருவில்கந் திருவ
மெல்லியற் றழுவியோ ரைந்து
புத்திரர் பயந்தான் றிரிமதி யென்னும்
பூங்கொடி தன்னையோ ரியக்கன்
கைத்தலத் தடங்கா விளமுலை தழுவிக்
கதிர்கொள்வாட் சுசேனன்வேல் வீர
னுேத்தசுக் கிரீவன் போசனு வாக
னென்னுமோ *ரைவரை யுயிர்த்தான் (113)

வலம்புரி யீன்ற வெண்ணிலாத் தரள
வாணகை மடந்தையர் காலிற்
சிலம்பொலி யென்னப் பெடையன மாற்றித்
திரிதரு தீம்புன லுட

* ஐவர், சுசேனன், வீரன், சுக்கிரீவன், போசன், வாகன் என்பர்.

னலங்கலந் தினிதோ ளாகுகன் மைந்த
ராடல்வேல் வலங்கொடே வகனு
முலம்பெறு தினிதோ ளுக்கிர சேன
னெனவுல கேத்துமன் னவனும் (114)

புரசைமாக் களிறு மளப்பறு நிதியு
மிடுதிறை கொணர்ந்துபொன் முற்றத்
தரசிருந் துயிர்க்குந் தேவகன் மக்க
ளாடல்வேற் றேவவான் முதலா
முருகெழு சீற்றத் தரசரோர் நால்வ
ரோடரி பரந்தமைத் தடங்கண்
வருமுலைத் துவர்வாய்த் தேவகி முதலா
மங்கையர் மற்றுமோ ரெழுவர் (115)

ஓடைமா லியானை யனையவெந் திறல்கூ
ருக்கிர சேனனன் மைந்த
ராடகப் பசும்பொற் கிரிநிகர் தடந்தோ
ளடுதிறற் கஞ்சனை முதலாய்ச்
சேடமைப் பருதி பொருவுநீண் மார்பிற்
சீற்றமுந் *தாமுமே யல்லாப்
பீடுகண் டுயிலும் பெருவரைத் தடந்தோட்
பெட்புறு மைந்தரோ ரெழுவர் (116)

முன்னெடுத் துரைத்த வந்தகன் மைந்தன்
முருகவிழ் மலர்க்கணை யைந்துங்
கன்னலஞ் சிலையு மொளித்திவண் போந்த
காமனை நிகர்பய மானன்
றன்னருட் புதல்வன் றரைத்துக ளடங்கத்
தாரைமும் மதமழை பொழியும்
பொன்னணி யோடைப் பொருகளிற் றுழவன்
விடூரத னெனப்புக லுவரால் (117)

*தாமும்வே றல்லாப்

விரிந்திடு வெகுளி தீயதாய் வேந்தர்
　　விறல்கெழு பகுவதாச் சுருவை
சொரிந்திடு நறுநெய் யரத்தநீ ரருவி
　　தூங்கிநீப் பின்றிநின் ளெழுகப்
பருந்துவீழ்ந் துலவு மள்ளிலை வேலாற்
　　பண்ணவர் புகழ்ந்துநின் றேத்த
வருங்கள வேள்வி யாயிரம் புரியும்
　　விடூரதன் மகனடற் சூரன் (118)

கயமலர் துவைத்துக் கரைதவழ் பணிலங்
　　கான்றிடு நித்திலக் குப்பை
புயலொடு குடுமி வரையெனக் கிடக்கும்
　　பொருதிரைத் தெண்கடற் சேர்ப்ப
னியவுவெம் பேயும் பூதமுங் குளிக்க
　　வொளிறுவா ளுறையுரீஇ விதிர்க்கும்
வயமுடைச் சூர னளித்திடு மைந்த
　　னவன்புகழ்ச் சமியென் வுரைப்பார் (119)

ஈன்றடை கிடக்கும் பேட்டிள வெகினை
　　மிரைதரு சேவல்பார்த் துணங்கும்
வான்றொடு போரின் மதிமுது குரிஞ்சும்
　　வளங்கெழு மருதநீர் நாட
ளுன்றபே ருணர்விற் சமிமகன் பிரதிக்
　　கேத்திர னுங்கவன் புதல்வன்
மூன்றபே ருலகந் தனதடிப் படுத்த
　　மூரிவேற் போசனேன் றுரைப்பார் (120)

ஆம்பலந் தீஞ்சொ லரிவையர் முகத்தை
　　யாய்கதிர் மதியமென் றெண்ணித்
தூம்புடை நெடுந்தாட் குவளைவாய் திறந்து
　　சுறவுவாய் நறவுகொப் பளிக்குந்

தீம்புன னாட்டுப் போசனன் மைந்தன்
　　றேம்படு மமிழ்தினஞ் சாயற்
பாம்படு மல்குன் மடந்தையர் விரும்பும்
　　பனைப்புயக் கிருதியென் றுரைப்பார் (121)

விரைகமழ் தடஞ்சூழ் புளினமண் டபத்தில்
　　*விரிசிறை புடைத்துநின் றுதறி
நரைமுதிர் கிழட்டு முடமுதிர் தடந்தா
　　ளுரைவெண் குருகொடு நினைக்கு
மருதநீள் வேலிச் செழும்புன லூரன்
　　கிருதிநன் மைந்தன்வெங் களத்திற்
றரைமுது குளுக்கப் பிணக்குவை குவிக்குங்
　　கிருதவன் மாவெனுந் தக்கோன் (122)

சேற்றிதழ்க் கமல வயலினிற் கன்றை
　　நினைந்துசெங் கட்கரு மேதி
பாற்கடல் வயிறு சூற்கொளுஞ் செருத்தற்
　　பருமுலை கண்டிறந் தொழுகு
மாற்றெறி தீம்பால் குளம்பல பெருக்க
　　மல்குநீர் வளங்கெழு நாடு
போற்றிடுங் கிருத வன்மனன் மைந்தன்
　　றெய்வக னெனப்புக லுவரால் (123)

வெற்புறழ் கொற்றத் திளங்களி றீட்டம்
　　வெளிற்றிளம் பனைக்கையா லோங்குங்
†கற்பகச் சோலைப் பசுந்தழை முறித்துக்
　　கருங்கவுட் சாரல்வண் டோட்டும்
பொற்பிடை யிமையப் பொருப்பிடைவெற்றித்
　　தேவக னினிதருள் புதல்வன்
மற்படு திணிதோட் சூரனென் றுரைக்கும்
　　வயங்கெழு வாகைவே லுழவன் (124)

---

* விரிசனை; பு டைத்து நின் றுதறி (பா. பே.)
† கற்பகச் சோலைப் பசுந்தழை முரித்து (பா. பே.)

நவையறு செங்கோ றிசைதிசை போக்கி
 ஞானில முழுவதும் விளர்ப்பத்
தவலருஞ் சீர்த்தி வெண்சுதை தீற்றுந்
 தாமவேற் சூரனன் மைந்த
னுவவுவெண் டிங்கட் கவிகையா ரேழு
 நிழற்றிட வாழியொன் றுருட்டி
கவனவாம் பரித்தேர் பார்த்தனுக் கூருங்
 கண்ணனைத் தரும்வசு தேவன் (125)

வேறு

இனைய மாக்கதை கேட்குநர் படிக்குந ரெவரும்
பனிம திக்குடை நிழற்றிடப் பார்பொது நீக்கித்
தனிபு ரந்தெழிற் றளர்நடைப் புதல்வர்தீங் குதலைக்
கனிநு கர்ந்துயர் கடவுளர் போலவாழ்ந் திருப்பார்

இருபத்தெட்டாவது
சந்திரன் மரபுரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 1532

---

## இருபத்தொன்பதாவது
## கண்ணனவதரித்த வத்தியாயம்.

---

சிலைமுத்தங் கொண்ட திண்டோட்
 டேவக னினிதி னீன்ற
கலைமுத்தங் கொள்ளு மல்குற்
 கன்னிய ரெழுவர் தம்மை
மலைமுத்தங் கொண்ட மார்பின்
 வாழ்வசு தேவன் வேட்டாங்
கலைமுத்த நிலவு காலு
 மணிநகர் வலஞ்செய் போழ்தின் (1)

தேவகி யெட்டா மைந்தன்
    றேற்விடுங் கஞ்ச வுன்ற
னுவிகொண் டிடுவ னென்னு
    மந்தர வாணி கேட்டு
மாவவடுப் புரையு நோக்கிற்
    றங்கைதன் னுவி வவ்வக்
கோவடுக் குருதி யொள்வா
    ளுறையுரீஇக் கொதித்துச் சென்ருன் (2)

மங்கையர் தம்மைக் கோறல்
    வான்பழி யாகு முன்றன்
றங்கையென் பதனுற் சீற்றந்
    தவிர்ந்திவள் வயிறுட் டோன்றும்
பங்கமில் புதல்வர் தம்மைக்
    கொல்கெனப் பணிந்து போற்றிக்
கொங்விழ் வுருவத் தண்டார்க்
    கோமகன் கூறி னுனே (3)

அன்னதற் கிசைந்து கஞ்ச
    னும்பிழி யுறைக்குங் கூந்தன்
மின்னகு மருங்குற் செவ்வா
    யணங்கொடும் வேலை ஞால
மன்னவர் வணங்கு நோன்ருட்
    புகழ்வசு தேவன் றன்னை
யின்னலுற் றழுங்கி மாழ்க
    விருஞ்சிறைப் படுத்தி னுனல் (4)

ஈங்கிவை நிகழுங் காலத்
    திருநில மடந்தை யெய்தித்
தேங்கமழ் கமலப் புத்தேள்
    சேவடி வணங்கி யேத்தி

வாங்குவிற் கால நேமி
*முதலினோர் மண்ணிற் றீமை
தாங்கருங் கஞ்ச னாதி
மன்னராய்த் தலைமை பூண்டார் (5)

ஆதலிற் பரித்த லொல்லா
தையவென் றிரந்து நிற்ப
மேதகு மமரர் சித்தர்
விஞ்சைய ரியக்கர் சூழப்
பூதல மடந்தை யோடும்
பாற்கடற் புறத்தின் மேவிச்
சீதரற் போற்றி வேத
லிங்கிவை தெளியச் சொன்னான் (6)

முருகவிழ் கமலப் புத்தேண்
முதலிய வமரர் யாரு
மிருநிலத் தரச ராகி
யெய்துக யாமுந் தூய
பொருவருங் கடவுட் கற்பிற்
றேவகி வயிற்றிற் பொற்பா
ரொருகுழை யொருவன் செங்கட்
கண்ணனா யுதித்து மன்றே (7)

என்றுரை பகர்ந்து வெண்மை
கருமை சேர்மயிரி ரண்டு
நன்றென வழங்கிப் போற்று
நான்முகன் முதலி னோர்கட்
கொன்றுபே ரன்பி னோடும்
விடைநல்கி யுலகம் பூத்த
மன்றலந் துளவப் புத்தேண்
மாயையை நோக்கிச் சொல்வான் (8)

* முதலினோர் மன்றிற் றீமை (பா. பே.)

ஓவில்சீ ரிரணி யன்றன்
　　மைந்தரோ ரறுவர் தம்மை
மேவுபா தலத்தி னின்றுங்
　　கொணர்ந்துதன் விரகான் மிக்க
தாவில்சீர் வசுதே வற்குத்
　　தலைமைசேர் மனைவி யாய
தேவகிப் புதல்வ ராக
　　முறைமுறை சேர்த்திப் பின்னர் (9)

உதித்தவே ழாங்க ருப்பந்
　　தேவகி யுயிர்க்கு முன்ன
மதிக்குநின் மாயை தன்னால்
　　வயிற்றினின் றெடுத்துப் போகித்
*துதிப்பருங் கற்பின் மிக்க
　　வுரோகணி வயிற்றிற் றாய்தாய்ப்
புதுக்கடி கமழுஞ் செவ்வாய்ப்
　　புதல்வனு யமைத்தி யன்றே (10)

தேவகி யெட்டா மைந்த
　　†னுதிநன் சிறப்பு வாய்ந்த
வாவணித் திங்கண் மேய
　　வள்ளிருட் பக்கந் தன்னின்
மேவுமட் டமியிலி யானும்
　　வருவனீ விரும்ப சோதை
யோவில்சீர்ப் புதல்வி யாகி
　　நவமியி லுதித்தி யன்றே (11)

மன்னுசீர் வசுதே வன்றன்
　　ருட்செறி வல்லி நீங்கத்
துன்னிருட் பிழம்பி னூடு
　　யமுனையைத் துணைவி னீங்கி

* துதிப்பருங் கருப்ப மிக்க (பா. பே.)
† ஆகநன் சிறப்பு வாய்ந்த (பா. பே.)

யென்னையாய்ப் பாடி தன்னில்
வளர்த்தியாங் கசோதை யின்ற
*வுன்னைவல் விரைவிற் கொண்டு
தேவகி கரத்தி னுய்ப்பான் (12)

கஞ்சனின் கமலப் பொற்றாள்
கைப்படுத் தரையின் மோதச்
†செஞ்சமே லெடுக்கும் போழ்திற்
றிருமணி யாரந் தாழ்ந்த
மஞ்சுதாழ் குன்ற மன்ன
மார்புற வுதைத்து விண்போய்
வெஞ்சின வயிர வொள்வாள்
வேந்தன்மாட் டிருத்தி யென்றான் (13)

ஈங்கிவை யனைத்துந் தெய்வ
மகதியாழ் முனிவ னெய்தி
வாங்குவில் விழுங்கு திண்டோட்
கஞ்சனுக் குரைப்ப மாழ்கித்
தாங்கரும் வல்லி தன்னிற்
றிறல்வசு தேவன் றன்னைத்
தீங்கரும் பனுக்கும் செவ்வாய்த்
தேவகி யோடுஞ் சேர்த்தான் (14)

வல்லியிற் சிமிழ்ப்புண் டுள்ள
‡மரசொடு முயங்கு நாளின்
முல்லையங் கற்பின் மிக்க
மொய்குழல் வயிறு வாய்த்தல்
புல்லிய காவ லாளர்
புகறலுங் கஞ்சன் போந்து
கொல்லிய வெழுந்த கூற்றின்
மகவினைக் குறைத்திட் டானே (15)

* உன்னை வல்விரவிற் கொண்டு (பா. பே.)
† செஞ்சவே யெடுக்கும் போழ்தில் ஷை ‡ மாசொடு (பா. பே.)

இன்னணம் பின்னு மைந்த
　　ரைவரை யெறிவேற் கஞ்சன்
கன்மிசைப் புரள வெற்றி
　　யாருயிர்க் கடிந்த பின்னர்
பன்மணிச் சுடிகை நெற்றிச்
　　சேடனைப் பவளச் செவ்வாய்க்
கன்னியங் கற்பின் மிக்க
　　தேவகிக் கருக்கொண் டாளே (16)

சூன்முதிர்ந் துயிர்க்கு முன்னந்
　　தொல்லுல கிறும்பூ தெய்தப்
பானிறக் குழவி தன்னை
　　மாயைதன் புணர்ப்பிற் பற்றி
யானிரை புரக்கு மாயர்
　　பாடியி னொளித்து வைகு
மான்மரு ணோக்கு ரோணி
　　வயிற்றிடை வைத்த தன்றே (17)

கங்குல்கண் படுக்குங் கூந்தற்
　　கதிர்முலைப் பணைகொண் மென்றோ
ளங்கனும் மேனிச் செவ்வா
　　யுரோகணி யடையா ரென்னும்
பொங்கிருட் பிழம்பு மேய்ந்து
　　புகழ்நிலா விரிக்குந் தூய
திங்களஞ் செல்வ னன்ன
　　சிறுவனை யினிதி னீன்றாள் (18)

காம்பிசை குறிக்குஞ் செவ்வாய்க்
　　கருமுகில் வண்ணன் றன்னை
யேம்பலோ டறம்வ ழாம
　　லிருநில முழுது முய்யப்

*பாம்பிணைப் படத்தை மானும்
பங்கயப் பரும வல்குற்
றேம்படு குதலைச் செவ்வாய்த்
தேவகி கருவுட் கொண்டாள் (19)

இந்துவென் றுரைக்கும் புத்தே
டன்குலத் தினிதிற் றோன்று
மைந்தனைக் காக்க கங்குல்
மனைவியை விடுத்தல் போலுஞ்
செந்துவர் மருட்டுஞ் செவ்வாய்த்
தேவகி சிறப்பு வாய்ந்த
வந்தளிர் வயிற்றிற் பூத்த
வணிமயி ரொழுக்கந் தானே (20)

வருமுலை வயாநோ யெய்தி
மண்ணினை நுகர்தல் தேன்சேர்
முருகவிழ் துளபத் தண்டார்
முகுந்தனை மல்ல லோங்கு
திருமகள் சேரு முன்னஞ்
சேர்ந்திடல் வேண்டு மென்ன
விருநில மங்கை முன்போ
யெய்துதல் போன்ற தன்றே (21)

விண்ணிடை யிரண்டு வெற்பு
நின்றிடா வென்ன மேலோ
ரெண்ணிய வனுமா னத்தா
லெய்துநுண் மருங்குன் மங்கை
யண்ணலங் கருப்பந் தாங்கும்
வயிற்றினவ் வளவை யன்றிக்
கண்ணன வாறு மியார்க்குந்
†காணவாத் தோன்றிற் றன்றே (22)

---

* பாம்பிணைப் படத்தை மானும் (பா. பே.)
† காண்வரத் தோன்றிற்று ஷை.

உலகினைத் தினையு முண்டோன்
  றமநிடத் தூறு தீம்பால்
மலைவுற நுகர்ந்து நாளும்
  வளர்வனென் றுவந்து கொல்லோ
விலவிதழ்க் கோதை யெல்லா
  வுறுப்பிறு மெழில்கொண் டோங்கி
யலர்கணங் கனிந்து வீங்கி
  யணிமுலை பருத்த தன்றே (23)

அருப்பமென் றெவருங் கூறு
  மருங்குறும் வறுமை யையன்
கருக்குழி யுற்ற ஞான்றே
  தீர்த்தகா ரணத்தால் யார்க்கு
முருப்பநோய் செய்யும் வெய்ய
  வறுமைவிட் டோட நாளுந்
திருக்கிளர் பதஞ்சேர்ந் தோர்க்குத்
  தீர்ப்பதற் கைய மின்றே (24)

வாட்டடங் கண்ணி மார்பின்
  வந்தடிக் கொண்ட ஞான்றே
கோட்டமுற் றெல்கித் தேய்ந்த
  கொடியிடைப் பகைநா ளுளு
மீட்டிய கருவால் வீங்கு
  மகிழ்ச்சிநோ னமை யன்றே
மோட்டிளங் குரும்பை போலு
  †முலைமுகங் கறுத்த தன்றே. (25)

ஆவணித் திங்க டன்னி
  லமரபக் கத்தி னன்கு
மேவுரோ கணியிற் றாய்தாய்
  *விளங்குமட் டமியா நாளும்

* விளங்கு மட்டமியி னுளுக் (பா.பே.)
† முலைமுகங் கருத்த தன்றே ஷை

தாவில்சீர்ப் புதன்வா ரத்திற்
 றகைபெறுங் கங்குற் பானுட்
டேவகி யுலக மீன்ற
 செல்வனை யிளிதி னின்றுள் (26)

சங்கொடு நேமி யொள்வாட்
 டமுலுமிழ் கதைவில் லேந்திப்
பங்கயக் காடு பூத்த
 பருவமைம் முகிலிற் றேன்று
மங்கலும் மேனிச் செவ்வாய்ச்
 சிறுவனை யமைய நோக்கி
பொங்குபே ரன்பிற் றுதை
 பொலிவொடும் வணங்கி னுனல் (27)

வணங்கிய தந்தை தன்னை
 மாயையா லறிவு நீக்கி
யணங்கர வணையிற் றுஞ்சு
 மஞ்சனக் கொண்ட லன்று
னிணங்கமழ் கதைவாள் சங்க
 நேமியம் படைவில் லாய
கணங்கொள்வெம் படைகளி யாவுங்
 கரந்திவை புகலு மன்றே (28)

அரிமதர் நெடுங்கட் செவ்வா
 யசோதைமா மாயை தன்னைப்
பரிவொடு மீன்று ளென்னை
 யாயர்பா டியிற்கொண் டேகி
மருவுறு நந்த கோபன்
 மனையிறுய்த் தசோதை யீன்ற
புரிகுழ லணங்கை யிங்குக்
 கொணர்கெனப் புகன்று னன்றே (29)

என்றலும் வல்லி நீங்கித்
தேவகி யிரங்கி மாழ்க
முன்றலந் துளவி னோனைத்
திறல்வசு தேவன் கொள்ளா
வொன்றுநாட் கதவம் வாளா
திறப்பவாங் கொல்லை யெய்திக்
கன்றிய நெஞ்சி னோடும்
யமுனையங் கரையி னுற்றான் (30)

தமரவெண் டிரைக்கை தன்னாற்
சங்கொடு முத்தஞ் சிந்தும்
யமுனையெவ் வுலகு மீன்ற
குழவியை யினிதி னோக்கிக்
*குமரிவண் டாடு முட்டாட்
கொழுமலர்க் கரங்கள் கூப்பி
யமைவரு முவகை யோடு
மருநெறி விடுத்த தன்றே (31)

ஆயிரஞ் சுடர்க்கும் விள்ளா
வள்ளிருட் பிழம்பு தன்னிற்
பாய்திரை யமுனை நல்கு
நெறியினிற் பரிவோ டேகிச்
சேய்நலங் கடந்த வெற்றி
மன்னவன் சிறுவ னோடு
மாயிரு ஞாலம் போற்று
நந்தகோன் மனையி னுற்றான் (32)

பொறையுயிர்த் திட்ட மாயைப்
புணர்ப்பினு லசோதை யோடு
முறைதரு மகளிர் யாரு
முறங்குழி யுலகம் பூத்த

---

* குமரிவண் டரற்று முட்டாள் (பா. பே.)

விறைவனை யசோதை தன்பாற்
விடுத்தியவ் வசோதை யீன்ற
கறைகொள்வேற் கன்னி தன்னைக்
கைக்கொடு விரைவிற் போந்தான் (33)

போந்துயர் குடுமி மாடப்
பொன்னகர் மதுரை யெய்திக்
காந்தெரி மணியிற் செய்த
கடிமனை யதனிற் புக்காங்
கேந்திளங் குழவி தன்னைத்
தேவகி கரத்தி னீய்ந்தான்
சாந்தணி குழலாள் வாங்கித்
தடமுலை யூட்டி னாளே (34)

வல்லியு முன்போற் பொற்றாள்
பிணித்தது வாயில் யாவு
*மொல்லையி லடைத்துத் தாள்கள்
செறிந்தன வொழுகி யோடுங்
கல்லெனீர் வேலை சூழ்ந்த
காசினி யனைத்துங் கேட்ப
வல்லலுற் றழுங்கு வாரின்
மாயையு மழுத தன்றே (35)

அழுகுர லோதை கேட்ட
வாயிலோ ரடியிற் றாழ்ந்து
கழைசுளி களிநல்வி யானைக்
கஞ்சனுக் குரைப்பப் போந்து
குழவியைத் தங்கை நெஞ்சங்
குழைந்திட வலிதிற் பற்றி
நிழலுமிழ் பளிக்குப் பாறை
நிலத்தினி லடிக்கு மேல்வை (36)

* ஒல்லையி லடைத்துத் தாழ்கள் (பா. பே.)

கஞ்சன்வெங் கரத்தி னீங்கி
யாங்கவன் கல்செய் தோளி
னஞ்செஞ்சி றடியா னெஞ்ச
மலமர வுதைத்துப் போகிச்
செஞ்சுடர் நெற்றிக் கண்ணுந்
திரண்டவெண் டோளு மாகி
மஞ்சுறழ் கரிய மேனி
மாயையீ துரைக்கு மன்றே (37)

*உன்னுயிர்க் கிறுதி காண்பா
†னுதித்திடும் புனிற்றுச் சிங்க
மன்னவுன் னகரின் பாங்கர்
வதிந்ததென் றினிது கூறிக்
கன்னவி றிரடோட் காளி
கதிர்மணி முகடு வேய்ந்த
பொன்னகர் மாட மெய்திப்
பொலிவின்வீற் றிருந்தா ளன்றே (38)

செய்த்தலை வாளை தாவுஞ்
செழும்புனன் மதுரை காக்குங்
பைத்தபாம் பணைய சீற்றக்
கஞ்சனும் பரிவின் வைகு
மைத்துனன் றன்னைத் தங்கை
தன்னொடும் வல்லி நீக்கி
வித்தக வமைச்ச ரோடும்
வேறிருந் தெண்ணி னூனல் (39)

‡மாலைவா யமுதத் தேறல்
மார்பக நனைப்பச் செல்லும்
பாலனின் னாவி யுண்ப
னென்றுரை பகர்ந்த வாற்றால்

---

* உன்னுயிர்க்கீறு காண்பான் (பா. பே.)

† உதித்திடும் புனிற்றுச் சீயம் ஷெ

‡ மாலைவாய் மூரித் தேறல் ஷெ

வேலைசூழ் ஞாலத் துள்ள
சிறுவரை விரைவிற் கோறல்
சால்புறு மென்னத் தேர்ச்சித்
*துணைவரர் சாற்றி னாரே (40)

தீதுரு வெடுத்தா லன்ன
கஞ்சன்வெஞ் சினத்தி னோடும்
பூதனை யாதி யாயப்
பேய்களைப் பொருந்த நோக்கி
யோதிய வுலகி லுள்ள
சிறுவரை யொல்லை யெய்திக்
காதலி னுறுத்தி ரென்னக்
கடிதினிற் போய வன்றே (41)

ஈங்கிவை நிற்ப வாயர்
பாடியி னசோதை யென்பாள்
தீங்கனிக் குதலைச் செவ்வாய்ச்
சிறுவனை யுயிர்த்தா ளென்ன
மாங்குயில் மருட்டுந் தீஞ்சொ
லாய்ச்சியர் மகிழ்வி னோடுங்
கோங்கிள முலைகள் வீங்கக்
†குரவையிட் டாடி னரால் (42)

அள்ளிலை வயிரப் பைம்பூ
ணந்தகோ னகில மீன்ற
பிள்ளையை யுச்சி மோந்து
பிறந்துழி யியற்று கின்ற
தள்ளருங் கரும மாற்றித்
தன்கிளைத் தலைவ ரோடும்
வெள்ளணி யணிந்து கோடி
விழுநிதி மறையோர்க் கீய்ந்தான் (43)

* துணைவர்கள் சாற்றி னரால் (பா. பே.)
† குரவையிட் டயர்ந்தா ரன்றே ஷை.

நஞ்சு கொப்பளிக்கும் பேழ்வாய்
*கறையணல் நாக மன்ன
கஞ்சனுக் குவப்பி னல்குங்
கரங்கொடு சேறு மென்னு
வெஞ்சலில் கிளையி னேடு
மிலகுசீர் நந்த னென்போன்
செஞ்சவே முல்லை யாயர்
தீங்குழ லிசைப்பப் போனன் (44)

வேறு

வெண்ணெய் பெய்த குழிசிவெண் டிங்களிற்
றண்ணெண் வெண்டயிர் பெய்திடு சாடிகள்
பண்ணி காரம்பெய் பண்டிகள் தம்மொடு
மெண்ணின் மாட மதுரையி னெய்தினன் (45)

எய்தி மன்னர்க் கிறையளித் தேசலும்
வெய்தி னெய்தி விறல்வசு தேவனீள்
கைத வந்தெறு நந்தனைக் கையினாற்
பைத லோடுந் தழீஇயிவை பன்னுவான் (46)

காதற் றோழவென் கண்ணிட னுடிற்றுற்
றீது பூத்த நிமித்தமுஞ் சேர்ந்தன
யேத மெய்திடும் பாணித் திடாதுநீ
போதி யென்று புகறலும் போயினன் (47)

நந்த கோனுயர் பாடியி னண்ணுமுன்
சிந்து வெண்டிரை வைப்பினெண் டிக்கினின்
மைந்த னுருயிர் வவ்விய பூதனை
கொந்து தாழ்பொழிற் கோகுலத் தெய்தினள் (48)

---

* கறையன னுக மன்ன (பா. பே.)

வன்ன வெம்முலைப் பால்வழிந் தோடுதல்
*தன்ன கையிற் கபக்கித் தளரிடை
மின்வரி னெல்க விழியுயிர் கூட்டுண
வன்ன மென்ன நடந்தவ ணெய்தினுள் (49)

தெள்ளு நான்மறை தேடுஞ் சிறுவனை
யள்ளி யேந்தி மடியில்வைத் தன்புபோற்
கள்ள வஞ்சகி காதலிற் காதுரீஇ
வள்ள லுண்ண வருமுலை யூட்டினுள் (50)

சுணங்கு பூத்துயர் தோமுறு வெம்முலை
மணங்கொ டாமரைக் கையின் வருடிமே
லணங்கு பார்த்து நகைமுகத் தாவியோ
டுணங்கு பேய்முலை யூறலுண் டானரோ (51)

ஊறு பாலோ டுயிரருந் தாமுனம்
வேறு தன்னுரு மேவிய பூதனை
யாறு கூப்பிடு தூரத் தகனமா
நீறு செய்து நிலத்துற வீழ்ந்தனள் (52)

கையி னுல்வயி றெற்றிக் கரநெறித்
தைய செந்தளிர் மேனிய சோதைபோய்
வைய முண்ட மகவெடுத் தாங்குறை
தைய லாரொடுந் தான்மகிழ்ந் தாளரோ (53)

நந்த கோனவ ணெய்தி நறுந்துழாய்
மைந்தன் செய்தி மகிழ்வுறக் கேட்டனு
சிந்தை மாழ்கித் தெளிந்து கிளையொடு
மந்த மற்ற வுவகைய னுயினுன் (54)

* தன்ன கையிற் கலக்கி (பா. பே.)

மரங்கொ றச்சரிற் பூதனை மானுடல்
சிரந்து ணித்தழ லீமத்திற் சேர்த்தலு
மரிந்த மற்கு முலையளித் திட்டதால்
நரந்த நாறின நாலிரு காதமே (55)

ஐய னுண்டு நிறைதலு மாயர்தந்
தைய லாரொடுஞ் சநதிமி திப்பியா
மையில் கேள்வி மறையவர்க் கார்பத
னெய்யிற் பாலி னிரம்ப வருத்தினர் (56)

பண்ணி காரங் கொணர்ந்திடு பண்டிவந்
தண்ணன் மேவிய தொட்டி லணைதலுந்
தண்ணந் தாமரைத் தாளி லுதைத்திட
விண்ணி லோடி வெறுந்துக ளாயதே (57)

மேய சாடிற மென்பத நீட்டலு
மாயர் மங்கைய ரன்போ டயினிநீர்
சேய னுனிரு சேவடி சுற்றுருக்
காயும் வெவ்விய கண்ணெச்சி னீக்கினர். (58)

## வேறு

*வண்டுந் தேனு ஞிமிறுஞ் சுரும்பும் வழங்குந் துளவத்
தண்டா ரிளவ றன்னைத் தாங்கித் திரிணு வரக்கன்
கொண்டு சூறை வளியிற் கொட்பி னேகு மேல்வை
விண்டு நிலங்கீழ்ப் போக வீழ்த்தி யவனைக் கொன்றுன் (59)

கொன்ற வசுரன் மெய்யிற் குழவி தவழக் கண்டோர்
மன்ற லோதி சரிய வளையுஞ் சிலம்பு மிரங்கச்
சென்ற மைந்தன் றன்னைச் செங்கைத் தளிரி னேந்தி
யன்றிற் பெடை போலரற்று மசோதை கையி னளித்தார்
(60)

---

*வண்டுந் தேனு மிஞிறுஞ் (பா. பே.)

ஆயர் குலக்கு விளக்கா மசோதை யழுதல் காணுத்
தாய முறுவல் கொட்டுந் தோன்றற் செங்கேழ்ப் பவளக்
வாயி னுலக மனைத்துங் கண்டே தொழுது வழுத்தக்
காயா மேனிச் சிறுவன் மாயை யதனாற் கரந்தான் (61)

கையு முகமுங் கண்ணுங் காலு முந்தித் தடமுஞ்
செய்ய கமலம் பொருவுங் கரிய செம்ம றன்னை
யைய மருங்குற் செவ்வா யசோதைக் குறங்கி னேற்றி
வைய முழுது முண்ட மலர்வா யுச்சி மோந்தாள் (62)

செந்தேன் றுளித்தா லென்ன வாம்பற் செவ்வா யூற
லந்தா ரகலத் தொழுக வாயர் மனையிற் றவழ்ந்து
நந்தன் விரல்கள் பற்றிக் குறுத்தாள் பெயர்த்து நடந்து
மைந்த னுயர் பாடி மகிழ்வித் துலவு நாளின் (63)

மாசில் வசுதே வன்றன் னருளாற் காக்க மறையோ
னுசி லாயர் பாடி யணுகி வெள்ளை மேனி
யேசில் புதல்வற் காங்கே யிராம னெனப்பே ரிட்டுக்
காசில் கரியோன் றனக்குங் கண்ண னெனப்பே ரீய்ந்தான்
(64)

மண்ணை யளந்து முண்டு மனையா வாகப் புணர்ந்துந்
தெண்ணீர் பவ்வத் தெடுத்துஞ் சிறிது நசைதீர்ந் திலன்போ
லண்ண றவழும் போதிற் கையான் மண்ணை யள்ளி
யுண்ணக் கண்ட வன்னை யோடி வந்தாங் கடித்தாள் (65)

கவ்வை நெடுநீர் வாவிக் கடவுட் கமல முகத்தின்
செவ்வி வழிதல் போலக் கண்ணீ ரொழுகச் சிறுவன்
பவ்வத் திரையிற் பிறவாப் பவள மலர்வா யன்னை
யெவ்வெத் திசையு முலகு மிறைவன் வாயுட் கண்டாள் (66)

கண்டாள் காயா மேனிக் கண்ணன் களிவண் டுளருந்
தண்டா மரையாள் புணருந் தலைவ னுமென் றெண்ணிக்
கொண்டே பழிச்சும் போழ்திற் கொடிய விருளும் விளர்ப்ப
மண்டு மாயை யதனுன் முன்போ லறிவை மறைத்தான் (67)

தெண்ணீர்க் கயத்துட் பூத்த செவ்விக் கமல மன்ன
கண்ணீர்க் கையாற் றுடைத்துக் கதிர்மென் முலைப்பா லூட்டி
யண்ண லழுகை யாற்றி யம்பொற் குழிசி தன்னிற்
றண்ணந் தயிர்மத் தெறிய மடவா ரோடுஞ் சார்ந்தாள் (68)

சிறைவண் டரற்றுங் கூந்த றேமென் மலரோ டவிழ
நறைபெய் குடத்திற் றதும்பு நகைவெண் முத்த முலையின்
பொறையாற் றுதம் மருங்கு றயிர்போற் பூச லொழியென்
றறைபொன் வளையும் பூணு மலறத் தயிர்மத் தெறிந்தாள் (69)

மயிர்வார் முன்கை வளையும் வண்டும் பூணு மொலிப்பத்
தயிர்கண் ணுடைக்கு மன்னை தடமென் முலைப்பா லருந்தி
யுயிர்போன் மைந்தன் குனிப்ப வுவக்கு மேல்வை தன்னிற்
செயிர்தீர் மனையிற் காயுந் தீம்பால் பொங்கிற் றன்றே (70)

பொங்கு தீம்பா லாற்றப் பூவை வண்ண னுண்ணுங்
கொங்கை வலிதிற் பறித்துக் குழங்கன் மாலை விழ
மங்கை யோடு மேல்வை மத்தாற் குழிசி யுடையா
வங்கைத் தளிரா லையன் *வெண்ணெ யனைத்து மயின்றுன் (71)

வேறு

தாளாலத் தயிர்க்குழிசி யனைத்தினையுந் தகர்த்துருட்டிக்
கோளார்ந்த மதிமுகத்துக் குறுநடைய குற்றுயன்
பீளாநற் றுய்போ தின் வெகுளமென வுளம்வெருவி
வாளார்ந்த கருநெடுங்கண் மற்றொருத்தி மனைபுகுந்தான் (72)

எந்தைபுகுந் தொளித்தமனை யுறிவெண்ணெ யெட்டாமற்
குந்தியுரன் மீதேறிக் கல்லினுற் குழிசி யுடைத்
தந்தளிர்க்கை யாலேந்தி யினிதருந்தி யாங்கெய்து
மைந்தருக்கு மிகவளித்துப் பூசைக்கும் வழங்கினன் (73)

* வெண்ணெ யெடுத்தே யயின்முன் (பா. பே.)

வடித்தசெழு மறைதேடிக் காணாத மணிவண்ண
னடிச்சுவடு தனிற்சென்றாங் கையனைக்கண் டுங்கனிவாய்
மடித்துறுக்கி யெத்தேவு மறியாத மழைமுகிலைப்
பிடித்தன்னை நெடுந்தாம்பி னுரலோடும் பிணித்தனளால்
(74)

உரலினொடுந் தனிபோகி மணிவண்ண னோரிரண்டு
மருதினிடை தவழ்போதின் மலைமுறிந்தா லெனமுறிந்து
தரைகுழிய வீழ்ந்தவைகள் வினைமுனி சாபம்போ
யரியநள கூபரனு மணிக்கிரீ வனுமானார் (75)

நிதிக்கிழவ னுயிர்ச்சிறுவர் நேமியோற் றொழுதுதம்
பதிக்கணடைந் தினிதிருந்தார் நந்தகோன் பழமறைதேர்
முதுக்குறைவி னோர்போற்று முதலையுரற் பிணிப்பவிழ்த்து
கோதித்துளமாழ் குறவெடுத்துத் தன்மனையிற் கொடு
போனான் (76)

மருவு நகர் தனிற்றீமை பற்பலவந் துற்றதனாற்
பொருவிலுரோ கணியோடு மசோதையொடும் புதல்வ
[ரோடும்
விரிதருநற் கிளையோடுங் கருந்துளவன் விரைநாறுந்
திருவிருந்தா வனந்தன்னில் நந்தகோன் சென்றிருந்தான் (77)

குடம் பொருவுஞ் செருத்தலான் குழக்ககன்று தனிமேய்த்து
மடங்கலேற் றிளம்போத்தின் மணிவண்ண னிராமனுடன்
றடங்களினு மரில்பரந்த தளவநறுங் கானகத்தி
னிடங்களினுங் கண்களிப்ப வினிதின்வழங் குறுநாளில் (78)

**வேறு**

குறுந்தாம் பணைத்த குழக்கன்றி
னுருவா யசுரன் கொடுங்காலிற்
செறிந்தாண் டுழலு மணிவண்ணன்
செங்கட் கமல மலர்பரப்பி

யறிந்தோ ரிமைப்பி னிளங்கன்று
குணிலாய் விளவின் கனியதனி
லெறிந்தான் விளவின் கனியோடும்
விழ்ந்தா னுவி யிழந்தானே (79)

நாவின் றணிய பசியகுழக்
கன்று மேய்த்து நள்ளிருளிற்
ருளொன் றான்றிக் காழ்பூத்த
தடிமே லுறங்கு மாயரொடும்
வேளுக் கழகு முருகனுக்கு
விறலுங் கொடுத்த சிற்ருயன்
வாளார் கண்ணார் முகம்போலுங்
கமலத் தடத்துள் வந்தடைந்தான் (80)

விரைகொப் பளிக்கு மலர்த்தடந்தோ
ளசுரன் வெவ்வாய்ப் புள்ளாகி
மருத மொடியத் தனிதவழ்ந்த
மாயன் றன்னை விழுங்குதலு
மெரியின் மிடறு சுடவுமிழ்ந்து
குத்த விவர வெம்பெருமான்
குருகின் பகுவாய்ச் செய்யமலர்க்
கரத்தாற் கிழித்தாங் குயிர்குடித்தான் (81)

மற்ருே ரசுரன் மலைப்பாம்பிற்
கிடப்ப வவன்ற னகல்வாயை
வெற்பின் முழையென் ருன்கன்ருே
டகல்வாய்ப் புகுந்து விரைவினெடுங்
கற்பா டழித்த திரள்புயத்துக்
கண்ணன் வாளால் வாய்கிழியா
முற்பரற் சாபத் தொடுமாவி
முடிய முன்னை யுருவுற்ருன் (82)

அருந்தும் பசும்புல் லுறைத்தெவிட்டி
யசையிட் டுறங்குங் கன்றேச்சி
பொருந்தும் பொதுவர் சிறுவரொடும்
பூவை நிறத்த சிற்றுயன்
*செருந்தில் கமழுங் காளுந்தித்
தீர மெய்தித் துகிலிடத்தின்
மருந்திற் பொதிந்த வாற்றுணு
மகிழ்வி னேடு மிருந்தயின்றுன் (83)

அன்ன போழ்திற் புறகுதட்டி
யருந்துங் குழக்கன் றனைத்தினையும்
பொன்னங் கமலத் தரசிருக்கும்
†புத்தேள் கவர்ந்து போயொளிப்பப்
பன்னு மறைதே டருங்கடவுள்
கன்று தேடப் படர்போழ்தின்
மன்னுஞ் சிறுவ ரனைவரையும்
பின்னு மாயை தனிற்கவர்ந்தான் (84)

துள்ளு மிமிலேற் றிளங்கன்றி
னினமுந் தொறுவர் மைந்தரையும்
வள்ளல் காணு துளத்தெண்ணி
மலரோன் செய்தி யெனத்தேறி
யெள்ளற் கரிய மாயையினுற்
கன்றி னினத்தோ டினைஞர்தமைக்
கள்ளம் பூத்த மாமாயன்
முன்போல் வருத்துக் களித்தனனுல் (85)

வேறு

அய்யனிளங் கன்றினெடு மானிரைக ளோடுஞ்
செய்யகதி ரத்தவரை சென்றணையு முன்ன
மையில்மனை யெய்தமகிழ் தாங்கிவருகன்றிற்
கெய்திமுலைப் பாலளித்த வான்களிளங் கன்றின் (86)

* செருந்தில் கமழுங் காளிந்தி (பா. பே).)
† புத்தேள் கவர்ந்து கொடுபோக (பா. பே.)

ஓர்பருவ மின்னண மிறப்ப வுயர்வேதன்
*கார்முகி லிறத்தன்வரு கண்ணனை வழுத்திச்
சீர்பெறுநன் மைந்தரொடு வவ்வுசிறு கன்றுஞ்
†சோர்வற வளித்தழிவி ருெல்லுல கடைந்தான் (87)

ஒருகுழை யொருத்தனும் வரைக்குநிக ரொக்கு
‡மருதமிற முன்றவழ மாயனு முலைப்பால்
பருகலொழி கன்றினிரை பண்பினுடன் மேயா
தரில்பெருகு கானினிடை யினிரைகண் மேய்த்தார் (88)

கழுதையுரு வாயசுரன் வந்துகடி தெய்த
விழைவெயி லெறிப்பவெதிர் சென்றிகலி ராமன்
பழுவொடிய வெற்றியோர்ப னம்பழ மெறிந்தான்
விழுதலும் நிலத்திடை விழுந்துயிர் விளிந்தான் (89)

யமுனைநதி யின்கரையி னெய்திவிடு மாயர்
குமரரொடு மானிரைகள் கோதில்புன லென்ன
வமரும்விட நீரினை யருந்தியுயிர் மாயக்
கமழ்துளவ மாலையுனை கண்ணனது கண்டான் (90)

கண்ணனமு தம்பொழி கடைக்கணரு ளுனக்கா
லுண்ணுமற லுற்றபிணி யாவையு மொழிப்பத்
துண்ணென வெழுந்திடை யருந்தொறுவு நிற்ப
விண்ணவர்க ளண்ணலை வியந்தனர் துதித்தார் (91)

விடமொழுகு மென்படுக ருடுதனி மேவிக்
கடுவுடை யெயிற்றினெடு காளிகன் விரித்தப்
படமுழுது மெல்லடி பதித்துமுகில் வண்ண
னடனவில மெய்ந்நனி நடுங்கியயர் வுற்றான் (92)

* கார்முகி னிறத்தனைய கண்ணனை (பா. பே.)
† சோர்வற வளித்துமிளிர் தொல்லுலகு (பா. பே.)
‡ மருதமர முன்றவழ (பா. பே.)

*காளிதன் விரைந்துபுணர் கன்னியர வங்கண்
மீளிமை யுடைக்குரிசில் மென்கமல மானுந்
தாளிணை வழுத்தவரு டங்கி யுயிருய்வா
னீள்கடலி னேகென விடுத்துநிரை காத்தான் (93)

அன்னவைக ளொற்றரி லறிந்துபுகழ் நந்தன்
றன்னமர் விருப்பினொடு மைந்தனுழை சார்வான்
மன்னலுறு கங்குல்புலர் வைகறையின் வெய்தாய்த்
துன்னரிய கானினழல் சுற்றியதை யன்றே (94)

தந்தையை வளைந்துட றருக்கற வுருக்கும்
வெந்தழலை முன்னநுகர் வெண்ணையென வாரி
யந்தளிர் மலர்க்கையினி னள்ளின னயின்றுன்
கந்தடு கடாமலை யழைக்கவரு கண்ணன் (95)

ஆயர்குல மைந்தரி லடைந்த பிரலம்பன்
மாயையை யறிந்துவரி பந்துபுடை கோல்கொண்
டேயவினை யாடலு மிராமனினி வெல்லத்
தீயனவ னைத்தனி சுமந்துயிர் சிதைத்தான் (96)

நெடில்படு வனத்தினிடை நின்றுவினை யாடு
மிடையர்குல மைந்தரை யிருந்தழல் வளைப்பக்
கடிதினவர் கண்மலர் புதைப்பவரு கண்ணன்
விடநுகரு மீசனென வெவ்வழ னுகர்ந்தான் (97)

குடநிகர்செ ருத்தன்மடி கொள்கவ டடங்கா
நடைதளரு மானிரை புரந்துமறை நாதன்
படர்தருநெ டுஞ்சினைய பாண்டிர மெனும்பேர்
வடதருவி ழலிடை வந்தினி திருந்தான் (98)

---

* காளிகன் விழைந்து புணர் (பா. பே.)

கண்ணவிற மென்னவொளிர் கார்முகில் விளர்ப்பத்
தண்மதியி ராமனுடல் பேரொளி தயங்கா
வெண்ணிலவு காலவெயி லாதவன் விரிப்ப
நண்ணியது கூதிர்பிரி வோருயிர் நடப்ப (99)

முகிழ்ந்தகம லச்செழு முலைக்குவ டசைத்தே
யிருந்தவலை யுத்தரிகம் விசிநதி யாவும்
மகிழ்ந்துகண வர்ப்புணர வேகுமட வாரிற்
புகுந்தன கடற்றலையி லன்னமுறை போத (100)

மங்குறெடு சாலியிடு வேலியின் வளைத்த
பைங்கழை கணுத்தொறும் வெடித்தபரு முத்தந்
தங்குகவ னுய்த்தெறிகல் லென்றுவய லாருஞ்
செங்கண்வளை வாயகிளி சேணிடை பறப்ப (101)

ஓர்புடை கடற்புன லருந்தியுறை சிந்தா
வார்வமொ டிடித்துரறி மின்னியதிர் மேகம்
*வாரிமுழு துண்டமுனி யெய்தவுள மாழ்கி
வேர்விறெடு வாண்முகம் விளர்த்தென விளர்த்த (102)

வேனிலி னகன்றவன மேவவெதிர் வைத்த
வினமறு பார்வையி லெழுந்தொளிர் திங்கள்
வானதி மணிக்குவையின் மைம்முகில் விளர்த்த
கானுறை கருங்குயிலின் வாய்கடி தடைத்த (103)

நீர்குறைய நீர்குறைய நின்றுவெளி தோன்றும்
வார்தரு மணற்குவை புதுக்கடி மணந்தோ
ரார்வமொடு முத்தரிக மென்மெல வகற்றச்
சோர்குழலின் மாதர்முலை தோன்றுவன போலும் (104)

---

* வாரிமுழு தண்டமுனி வெய்தியுளம் (பா. பே.)

தீம்புனல் வயற்றலை விளைந்துவனை செந்நெ
லேம்பலொடும் வண்டுவிடர் போலவிசை பாட
*வாம்பலித மூன்றுமது கண்டறவு நாணித்
தாம்பரிவி னேடுதலை சாத்ததனை மானும் (105)

செந்நெல்வயல் காவல்புரி தீங்குதலை நல்லார்
மென்மெல மிழற்றுமொழி கண்டுகிளி வீழா
தன்னநடை கண்டிரியு மாரமுலை வேழ
மென்னவெரு வுற்றுமத வெங்கரிக ளெய்தா (106)

ஆதவன் வெயிற்கதிர்கள் புல்லவளி யோடுந்
தாதவி ழிதழ்த்தளை யவிழ்ந்து நகையாதே
கூதிரிடை தாமரை குவிந்தமழை நாளிற்
போதர லொழிந்தமையி னூடியது போலும் (107)

இத்தகைய வாயபரு வத்தெழி றயங்கு
மைத்தகரு மேகநிற மொத்தமணி வண்ணன்
மொய்த்தசினை வானவெளி மூடுவட நீழற்
கைத்தல மெடுத்தகுழ லோடுகடி துற்றான் (108)

ஒருபத மிதித்தொரு பதத்தையுடன் மாறிப்
பெருவிரன் மணித்தலை பிறங்குநனி யூன்றி
முருகுவிரி தாமரை முகஞ்சிறிது கோட்டிக்
கருதுதுளை வேயிசை கனிந்திட விசைத்தான் (109)

பாம்பணை துறந்திடையர் பாடிவள ரைய
னும்பன்மொழித் தீங்குழ லிசைக்குருகி யன்பா
லேம்பலொடு மானுமுவை யோடுமிக லின்றித்
தாம்பரிவு கூரவய றங்கியதை யன்றே (110)

* வாம்பலீத மூன்றுமது கண்டறிவு நாணி (பா. பே.)

பாறைபடு வெண்டயி ருடைத்தபரு மத்தின்
மாறுபட வீக்குறு மணிக்கயி றெறிந்தே
கூறையொடு மேகலை குலைந்துமட நல்லார்
காறுடர வையனவில் கானவலை புக்கார் (111)

பாங்கொளி விரிந்திலகு பச்சைமுகில் வண்ண
ஞேங்குலவை மென்றழை குழைப்பநனி யூதுந்
தூங்கிசை யெழுந்துளை தொட்டவிரல் பட்ட
வேய்ங்குழலு மென்றழை விரித்தது கடுக்கும் (112)

வெண்ணைகமழ் செய்யபவ ளக்கனி விளக்கும்
பண்ணமுத மஞ்செவியின் வாயிடை பரப்ப
வுண்ணமுது நஞ்சென வொழித்தமரர் மாதர்
மண்ணுலகி னுயர்குல மங்கையரின் வந்தார் (113)

புலவியினி லாசைவிளை வித்துநனி புல்லுங்
கலவியினி லாவிநிகர் காதலரை நீங்கி
யிலவெறி துவர்ப்பவள வாயிடையர் மாத
ருலைமெழுகி னைந்துகுழ லோசைவழி யுற்றார் (114)

பட்டமர முந்தழை குழைத்தபக லோனும்
விட்டகதிர் தண்கதிரி னொத்ததுயர் மேகந்
தொட்டகடல் முத்தினி னறுந்துளி துளித்த
கட்டமுகு டைக்குரிசில் கானவிசை தன்னால் (115)

*காந்தளித மூற்றதெனக் கையின்வளை வீழப்
பாந்தளுரி விட்டதென வேயழகு பாய
வேந்தெழில வல்குலணி மேகலை யிறப்பச்
சாந்தமுலை மங்கையர் தரிப்பில ரடைந்தார் (116)

---

* காந்தளித மூழ்த்ததென (பா. பே.)

வேய்ங்குழ லிசைப்பது விடுத்துமணி வண்ணன்
றூங்குயர் செருத்தநிரை கானிடை துரந்தா
னுங்கவன் மணப்பவிடை *மங்கையர்க ளம்மைப்
பூங்கமல ருச்சனை புரிந்துநனி நோற்றூர் (117)

வேறு

ஐங்கணைக் குரிசில் கேள்வற்
றணந்தவ ரகலத் தெய்தப்
பொங்குமென் கணைகள் சிந்தும்
பூந்துக ளெழுந்த தென்னச்
செங்கதிர் வெம்மை நீங்கித்
திங்களிற் றிரிந்து தோன்றப்
பங்கய முகங்கள் வாட
வெழுந்தது பனியின் பம்மல் (118)

பொழிதரு பனிக்கு நாணிப்
புகையெழுந் தோட வெய்தி
னழல்கனல் பொடிப்ப டாம்போர்த்
†தஞ்சினத் துறழ்ந்து போக்கித்
தழல்பட வெரியுந் தீயும்
வெம்மையிற் றணந்து ‡புல்லோ
ரெழுபுய தீயின் வைத்த
தகளிதோ றெரியு மன்றே (119)

பனிக்கிடைந் தஞ்சொ னல்லார்
பாண்டிலந் தகளி தன்னின்
மனைத்தலை தோறும் வைத்து
வளர்த்ததீ யிச னெற்றிக்
கனற்கணால் மதனைச் செற்றா
ரென்பது கருதி மாரன்
றனக்குமன் னுதற்க ணீய்வான்
றளித்தனி யமைத்தல் போலும் (120)

* மங்கையர்க ளம்மைப் (பா. பே.)
† அஞ்சனக் கொழுந்து போக்கித் (பா. பே.)
‡ வல்லோர் எழுதிய தீயின்வைத்த தகளி (பா. பே.)

மெய்ம்மயிர் பொடிப்பச் செய்யும்
வாற்றினுல் விழைவி ஞேடு
*மையல்சிர்க் காரம் பல்காற்
ருேற்றுவித் திடலா லந்தீஞ்
செய்யவா யிதழின் றன்மை
திரித்திடுஞ் செயலான் மாதர்க்
கெய்திய பனியுங் கூடுங்
கொழுநர்போன் றிருந்த தன்றே (121)

ஈட்டிய பனிவெங் கூற்ற
மெழுதிய தழலிற் ருேன்ற
†மூட்டிய தழலு நீக்கார்
தாமரை முகங்கள் கோட
வாட்டிய வாட்டந் தீர
வெய்யவன் மாற்ருன் மாதர்
மோட்டிளங் கொங்கை யின்றே
லுலகெலா முடிக்கு மன்றே (122)

இலங்குவெந் தழலின் மாத
ரேந்தெழிற் குடங்கை காட்ட
லலங்கலங் குன்ற மன்ன
வருப்புவெம் முலையான் மைந்த
ருலங்கெழு புயத்திற் சேர்த்திப்
பனிக்குறும் பொழிப்பேம் நீவிர்
கலங்கலி ரென்று காந்தட்
கரமலர் குவித்தல் போலும் (123)

பற்றலர் புரந்தீ யுண்ணி
நகைத்திடும் பவளக் குன்றி
னெற்றியங் கண்ணும் வெய்ய
வலக்கணு மழற்சி நீங்கா

* மையசிற்காரம் பல்காற் ருேற்றுவித்தல் (பா. பே.)
† மூட்டிய தழலு நீக்கா ஷை

துற்றிடு மென்றான் மற்றை
　　மதிக்கண்டீ யொழியுங் கொல்லோ
பொற்றதா மரைகள் வேவப்
　　பனிக்கதிர் பொழிந்தி டாதே (124)

வானதி யதனீற் பூத்து
　　வயங்குபொற் கமலம் போன்றும்
வேலில்வேள் கணையான் மாந்தர்
　　நோக்கிவெய் துயிர்ப்பு வீங்கத்
தானொளி மழுங்கித் தோன்றுந்
　　தயங்குபொன் னுடி போன்றும்
பானுமண் டலத்தின் செவ்வி
　　பனியினுன் மழுங்கிற் றன்றே (125)

வாமமே கலையி னூட்ட
　　வளர்த்தகா முகிலி னூட்டத்
*தாமம்வான் முகத்திற் றேயல்
　　துதைந்துவண் டரற்றி யூதுந்
தாமரைக் கருகச் செய்யுந்
　　தண்பனிக் கூற்ற மாதர்
காமரு முகமுஞ் செய்ய
　　கமலமென் றணிதல் போலும் (126)

கையினி னுதலிற் கண்ணின்
　　மெய்யினீற் கனலி சிந்து
மையனும் பனியின் றீய
　　தன்மையை யாற்று தன்றோ
வையமோ ரேழு மீன்ற
　　மங்கைவெம் முலையி னீங்கி
யுய்வரி தென்னப் புல்லி
　　யோருட லாயி னுனே (127)

* தாமவான் முகத்தின் (பா. பே:)

பரித்தபார் மகளைப் புல்லா
தணிகெழு பதும மேய
திருக்கிளர் முலையின் மாயோன்
புல்லின னென்னச் சீறி
யுருக்கிள ரிமைய வேந்தவ்
வொண்டொடிக் கமல வீட்டைக்
கருக்கினன் போலும் வெய்ய
பனியெனுங் கனல்கள் வீசி (128)

இருள்வயி ருர்ந்த புத்தேட்
கினமெனக் கமலப் போதைக்
*கருகவெம் பனியாற் றீய்த்த
கலைமதி தன்னை மீட்டு
மருவுமப் பனியே செவ்வி
மறைத்ததால் மனத்தி னேனு
மொருவருக் கின்னு செய்யிற்
†றனக்கவை யுறுங்க ளன்றே (129)

இன்னவெந் துயரஞ் செய்யு
மிரும்பனிப் பருவங் காறுங்
கன்னன்மென் றனைய தீஞ்சொ
லாய்ச்சியர் கறைகொ லெண்டோ
ளன்னைசே வடிகள் போற்றி
யாற்றிய விரத முற்றிப்
பின்னல்வெண் டிரைகள் சிந்திப்
பெருகுநீர் யமுனை யுற்றார் (130)

விரைகமழ் கமலப் போதில்
வேல்கிடந் தனைய கண்ணு
ரரவமே கலையுந் தூசு
மகன்கரை மருங்கு சேர்த்தி

---

* கருத வெம்பனியாற் றீய்த்த (பா. பே.)
† தனக்கவை யுறுவதன்றே ஷை.

முருகவிழ் மலரின் மேய
பறவைக ளிரிய மொய்த்துப்
பெருகுநீர் யமுனை யாற்றிற்
பெட்பொடு மினிது புக்கார் (131)

கறையொழி திங்க ளன்ன
கதிர்முகத் தாயர் மாதர்
சுறவவார் குழையுந் தோடுஞ்
சுடருமிழ்ந் திருவோ யோட்ட
வெறிகமழ் சுண்ணத்தோடு
மென்றவார் திமிர்ந்து மென்பூஞ்
சிறையளி யோச்சித் தண்ணந்
தீம்புன லாடி னாரே (132)

ஓவியத் துறைகை வல்லோ
ரெழுதொணு வுருவம் வாய்ந்த
தூவிமா மஞ்ஞை யன்னார்
தண்புன றோயு மேல்வை
பூவைபோல் வனப்பு வாய்ந்த
பூந்துழா யலங்கற் றேளான்
கோவியர் தூசு வாரிக்
குருந்தின்மீ தேறி னானே (133)

உள்ளமுந் துகிலும் வவ்வி
யுயர்குருந் திவர்ந்து தோன்றுங்
கள்வ வெஞ்சேலை நல்கென்
றிரத்தலுங் காயா மேனி
வள்ளலீர் கரையி னேறி
வணங்கினோர்க் களிப்ப னென்னுத்
*தெள்விளிக் குழலின் வைத்த
தீங்கனிப் பவளம் விண்டான் (134)

*தெள்விழிக் குழலின் (பா. பே.)

ஒருகையா லல்குல் பொத்தி
யொளிமுகஞ் சிறிது கோட்டிக்
கரையினி லிவர்ந்து மற்றக்
கரமலர்க் குவிக்கின் றோருங்
குருமணி யல்குல் மற்றோர்
குடங்கையி னடங்கா தென்ன
வெருவொடு நாணி மீட்டும்
விரிபுனற் படிகின் றோரும் (135)

தாமரை யிலைக ளம்மாற்
றாமரைத் தலங்கண் மூடிக்
காமனை யனைய செவ்விக்
கண்ணனைத் தொழுகின் றோருந்
தூமமென் கூந்த லீல
வாடையின் மருங்கு சுற்றிப்
பூமகள் கொழுநன் செய்ய
பூங்கழல் பணிகின் றோரும் (136)

ஐதெழில் பரந்த வல்கு
லாள்வழக் கறுக்கும் வேற்கண்
மைதவழ் கூந்த னல்லார்
மாதரை மயக்கி யாசை
செய்திடுந் தூர்த்த சேலை
யருள்கெனச் செங்கை கூப்பி
வைதுநின் றிரப்ப மாயன்
வண்டுகில் வழங்கி னனே (137)

ஆவியங் துகில்கள் சுற்றி
யஞ்சனங் கண்ணிற் றீட்டி
பூவிரி கூந்தல் வாசப்
புகையினிற் புலர்த்தி விக்கிக்

கோவைதாழ் முலையிற் செய்ய
குங்குமத் தேய்வை கொட்டிக்
காவியங் கண்ணி னார்கள்
காமப்போர்க் கோலங் கொண்டார் (138)

தாற்றிளங் கதலிக் கானிற்
சந்தனச் சோலை தன்னிற்
கோற்றொடிச் சிலம்போ டார்ப்பக்
குவிமுலை திளைப்ப வல்கு
லாற்றிருந் தமிர்தங் கால
முகங்கள்வேர் வுறைப்ப மாயன்
விற்றுவிற் றுருவாய் மாத
ரெவரொடும் மேவி னானே (139)

இன்னண மாயர் மாத
ரிளமுலைப் போக மாந்திக்
கன்னன்மென் றனைய சொல்லார்
கலன்கள்கை செய்து நீங்கித்
தன்னமா தோழ ரோடு
நெடியொலி தழங்கு காட்டிற்
றுன்னருந் திறல்கொண் மாயன்
றொறுவினங் காக்கு மெல்லை (140)

அழிகொடும் பசியா னெந்தே
மையவூ ணளித்தி யென்னக்
குழையரைச் சுற்று மாயர்
தனித்தனிக் கேட்பக் கொண்டல்
விழைவொடு மகஞ்செய் கின்றார்
வேதிய ராங்க ணெய்தித்
தழலுறு மவியை நீவிர்
தருகெனக் கேண்மி னென்றான் (141)

என்றலு மறையோர் சாலை
யெய்திவெண் சோறு கேட்ப
மன்றவ மறையோர் சீற
மற்றவர் மாதர் ஞானக்
குன்றினுக் கவிகள் தாமே
கொணர்ந்தன ரளிப்ப வைய
னென்றிய தோழ ரோடு
முவந்தினி தருந்தி னானே (142)

அருமகப் புருட னந்த
வவியினை யயின்ற வாற்று
லுருகெழு தீயி னூட்டு
பேற்றினு மொன்று நூறாய்
மருவிநற் பலன்வந் தெய்த
மாதர்தங் கேள்வ ரோடுந்
தெரிவரு முத்தி வீட்டிற்
சிறப்பின்வீற் றிருந்தா ரன்றே (143)

அரக்கினை யூட்டிச் செய்ய
வமிர்தினைத் தீற்றி யன்ன
முருக்கித ழிந்தி ராணி
முலைமுகந் திளைப்ப விங்குந்
திருத்துயின் மார்பன் பூசை
செய்திட நந்த கோபன்
விருப்பொடு பண்ணி காரம்
வேண்டுவ வியற்றி னானே (144)

அய்யநீ யாரைப் பூசை
*யியற்றுவான் றுணிந்த தென்னச்
செய்யதா மரைக்கண் மாயன்
செப்பலு நந்த கோபன்

---

* யாற்றுவான் றுணிந்தது (பா. பே.)

மையவாங் குவளை யுண்கட்
புலோமிசை மணாளன் றன்னை
வெய்யதீ வினைக ணீங்கப்
போற்றுவன் விழைவி னென்றான் (145)

## வேறு

கோவர்த்தன கிரியைத்தழை வளருங்குளிர் கானை
மேவிச்செயி ரறுபூசனை புரிவீருயர் விண்ணிற்
றேவுக்கருள் கொடுபூசனை செய்யாதொழி வீரென்
றாவிக்குமுள் ளுயிராகிய வையனுரை செய்தான். (146)

அய்யனுரை செய்யாமுன மாயற்கொரு திலகன்
நெய்யின்கடல் கருணைக்குவை நெகிழாவடி தயிர்பால்
வெய்தாகிய வடிசிற்குவை வெளிமூட நிறைத்துச்
செய்தான்மணி வண்ணன்றனி மகிழத்திகழ் பூசை (147)

கண்ணன் றிகழ் கோவர்த்தன கிரியின்கவி னெய்தித்
தண்ணந்தயி ரடிசிற்குவை முழுதுந்தனி வாரி
யுண்ணுந்திற னுணராவிழி சிவவாவுடன் வெகுளா
விண்ணந்தனி யாள்வோனுயர் முகிலேழையும் விடுத்தான்
(148)

காரேழுமெ ழுந்தோரெழு கடல்வற்றமு கந்தாங்
கோர்தாரைநல் லயிராவண வுயர்நீள்கர மொப்ப
வாராவுமிழ் தலுமானிரை துயராதணி துளவோன்
பேராதுயர் கோவர்த்தனங் குடையாமெனப் பிடித்தான்.
(149)

ஒரேழ்தின மிவ்வரறதிர் மழைபெய்தலு மொளிருங்
கார்மேனியன் வரையைக்குடை கவியாநிரை காப்பப்
பார்மேன்மக வான்வந்துயர் பணிவான்புன லாட்டிச்
சீரார்பெயர் கோவிந்த னெனச்செப்பிய கன்றான் (150)

இவ்வாறெழு குறுநாளினி லீராறுறு நிதியின்
வவ்வாயுயர் நந்தற்கொடு வருணனுழை செல்லும்
வெவ்வாளசு ரேசன்கையின் விடுவித்துயர் மழையு
மொவ்வாதருள் கொடைநந்தனை யுயர்கோகுல முய்த்தான். (151)

நந்தன்முத லியவண்டர் நயப்புற்றுள மகிழ
மந்தாரவ னஞ்சூழ்தரு வைகுண்ட மனைத்துங்
கந்தார்களி றுரைசெய்திடு கண்ணன்றனி காட்டி
வெந்தீவினை செயுமாயையின் மீட்டுந்தனி மறைத்தான் (152)

தேமாநனை கொழுதித்திரி செங்கட்குயில் களியாக்
காமரவென வொழியாம லரற்றுங்கடி காவிற்
பூமாதவி சினின்மேவிய பொன்னங்கொடி கொழுநன்
பாமாண்படு மிசைவேய்ங்குழல் பயில்வானினி துற்றான் (153)

கஞ்சங்கழை செங்காலி கருங்காலி தழைக்குஞ்
செஞ்சந்தன மெனுமைந்தினி னினிதென்றுரை செய்யு
மஞ்சாரட வியினுற்றிசை வளிதைவர லின்றி
விஞ்சுஞ்சம தலமுற்றுயர் வேயின்முத றுணியா (154)

ஓராண்டிடை யிட்டேவனை யூனம்புரை திருக
லாராய்ந்திரு பதுமேல்விர னீளத்துறு மளவாய்ச்
சேரும்விர லொருநாலரை திகழ்சுற்றுள வாக
வீருங்குழல் கஞ்சத்தினி னிடவாய்வெளி யடையா (155)

இருமேல்விர லிடவாயினில் விட்டோர்துளை யிட்டேழ்
விரல்விட்டெழு துளையிட்டவை மேன்முத்திரை யிரு
வுரைபெற்றிடு துளையெட்டினு மொன்பான்விர லீக்கிப்
புரையற்றிட விருமேல்விரல் *வளைவாய்முறை போக்கி (156)

---

* வளைவாய் முனம் போக்கி (பா. பே.)

அருமாமறை விளையாட்டயர் திருநாவுடை யைய
னொருநான்முழ துள்ளத்திடை யுன்னித்தனி செய்யாத்
தருவேங்குழ றணிநீலுறித் தடவுங்கையி லேந்திக்
கருமாமுகி லுலகம்பொதி கனிவாயிதழ் வைத்தான் (157)

இடக்கைப்பெரு விரலுஞ்சிறு விரலுமெழில் வலப்பாற்
றடக்கைப்பெரு விரலும்மிவை தவிரச்செறி விரலா
லடைத்துத்திறந் தியலேழிசை யமிழ்தந்துளை தோறு
முடைத்துப்பெருக் கெடுத்தோடிட வொலிவேய்ங்குழ
[லிசைத்தான் (158)

வேறு

திருவே யன்னார் வேயிசைதத்தஞ் செவியேரா
முருகார் சந்தச் சேறணி பொம்மன் முலைதாங்கி
யருகா நிற்கு நுண்ணிடை யந்தோ யிறுமென்னு
விருதோள் பற்றி நூபுர மார்ப்ப வெதிர்புக்கார் (159)

நாணுந் தூசு மாயையு மெய்தா நலனும்பொற்
பூணு நெஞ்சும் பொற்புடை யாவுங் குழலூதும்
பாணர்ப் பைந்தா ரண்ணலை யுள்ளத் திடைமெச்சிக்
காணுந் தெய்வக் கையுறை நல்கிக் கவலுற்றார் (160)

வேயா லாவின் பின்றொடர் செங்கண் விடைமீட்குங்
காயா மேனிக் கண்ணனு மம்மென் முலைதாங்கித்
தேயா நிற்குஞ் சிற்றிடை யார்தஞ் செயனோக்கி
மாயா வேடத் தெண்ணரி தாகும் வடிவுற்றான் (161)

மாதவி யந்தண் சோலையின் மன்றற் புளினத்தின்
ஞதவிழ் முல்லைப் பந்தரின் வெற்பிற் றனியெய்தி
வேதமு மின்னுங் கண்டறி யாதோன் வெளிநின்றே
போதரி யுண்கட் கோவிய ரோடும் புணர்குற்றான் (162)

இன்னண மின்சொற் கோவிய ரோடு மிளிதாடிப்
பொன்னவி ராழிக் கன்னவி றிண்டோட் புயல்வண்ண
னன்ன நிகர்க்கு மிராதையெ னும்பெண் ணமுதோடு
மன்னி யிமைப்பிற் பூமலி கானின் மறைவுற்ருன் (163)

அய்ய னொளிப்பக் காணவ ராய்நின் றலர்கொங்கைத்
தொய்யி லழிப்பக் கண்ணிணை மாரித் துளிதூங்க
மையன் மனத்தோ டின்னமு தன்னர் வனமெங்கு
மெய்தினர் காணர் மாழ்கி யுயிர்த்தங் கிவைசெய்வார் (164)

பூதனை யென்ருேர் பேதையை வைத்துப் புயன்மேனி
மாதவ னுகச் சென்று முலைக்கண் வாய்வைப்பா
ரூதிய கொன்றைத் தண்குழல் வாய்வைத் துழல்கிற்பா
ரேதமில் கோலங் கொண்டு குருந்தி னிவர்கிற்பார் (165)

அய்ய னிழைத்தவை யாவையு மிம்முறை யங்நல்லார்
செய்து விருப்பொடு சென்னெறி தேடிச் செல்போழ்தின்
வைய மளந்துயர் கங்கையி னுடிய மலர்வைப்புந்
தைய லிராதை யடிச்சுவ டுந்தங் கண்ணுற்ருர் (166)

அங்கவர் செய்ய வடிச்சுவ டொற்றினர் செல்போழ்தின்
மங்கை பதக்குறி கண்டிலர் மாயன் மலர்ப்பாதச்
சங்கொடு சக்கர ரேகை யழுந்த றனைக்காணு
விங்கிவ டன்னை யெடுத்தன னுமென வெண்ணுற்ருர் (167)

*தேடி விருப்புறு மங்கைய ரந்நெறிச் செல்போழ்தி
னேடவிழ் நாண்மலர்க் கைவளை யுக்க விடங்காணு
வூடல் திருத்தி யிதம்பல சொல்லி யுவப்போடுங்
கூடின ளிவ்வழி யென்று நினைந்து குழைந்தாரால் (163)

---

* தேடி விருப்புடன் மங்கையர் (பா. பே.)

*ஆயிடை சென்றவர் நின்ற தலத்தி னணித்தாக
மாயன் விடுத்தய லேகவி ராதை வருந்தோடுஞ்
சேயரி மைக்க ணுறத்திட நின்ற திறங்காணு
வேயினி ரங்கவ ணின்றுழி மங்கைய ரெல்லோரும் (169)

வேறு

எய்து மங்கைய ரிராதையை நோக்கி
†வைய முற்றவு மளந்த மலர்த்தா
ளய்ய னெங்குள னறைந்திடு கென்ன
நய்யு நெஞ்சமொடு நாணி யுரைப்பாள் (170)

முன்னர் நுங்களை முயங்கி விடுத்துப்
பின்ன ரென்னெடுயர் பெட்புளர் போல
மன்னி யுள்ளுயிரை வவ்விய கள்வ
னென்னை யுந்தனி துறந்தன னென்றாள் (171)

என்று கூறுதலு மங்கையர் யாருங்
கன்று காமவன லின்று கனற்ற
வென்றி வேள்கணை வருத்த மெலிந்து
பொன்றி னாரினுயிர் போகி யயர்ந்தார் (172)

மாரி கற்குமது மாலை மிலைச்சுங்
கார்கொ ளோதியினர் கையற வெய்திச்
‡சோர்தல் கண்டுதுயர் தோகையர் தன்முன்
வேரியந் துளவ மால்வெளி நின்றான் (173)

பருதி கண்டுமலர் பங்கய மொத்து
முரவு நீர்சுவற வுண்டெழு தண்கார்
வரவெ திர்ந்தகளி மாமயில் போன்றுங்
கரிய மால்வரவு கண்டு களித்தார் (174)

---

* ஆயிடை நின்றவர் சென்ற தலத்தின் (பா. பே)
† வைய முற்று மளந்த மலர்த்தாள் ஷை
‡ சோர்தல் கண்டுதுயர் கொண்டவர் கண்முன் ஷை

வேறு

வெண்ணிலாக் கதிர்கள் பாய விரிமணற் குன்று தோறுந்
*தண்மணற் பந்தர் தோறுஞ் சண்பகக் காடு தோறும்
பெண்ணையங் குரும்பையன்ன பேரிள முலையிற் புல்லிக்
கண்ணனன் மடவா ரோடுந் தனித்தனி கலந்திட் டானே (175)

சிலருறு புலவி நீங்கப் பணிந்திடுஞ் சிலரை யன்பிற்
கலவியின் மகிழ்ச்சி செய்யுஞ் சிலர்குழல் கைசெய் தேந்து
முலையினிற் றொய்யில் திட்டுஞ் சிலரொடு முகமன் கூறி
யொலிபடு நரம்பு விக்கித் திவவியா ழுளரு மன்றே (176)

உரவுநீர்த் தடத்தி னாடுஞ் சிலரொடுஞ் சிலரோ டொன்றிக்
குரவைக்கூத் தினிதி னாடுஞ் சிலரொடுங் குளிர்பூங் காவின்
விரிமணல் வண்டற் பாவைக் கணிந்திட விரைமென் போது
தெரிதருஞ் சிலரோ டொன்றிச் சிலம்பெதிர் கூவு மன்றே (177)

இன்னணங் கங்குன் மேயு மெரிகதிர்ப் பருதி மான்றேர்
துன்னிடுங் காறு மாடித் தொறுவர்தம் மகளி ரோடுங்
கன்னவின் முழவுத் திண்டோட் கருமுகில் வண்ணத்தண்ணல்
பன்னருஞ் சிறப்பி னாயர் பாடியி னெய்தி னானே (178)

எய்தியவ் வாயர்பாடி யினிதமர்ந் துறையு நாளிற்
றெய்வநீர்ப் பெருக்க முத சரச்சொதி தீரந் தன்னின்
மையணி மிடற்றுப் புத்தேள் விழாவணி வணங்கி யேத்தக்
கொய்துழாய் முகுந்த னாயர் குழாத்தொடு மெய்தி னானே (179)

இளம்பிறைக் கண்ணி யண்ண லுவந்திட வெழிலி வண்ணன்
வளம்படு கருணை யார்ந்த வான்சுதைக் குன்ற மென்ன
விளங்குவெண் சோறு பெய்யா வானெய்பால் வெறுப்ப [வேந்தி
யளந்தறி வரிய சீர்த்தி யந்தணர்க் கூட்டி னானே (180)

---

* தண்மலர்ப் பந்த ரேறும் (பா. பே.)

நீறுபூத் தலர்ந்த மேனி நெற்றியங் கண்ணி னெந்தைச்
சாறயர் மருங்கி னெய்தித் தாமரைத் தடங்கண் மாய
னேறிவர்ந் தைய னெய்தத் தொழுதடி யிறைஞ்சியேத்தி
விறுயர் தம்மு னோடும் வீட்டக மதனிற் புக்கான் (181)

கங்குலி னந்த கோபன் கண்டுயில் புரியு மேல்வை
வெங்கண்வா ளரவம் பற்றி விழுங்கலுங் கண்ணன்காணுப்
பைங்கழற் ருளிற் ருக்கப் பைத்தபாம் புருவ நீங்கி
மங்குல்வா யியக்கன்முன்னை வடிவுபெற் றியம்பு மன்றே (182)

ஓரெழு முனிவர்முன்ன முரைத்தவெஞ் சாபந்தன்னுற்
கூரெயிற் றரவ மாகிக் கிடந்தனன் குரிசி லுன்றன்
வார்கழ றீண்டப் பெற்ற வன்மையால் முன்ன மேய
வேர்கெழு முருவம் பெற்றே னெனத்தொழு தேத்தினனே (183)

சாருழி வழிநா ளையன் றமரோடுந் தம்மு னோடும்
விறுயர் பாடி யெய்தி புலரியி னிரைகண் மேய்ப்பா
னுறுபூந் துணரின் வீழ்ந்து நாகிள வண்டு பாடத்
தேறல்கொப் பளிக்குங் காவிற் சென்றினி திருந்தா னன்றே (184)

பொருதிரை யமுனை யாற்றங் கரையினிற் பூவை வண்ணான்
சரிகம பதநியென்னுந் தானத்திற் றொடுவ தொட்டு
விரல்வழி யமுதஞ்சிந்த வேய்ங்குழல் மணிவாய்வைத்துக்
குரன்முத லாயவேழு பண்களுங் குறித்திட் டானே (185)

கொன்றையங் குழலினோதை கேட்டலும்கொம்ப ரன்னார்
மன்றலங் கூந்தல்சோரக் வால்வளை வாய்விட்டார்ப்பப்
பொன்றிகழ்முலையி னேர்காழ் மணிவடம்புடைப்ப வோடிச்
சென்றிளமயிற்கு ழாம்போற் செல்வனைவளைந்து கொண்டார் (186)

ஆயிடைச் சங்க சூட னென்னுமோ ரவுண னெய்தித்
தீயன புரித லுன்னுக்கித் தாமரைச் செங்கண் மாயன்
வாய்வழி குருதிகக்கக் குத்திமாய்த் தவன்கைவைகுங்
காயெரி மணியைவவ்வி முன்னவன்கையி லீந்தான் (187)

வங்கிய விஞ்சை வல்லோர் மணிக்கரம் விதிர்த்துநோக்கிப்
பங்கயக் கண்ணன் மீட்டுங் குழலிசைப் பயிலு மேல்வைப்
பொங்குதே னசையின்மொய்க்கும் பொறிவரி வண்டுபோல
வங்கர வல்கு லன்னா ரனைவருஞ் சென்று மொய்த்தார் (188)

வண்டொலி சுருதி யாக மணிமிடற் றிரங்கும்மோதைப்
பண்டரு கானமாகப் பைந்தொடி சிலம்பொ டார்த்தல்
கொண்டதோர் முழவ மாகக் குவிமுலைத் தரளந்தாக்கி
யண்டர்தம் மகளிர் காம னாடக மாடி னாரே (189)

ஓவிய ரெழுதவொண்ணப் பேரெழி லுருவம் வாய்ந்த
கோவிய ரோடு மின்புற் றின்னணங் கூடு மேல்வைச்
சேவின துருவா யெய்து மவுணனைச் செங்கண் மாயன்
மேவுகோ டிறுத்து வீழ்த்தி வேற்றுடம் பாக்கி னானே (190)

சேவுரு வெய்தி வந்த வவுணனைச் செகுத்த கொற்றம்
யாவையுங் கஞ்சற் கோதி யாழ்முனி கண்ண னென்போன்
றேவகி மைந்தன் மற்றோர் குழையினனுரோணி செம்மல்
காவல நீமுன் செற்ற கன்னிமற் றசோதை யின்றாள். (191)

மைந்தரோ ரிருவர்தம்மை வாழ்வசு தேவ னஞ்சி
நந்தகோன் மனையி லுய்த்தா னெனமுனி நவிறல் கேட்டுச்
சிந்தையின் வெகுளி பொங்க மைத்துனன் றன்னைச் சிறி
வெந்திறல் கஞ்ச னுள்வாஞ் டறுரீஇ விரைந்துசென்றான்
(192)

வளிதட வரினுங் கேதெ மிழற்றிடு மகதி யாழோ
னளியொடு மிவனைக்கோற றகாதென விலக்கியந்தண்
டுளிமுகில் வண்ண னேடுந் தம்முனைத் தொலைக்குஞ் சூட்சி
நளிகட லவனி வேந்தே நாடுதி விரைவி னென்றான் (193)

வெளிற்றறி வுடையதேர்ச்சித் துணைவரோ டாய்ந்துவெய்ய
வுளைப்பரி யுருவிற்கேசிக் கோகுலத் தொல்லையேகித்
துளிப்புய லனையமேனிக் கண்ணனைத் தொலைத்தியென்ன
வளைத்தலை யரவிற்சிறிக் கஞ்சனுண் டறைதல் செய்தான் (194)

கலினவாம் பரியாய்வெய்ய கதழ்சினத் தவுணனெங்கு
மலைநடந் தென்னப்போகி மாயன்முன் னதிர்ந்துசெல்ல
வலகைமென் முலைப்பாலுண்டோ னுங்கவன் வாயிற் செங்கை
குலவுற நீட்டி யன்னோ னுருயிர் குடித்திட் டானே (195)

கள்ளுந ராகச் சில்லோர் சிலர்குழக் கன்ற தாக
வெள்ளிடை யெய்தி யையன் மிகவிளை யாடுங் காலை
யள்ளிலை வயிரப் பைம்பூண் மயன்மகன் வியோம னுயர்
பிள்ளைக ளுருவாய் வஞ்சப் புணர்ப்பினிற் பிடிக்க வந்தான் (196)

எய்திய வவுணர் கன்றி னியங்குசிற் றுயர் தம்மைக்
கைதவத் தெடுத்துப்போகிக் கனமுழை யதனிற் சேர்த்தி
மைதவழ் பாறைதன்னு லடைத்தலு மாய னன்னோன்
பைதலுற் றிடவாய் மூக்குப் புதைத்துயிர் படுத்திட்டானே (197)

அடைத்திடும் பாறை தன்னை யணிவிரற் றலையிற் றாக்கி
யுடைத்துநீண் முழையின் வைகுந் தோழரை யொல்லை மீட்டு
வடித்தநான் மறையுங் காணு மரகதக் கொண்டல் வண்ணன்
படிக்கொரு திலத மான பாடியி னெய்தி னானே (198)

அஞ்சனக் கொண்டன் முன்னர் நாரத னணுகி வெய்யக்
கஞ்சனை மூன்று நாளிற் கடிந்து நீளுலகம் யாவு
முஞ்சிட வளித்தி யென்ன வுரைத்துய ராசி கூறி
விஞ்சைய ருலகந் தன்னில் விரைவொடும் போயி னானே (199)

கேசியை வியோமன் றன்னைத் தொலைத்தவை கேட்டுக்கஞ்சன்
மாசுறு மனத் தனாகி மரகத வண்ணன் றன்னைத்
தேசுறு மிராம னோடு செகுத்திடுஞ் சூழ்ச்சி யாவு
மேசுறு மதியிற்*பல்கா லெண்ணியாங் கிதனைச்சொல்வான் (200)

சாணூரன் முட்டிவெய்ய சலன்கவு சலனைப் போரி
லாணொடு சிற்றத் துப்பிற் குவலயா பீட மாயச்
சேணுடர் போற்றும்யானை †செலுத்துபத் திரனைநோக்கி
கோனாக மனையகஞ்சன் றனியிருந் திதனைச் சொல்வான் (201)

முருகுவாய் மடித்துண் டாடி மூசிவண் டரற்றுந்தீந்தேன்
விரைகமழ்துளபத்தண்டார்க் கண்ணனை வெள்ளைமேனி
யொருகுழை யொருவன்றன்னை மல்லினாலோடை நெற்றி
பொருமதக் கரட நால்வாய்ப் பொருப்பினு லொறுத்தி
ரென்றான் (202)

அலைகட லவனி காக்கும் யாதவர் மற்போர் காண
மலையுறழ் குடுமி மாடந் தனித்தனி வகுத்து வாய்ந்த
சிலைமதம் புரிவித் தெய்தும் வீரரைச் சிறப்புச் செய்யாக்
கலைபயி லக்கு ரூரன் றனக்கிவை கழற லுற்றான் (203)

கொல்சினத் தறுகண்வேகக் குஞ்சர முடற்றும் போர்க்கு
மல்லடு போர்க்குந் திங்கட் கூன்முது குரிஞ்சவான்றேய்
கல்செய்தோ ளிராமன்றானுங் கண்ணனும் வலியரென்று
ரொல்லையி னந்தகோனோ டவரையீண் டுய்க்க வென்றான் (204)

---

* பல்கா றனியிருந் தெண்ணினனே (பா. பே.)
† செலுத்து பத்திரனைக்கூவி ஷை

கொய்யுளைப் புரவிநான்கு பண்ணிய கொடிஞ்சி மான்றே
ரெய்யெனு மளவி னேறி நந்தகோன் பாடி யெய்திப்
பெய்முகிற் கமலக்காடு பூத்தெனப் பிறங்கு மேனி
யய்யனை வெள்ளை மேனி யமலனை யினிது கண்டான் (205)

பருகுவான் போல நோக்கிப் பங்கய மருட்டுஞ் செய்ய
விருபதங் கண்ணி லொற்றி யிறைஞ்சலு மிராம னோடு
முருகவிழ் துளவ மாயோ னளவளாய் முகமன் கூறி
யுருகுபே ரன்பிற் புல்லிப் போந்தமை யுரைத்தல் செய்தான் (206)

அற்றைநாட் கழித்த பின்னை யஞ்சனக் கொண்ட லன்னோ
னெற்றைவெண் குழையா னோடு நந்தகோ னோடு மோங்கும்
வெற்றிவே லக்கு ரூரன் விரைசெலற் புரவி பூண்ட
பொற்றடந் தேரி னேறிப் போகிய தொடங்கினரே (207)

*அழுதலம் வந்து மாழ்குமாய்ச்சியர் தம்மை யையன்
குழைவுறக் கஞ்ச னுவி குடித்திவண் வருவ லென்னு
வுழுவலன் போடும் வில்லா தொருவனுக் கொருவனுகித்
தழுவின விறுத்தி வல்லேயமுனையங் கரையிற்சார்ந்தான் (208)

சார்தலு மக்கு ரூரன் றண்புனல் படியு மேல்வைத்
தேரினிற் புனலிற் கண்ணின் மனத்தினிற் றிசைக ளெட்டி
னூரியன் றன்னைக் கண்ணுற் றற்புத நீர னுகி
யிர்மலர் தூவி யைய விணையடி யேத்தி னுனே (209)

பின்னுமத் தடந்தே ரேறி நால்வரும் பெட்பி னேடுங்
கன்னியம் புரிசை முற்றிக் கவின்வளர் மதுரை யென்னும்
பொன்னகர்க் கணித்தாய்மற்றோர் பூம்பொழின் மேவக் [கண்ணன்
மன்னிய வக்கு ரூரன் றன்னோடு மகிழ்ந்து சொல்வான் (210)

---

* அழுதல மந்துமாழ்கும் (பா. பே.)

மன்னுழை யாங்கணுளை வருதும்வேத் தவையினைபோய்த்
துன்னிய வனைத்துஞ் சொல்கென் றுரைத்தலு மக்குரூரன்
கன்னவி றிரடேோட் கஞ்சன் கடிநகர் விரைவி னேகி
யின்னவை யனைத்துங் கூறித் தன்னகர்க் கேகி னுனே (211)

கூன்பிறை முதுகுந் தேய்க்குங் குடுமியம் புரிசை சுற்றி
வான்றெடர் மாட மோங்கு மதுரைமா நகரங் காண்பா
னூன்சுவைத் தொளிரு நேமி யொருவனும் வெள்ளை மேனித்
தேன்படு தாரி னுனுந் தொறுவரும் விரைந்து சென்றார்(212)

பாசிலைப் பதுமக் காடு பூத்தன படிமத் தண்ணல்
தேசுகண் படுக்குஞ் செல்வத் திருநகர் நோக்குமேல்வைக்
காசுலாங் குவவுத் திண்டோட் கதிர்முடிக் கஞ்சன் சுற்றுந்
தூசுதாய் தாக்கு வோன்வந் தெதிர்தலு மிதனைச் சொன்னுன்
(213)

விழுமிய துகிலொன் றீதி யென்னலும் வேந்தராடைத்
தழையரைச் சுற்று மாயர் புனைந்திடத் தகைந்து கேட்டல்
பிழையென வண்ணுன் கூற வவன்றலை பிடுங்கி யொரோ
ரிழையொரு கோடி பெற்ற துகிலெலா *மிடையற் கீய்ந்தான்
(214)

விலைவரம் பறிய லாகா வெண்டுகில் மருங்குல் வீக்கிக்
கலைவலா ரேகு மேல்வைக் கஞ்சனுக் கணிவோன் போந்து
நலனுறு கலன்கள் யாவு நன்கினி லணியச் செம்மாந்
துலைவிறன் னுருவ மன்னே னுடற்றிட வுதவி னுனே (215)

†புதுக்கடி பொருந்தும்வண்டி னுணுறப் புதிய தேறல்
மதுத்துளி யருத்திப் புல்லுஞ் சுரும்புவீழ் மாலை கட்டு
முதுக்குறை வுடையோன் போந்து முருகவிழ் மாலை நல்க
விதிக்குமோர் விதியா மையன் வீட்டின்ப மருளி னுனே(216)

---

* இடையர்க் கீந்தான் (பா. பே.)
† புதுக்கடி பொருந்தும் வண்டினுணற.

ஐயிரு காத காதி யலைகட லதனிற் சந்தின்
வெய்யவெம் புலவுமாற்றி வெறிகமழ் நறிய சாந்தங்
கையகத் தேந்திக் கூனி கண்ணாறுக் களித்த லோடுஞ்
செய்யசாக் தனிந்து மாயோன் மற்றிவை செய்தா னென்றே (217)

பூங்கழல் விரல்கள் யாவும் புறவடி யதனிற் சேர்த்தி
யாங்கவ ளணரி தன்னை யண்ணல்செங் கையி னேந்தி
வாங்கலுங் கூன்கண்மூன்று நிமிர்ந்துவான் மகளிரேறுந்
தாங்கரும் படிவந் தாங்கித் தாக்கணங் கென்ன நின்றாள் (218)

எழிலும்வெம் முலையுந் தாங்கா திடுகிடை யணங் குநாணி
மழையெழில் கவற்றுநம்பி வருகவென் மனையினென்ன
கழைகுளிக் களிநல்யானைக் கஞ்சனைக் கொன்று நாளை
விழைவினுன் மனையி னெய்தி மேவுவ னென்று
போனான் (219)

வின்மக மியற்றுஞ் சாலை விரைவினி லெய்தி யாங்கண்
மன்னிய சிலையைப் பற்றி வலிதினின் முறிப்பக் காக்குங்
கன்னவி ரேளார் வெம்போ ரேற்றலுங் கமலக் கண்ண
னன்னவ ராவிக் கூற்றுக் களித்தவ ணகன்று போனான் (220)

எயிற்புறந் தன்னி னந்த விறுத்தபூங் காவி லையன்
வெயிற்கதி ருமிழும் பைம்பூ ணிராமனோ டெய்த வேந்தன்
செயிர்ப்பொடு மினைய வெல்லாஞ் செவித்தலைப் புதையக்
கேளா
வுயிர்த்திரு ளழியுங் காறுந் துயிலின்றி வெருட்சி யுற்றான்
(221)

அத்தவெற் படைந்தவெய்யோ னுதயவெற் பணுக லோடு
முத்தவெண் குடையி னீழல் முகிழ்முலை மகளிர் செய்ய
கைத்தலத் தேந்து பைம்பொற் கவரிகா லிசைப்பக் கஞ்சன்
வித்தக வயவர் சூழ வேத்தவை யெய்தி னானே (222)

மதுகையோ டொன்னார் தம்மை வாளம ரூழவந் தன்னின்
முதுகுகண் டன்றி மீளா முழுவலி துயின்ற திண்டோ
ளேத்குல மன்னர் யாரு மற்றெழில் காண்பா னெய்திக்
கதிர்மணித் தவிசு தோறுங் கவின்பெற விருந்தா ரன்றே(223)

உலம்பொரு துயர்ந்த திண்டோண் முட்டிக னுயர்சா னூரன்
சலன்றிறற் கூடன் சாற்றுங் கவுசலன் முதலா மல்ல
ரிலங்குமெய் முழுதுஞ் செம்மண் டுகளிறைத் திளிநிறுடிப்
பொலங்கிரி காலி னோடும் புகுந்தென வவையிற் புக்கார்.
(224)

நந்தகோன் றன்னை யீண்டு தருகென நவிலத் தூதர்
சிந்தையின் விரைவி னேகி நின்னிடைச் சிறுவ ரோடும்
வந்திடு கென்னப் போந்து கஞ்சனை வணங்கி நிற்ப
விந்திர திருவன் கண்ணு விருக்கென விருந்தா னன்றே (225)

உவரிநீர் வண்ணன் வெள்ளை யொருகுழை யொருவ னோடு
மவையினி லெய்த வேந்தன் கடைத்தலை யணுகு மேல்வை
யிவர்வுறு பத்தி ரன்றன் பெருவிர லிணையிற் றூண்டிக்
குவலையா பீட மென்னுங் குஞ்சர மேவி னானே (226)

கோலிவெங் களிறு குத்தக் கோட்டிடை யொடித்து நான்கு
காலிடைக் கரந்தும் வவ்வுங் கரத்திடை மறிந்து முன்போ
*யோலொடும் வெருவி யோட மத்தக முடையக் குத்தி
வாலினைப் பற்றி நூறு விற்கிடை வலித்திட் டானே (227)

வாளுகிர்த் தலையான் முன்ன மிரணியன் மருமம் போழ்ந்த
கோளரி யென்னச் சிறிக் குஞ்சரம் வெருவத் தாக்கி
நீளிருந் தடக்கை பற்றி நிலத்திடை விழ வாங்கித்
தாளினுன் மிதித்தோர் கோட்டைத் தடக்கையாற் பிடுங்கி
[னானே (223)

*மோலொடும் வெருவி (பா. பே.)

பறித்தவெங் கோடு தன்னாற் பத்திரன் சென்னி மூளை
தெறித்திட வடித்து நெய்த்தோர் மெய்முழு தொழுகிச்
[சேப்ப
முறித்தவெங் கோடு தன்னை முழுவலித் தோளின் வைத்து
நறைத்துழா யலங்கன் மார்பன் வேத்தவை நண்ணி னானே
(229)

மற்றைவெங் கோடு தொட்டு மல்லலம் புயத்திற் சேர்த்தி
யொற்றையங் குழையோன் வாவி னேங்குயர் வெள்ளி
[வெற்பைச்
சுற்றிய முகிலி னீனுண் டுகிலொளி சிறப்ப நோக்கும்
பற்றலர் வயிற்றின் வெந்தீப் படர்தர வவையிற் புக்கான்
(230)

அற்றமில் வலியின் மிக்க முட்டிக னடற்சா ணூரன்
ஒற்றையங் குழையி னேனைக் கண்ணனை யுருத்து நம்மை
மற்றொழில் வல்ல ரென்பர் வல்லிரேல் வருதி ரென்னப்
பொற்றடந் திணிதோள் கொட்டிக் கனன்றுவாய் புகையச்
[சொன்னார் (231)

என்றவர் கூற மைந்த ரிருவரும் வெகுண்டு சீறிக்
குன்றொடு குன்றந் தாக்கிக் கொடுஞ்சமம் புரிவதே போல்
வன்றிறல் வயவர் கற்ற மற்றொழிற் கல்வி காட்டி
வென்றிவே லரசர் செங்கை விதிர்ப்பவெம் பூசல் செய்தார்
(232)

பொருந்துசா ணூர னென்னும் பொருப்பினைத் தூசு வாரிக்
குருந்தின்மே லிவர்ந்த கொண்ட லாருயிர் குடித்தா னாகத்
திருந்தலர்க் குருமேறன்ன முட்டிகன் றன்னைச் சீறி
யருந்திற லோடும் வெம்போ ரலாயுதன் கொன்று
[வீழ்த்தான் (233)

கல்லெனத் திரண்ட திண்டோட் கவுசலன் றன்னை மற்றைக்
கொல்லிய வந்த கூற்ற மன்னவெங் கூடன் றன்னை
மல்லினுற் கண்ணன் கொல்ல மல்லமர்க் கிணையின் றென்னச்
சொல்லிய சலனைவெள்ளை மேனியான் ருலைத்திட் டானே (234)

ஆங்கவை யினிதி னேக்கு முக்கிர சேன னுதி
வாங்குவில் விழுங்கு திண்டோண் மன்னவ ரெவரும் பைம்பொற்
பூங்கழற் குமரர் தம்மைப் புகழ்தலுங் கஞ்ச னென்றுந்
*தீங்குறு மனத்தன் கண்ணிக் கண்ணிணைச் சேப்பச் [சொல்வான் (235)

நந்தனை வல்லி பெய்க சிறுவர்மே னன்பு கூர்ந்த
தந்தையைச் சிறையி னுய்க்க தேவகி தலைவ னுவி
யுய்ந்திடா தொறுக்க மற்றை யரசர்வாழ் வொழிக்க விந்த
மைந்துடைச் சிறுவர் தம்மை வாளின்வா யிடுக வென்ருன் (236)

என்றவ னுரைத்த லோடு மெரியெழ விழித்து நோக்கி
மன்றலந் துளவத் தண்டார் துயல்வரும் வயிரத் தோளான்
பொன்றவழ் குடுமி நெற்றிப் போதுதாழ் மஞ்ச மீதிற்
குன்றின்மே லிவருஞ் சிங்கக் குருளையிற் குப்புற் ருனே(237)

கோட்புலி யுரிவைப் போர்த்த கேடக மேந்திக் கொட்பின்
வாட்படை தடறு நீக்கி வாய்மடித் தெயிறு தின்று
சேட்டிளம் பருதி நேமிச் சிறுவபோர்க் கஞ்ச லென்னத்
தாட்டுணை பெயர்த்து விண்ணிற் சாரிகை திரிய லுற்ருன் (238)

†உறைகழித் தெறியும் வாய்வாள் விலக்கிவன் கிடுகினுள்புக்
கெறும்வலிக் கலுழன் புற்றி னிடைச்சிறை யொடுக்கி யெய்திக்

---

* தீங்குறு மனத்தன் வெம்பிக் (பா. பே.)
† உறைகழித் தெறியும் வைவாள் ஷை

கறையணற் பாந்த டன்னைக் கவ்விய தென்னப் பற்றி
யறைகழ லவளி வேந்தை நிலத்தில்விழ்த் தாவி யுண்டான் (239)

விண்ணுறை யமர ரோடு வேதமு மின்னுங் காணுக்
கண்ணனைக் கண்ணிற் கண்டுங் கையினுற் றீண்டப் பெற்று
*முண்ணிறை யொடுங்கவாவி யுலத்தலாற் கஞ்சனென்போ
னண்ணற னுருவ மாகி யமருல கெய்தி னானே (240)

கம்பமால் யானையன்ன வொன்னலர்ச் செருக்குங்கஞ்சன்
றம்பிய ரெண்மர்சீறித் தாரைவாள் விதிர்த்துச்செல்ல
நம்பியை விலக்கிவெள்ளை மேனியோன கைத்துச்சீறி
வெம்புவெங் கோட்டா லன்னோ ராருயிர் விட்டினானே (241)

பூமழை பொழிந்தார் வானோர் புரந்தரன் கமலப் புத்தேள்
தாமரைக் கண்ணன்செய்ய தாட்பணிந் தேத்தலுற்றார்
காமர்வண் டறையுந்தண்டார்க் கஞ்சனுக் கண்ண லெய்தி
யிமறந் கருமம் யாவு நன்கினி லியற்றி னானே (242)

தந்தையைத் தாயி னோடுந் தளைபடு சிறையி னீக்கிப்
பைந்துழாய் மார்பன் வெள்ளை மேனியோன் பணிந்து போற்ற
மைந்தரைத் தழுவி யுச்சி மோந்துகண் மழைநீ ராட்டி
யந்தமி லுவகை யோடு மகங்களிப் புற்றா ரன்றே (243)

அலங்கல்வேற் கஞ்சன் றன்னை யினிதினி லளித்த வெற்றி
யுலம்பொரு துயர்ந்த திண்டோ ளுக்கிர சேனன் றன்னைப்
புலம்புறு காவ னீக்கி யாதவர் பணிந்து போற்ற
வலங்கெழு திகிரி மாயோன் மணிமுடி சூட்டி னானே (244)

எதுக்குலக் கிறைவ னாக வுக்கிர சேன னென்னும்
மதுகைவே லரசற் கம்பொன் மணிமுடி புனைந்தபின்னர்ச்
சிதைவறு களிகொள் வேள்வித் திறல்வசு தேவன் றன்னை
விதிமுறை யமைச்ச னாக விழுமிதி னிருத்தி னானே (245)

இருபத்தொன்பதாவது
கண்ணனவதரித்த வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 1777.

---

* உண்ணிறை வொடுங்க (பா. பே.)

## முப்பதாவது
## கண்ணன் மணம் புரிந்த வத்தியாயம்.

இன்ன ணம்பு ரிந்த பின்ன ரெய்தி யங்கி ராமனுங்
கன்னல் வில்லெ ளித்து நின்ற காம னன்ன காளையும்
பொன்னு முத்து மணியு மோர்பொ ருப்பி னல்கி மகிழ்வுரு
மன்னு நந்த கோனை யன்பின் வந்து புல்லி னனரோ. (1)

இந்தி ரற்கு மளகை மேவு மிறை வனுக்கு மெய்தொணு
வந்த மற்ற நன்சி றப்பு வப்பி னேடு மருள்செயா
நந்த கோனை யாயர் பாடி நண்ணு கென்ன விடையளித்
துந்து தெண்டி ரைப்பு றத்து றங்கு மண்ண லுறையுநாள். (2)

அய்ய னுக்கும் வெள்ளை மேனி யண்ண லுக்கு மரசர்கோன்
*மெய்யு ணர்ந்த கர்க்க நாம முனிவ னுல்வி ருப்பொடு
மையி லொண்ப திழைதி ரித்த மும்மை நூல்வ ளேர்ந்துபின்
செய்ய நின்ற கரும நன்கு செய்து முற்றி னனரோ. (3)

மாசி லாத வெள்ளை மேனி வள்ள லோடு கண்ணனுங்
காசி மாந கர்க்க ணிற்க லந்து சாந்தி பணியெனு
மாசி லாத முனிவ னேடு மாறு பத்து நான்கெனு
மேசில் விஞ்சை யாறு பத்து நான்கு நாளி லெய்தினர். (4)

மதலை மைந்த ரளவில் செம்பொன் மாமு னிக்க ளித்தலு
முதலை வவ்வ வாரி யின்கண் முன்னி றந்து போனவென்
புதல்வ னுய்ந்து வரவ ளிப்பி னதுகொல் கோடி பொன்னென
விதலை யுற்று ரைப்ப மைந்தர் விரைவின் வாரி யெய்தினர். (5)

*மெய்யு ணர்ந்த காக நாம முனி. (பா. பே.)

இடங்கர் வவ்வு குருவின் மைந்த னெய்த நீய ளிக்கென
மடங்க லன்ன கண்ண னெய்தி வருண னோடு ரைத்தலுந்
தொடர்ந்து பஞ்ச சன்னி யன்கொ ணர்ந்த னன்றொ லைக்கென
வடைந்து வாரி யெய்தும் வெய்ய *வவுண னெஞ்சு கீறினன் (6)

அங்க வன்ற னுடல்பி ளந்த ணைந்து நெஞ்சின் வைகிய
சங்கெ டுத்து மறலி யூர்த விற்பு குந்து தாமரைச்
செங்கண் மாய னூத வஞ்சி மறலி கொண்ட சிறுவனை
மங்குல் போலு நீல மேனி வள்ளல் கையி னல்கினன். (7)

மைந்த னைக்கொ ணர்ந்து வள்ளல் குருவி னுக்கு நல்குரு
வந்த மற்ற நிதியி னோடு ருஞ்சி றப்ப ளித்தபின்
கொந்து மொய்த்த தண்ட லைக்கு மாமு டுத்த மதுரையி
னந்த கோப னுயிரை யொத்த நாத னன்பி னெய்தினன். (8)

வேறு

அங்கர் தன்னி லடைந்திடு மண்ணல்
தன்னமர் தாயொடு தந்தையை யேத்தி
மன்னிய வுத்தமன் வாண்முக நோக்கி
நன்னய மோடிவை யன்பின வின்றான். (9)

அன்னைய சோதையை நந்தனை யன்பின்
மன்னிய கோவியர் மங்கையர் தம்மை
யின்னலு ருவகை தேற்றி யிமைப்பிற்
றுன்னுதி ரென்றுரை சொல்லி விடுத்தான். (10)

நந்த னிருக்கையி னுற்றவ னண்ணிச்
சிந்தை யுறேலுயர் தேவகி மைந்தன்
வந்திடு மென்ன வகுத்திவை கூற
வந்தமில் பேரெழி லாய்ச்சியர் சொல்வார். (11)

---

*அவுண னெஞ்ச கீண்டனன். (பா. பே.)

மாட முடுத்தொளிர் மாம துரைக்க
ஞேடரி மைக்க ஞுருப்பசி யன்று
ராட னயந்தவ ஞுய்ச்சியர் கொங்கை
தேடுவ ஞேவென நின்றுநி கைத்தார். (12)

இத்தகை யானனி கூறி யிரங்கு
மைத்தவ ழோதியர் மம்ம ரொழித்திட்
டுத்தவன் வாழ்மது ரைப்பதி யுற்றே
வித்தக ஞேடயன் மேவியு ரைத்தான். (13)

உலகம ளந்தவ னுத்தவ ஞேடும்
விலவிதழ் வெமமுலை யேந்தெழி லுண்கட்
† கலையிற வோங்கிய கைவள ரல்கு
னலனுறு கூனித *னில்லின டைந்தான். (14)

அகன்மனை யெய்திய வைய னணங்கின்
முகிழிள வெம்முலை மார்பிடை மூழ்கத்
துகிர்படு மெல்லிதழ் துய்த்தகில் வாசப்
புகைதவழ் மெல்லணை மீதுபு ணர்ந்தான். (15)

வேறு

என்னை நாளு மின்னண
மன்னி வாழ்வு செய்கென
வன்ன நேர்ந்திட் டையனு
நன்னர் மாட நண்ணினன் (16)

ஓர்கு ழையொ ருத்தனுங்
கார்நி றத்த கண்ணனு
மார்வ வக்கு ரூரனே
டூர முற்றி யம்புவார் (17)

---

*இல்லினடந்தான் (பா. பே.)
† கலையற வோங்கிய டி

தரும ஞேடு தம்பியர்க்
குரிமை யெய்த வோதெனத்
திரித ராட்டி ரன்றுமைப்
பொருவி றாது போக்கினர். (18)

பொருவி லத்தி னபுரம்
விரைவின் மேவி வென்றிசால்
திருத ராட்டி ரன்றனக்
குரைசெ யாவு மோதினன். (19)

அறத்தின் மைந்த னதியோர்
திறத்தி னன்பு செய்கென
வுறுத்தி நூற்று வர்க்குளக்
குறிப்பி னேடு கூறினன். (20)

அண்ண லக்கு ரூரன்மீண்
டுண்ணி றைந்த வுவகையா
லெண்ணி முற்று மிவையெலாங்
கண்ண னேடு கழறினன். (21)

வேறு

இன்ன வாறெழுகு நாளிடைக் கஞ்சன தில்லின்வாழ்
*மின்ன னிருவர் தந்தைதனி லவையின் மேவுரு
வன்னை சேவடியின் வீழ்ந்துயர் கஞ்சனை யாழியான்
மன்னு மாருயிர்கு றைத்தமை யாவும் வழங்கினர். (22)

அழுது நின்றிவை யுரைத்த வணங்கனை யார்தமைத்
தழுவி யன்பினி னுடன்கொடு போயவர் தந்தைபாற்
றெழுது ரைத்தலும் வெகுண்டிரு கண்ணழ றாண்டிட
வெழுக நம்படை யெனப்புனை தேர்மிசை யேறினன். (23)

* மின்னின ரிருவர் (பா. பே.)

வென்றி கூர்தரு சராசந்த னுமடல் வேலினு
னென்று சேனையிரு பானெடு மூன்றக் குரோணியு
மன்றன் மாடமது ராபுரி யிஞ்சிவ ளைத்தலுங்
கன்று நெஞ்சமொடும் யாதவர் சிந்தை கலங்கினர். (24)

கலங்க லீவிரென வண்டுள வோனெதிர் கைகவித்
தலங்கல் வேலுடை யலாயுத னோடெழு காலையிற்
பொலங்கொள் வானிலிடை நின்றிரு தேரெதிர் போதலு
மிலங்கு மைம்படையொ டெய்திய தேர்மிசை யேறினன். (25)

ஏறி னர்களிரு பானெடு மூன்றக் குரோணியு
நூறி னர்குருதி யாறெழ யாவு நுணுக்கினர்
சீறி னரெதிர் சராசந்தன் றேரிணை சிக்கயார்த்
தாறி னருடன் விடுத்தகன் மாநக ரெய்தினர். (26)

இன்ன வாறுபதி னேழ்முறை யாடம ரேற்றலு
மன்னு போர்வயவர் தேர்பரி யானை மறித்திடத்
துன்னும் வெங்குருதி வெண்ணிண மூளை சொரிந்திடக்
கன்னி யந்துளவ மாலிரு கட்கடை சேந்தவே. (27)

வேறு

வென்வேற் காளைச் சராசந்தன்
விரைவி னோடிக் கிரிவிரசந்
தன்னிற் புகுத மிகத்துரந்து
தண்டா மரையாள் புணர்மார்பன்
கன்னிக் கமுகஞ் சூன்மிடற்றிற்
கயவாய் வாளைக் கன்றுகளுஞ்
செந்நெற் கழனி சூழ்கிடந்த
மதுரை நகரிற் சென்றடைந்தான் (28)

கூந்தற் கமுகி விடைச்சாய்ந்த
　　கொம்மைக் குடக்காய் முடத்தெங்கிற்
பாய்ந்து கடுவன் மந்தியொடுந்
　　துயில்கூர் மதுரைப் பதியதனி
லேந்த லின்புற் றிருக்குநா
　　ளிசைதேர் மகதி யாழ்முனிவன்
போந்து கால வயவனெனும்
　　புலிப்போத் தனையா னெடும்புகல்வான். (29)

தேன்றேய் பவளச் செங்கனிவாய்
　　தொறுவர் மகளிர் நலந்தினைத்த
வூன்றேய்த் திகிரிப் படைக்கண்ண
　　னுடற்றும் வெம்போர்ச் சராசந்தன்
மான்றேர்ப் படையா லழிந்தனவீ
　　மலையி னுற்று னெனமகிழ்ந்து
மூன்று கோடிப் படையொடும்போய்
　　மதுரை நகர முற்றினான். (30)

கன்னிப் புரிசை மதுரைநகர்
　　வளைந்த கால வயவனெடுந்
துன்னிச் சமரேற் றிடவெய்தித்
　　துலங்கு வடிவேற் கராசந்த
னின்னே யெய்தி யெதுகுலத்துக்
　　கிறைவர் தம்மைக் கைப்படுத்துக்
கொன்னே யீசற் குறுபலியாக்
　　கொடுப்ப னெனமா லிவைசெய்தான். (31)

முகிலிற் கரிய மணிவண்ணன்
　　மயனுன் முழங்கு கடலகட்டி
னகல மீராறி யோசனைத்தாய்
　　நிகழ்த்து நீள மத்துணைத்தாய்

பகலோன் காப்ப வெயிலெறிக்கும்
பைம்பொன் மாட மறுகுடுத்த
நகர மொன்று துவரையெனும்
பெயரா னன்கி னமைப்பித்தான். (32)

சிந்தா மணியு மிருநிதியுஞ்
சிறந்த சுதன்மை மண்டபமுங்
கொந்தார் சினைய வைந்தருவுந்
துவரை நகரிற் குடியிருப்பத்
தந்தான் குலிசன் மாயையினுன்
மாயோன் மதுரை தனிலமரு
மந்தா ரரச ருணராமற்
றுவரை யதனி லமர்வித்தான். (33)

இமையாக் கருங்கண் மயிலால
வண்டுஞ் சுரும்பு மிசைபாடக்
குமரி யன்ன முகையவிழ்ந்த
கொழுந்தா மரையி னரசிருக்குந்
தமரத் திரைக்குண் டகழுடுத்த
மதுரை காக்கத் தாமரைக்கண்
ணமலன் வெள்ளை மேனியனை
வைத்தாங் கமரேற் றெழுந்தனனுல். (34)

கால வயவ னுடற்றுசமர்க்
காற்ருன் போலக் கருந்துளவ
மாலோன் மான்றே ரிழிந்தோடி
மலையின் முழையிற் கண்டுயிலும்
ஞாலம் புகழு முசுகுந்தன்
பின்போ யொளிப்ப நனிதொடர்ந்து
*சால முழையி னிடைப்புகுந்து
துயிலு மரசன் றனையுதைத்தான், (35)

* சாலுமுழையினிடை புகுந்து (பா. பே.)

ஆலக் கருஞ்சே றமிழ்திறுக
　　ரண்ணல் விழிப்ப *வுடலிழந்த
கோலச் சுறவக் கொடியுயர்த்தக்
　　குரிசில் போல வவுணனுயிர்
வேலிற் படுத்த முசுகுந்தன்
　　விழித்துச் சிறிது நோக்குதலுங்
கால வயவ னுடன்முழுதுங்
　　கனன்று சாம்ப ராயினனால். (36)

பூந்தா தருந்திப் பெடையினெடும்
　　பொறிவண் டுறங்கும் புனைமலர்த்தார்
மாந்தா தாவின் மகனென்பேர்
　　வாவு மான்றேர் முசுகுந்த
னேந்தா லுன்ற னருள்பெறுவா
　　னெண்ணி யோகத் துறங்கினேன்
சார்ந்தா யென்றன் புன்கணெதிர்
　　தளரா முத்தி தருகென்றான். (37)

தெவ்வூன் சுவைத்து நிணம்பருகி
　　குருதி தேக்கி தசைகுதட்டி
வெவ்வாய் சிவந்த வடிவேலோய்
　　மறுமை யதனில் வேறுருவ
ரோவ்வா மறையோர் குலத்தினின்வந்
　　துதித்த வேத மொருநான்கு
மெவ்வா னவருந் தொழுதேத்து
　　மீசன்†பாதம் பெறுதியால். (33)

என்று வயவான் முசுகுந்தற்
　　கினிய வரமொன் றீந்தருளிக்
குன்ற மெடுத்து மழைதடுத்து
　　நிரைகாத் தருளுங் கோவிந்தன்

*உடலழிந்த. (பா. பே.) † ஈசன் பாதம் பெறுகுதியால் (பா. பே.)

பொன்றும் புரிசை விளிம்புடுத்த
மதுரை நகரிற் புகுந்துமுன்னோன்
றன்றாள் வணங்கி யவனோடுந்
துவரை நகரஞ் சார்போழ்தின். (39)

உருமுக் கதிர்வேற் சராசந்த
னுலப்பில் கடலந் தானையொடுஞ்
செருவேற் றதரி னிடைவளைப்பச்
செங்கட் கரியோ னிராமனொடும்
வெருவந் தோரிற் பிரவருண
கிரியி னொளிப்ப வெகுண்டேகி
யரில்சூழ் வெற்புச் சூழ்போத
வழலுந் தெறுதி யூட்டினன். (40)

வழங்கற் கரிய யோசனையோர்
பதினொன் றுயர்ந்த வரைநின்றுங்
குழங்கன் மாலை சுவற்புரளப்
புலிப்போத் தென்னக் குப்புற்றுத்
தழங்கு முரசங் கண்டுயிலாத்
தகைவீற் றிருக்குந் துவாரகையிற்
செழுந்தா மரைக்கட் டிருநெடுமா
றம்மு னோடுஞ் சென்றடைந்தான், (41)

செந்தா மரைக்கட் டிருநெடுமா
றம்மு னோடுஞ் செழுந்தழலின்
வெந்தா னென்னச் சராசந்தன்
மேதி யுழக்கிப் பூந்தடத்திற்
பைந்தாட் குவளை மலர்மேய்ந்து
பலவி னீழற் கண்டுயிலுங்
கொந்தார் பொழில்சூழ் கிரிப்பிரச
மென்னு நகரிற் குறுகினன், (42)

கரைகொன் றிரங்கு நதிமருங்கிற்
　　கழுத்து மிடைந்த சூற்கமுகம்
விரைகொப் பளிக்கு நறும்பாளை
　　விரிக்கு முயரா னத்தமென
வுரைசெய் நாடு தனிபுரக்கு
　　மொளிர்வேற் செங்கை யிரேவதனு
மரசன் மகளை விதிமுறையால்
　　வெள்ளைமேனி யவற்க ளித்தார். (43)

வயலி லலவன் கிளைத்தகுழி
　　தேமாங் துணரின் வாய்மடுத்துக்
குயிலுஞ் சுரும்புங் குடைந்துதிர்க்குங்
　　குளிர்பூந் தாது திடர்ப்படுத்துஞ்
செயிர்தீர் விதர்ப்ப நாடளிக்கு
　　நீதில் சீர்த்தி விட்டுமக
னயில்சேர் நெடுங்கட் டன்மகளைக்
　　கண்ணற் களிப்பா னமைவுற்றான். (44)

தந்தை யோடு முருக்குமணி
　　தடஙு கழித்த வயில்வேற்கட்
செந்தார்ப் பசிய கிள்ளைமொழி
　　யுருக்கு மணியைச் சிசுபால
னந்தா ரகலம் புணர்ந்திடயா
　　மளிப்ப தல்லா லாயனுக்கின்
றெந்தாய் கொடுத்த றகாதென்ன
　　மறுத்த விளம்பூங் கொடிகேட்டாள். (45)

தமைய னுரைத்த வாறனைத்துஞ்
　　சாற்றித் தன்பூங் காவகத்தி
னிமைய மீன்ற பூங்கொடிதன்
　　னிருதாள் வழுத்த றலைக்கிடா

யமைவ லாங்குற் றெனைக்கவரா
    னென்னி லழல்வாய்ப் புகுவனெனக்
கமழ்பூங் குழலோர் மறையோனைக்
    கண்ணற் குரைத்தி யெனவிடுத்தாள். (46)

சுடுபொற் றகடு தூக்கியெனத்
    துணர்த்த கைதைக் காடுடுத்த
கடல்சூழ் துவார புரியெய்திக்
    கண்ணற் குரைப்ப மகிழ்சிறந்து
மிடல்சேர் வென்றிப் பனைக்கொடியோ
    னேடும் விரைமான் றேர்கடவிக்
கொடிவான் றெடுகுண் டிவபுரத்துக்
    குளிர்பூஞ் சோலை மருங்கணைந்தான். (47)

தரியா ரேத்துஞ் சராசந்தன்
    * நகைசேர் தந்த வக்கிரவீள்
பொருவேல் வென்றிச் சாலுவனே
    முதலவரசர் பொங்குளைய
விரைசேர் மான்றேர் சிசுபாலன்
    றனக்கு விழைவின் மணமுடிப்பான்
பரிவி னெடுங்குண் டினபுரத்திற்
    † சேனை யோடும் படர்ந்திருந்தார். (48)

அன்ன காலை தூதுசென்ற
    மறையோன் முழுது முலகளந்தோன்
மன்னு நமது கோநகர்சூ
    ழுந்தண் சோலை மருங்கிறுத்தா
னென்ன மகிழ்ந்து கூறுதலு
    மிலவத் துவர்வா யுருக்குமணி
மின்னு நகைவேற் றந்தையொடு
    * மன்னை யோடும் விளம்பினளால். (49)

---

* நகைசேர் தந்த வக்கிரன்றீப் (பா. பே)
† சேனை யோடும் படர்ந்திருந்தார் ஷெ.
* அன்னை யோடும் விளம்புவாள் ஷெ.

எண்டோண் முக்கட் கவுரிபத
 மிறைஞ்ச நமது நகருடுத்த
விண்டோய் பொழிலின் மேவுதற்கு
 விடைநீ ரளித்தி ரெனலோடுந்
தண்டார் வேந்தன் மனையோடுந்
 தழீக்கொண் டருவ க் கருந்தடங்கண்
வண்டார் கோதை யாயவெள்ளம்
 பரவச் சோலை மருங்கணைந்தாள். (50)

கண்டோ ருள்ளங் கொடுமணங்கொண்
 டெழுந்து வீங்குங் கதிர்முலைப்பூந்
தண்டா மரையாள் கண்ணனிரு
 தடந்தோள் புணர வளித்தியெனப்
பண்டோய் குதலை மொழியதனாற்
 பழிச்சிக் கவுரி பதம்போற்றி
வண்டாய் சோலை மாதவிப்பூம்
 பந்தர் மருங்கு தனிநின்றாள். (51)

காட்சி

தண்ணங் கமலத் திருக்குவளை
 மலர்ந்து குமுத மலர்தாங்கி
விண்ணங் குடிவாங் கிடவீங்கும்
 விரைமென் கோங்க மலர்முகிழ்த்து
வண்ண மலர்ப்பூம் பசுங்கொம்பர்
 வண்டார் சோலை மருங்கணைதல்
கண்ண னுள்ள முவகையொடு
 மிறும்பூ தெய்தக் கண்ணுற்றான். (52)

ஐயம்

பொன்னங் குடுமி நெடுவரையோ
 பொறிவண் டிமிராத் தாமரையோ
பின்னற் றிரைதாழ் பாற்கடலோ
 வங்கண் விசும்போ பேருலகோ

மின்னுங் கதிர்மா மணிச்சுடிகை
நாக ருறையும் வியன்பதியோ
தன்னந் தனியிங் கெனையாள
நின்ற ருறையுந் தனியிடமே. (53)

### தேற்றம்

பொன்செய் புலவர் கைசெய்து
புனிற்றுக் கதிரின் வெயிலோட்டி
மின்செய் பசும்பொற் கலன்சுமந்து
நாண நுதலின் வெயர்வுறைப்பக்
கொன்செய் வேற்க ணிமைப்பநிழல்
தோன்ற விங்குக் குறுகியதாற்
றென்செய் வரிவண் டுழல்கோகை
பூமா தேன்னத் தெளிவுற்றான். (54)

வண்டுஞ் சுரும்பு நறுந்தேனு
ஞிமிறும் வழங்கு கருங்கூந்தற்
பண்டோய் குதலைச் செங்கனிவாய்ப்
பரவைத் தடங்க ணருணோக்கந்
தண்டா தோங்குங் காமநோய்
தீர்க்கு மருந்தாய்த் தளராமல்
கொண்டே னுவி வேனில்வேள்
கொள்ளா தெளிதி னிறுத்தியதே. (55)

### துணிவு

ஆற்ற லுடைவெங் கொடுங்கூற்று
மலைவாய் விடமுங் கொலைகற்ப
மாற்றம் புகல்வ போலிமையா
வுயிர்மே னடக்கும் வரிநெடுங்கட்

கோற்றேன் குதலைப் பேதையொடுந்
தமியே னுள்ளக் குறையனைத்துஞ்
சாற்றிப் பொன்னஞ் சுணங்கணிந்த
தடமா முலைமேற் றழுவுதுமே. (56)

கிள்ளை யேந்திக் கிளைநரம்பி
னடந்து சிவந்த காந்தளங்கைத்
தெள்ளா ரமுதே மலர்த்திருவே
தேனே கனிந்த செழுங்கனியே
கள்ளக் கருங்கட் குடங்கையாற்
றமியே னுயிரைக் கள்ளுநர்போ
லள்ளி யள்ளி யருந்துவதிங்
காகா துன்பே ரறிவினுக்கே. (57)

முலையிற் றிரண்ட வரிப்பந்து
முகிழ்மென் காந்தட் கரத்தடித்து
மிலகு மணிப்பொற் கழங்கெறிந்து
மெறிநீர்த் தண்ணங் கயங்குடைந்துந்
திலக நுதலார் குழுவினொடு
மாடா தம்பொற் றிருவனையாய்
கலைவல் லுநர்திட் டோவியம்போ
லின்ற வாறென் கழறுகவே. (58)

வண்டு

வளியூ டியங்கா தறநெருங்கி
வருவெம் முலையின் செம்மாப்பு
மளிய மருங்கின் வறுமையுநீ
ரந்தோ கண்டீ ரிலைபோலுந்
தளவ மூரற் கருங்குழன்மேற்
றணவா திருந்தீர் மணிவண்டீர்
களிகொ ணறவம் வாய்மடுத்த
மயக்கங் கொல்லோ கழறுகவே. (59)

பண்ணார் குதலை யந்தீஞ்சொற்
படைவே லுண்கட் படர்முலையாய்
தண்ணார் பசிய பொலம்பொகுட்டுத்
தடந்தா மரைநின் முகம்போல்வான்
கண்ணீர் வார வொருதாளி
னின்று கதிரோன் றனைநோக்கித்
தெண்ணீர்க் கயத்து ளுடோறு
முயலா நிற்குஞ் செய்தவமே. (60)

விழைந்தோர் கொம்மை முலையல்லால்
வேற்றோர் மருந்தி னமையாத
கழிந்த காமப் பிணியகலக்
கனிவாய்த் தம்பன் மருந்தருந்திப்
பிழிந்த தேற லனையமொழிப்
பேதைத் தடந்தோ ணலனுகர்வா
னெழுந்த வுள்ள மிவ்விடமே
சேர்தற் கியைந்த விடமென்றான். (61)

துளிகொ ணறவங் கொப்பளித்துப்
பொன்னந் தாது துதைந்தாடு
மளியி னொடு மலர்முகத்த
* வலங்கு சினைய மாதவியே
நளிகொ ளந்தண் சோலையினீ
புகலென் றடைந்தேன் மிகநடுங்கி
யெளிய னுவி துயராமற்
காத்த லினக்கே யியல்பென்றான். (62)

உருவ மருங்கி லுள்வாங்கத்
தேய்த்துக் கரிக ளொட்டினெடுஞ்
செருவேற் றெழுந்த திரண்முலையை
மறையா தணங்கென் றைமுறு

* வலகில் சினைய மாதவியே (பா. பே.)

மருள்போ யொளிப்ப விமைத்தனங்கண்
வாளி யாயின் வருந்தாம
லருள்நோக் களித்த மதர்நெடுங்கண்
புதைத்த லென்மே லன்பேயோ. (63)

நெஞ்சொடுபுகறல்

கன்னிப் பெடைவண் டினஞ்சூழ்ந்து
களிக்குஞ் சுரும்பர் தாதாடும்
புன்னைப் பொதும்பர் நெடிதுயிர்த்துப்
புலம்புற் றிருக்கு மடநெஞ்சே
மின்னுக் கொடியி னுசிமருங்குல்
வெள்வே னெடுங்கண் வேய்த்தடந்தோ
ளன்னப் பெடையின் செங்கனிவா
யமுத மென்னு டருமென்றான். (64)

கனைவெண் டிரைக்கை பலநீட்டி
யுலக மனைத்துங் கவர்ந்தோடித்
துனைவிற் பெயருங் கடலினையோர்
துகளான் மறிப்பப் புந்தியிடை
நினைதல் போலு மீங்கிவர்தங்
காமக் கடலை நிறையினெடும்
புனையு நாணல் யான்றடுப்ப
நினைத லென்னப் *புகலுற்றாள். (65)

கொண்ட விரகத் தடங்கடற்கோர்
புணையாய்க் குழையு முளந்தேற
விண்ட மலரி னறவிழுக்கி
விழ்ந்து மெழுந்துஞ் சூழ்போந்தும்
வண்டுண் கோதை மதிமுகத்தின்
மலர்ந்த குமுத நாணு
முண்ட நிலவுக் கதிர்தெவிட்டி
யுமிழ்ந்தா லென்ன நகைபுரிந்தாள். (66)

*புலம் புற்றாள் (பா. பே.)

வருந்துந் துன்ப விருளகற்றி
　　வயங்கு மமரர் கடைந்துமுன
மருந்து மழுதிற் கையறவுற்
　　றழியு மாவி தளிர்ப்பிக்குஞ்
செருந்தி கமழும் பூங்கோதை
　　தெய்வக் கமல முகத்தரும்பி
முருந்தும் வெள்ளை நிலாக்கொழுந்து
　　முத்தும் பொருவு முகிழ்நகையே. (67)

ஊன்றேய்த் தெடுத்து நிணம்பருகி
　　யொளிறு வடிவேற் றடங்கண்ணாள்
தேன்றேய்த் தெடுத்த செங்கனிவாய்த்
　　தேற லெளிதிற் பெற்றமையான்
மான்றே ரிரவி கெடவிமைக்குஞ்
　　சிந்தா மணியும் வளர்நிதியுங்
கான்றேய் தருவு மிந்நிலத்தின்
　　முயன்றாற் கடிதிற் பெறலாமே. (68)

பெற்ற முயர்க்கு முத்தலைவேற்
　　பெம்மான் சடைக்காட் டிடைப்பயின்று
நெற்றித் தனிக்கட் டழலருகு
　　நின்று தவநீ புரிந்தாலுங்
கற்றைக் கதிர்கான் றொளிர்புனிற்றுத்
　　திங்காள் கமல மதிமுகத்துக்
கொற்ற வடிவேற் றடங்கண்ணா
　　*ளுதல்போ லிருத்தல் கூடாதே (69)

ஐதேய்ந் தல்குற் கலைதிருத்தி
　　யம்மென் முலைதாழ் வடஞ்சேர்த்தி
மைதாழ் கூந்தல் கமழமுடித்
　　தயில்வே லுண்கண் மையெழுதி

* நுதல் போன் றிருத்தல் கூடாதே. (பா. பே.)

வெய்தா முன்போற் கைசெய்தே
 னையுற் றுள்ள மெலிவுறேல்
பைதா முல்குல் வேய்மென்றேட்
 பவளத் துவர்வாய்ப் பசுங்கொடியே (70)

களவுங் கொலையும் பயின்றவிழிக்
 கனியி லமிழ்திற் கோற்றேனி
லளவுந் தீஞ்சொற் படர்முலையா
 ளழகு பூத்த முகம்போலக்
குளனி னதியிற் றடஞ்சுனையில்
 கண்ட துண்டோ குளிர்வனமேர்
தளவம் பொதிந்த குமுதமொடுங்
 கழுநீ ரலர்ந்த தாமரையே (71)

பரிவுற் றுரைப்ப நுதல்பசலை
 பூத்த தென்சொல் பணிமொழியாய்
பிரியே னின்னைப் பிரியிலுயி
 ருய்யே னென்னுப் பெய்வளையைப்
புரவித் தடந்தேர் மிசையேற்றிக்
 கண்ணன் போரேற் றிடுமரசர்
வெருவ வரிவெஞ் சிலைகுழைத்து
 தம்மு னேடும் விரைந்தகன்றுன் (72)

குறுகார் சேனை முற்றுத
 குடுமி யெயிற்குண் டினபுரத்து
மறுகி னெதிர்ந்த சராசந்தன்
 முதல வரசர் வலிதொலைத்துக்
கறைவெண் மதிய முதுகுரிஞ்சும்
 புரிசை வாயில் கழிந்திடலு
மறைபொற் கழற்கா லுருக்கு மனே
 ரக்கு ரோணி யொடும்வளைந்தான் (73)

செருவேற் றெழுந்த படையனைத்துந்
    திருகு சினத்த வலாயுதன்போ
யுருமே றன்ன பகழிகளா
    னூழி லாட்ட வுலகளந்த
கரியோன் பற்றி யுருக்குமனைக்
    கல்செய் தடந்தோ ளிணைவீக்கி
மருவுற் றிருக்கு மலர்ப்பைந்தார்ப்
    பங்கி வாளா லரிந்தெறிந்தான் (74)

வெள்ளை மேனி யலாயுதனும்
    விரைத்தேன் றுவலை யளிபுளிற்றுப்
பிள்ளைக் கருத்திப் பின்னுகரும்
    பிணையன் மாலைக் கருங்குழலுந்
தொள்ளை யறிவி னுருக்குமன்றன்
    றுவி தொலையே லெனவுரைப்ப
வள்ளல் விடுத்துத் தம்முனொடுந்
    துவரை நகரின் வந்தடைந்தான் (75)

மாசு பூத்த வன்னெஞ்சின்
    மறங்கூர் வென்றி யுருக்குமனுந்
தேசு பூத்த திருநெடுமா
    றன்னை யமரிற் செகுத்தல்லா
லாசின் மதிற்குண் டினபுரத்தி
    னடையே னென்ன நாணினொடும்
போசு கடமென் றொருநகரம்
    புனைந்தாங் கதனில் வீற்றிருந்தான் (76)

தண்ணந் துளவோ னீகரில்லாத்
    தருமன் முதல வைவர்க்கும்
வண்ண வரிவினூற் றுவரை
    முதலா மறங்கொள் கவுரவர்க்கு

மெண்ணில் கினொர் யாவர்க்கு
முடங்கல் போக்க விரைந்தெழுந்து
விண்ணு டனைய *துவரைநக
ரதனின் விரைவி னெய்தினர் (77)

நந்த கோபன் வசுதேவ
னலங்கூ ரசோதை தேவகிதஞ்
சிந்தை மகிழ வியங்கறங்க
வல்லோர் தெரித்த நன்னாளிற்
சந்த மணிந்த பொம்மன்முலை
யுருக்கு மணியைத் தழல்சான்றாய்ப்
பைந்தார் துளவோன் மணம்புரிந்து
பசிய வேய்த்தோ ணலனுகர்ந்தான் (73)

வேறு

உருவத் தடமுலை யொண்டா மரையினள்
பருவக் கருமுகில் பனைவென் றிரள்புய
மருவிப் பொருசிலை மதனைப் பரிவொடு
கருவுற் றிடவெழில் கனிவுற் றனளே (79)

வான்றோய் நிலவுமிழ் மழவெண் பிறையெனச்
சான்றோர் மகிழ்வுறு நவிநா ளதனிடைத்
தேன்றோய் கனிநிகர் செவ்வாய் மடமயில்
ஈன்றாள் சிறுவனை யின்புற் றிடவே (80)

சம்பர னென்றுயர் தானவ னோடு
நம்பி பிறந்தமை நாரத னோத
வெம்புறு மாயையின் வெண்டிரை சிந்து
மம்பர மூடுற வள்ளியெ றிந்தான் (81)

* துவரை நகர் தன்னின் விரைவில் (பா. பே.)

அள்ளி யெறிந்திட வார்கலி விழும்
பின்னையை வாயிடை பெய்தகன் மீனை
வள்ளுறு தூண்டிலி னோர்வலை வாண
னெள்ளிநின் வவ்வி புவந்திது செய்வான் (82)

பவ்வநெ டுந்திரை யூடு படுத்து
வவ்விய மீனினை யவ்வலை வாண
னெவ்வமில் சம்பர னுக்கினி தீயக்
கொவ்வையி தழ்க்கொடி யங்கைகொ டுத்தான்
(83)

மாய ரதிப்பெயர் மங்கையம் மீன
மாய்கதிர் வாளி ன றுப்ப வகட்டின்
மேய விளம்பிறை போல விளங்குஞ்
சேயை யெடுத்தனள் சிந்தை களித்தாள் (84)

அச்சென நங்கை யகங்குழை வெய்தி
யுச்சியின் மோந்தமு தூற லருந்திப்
பச்சிள மேனிய பால கனைக்கண்
ணெச்சி லகற்றி யெடுத்து வளர்த்தாள் (85)

விழைவொடு கண்கவர் மெய்யெழி னம்பி
மழகதி ரென்ன வளர்ந்திடு கோலத்
தெழுதரு நான்மறை யாழ்முனி யெய்திக்
குழைபொரு கண்ணியொ டின்னவை கூறும் (86)

* திங்கள் முடித்திடு தேவன் விழிக்கே
யங்க மிழந்திடு காமனி னன்ப
னிங்கிவ னுகு மெனத்தனி யோதிப்
பொங்கிய நற்றவ மாமுனி போனான் (87)

* திங்களணிந்திடு தேவன் (பா. பே)

போயிறு நுண்ணிடை மங்கை புகுந்தே
சேயுறழ் மைந்தனை நின்று தெருட்டி
வேயுறு தோணல மேவுதி யென்னத்
தாயென வின்னுரை சாற்றி மறுத்தான் (88)

மறுத்தலும் வெண்பிறை * மாலையன் முன்ன
மொறுத்தவை கேட்டுள யாவையு மோதிச்
செறித்தவில் வேளென நெஞ்சு தெருட்டி
*நறைக்குழ லங்கவ னன்னல முண்டான் (89)

நம்பி கருப்புவில் நல்லிசை பாடுந்
தும்பிகொ ணாணின் வளைத்தெதிர் தோன்றி
யம்பென மென்மல ரைந்தும் விடுத்துச்
சம்பர னாவி தடிந்தன னன்றே (90)

இரதியொ டும்பிரத் துய்ம்மின னென்போன்
றிரிதரு தென்றலந் தேர்மிசை யேறிப்
பொருதிரை மேற்றுயில் புண்ணிய மூர்த்தி
மருவு துவாரகை மன்னின னன்றே (91)

வேறு

வண்டுவரை மாநகரி லிரதியொடும்
வந்தடைந்த மைந்தன் றன்னைக்
கண்டுருகி யுருக்குமணி கதிர்முலைப்பால்
வழிந்தொழுக கண்ணீர் வார
வண்டர்பிரான் முகநோக்கி யார்கொலிவ
னுனைப்போல்வா னறைதி யென்னப்
பண்டரும்யாழ் முனியெய்தி முன்னிகழ்ந்த
வாறனைத்தும் பகர்ந்திட் டானே (92)

*மாலயின் முன்னம் (பா.பே)
*நறைக் குழலங் கவனன்னல முண்டான் (பா. பே.)

மறைமுனிவ னுரைகேட்ட வுருக்குமணி
மைந்தனைமார் பொடுங்கப் புல்லிக்
கறைகெழும்வேற் கண்ணனெடுங் கதிர்முடிமோந்
திர நிரையைக்கண் களிப்ப நோக்கி
யுறையுநகர்க் கிளையோடு மாசனங்கள்
புகிழ்ந்தேற்ற வுலப்பி லாத
வெறிதிரைநீர்க் கடல்போல வெழுந்துவகை
பெருக்கெடுப்ப விருக்கு நாளின் (93)

தாரைவடி வேற்றடக்கை சத்திராச்
சித்தென்னுந் தரணி வேந்தன்
காரிருண்மேய்ந் தொளிவிரிக்குங் கதிரோனை
பணிந்தேத்தி யெட்டுப் பாரஞ்
சீர்கெழுசெம் பொன்னீனுஞ் சிமந்தகமா
மணிபெற்றுத் துவரை நண்ணி
பார்மகள்கேள் வனுக்களிப்ப மீட்டுமவன்
றனக்கிறைவன் பாலித் தானே (94)

சேட்டிளவெங் கதிரென்ன விருள்பருகித்
திசைவிளக்கிச் சிறக்குந் தெய்வ
மோட்டுயர்மா மணியதனைச் *சத்திரா
சித்தென்னு மூரி வேலோன்
றேட்டுணைபோல் வருதம்பி பிரசேனன்
கழுத்தினிடை துளங்க வீக்கி
வேட்டநினைத் தாங்கவனும் கானிடையோர்
கோளரிமேல் வெகுண்டு சென்றான் (95)

கொய்யுளைவாம் புரவியொடும் பிரசேனன்
பச்சிரத்தங் குடித்து வீழ்த்தி
வெய்யபகு வாய்மடங்கல் சிமந்தகமா
மணிகவர்ந்து விரைவி னேக

* சத்திரா சித்தனெனும் மூரிவேலா (பா. பே)

மொய்கெழுதோட் டிறற்சாம்பன் முடங்குளைவா
    ளரியாவி முடிப்பச் சீறிக்
கையிணையா லுடல்பிளந்து கதிர்மணிகொண்
    டுறுபிலத்திற் கடிது சென்றே (96)

வேல்கிடந்து குழைபுரட்டும் வெண்மதிபோன்
    றொளிர்முகத்து விரைமென் கூந்தற்
பால்கடந்து தேனினெடுந் தோழமைகொண்
    டிருந்தமொழிப் பசிய வேய்த்தோட்
கோலமுலைச் சாம்பவதி யினிதமருந்
    தொட்டிறனிற் குலவுஞ் செங்கேழ்
காலுமெழில் மணியதனைக் கதிரோனென்
    றையமுறக் கட்டி னானே (97)

ஈங்கிதனை யுணராமற் சத்திரா
    சித்துமுத லெவரு மாயோன்
றீங்குறவேற் பிரசேன னுயிர்செகுத்துச்
    சிமந்தகத்தைக் கவர்ந்தா னென்றுந்
தாங்கருவெம் மொழிகேட்டுச் சத்திரா
    சித்துமுதற் கிளைஞ ரோடும்
பூங்கமல மலர்க்கண்ணான் பிரசேனன்
    போனவழி துருவிப் போனான் (98)

ஆங்கவன்றன் வாம்புரவித் தடநோக்கிச்
    செலவயரு மதரின்பாங்கர்
விங்கியதோ ளரசனெடும் விரைசெல்வாம்
    பரியாவி விளிய நூறிப்
போங்கடுங்கண் வாளரியின் றடந்தோன்ற
    வவைநோக்கிப் போகு மேல்வைத்
தாங்கரும்வெஞ் சினமடங்க றனைநூறிச்
    செலுங்கரடித் தடமுங் கண்டான் (99)

கண்டமுதற் றடமொற்றி யருநெறியின்
விரைந்துசெல வயருங் காலை
விண்டபிலத் தாடுதடம் போகுதலும்
விரைகொழித்து நறவந் தூற்றுந்
தண்டுளவோன் மைத்தடக்கை சத்திரா
சித்துமுதற் கிளைஞர் தம்மை
மண்டுமிருள் செறிபிலத்தின் வாயிலின்வைத்
ததனூடு வல்லை சென்றான் (100)

நண்ணரிய பிலம்புகுந்திட் டாறிருநாள்
காறுமண்ண னண்ணு ளுக
வெண்ணரிய தமர்யாருந் துவரைநகர்
வந்தெய்தி யெண்டோண் முக்கட்
டண்ணிலவு கண்ணிபுனை கொற்றவைபொற்
றுமரைத்தாள் தாழ்ந்து போற்றிக்
கண்ணனுறு பகைமுடித்துக் கடிதெய்தத்
தமதுளத்திற் கடிது நோற்றார் (101)

சங்கிவர்க ளிவ்வாறு நோற்புழிமால்
பாதலத்தி னெல்லை யெய்தித்
தூங்கியபொற் றெட்டிறதனிற் றாக்குகதிர்
மணிநோக்கித் துணைவிற் கையால்
வாங்குதலும் வெகுண்டெய்திச் சாம்பவா
னெதிரேற்று மலைய வைய
னுங்கவனே டோரிருபத் தெட்டுநா
ளமராற்றி வாகை கொண்டான் (102)

வாகைபுனைந் திடுகண்ணன் முகநோக்கித்
தாமரைக்கண் மாயோ னென்ன
வோகையொடு முளத்தெண்ணி வலஞ்செய்து
பணிந்தேத்தி யுலவா வன்பிற்

பாகனைய மொழிச்சாம்ப வதியென்னுந்
தன்மகளைப் பரிவு கூர்ந்து
நாகமிசை நீடம்புரியு மண்ணலுக்கு
மணியோடு நல்கி னனே (103)

நல்கியபெண் மணியோடு நாகிளவெங்
கதிரென்னக் கதிர்க ணீட்டி
மல்கியபே ரிருடுருவு மணியோடு
மெய்தியவான் பிலத்து நீங்கி
யொல்குமிடைச் செந்துவர்வா யுருக்குமணி
யொடுங்கினரு ருவந்து போற்ற
வல்கருஞ்சீர்த் துவாரகையி னுய்பிழிந்தூற்
றிடுந்துளவோ னணைந்தா னன்றே (104)

ஓசையுயர் திசையளக்கு சத்திரா
சித்தென்னு முரவுத் திண்டோட்
டேசுறுமன்ன வன்கரத்திற் சிமந்தகமா
மணிதன்னைத் திருமா னல்கக்
காசறுவேத் தவைதன்னுட் கவிழ்தலையிட்
டரசனுளங் கவிழ்ந்து நாணிப்
பேசரிய பிழையுரைத்தெங் கண்ணனையா
மெனமிகவும் பேதுவுற் றுனே (105)

பெரியோர்க்குப் பிழைசெய்தோர் பிழையுடன்பட்
டுயிருய்தல் பெரிது மோரின்
மருவிசு மலர்க்கூந்தன் மகட்கொடுத்த
லாகுமென மனத்தி-னோர்ந்து
தரியாருன் பருகுவைவேற் சத்திரா
சித்தென்னுந் தரணிவேந்தன்
கரியோன்றன் கரம்பற்றி வேறிருந்தன்
பொழுகவிவை கழற லுற்றுன் (106)

வேறு

முத்தக முறிஞ்சுங் கொம்மை
முகிண்முலைப் பவளச் செவ்வாய்க்
கத்திகைக் கருமென் கூந்தற்
கணைப்புறங் கொடுக்கும் வேற்கட்
சத்திய பாமை தன்னைத்
தருவனீ கோடி யென்ன
வித்தக னுரைப்பக் கண்ணன்
மறுத்தனன் விழைவி னேர்ந்தான் (107)

குணில்பொரு முரசம் விம்மக்
குடவளை யலறி யார்ப்பக்
கணிதர்தேர்ந் துரைத்த நாளிற்
கண்ணனுந் தழல் சான்றாகத்
தணிவரு மழகு வாய்ந்த
சத்திய பாமை தன்னை
மணியெழு வளைய தோளா
வீரொடும் வழங்கி னானே (108)

கடல்வயி றுளைந்து பெற்ற
கவுத்துவ மணியிற் சேர்ந்த
படுகதிர்க் கற்றை காலுஞ்
சிமந்தக மணியைப் பண்பா
லுடல்சினத் திகிரி மாயோற்
குதவலு மண்ணன் மீட்டுந்
*தடமொளித் தொளிறும் வைவேற்
சந்திரா சித்துக் கீய்ந்தான் (109)

*தடமொழித் தொளிறும் (பா. பே)

நெய்த்திருள் கனிந்த கூந்த
 னேர்வழக் கறுக்குஞ் செவ்வாய்ச்
சத்திய பாமை யம்மென்
 றடமுலை ஞெமுங்கப் புல்லி
மத்தமும் பகலும் விள்ளா
 நறைகமழ் துளவத் தண்டார்
வித்தக னுரையு நாளிற்
 புகுந்தமை விளம்ப லுற்றும் (110)

வலம்புரித் தாமம் வேய்ந்த
 சுயோதனன் வஞ்ச மெண்ணி
யலங்கல்வே லைவர் மாழ்க
 வரக்கறை யெரித்தல் கேளா
வலம்பொரு தடந்தோட் கண்ணன்
 றம்முனோ டியர்தே ரேறிச்
சலஞ்சல மலறி யார்ப்பத்
 தருமன்மாட் டெய்தி னானே (111)

தருமன்மாட் டிராம னோடுந்
 தாமரைப் பொருவுஞ் செங்கட்
டிருமறு மார்ப னெய்திச்
 சிறப்புடன் வாழு நாளில்
கிருதவன் மாவி னோடுங்
 கிளர்ந்தசி ரக்கு ரூரன்
வருசதத் தன்னு வாவைத்
 தழீயினன் வழங்க லுற்றான் (112)

பைத்தபாம் புறழு மல்குற்
 சத்திய பாமை யென்னுங்
கொத்தலர் வேய்ந்த பைம்பொற்
 கோதையை நினைக்குக் கூறி

மைத்தவழ் கரிய மேனி
மாயனுக் களித்த வெய்ய
சத்திரா சித்தைக் கொன்று
தகைமணி கவர்க வென்றான் (113)

என்றலுங் கங்குற் பானுட்
டகர்ந்தவ ளிருக்கை தன்னிற்
சென்றுவேற் சத்தி ராசித்
துறங்குழிச் சினவு வைவாள்
பொன்றவழ் தடாறு நீக்கிப்
புனைமுடி தடிந்து கோடி
மின்றவிழ் மணியை வவ்வி
மீண்டுதன் னிருக்கை சேர்ந்தான் (114)

கந்தடு புழைக்கை நால்வாய்க்
கடாக்களி றனைய சிற்றத்
தந்தையைக் கொன்ற மாற்றஞ்
சத்திய பாமை கேளா
வெந்திரத் தயிலத் தோணி
யிட்டழு திரங்கி மாழ்கி
யந்தில்வண் டுளவோன் மேவு
மத்தின புரத்திற் சார்ந்தாள் (115)

அத்தின புரத்தை யெய்தி
யாம்பலங் குழல்வாய் வைத்த
மைத்தவழ் கரிய மேனி
மரகத வண்ணன் பொற்றாள்
கைத்தலத் திறைஞ்சி யேத்திக்
கண்ணிணை மாரி கால
முத்தக முரிஞ்சும் பொம்மன்
முகிழ்முலை மொழிய லுற்றாள் (116)

எந்தையைக் கங்குற் பானு
ளியற்சதத் தனுவா வெய்தி
மைந்துடை வாளிற் செம்பொன்
மணிமுடித் தடிந்தா னென்னப்
பைந்துழாய் முகுந்தன் சீறிப்
பனைக்கொடித் தோன்ற லோடும்
வெந்திறல் மான்றே ரேறி
விரைந்துவண் டுவரை புக்கான் (117)

மழைநிற வண்ணன் சீறி
வந்தன னென்ன வஞ்சி
யழலவிர் மணியை யக்கு
ரூரன்பா லளித்துத் துன்பந்
தழைசதத் தனுவா வெய்தித்
தாவில்வெம் புரவி மேல்கொண்
டுழையர்தேர் வுருது நூற்றெட்
டியோசனை விரைவிற் போனன் (118)

மிதுலைமா நகரின் பாங்க
ரெய்தலுங் குதிரை வீழ
வதிர்பொலன் கழற்கால் சேப்ப
வாங்கவ னோட னோக்கி
மதுவிரித் துளவத் தாரோன்
வலங்கொழு நேமி தூண்டிச்
சததனு வாவின் பைம்பொன்
மணிமுடி தடிந்திட் டானே (119)

காய்ந்தெரி கவிழ்க்குஞ் செய்ய
கதிர்மணி யவன்பா லின்மை
பாய்ந்துவண் டுளவோன் மீண்டு
தம்முனுக் கறியக் கூறி

வியந்ததன் மாமன் றன்னை
விதிமுறை யிமத் தேற்றித்
தேய்ந்தநுண் ணுசுப்பி னுளைத்
தேற்றிவெந் துயரந் தீர்த்தான் (120)

எரிமணி கவர்ந்து கண்ணன்
கரந்தன னென்ன வெண்ணி
பொருகுழை யொருவ னம்பொ
னுயர்மதின் மிதுலை யெய்தி
யரவவெங் கொடியி னேனை
யாற்றலங் கதையின் விஞ்சைப்
பருவமோர் மூன்றின் வல்லோர்
வியப்புற பயிற்று வித்தான் (121)

கரியபைம் புயல்போன் மேனிக்
கண்ணனுக் கஞ்சி வெய்திற்
கிருதவன் மாவு மக்கு
ரூரனுங் கேடில் சீர்த்தித்
திருவளர் காசியெய்த
யொன்னலர் கொடித்தேர்த் தானை
மருவரும் துவரை மூதூர்
மறைவறந் திட்ட தன்றே (122)

மழைவளஞ் சுரத்தி லின்றி
யிருத்தலும் மதிநூற் றேர்ச்சிக்
கிழவரைக் கண்ணன் கேட்ப
வின்னணாங் கேடில் காசிப்
பொழிபுயல் வறத்த றன்று
லங்நகர் புரப்போன் கேள்வித்
தழைதரு சுவர்க்கற் கூவித்
தன்மக டன்னையி ந்தான் (123)

காந்தினி முறுவன் மாந்திக்
கலைபயில் சுவற்க னென்னும்
வேந்தர்கோன் மேய வாற்றல்
விண்மழை பொழிந்த தன்னே
ஏந்தெழில் புதல்வ னுகு
மிசைபெறு மக்கு ரூரன்
போந்திடிற் பெய்யு மென்ன
வொற்றரிற் புகுவித் தானே (124)

மைத்தகார் பொருவு மேனி
வள்ளலுக் கக்கு ரூரன்
கைத்தலத் தமைந்த சோதிக்
கதிர்மணி வழங்க னேக்கி
யித்தகை மணியை நீயே
கோடியீ தீன்ற செம்பொன்
சத்திய பாமைக் கீதி
யென்றனன் ருமவேலான் (125)

*காலையிற் குணபா லேந்திற்
கமலம்வாய் வீழ்ந்து தோன்றுங்
கோலநன் மணியின் செய்தி
வண்டுமல் குழங்கன் மாலைப்
பால்புரை மேனி யண்ண
லையுறும் பரிவு தீர
வோலையிற் போக்கி வல்லே
யழைத்துட னுறைந்தா னன்றே (126)

பார்புகழ் தரும னுதி
யைவரும் பவளச் செவ்வா
யேர்கிடந் துறங்கி வீங்கு
மிளமுலைப் பணைனொண் மென்றோட்

*காலையிற் குணபா லேகிற் கமலம் (பா. பே.)

டார்வயி ருர்ந்த கூந்தற்
றுரோபதை தன்னை யன்பா
லோரொரு பருவம் புல்லி
யன்புட னுறையு நாளில் (127)

நிரைகவர்ந் தெயின ரேக
நெடுஞ்சிலை யெடுக்கப் பார்த்த
னரசன துறையு ளெய்த
வம்பலைத் தொழுகு வேற்கட்
டுருபதன் மகளை நோக்கி
யாழ்முனி சொற்ற துன்னிக்
கரையெறி கடவுட் டீர்த்த
மாடுவான் கடிதிற் போனான் (128)

கங்கைநீ ராடு மேல்வை
யுலூபியைக் கலாணி னுக்கி
யங்கலும் மேனிச் செவ்வா
யணிமுலைப் போக மாந்திச்
சிங்கவே றனைய வெற்றி
மைந்தனைச் சிறப்பி னீன்று
தங்குபா தலத்தி னின்றுந்
தமிழ்தெரி மதுரை சார்ந்தான் (129)

சித்திராங் கனையைக் காணாச்
சித்திரப் படத்திற் கோட்டி
மத்தரில் விசய னெஞ்ச
மருளலும் வழுதி கேட்டு
முத்தவெண் முறுவற் கொம்பை
முழங்கெரி சான்ற தாக
வித்தகச் சிலைவல் லாற்கு
வியப்பொடு மளித்தானன்றே (130)

துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த்
துளிமுகி லனைய கூந்தற்
செப்பிணைத் தன்ன கொங்கைத்
திருநல மினிது மாந்தி
வெப்பிர வாகு தன்னை
*யின்றுவில் விசயன் வல்லே
மைப்புய றவழு மாடத்
துவரையின் மருவி னானே (131)

அருமறை யுரைத்த முக்கோற்
பகவனா யடைத லேக்கி
யொருகுழை யொருவன் வேற்கட்
சுபத்திரை யென்று மொப்பில்
திருவினை யன்னோர்க் கேவல்
செய்தியென் றுரைத்த காலைக்
கருமுகி றம்மு னோடும்
விழவுகண் ணுறுவான் போனான் (132)

மற்றடந் தோளான் செங்கை
†யிரண்டினுண் வடிம்பு தாக்கும்
விற்றழும் பதனை நோக்கி
யாரைநீ விளம்பு கென்னப்
பொற்றதா மரையின் மேவும்
பொங்கிள முலையாய் வெய்தாய்க்
குற்றமில் குமரி யாடக்
குறுகிய விசய னென்றான் (133)

நாணொடு மெருத்தங் கோட்டி
நகைமுகம் விரிந்து நல்கி
பாணிகர் குதலைச் செவ்வாய்ப்
படர்முலை நிற்ற லேக்கிப்

---

* யீன்ற வில்விசயன் (பா. பே.)
† இரண்டினால் வடிம்பு (பா. பே.)

*பூணுலாய்க் கிடந்த தோளான்
பொற்றொடித் தளிர்க்கைப் பற்றிச்
†சேனுய ரமர ரோடுங்
கண்ணனவ் வழியிற் சேர்ந்தான் (134)

ஆறறி புலவர் நன்கின்
வளர்த்திடு மழல் சான்ருக
நாறிருங் கூந்த றன்னை
விசயனுக் கினிது நல்கி
யூறுதேன் பிலிற்று நொச்சி
பூவுதி ரிருளி னெல்லைச்
சாறயர் நகரி னீசற்
றெழுதுதம் முன்னேற் சார்ந்தான் (135)

கொடிநெடுந் தடந்தே ரேறிக்
கோற்றொடி புரவி தூண்டக்
கடிமதி ற்றுவரை காக்கு
மரசனைக் கடிந்து போகி
யடுதிறல் விசய னென்னு
மாளரி யேறு போல்வா
னிடிமுர சதிர்ந்து விம்ம
விந்திரப் பிரத்தம் புக்கான் (136)

புலரியி னிராமன் கேட்பப்
போர்க்கெழ விலக்கி யைய
னலனுறு கிளைஞ ரோடு
மிந்திரப் பிரத்த நண்ணி
யுலகெலாம் வென்ற சீர்த்தி
யுலங்கொடோள் விசயன் வேட்பக்
கலவமா மயி லன்னாளைக்
கடிமணம் முடிப்பித் தானே (137)

*பூணுலாஞ் செம்பொற் றோளான் (பா. பே.)
† சேனுறை யமர ரோடும் (பா. பே.)

ஆயிரங் கோடி மான்றே
 ரஞ்சரைக் கச்சம் யானை
பாய்வயப் புரவி வெள்ளம்
 பாவைய ரெண்ணூற் றெண்மர்
காய்கதிர் விரிக்கும் பைம்பூண்
 கணக்கறு செம்பொ னல்கி
மீயுயர் மாட மோங்குந்
 துவரையின் மேவி னனெ (138)

எரிமணி மாடஞ் சூழ்ந்த
 விந்திரப் பிரத்தந் தன்னிற்
றருமனைக் காணச் செங்கேழ்த்
 தாமரைக் கண்ண னெய்தி
விரிபுக ழுலகம் போர்க்கும்
 வில்லுடை விசய னோடு
மரில்படு கானில் வேட்ட
 மாடுவா னமைந்து சென்றான் (139)

வருந்துசூன் முதிர்ந்து மாழ்கித்
 தளர்வொடும் வயாநோ யெய்தி
விரிந்தபூந் தகட்டின் மேவும்
 பெடையினை விளரி பாடுஞ்
சுரும்புமென் மலர்த்தா தூட்டி
 துயில்வரச் சிறையா லீவும
பொருந்துபூந் துணர்க ளீன்ற
 பொங்கரின் சோகநீழல் (140)

சேட்டிளம் பருதி யின்ற
 காளிந்தி யாறு செந்தேன்
பாட்டளி நுகர்ந்து துஞ்சும்
 பைந்துழாய் முகுந்தன் மார்பின்

மோட்டிள முலைகள் சாட
முயங்குதல் விரும்பித் தேன்றோ
யூட்டரக் குண்ட செவ்வா
யொண்டொடி யாயிற் றன்றே (141)

அம்மலர் நெடுங்கட் பேதை
யலர்கணங் கனிந்து விங்குங்
கொம்மைவெம் முலையிற் றீஞ்சொற்
றேழியைக் குறிப்பி னேக்கி
மைம்முகில் வண்ணன் சீர்த்தி
வருந்தற வினிது பாடப்
பெய்மதுத் துளிக்கும் பண்டோய்
பேரியாழ் தருதி யென்றாள் (142)

யாழினியல்

வேறு

கொன்றை யோடுங் கருங்காலி
கோட்டுக் காகும் பத்தர்க்கு
மன்ற முருக்கு முயர்தணக்கும்
வளைவில் குமிழு மாமென்பா
ரொன்றி யிடப்பே ரியாழ்க்குரைத்த
கோட்டி னளவை பதினொருசாண்
பொன்றுப் பத்தா ரேழுசாண்
புட்டி வளவு முச்சாணே (143)

மருவுந் திரள்போதிகை யெருத்தந்
*தலைநீண் முகத்தின் வடிவதனை
†யுரைநூல் வல்லோ ரியைந்தபடி
கொளலா மென்ன வுரைசெய்வர்
பொருவி லிசைத்தந் திரியதற்குப்
புகன்ற வளவை பதின்முச்சாண்
விரவி யிருபத் தொருநரம்பு
வீக்க லாகு மெனவுரைப்பார் (144)

* தனைநீண் முகத்தின் (பா. பே.)
† உரைநூல் வல்லோர் இசைத்தபடி (பா. பே.)

அணில்வாற்குரல செந்திணையி னவிய
லன்ன பன்ன ரம்பைப்
பிணியா வுயர்கோட் டிடைவிக்குந்
திவவின் கடையிற் பெட்பினெடு
மணிசெய் கவரி முண்டகத்தை
வயங்கச் சேர்த்தல் யாழ்மரபு
துணிவி னுணர்ந்தோர் பேர்யாழி
னுறுப்பென் றெடுத்துச் சொல்லுவரால் (145)

வழுவி லேந்தாங் கோன்முதலா
வெழுவா யளவுந் தொடல்வார்த
லெழுவாய் முதலா மீறளவு
மெறிதல் வடித்த லிசையனைத்துந்
தழுவு நரம்பு முழுதினையுந்
தடவித் தள்ள லுந்தல்பைந்தே
னொழுகல் போலு நரம்பிரண்டை
மாறி மாறித் தொடலுறழ்தல் (146)

நரம்பை யடிதொட் டீற்றளவு
நன்கின் வருட லுருட்டன்மிகத்
திருந்து நரம்பை யுறத்தொட்டுத்
திருகி விடுதல் தெருட்டலா
மரும்பொற் சுட்டு விரல்சேடன்
றன்னு லள்ள லள்ளலென்பர்
*பரிந்தே முற்று விளிமுறையாற்
பற்றியெழுப்பல் பட்டடையே (147)

நண்ணு மிவைகள் புரிந்திடுதல்
தொழிற்கை யென்ன நவில்வரா
லெண்ணுந் தான மினிதினுற
வியைந்த நரம்பை நனிதிருத்தல்

---

* பரிந்தே முற்று விளிமுறையிற் (பா. பே.)

பண்ணல் நரம்பை யொத்தபடி
யிருத்தல் பரிவட் டணைநரம்பி
னுண்ணின் றுருவிக்கு மோசைசெவி
யுறவா ராய்த லாராய்தல் (148)

தடவு முறையி னரம்புகளை
யினிதிற் றடவல் தைவரலா
மிடையா திசைகள் பெறவியக்கி
யிசைக ளெழுப்பல் விளையாட்டோர்ந்
தடையி னரம்பை யிடையிடைவிட்
டெய்த லெறித லறிந்தியற்ற
லுடைய கையூழ் செலவறிந்தாங்
கினிதி னுற்றல் சிலவாமால் (149)

எற்று நரம்பு தமையெல்லா
மிசைவந் தெழநீண் மெல்விரலாற்
குற்ற மின்றி நனிவிளங்க
வியற்றல் குறும்போக் கெனவிசைநூல்
முற்றுந் தெளிந்த யாழ்முனிவன்
முறையிற் கோத்த விசைமரபு
கற்று வல்ல முதுக்குறைவின்
மேலோர் யாருங் கட்டுரைத்தார் (150)

தாரத் துழையு முழையதனிற்
குரலுங் குரலிற் றயங்கிளியு
மோரு மிளியிற் றுத்தமுமத்
துத்தந் தன்னில் விளரியுமொண்
சீரார் விளரி தனின்மிகவுஞ்
சிறந்து தோன்றுங் கைக்கிளையு
நேரே யுதிக்குங் கைக்கிளையி
னிகரில் தாரம் பிறந்திடுமால் (151)

அறைந்த குரலுந் தாரமுங்கைக்
  கிளையு மாணு மிளிதுத்தஞ்
சிறந்த விளரி பெண்ணுகு
  மலியா முறைதேர் குரல்துத்த
நிறைந்த விளிமாத் திரைநான்கா
  நிகழ்த்து மூன்று மாத்திரைசி
ருறைந்த விளரிக் கைக்கிளைமாத்
  திரையோ ரிரண்டா முறைதாரம் (152)

தலையி லுழைநீண் மார்பிலிளி
  விளரி நெற்றி தனின்மிடற்றி
லலைவில் குரல்நாக் கிளிற்றுத்த
  மண்ணந் தன்னிற் கைக்கிளைமற்
றலைவில் தாரங் கொடிமூக்கி
  னுதிக்கு நெடிலா முயிரேழுங்
கலைமுற் றுணர்ந்தோர் நிரைநிரையிற்
  றேன்று மென்னக் கழறினர் (153)

குரலின் கிழவ னயன்றுத்தக்
  கிழவன் குழவி மதிச்சடையோன்
பரிவு கூர்கைக் கிளைக்கிழவன்
  பாரத் துவாச னுழைக்கிழவ
னரிய வியத்தாங் கியனிளியின்
  கிழவ னங்கா ரகன்விளரிக்
குரிய கிழவன் பார்க்கவனெண்
  டாரக் கிழவன் சுகனுமால் (154).

சங்கங் குயில்கார் மயில்யானை
  புரவி யன்னங் காடைதரும்
பொங்கு குரலே குரல்துத்தம்
  புகல்கைக் கிளைநீ ளுழையிளிசொற்

பங்கமெறிந்த விளரியொடு தாரத்
திசையா மெனப் பகர்ந்தா
ரங்க ணுலகில் யாழ்மரபின்
விஞ்சை வல்ல வறிவினரே (155)

பரவுஞ் செம்பா லையிற்பிறக்கும்
பண்ணே ரெட்டும் படும்பாலை
மருவிப் பிறக்கும் பண்ணிருபத்
திரண்டும் வளர்செவ் வழிப்பாலை
விரவிப் பிறக்கும் பண்ணொருபா
னிரண்டு மரும்பா லையின்விளங்க
வரிதிற் பிறந்த பண்ணாறு
தலையிட் டமைந்த விருபானும் (156)

வளருங் கொடிப்பா லையிற்பிறந்து
வயங்கும் பண்ணோர் பன்னிரண்டும்
விளரிப் பாலைப் பிறக்கும்பண்
ணஞ்சு மேற்செம் பாலைதனிற்
றளரா துதிக்கும் பண்ணொருபத்
தெட்டு மாகத் தனிப்பேர்யா
ழுளரும் விஞ்சை நூல்வல்லோர்
நூற்று மூன்றென் றுரைப்பாரால் (157)

**வேறு**

பாலையாழ் குறிஞ்சி யாழ்நன்
மருதயாழ் பழிப்பில் பண்ணி
வேலுஞ்செவ் வழியாழ்த் தாரப்
பண்ணுட னியைந்து கூட்டிச்
சால்புறு மகம்புறத்தோ
டருகொடு பெருகுஞ் சார
னாலுணர்ந் துறழி னூற்று
மூன்றதா நுவலும் பண்ணே (158)

புரிநரம் பதனி லேழா
　　நரம்பினைப் புகலு நான்காய்
மருவிய நரம்பு நட்பாம்
　　வகுத்தவைந் தார ரம்பு
தெரிதரிற் கிளைதா னுகுந்
　　திகழ்ந்திடு மாறு மூன்று
முரியநற் பகையா மென்பர்
　　யாழ்மர புணர்ந்து ளோரே (159)

இன்னணம் யாழ்வல் லோர்க
　　ளியம்பிய முறைவ ழாமற்
கன்னலிற் கனிந்த தீஞ்சொற்
　　றேழியர்க் குரைத்துக் காமர்
பொன்னவாய்க் கிடந்து வீங்கும்
　　புணர்முலைக் காளி யென்னும்
வன்னமே கலையாள் பேர்யாழ்
　　வாசித்த றுடங்கி னளே (160)

முளிசினைத் தருக்கள் யாவு
　　முன்னையிற் பசுமை யெய்தி
தளிர்குழைத் தரும்பு தோன்றப்
　　பாடிய தைய றன்னைக்
களியொடுங் கண்ண னோக்கி
　　யாசைநோய் கவற்ற மாழாந்
தளிபெறு வாயில் காணன்
　　பார்த்தன தருகு சார்ந்தான் (161)

எண்ணம்வே றுகி நெஞ்சங்
　　கலுழ்ந்துள மிடைந்த வாற்றுற்
கண்ணன்முன் போலத் தூக்கு
　　முறிதட வந்து கையால்

வெண்ணெயை வாரி யுண்ண
　　வீக்கினு ருண்டோ வென்று
வண்ணலை யசதி யாட்டிப்
　　பார்த்தனுண் டறைந்தா னன்றே (162)

தண்ணறுங் கமல வீட்டிற்
　　ருக்கணங் கனைய கோதை
வண்ணப்பூஞ் கோலை சூழு
　　மாதவிப் பந்த றன்வரிற்
பெண்ணலங் கனிய நின்று
　　பேரியா ழுணர்ந்து பாடும்
பண்வலை வீசி யென்ற
　　னுருயிர் படுத்தா னென்றான் (163)

உலகெலாம் பவள வாயி
　　னுண்டுடுத் துமிழ்ந்து காத்து
மலகிலா மாயை செய்யு
　　மையநீ யறிவி லாரி
னிலவுகொப் பளிக்கு முத்த
　　நிரைத்தமென் பவளச் செவ்வா
யிலவிதழ் கண்ணிற் பட்ட
　　தேழமைப் பால தென்றான் (164)

காவியுங் கயலும் வேலுங்
　　கருவிள மலரும் வென்று
மாவடு மருட்டு நோக்கின்
　　வருமுலைப் பவளச் செவ்வா
யோவிய ரெழுதவொண்ணு
　　வொண்டொடி வனப்பு முற்று
மேவரக் காணி லீது
　　விளம்பலை நீயு மென்றான் (165)

நீளிருந் தூணிற் றோன்றி
யிரணிய னெஞ்சஞ் செய்ய
வாளுகி ரதனிற் போந்த
மானுட மடங்கல் பைம்பொற்
றுளதா மரைநுண் ணூலிற்
சிமிழ்ப்புண்ட தன்மைத் தன்றோ
காளமா முகிலோர் பேதை
கண்வலைப் பட்ட தென்றான் (166)

அறற்கருங் கூந்தற் கண்வாள்
போழ்ந்தநேர் வறியா தென்னைத்
திறப்படத் தேற்று மாறு
செருவினில் வளைந்த வொள்வா
ணிறத்திடைக் கதிர்வேல் பாய்ந்த
நீளிரும் புண்ணிற் சேர்த்தி
* மிறைக்கொளி திருந்தும் வென்றி
வீரர்தஞ் செயலா மென்றான் (167)

காழ்படு பராரைச் சாந்தின்
கலவையஞ் சேறு கொட்டிக்
கேழ்கிளர் நிலவுத் திங்கண்
மணிவடங் கிடந்த கொங்கை
மாழைமென் னோக்கி கண்ணின்
வள்ளல்கோட் பட்ட வாற்று
லாழ்வினை தன்னை யாரே
யுப்புறங் காண வல்லார் (168)

நிறையறி வூக்கங் கல்வி
நெறியுறு வாய்மை தூய
பொறையொரு வடிவு கொண்ட
புனிதயான் புகல்வ தெல்லாஞ்

---

*மிறைக் கொளி திருத்தம் (பா. பே.)

சிறைகொள்வான் புனலின் மீது
  தீட்டிய வெழுத்துப் போலு
மறைகடல் கரைகொன் றேகின்
  யாவரே யமைக்க வல்லார் (169)

## (இயல் இடம் வினவல்)

மதுக்குடம் விரிந்த தன்ன
  வண்டுவீழ் கமலப் போதோ
புதுப்புனல் படியுந் தெய்வப்
  புணரியோ விடம்பொற் பார்ந்த
கதிர்க்குல முமீழுஞ் செய்ய
  கவுத்துவ மார்ப வன்றன்
முதுக்குறை வொழிக்குந் தீஞ்சொல்
  முற்றிழை யியல தென்றான் (170)

முழுநெறிக் குவளை யுண்கண்
  முத்தமென் முறுவல் வெற்பி
னெழில்குவித் தனைய கொங்கை
  யிலவிதழ் காந்த ளங்கை
யழகுவிற் றிருந்த வேய்த்தோ
  ளணங்கிடங் கமஞ்சூன் மேய
மழைமுது குறிஞ்சுங் காவின்
  மாதவிப் பந்த ரென்றான் (171)

துளிப்புய லுறங்குங் காவின்
  மாதவிப் பந்தர்ச் சோதிப்
பளிக்கறை மருங்கி னெய்திப்
  பணைமுலைப் பவளச் செவ்வாய்க்
களிக்கயற் றடங்க ணாளைக்
  கண்டி யான் மீளுங்காறு
மளிக்கொரு புணரியன்ன
  யையநீ வருந்தே லென்றான் (172)

அண்டகோ டிகளும் பூத்த
வண்ணல்பே ரறிவு முற்று
மொண்டுகொண் டருந்தும் வேற்கண்
பரப்பியெத் திசையு நோக்கித்
தண்டலை மருங்கு புக்குத்
தனிவினை யாடுங் கொல்லோ
வண்டுளர் கோதை யென்ன
வெண்ணினன் மருங்கு சென்றான் (173)

குங்கும மெழுகி யோங்கு
குலிகமென் செப்பே கொங்கை
செங்கய லிணையே வாட்கண்
டிருமறு மார்பன் சொன்ன
வங்கலும் மேனிச் செய்ய
வாரணங் கிவளே யென்னக்
கொங்கவிழ் சோலை தானே
குறித்திடு மிடம தாமால் (174)

ஈர்க்கிடை புகாது விங்கு
மிளமுலை நெருக்கிற் பட்டுப்
போக்கறக் கிடந்த நெஞ்ச
மொருவழி மீட்டுப் போதந்
தேக்கற வணைத்து மெம்பா
லியம்பிய வேந்தன் றன்னை
வாக்கினு லிகழ்ந்த வென்போ
லியாருளர் வன்க ணாரே (175)

குயில்குடைக் தாடு மந்தண்
கொழுமலர்ச் சோலை வைகும்
புயல்புறங் கொடுக்குங் கூந்தற்
புரிகுரம் பிரங்கு தீஞ்சொன்

மயிலனாள் கண்ணிற் பட்டு
*மருங்குவந் தெய்தி வாய்ந்த
செயலொடு முடிரத்த காளை
திண்ணிய னுரு மென்றே (176)

அஞ்சன மெழுதி வேல்போன்
றம்பலைத் தகன்ற வாட்க
ணஞ்சுதன் றலைக்கொண் டுள்ள
நடுங்கிய நம்பி யாவி
துஞ்சுத லொழித்து மீட்குஞ்
சுணங்குபூத் தலர்ந்த கொங்கை
†வஞ்சிநுண் மருங்குல் செவ்வா
யமிர்தென மனக்கொண் டானே (177)

சங்கொடு குலிச மீனஞ்
சக்கரம் பொறித்த செய்யப்
பங்கய மலர்த்தா டோய்ந்த
வழியிணைப் பரிவி னோக்கி
யிங்குயிர் தொடரப் போக்கி
நின்விறை யெளிதிற் கொண்ட
பொங்கிள முலையி னாளைப்
புனத்திடைக் கண்ணுற் றேனல் (178)

என்னலும் புயங்கள் வீங்கி
யின்விளை முறுவ னல்கி
முன்னெனை யளித்த பைம்பொன்
முகிழ்முலைக் கனிவாய் வல்லி
மன்னுமக் காவி லின்னும்
வரந்தர வதிந்த தென்னுப்
பொன்னிணர் பொதும்பர் நாடிப்
போயினன் புலவு வேலான் (179)

* மாங்குவந் தெய்தி வாய்ந்த (பா. பே.)
† வஞ்சிநுண் மருங்கிற் ஷை.

மழகதிர்ப் பருதி நோக்கி
வாண்முக மலர்ந்து தோன்றும்
பொழிமதுக் கமலம் போன்றும்
புயல்வர வெதிர்ந்து நோக்குந்
தழைசிறை மஞ்ஞை போன்றுந்
தளருமென் வரவு நோக்கி
நிழலுமிழ் மதிதாழ் சோலை
நின்றதென் னுவி தானே (180)

குமிழ்மிசை மறிந்து மீண்டு
குழைபொரு தலைக்குங் கண்ணு
ளமிழ்துறழ் பவள வாயி
னருத்தியிற் குறித்த தூய
கமழ்திரை யமிழ்த மாந்தப்
பெற்றதாற் புலவு காலு
மிமிழ்திரை யமிர்த முண்ட
புலவரோ வென்ன நேர்வார் (181)

அங்கலும் மேனிச் செவ்வா
யாய்பிழி யமிர்தந் தூற்றும்
பங்கயப் பருமவல்குற்
பைந்தொடிப் பழிப்பிற் செல்வி
தங்குநின் றுதற்காற் றுது
தரிப்பற வுடைந்தே யன்றே
*திங்களஞ் செல்வ நாளுந்
தேய்ந்துடல் விளர்ப்ப தென்னு (182)

சிந்துரத் திலக நெற்றிச்
சேயிழை செல்வி போற்றி
மந்தரப் பொருப்பை மானு
மணித்தடந் தேரி னேற்றி

* திங்களஞ் செல்வ னுளும் (பா. பே.)

வெந்திறல் விசைய மான்றோர்
    செலுத்தவின் னிழிந்த தென்ன
விந்திரப் பிரத்தந் தன்னி
    லெளிதின்வந் தெய்தி னுனே (183)

பரவைசூழ் ஞால மேழுந்
    தனதடிப் படுத்தி வாழுந்
தருமனை முதல வீரர்
    தாழ்ந்தெதிர் கொண்டு போற்றி
விரிகதிர் கவிழ்க்கும் பைம்பூண்
    வெண்டுகில் மாலை சாத்தி
மருமலர்த் துளவி னேனைக்
    கடிமணக் கோலஞ் செய்தார் (184)

கத்திகைக் கருமென் கூந்தற்
    றுரோபதை யுலூபி காமர்
சித்திராங் கனையி னேடுஞ்
    சுபத்திரை திருவை மானும்
முத்துறழ் முறுவற் செவ்வாய்
    முகிழ்முலைக் காளி தன்னை
வித்தகப் பூண்கள் யாவும்
    விழுமிதிற் புனைந்தா ரன்றே (185)

வலம்புரி சங்க மார்ப்ப
    வார்முர சுயர்த்த தோன்ற
லலங்கலங் குன்ற மன்ன
    கண்ணனுக் கழல்சான் றுகக்
கலஞ்சுமந் தெழுந்து வீங்கு
    கதிர்முலைக் காளி தன்னை
நலம்படு மோரை தன்னி
    னன்மணம் முடிப்பித் தானே (186)

காண்டவ தகனஞ் செய்வான்
கருதிய பார்த்த னுக்குப்
பூண்டபே ரன்பி னேடுந்
துணைசெய்து பொருவில் திண்டேர்
மாண்டகு வரிவிற் றாணி
யழற்கிறை வழங்க நல்கிச்
சேண்டொடு கொடியு நானு
மயனல்கச் சிறப்புச் செய்தான் (137)

மைத்துனத் தோழ ரெய்தி
வான்சிறப் பியற்ற நாளும்
பைத்தபாம் பணைய வல்குற்
படர்முலைக் காளி யின்பந்
துய்த்திரு திங்க ளாங்கு
வைகிமென் றுளப மாயன்
செய்த்தலை வாளை தாவுஞ்
செழும்புனற் றுவரை சேர்ந்தான் (138)

வேறு

அன்ன மேவிய கழனிசூ
ழவந்தி வேந்த னளித்தருள்
மின்னு நக்கவொள் வாளுடை
வேந்த னுமனு விந்தனு
மின்னு யிர்த்துணை யாயபே
ரெழில்கொண் மித்திர விந்தையைப்
பன்ன கக்கொடி மன்னர்கோன்
பால ளித்திட வெண்ணினன் (139)

தண்ணந் தாமரைத் தவசின்வாழ்
தாக்க ணங்கென வழகுறும்
வண்ண மேகலைப் பவளவாய்
மடந்தை மித்திர விந்தைதான்

கண்ணன் மேலுற நசையுளங்
கவற்ற வின்ளரி தாயமா
லுண்ணி றைந்திட வேனிலா
னுடற்று வாளியோ டொழுகுநாள் (190)

விடங்க விழ்த் தொளிமானவேல்
விந்த னுமனு விந்தனு
மடந்தை மித்திர விந்தையை
வதுவை யாற்றிடு சேயமர்த்
தடங்க மன்னவர் வருகென
வங்கை யாழி பொறுத்திடு
முடங்கல் போக்கின ரொல்லையின்
மன்னர் மொய்த்தவ ணெய்தினர் (191)

பொதுவொ ழித்துய ருலகெலாம்
புரக்கும் வேற்றிரி யோதன
னதிர்கொ டுஞ்சிலைக் கன்னனோ
டங்கர் வங்கர் கலிங்கர்மற்
றெதுகு லத்தொரு தீபமாங்
கண்ண னெண்ணறு மன்னவர்
வதுவை யாற்றிடு சயமர
மண்ட பத்திடை யெய்தினர் (192)

இறும ருங்கொழி யப்பணைத்
தின்னும் விங்குது மியாமென
கொறுகொ றுத்தெழுந் தோங்கிய
கொம்மை வெம்முலைக் கோதைதன்
மறுவில் பேரெழில் யாவையு
மணியின் முற்றி மறைப்பபோற்
செறிக லன்பல கைசெயா
வதுவை மண்டபஞ் சேர்த்தினர் (193)

முருகு யிர்த்தழி கறவுகால்
மொய்த்து மூய்முடி யண்ணலைப்
பருகு வன்னதன் ேறாக்கிறுற்
பாசி மைக்கொடி நோக்கலு
மரச வெள்ள முளம்பதைத்
தஞ்ச வஞ்சன வண்ண ஞூர்
விரைசென் மான்றடந் தேரின்மேன்
மின்னே யேற்றின னேகினுன் (194)

ஏக லேக லெனத்தொடர்ந்
தமரி னேற்றெதிர் கண்ணனும்
நாக வெங்கொடி யோனுமே
னண்ணும் வெய்ய துரோணனு
மாக வெங்கணு மம்புபாய்ந்
தஞ்ச வல்வில் வணக்குரு
வோகை கொண்டுயர் புரிசைசூழ்
மதுரை மாநகர் மருவினுன் (195)

எதுகு லத்துறு மன்னர்தாம்
யாரு முள்ள முவப்புறப்
பதலை சங்க முழங்கவப்
பாவை மித்திர விந்தையை
வெதிரி சைத்தருள் செங்கண்மால்
வெய்ய செந்தழல் சான்றதாய்
வதுவை யாற்றி விருப்பினுல்
வனமு லைத்துணை புல்லினுன் (196)

வேறு

குரவ மீன்றபூம் பாவையைக் குறத்திய ரேந்திக்
கருணை கூர்ந்துதா லாட்டுறுங் கவுசல தேயம்
புரவு பூண்டுயர் நக்கின சித்தெழில் பூத்த
வரவ மேகலைச் சத்திய தனைமகிழ்ந் தளித்தான் (197)

கன்ன லின்சுவை புளித்திடக் கனிந்தவந் திஞ்சொற்
பொன்னம் பூஞ்சுணங் கரும்பிய புணர்முலைக் கொடியைக்
கொன்று னைப்பெருங் கோட்டிமி லேற்றையேழ் தழுவு
மன்ன வர்க்கியான் கொடுக்குவ லெனமனம் வலித்தான்
(198)

கொங்கு கொப்பளித் தலர்ந்தபூங் கொம்பரிற் றேன்று
மங்கை யாக்கமு மணத்தின தியற்கையு மதித்துச்
செங்கண் மால்விடை தழீயினர் கொள்கெனச் சிறந்த
வங்கண் மாநிலத் தரசருக் குணர்த்தின னழைத்தான் (199)

அழகு கண்படுத் தவிர்சுணங் கலர்ந்தெழின் மார்ப
முழுவ துங்கவர்ந் தோங்கிவெண் முத்தணி தாங்கித்
தழுவு தற்கடங் காதுயர் தடமுலை புணர்வான்
விழைவின் மன்னவர் யாவரும் விரைவின்வந்திறுத்தார் (200)

ஞால மேம்புகழ் நக்கின சித்துநன் னகரிற்
கால னுருயிர் பலியுணக் கடுங்கணை துரக்குந்
தால மாத்திரமுயர்சிலை விசயனுந் தாங்க
வேலை வாய்த்துயில் கண்ணனும் விரைவின்வந் திறுத்தார்
(201)

காழ கிற்புகை முகிலெனக் களிமயி லகவு
மேழ்நி லச்சுடர் மாளிகைக் கவுசலத் திறைவன்
ருழி ருங்குழற் சத்தியை தணக்கொணர் கென்ன
மாழை நோக்கியர் வதுவைமண்டபத்தினிற் கொணர்ந்தார்
(202)

வேட்டம் போகிய களிறனுர் விளங்கிழை தரள
மோட்டு வெம்முலைக் கோட்டினுக் காற்றலர் முனிந்து
பூட்டு விட்டெதி ரெழுவிடை தழுவமுன் புகுந்து
கோட்டின் மாய்ந்தனர் சிலர்சிலர் வெரீஇப்புறங் கொடுத்தார்
(203)

செங்க ணேற்றினைத் தழுவுத லரிதெனத் திரண்ட
வங்கண் மாநிலத் தரசெலா நெஞ்சழிந் திடலும்
பங்க யச்செழுங் காடுபூத் தலர்ந்துயர் பருவ
மங்குன் மேனியன் மற்றுமோர் விடையென நடந்தான் (204)

எழுந்து தன்னுரு வேழுரு வாகியேழ் விடையு
மழுந்துறத் தழீஇ வீழ்த்தலு மலர்கதிர்த் திங்கட்
கொழுந்து போனுதற் சத்தியைக் கொணர்ந்த பொன்மாலை
தொழுந்தி றற்றிரு மாலுக்குச் சூட்டின னன்றே (205)

அன்ன காண்டலு மலங்கிலை வேற்சரா சந்தன்
கன்னன் வெந்திறற் சுயோதனன் சகுனிகார் முகத்துக்
கென்னை யொப்பவ ராரெனும் வீறற்சிசு பாலன்
மின்னு நக்கவேற் சல்லியன் முதலினோர் வெகுண்டார் (206)

ஏற்ற மன்னரை யெறுழ்வலிப் பொருவிறோன் விசயன்
கூற்று மஞ்சுறக் காண்டிப மெனுஞ்சிலை குழைத்துப்
பாற்றி னஞ்சுழல் பகழிக டூர்ந்தகன் மார்ப
மூற்றி ருந்துவெங் குருதியா றொழுகிடப் பிளந்தான் (207)

பைத்த பாம்பணைத் துயிறரு பங்கயக் கண்ணன்
கைத்த லத்துறு கார்முகக் கணைகளுக் காற்றா
தெத்த லத்துறு மன்னருந் தனித்தனி யிறைஞ்சித்
தத்த மாநகர் பகல்படு கங்குலிற் சார்ந்தார் (208)

நாம வேலுடை நக்கின சித்தெனு முரவோன்
காமர் வண்டுழல் கருந்துழாய் முகிற்கழல் சான்றாய்த்
தாம ரைத்தவி சுறைதருஞ் சத்திய தனையை
யேம வார்முர சியம்பிட நீரொடு மீய்ந்தான் (209)

அரங்கக் கூத்திய ராயிர மாயிரம் புரவி
பொருங்க டாக்களி றுயிர மாயிரம் பொலிதேர்
நரந்த மாவியோ ராயிர மளப்பருன் னிதியம்
பரிந்து நல்கினன் பங்கயச் செங்கணன் றனக்கே (210)

தாரை வேல்விழி சத்தியைத் தடமுலைப் புல்லி
யார்வ மீக்கொள வேழ்பக லமர்ந்தவ ளோடும்
வீர வெஞ்சிலை யருச்சுனன் றன்னொடும் விரைவிற்
கார்நி றுத்தினேன் கடிமதிட் டுவரையி னடைந்தான் (211)

வேறு

குழவி மதிக்கூன் முதுகுரிஞ்சுஞ்
குடுமி மாட முடுத்தோங்கி
யெழில்கண் படுக்குங் கேகயநாட்
டிறைவற் கமுதாஞ் சுதகீர்த்தி
யிழைவி னீன்ற வேய்த்தடந்தோண்
மின்னுக் கொடிபத் திரையென்பாள்
கழையர் லானின் கண்ணுங்குவித்த
கண்ணன் றடந்தோள் விருப்புற்றாள் (212)

அன்ன காலை வேய்த்தடந்தோ
ளம்மென் முலைபத் திரையென்பாள்
(212) தன்ன தூயிரின் மிகச்சிறந்த
தமையன் சந்தாத் தன்னொளிரும்
பொன்னங் குடுமி வெயிலுடுத்த
துவரை நகரிற் றனிபோந்து
மன்னு மன்பி னொடுஞ்சிறந்த
மாம னுழையிற் புகுந்துரைப்பான் (213)

வடிவேற் றடக்கை வசுதேவன்
பாதம் வணங்கி யுன்றங்கை
யொடிவி லன்பிற் சுதசீர்த்தி
யுவப்பி னீன்ற பத்திரையாங்
கொடிமென் மருங்கிற் படர்முலையைக்
கண்ணற் களிப்பான் குறுகினனென்
றடல்கூர் சாந்தாத் தன்னுரைப்ப
மகிழ்வி னோடு மவைநேர்ந்தான் (214)

வண்ணத் தடந்தோள் வசுதேவன்
மகிழ்வி னோடுந் தானுயிர்த்த
கண்ணற் கிவைக ளனைத்தினையுங்
கழறிக் கடலந் தானையொடு
நண்ணுங் கதிர்வேன் மருகனொடு
மைந்த ரோடு நனிதிரைய
தெண்ணீர் வளங்கூர் கேகயநா
டதனில் விரைவிற் சென்றடைந்தார் (215)

அடைந்த வசுதே வனைமுதலா
மரச ரெவர்க்குஞ் சிறப்பளித்துக்
கடைந்த மணிச்செப் பெனவீங்கிக்
கதிர்த்த முலைப்பத் திரையென்னுங்
குடங்கைக் கடங்கா மதர்நெடுங்கட்
கொம்பர் தன்னை யழல்சான்றாய்
மடங்க லனைய கண்ணனுக்கு
நீரோ டினிதின் வழங்கினான் (216)

தாம மணிச்செப் பெனப்புடைத்துத்
தழுமுற் றெய்தாத் தரளமுலை
நாம வடிவேற் கண்ணியொடுங்
கிளைஞ ரோடு நனிகடலின்

காம ரகழி சூழ்கிடந்த
கன்னிப் புரிசைத் துவரைதனி
லேம முரச மெழுந்தார்ப்பக்
கண்ணன் போதந் தினிதிருந்தான் (217)

கரும்பு மேய்ந்த மோட்டெருமை
கறிக்கும் பசும்பு லுறைத்தெவிட்டி
விரிந்து பலவின் விழ்ந்தசுளை
குதட்டி யவிழ்ந்த விரைக்கழுநீ
ரருந்தித் துயிலு மத்திரநா
டாளுங் கதிர்வேல் விருசேனன்
புரிந்த தவத்தா லிலக்கணையாம்
பொன்னங் கொடியை யினிதுயிர்த்தான்
(218)

உலக மனைத்தும் வேனில்வே
ளொருகோ லோச்சி யடிப்படுத்த
வலகில் சமயக் குறும்பகற்றி
யாணை நிறுத்தி மதர்வேற்க
ணிலவத் துவர்வா யிலக்கணையென்
றியம்புங் கோதை காரெதிர்ந்த
கலவ மஞ்ஞை யெனநாளுங்
களிப்போ டினிதின் வளருநாள் (219)

செந்தேன் பருகித் தேக்கெறிந்து
தெவிட்டிச் சுரும்பர் கிடந்துறங்கும்
பைந்தார்க் கோதை யிலக்கணைதன்
பருவ முதிர்ச்சி நோக்கியவ
டந்தை மதிநூற் றுறைபோய
தவறில் தேர்ச்சித் துணைவரொடு
நந்தா தெண்ணி மணம்புரிவா
னன்கி னுள்ளத் திடைவலித்தான் (220)

விண்ணி னியங்கு மோர்கயலை
விரைசெய் திகிரி மேனின்று
தெண்ணீர் நிழலிற் றனிநோக்கிச்
சிலைகால் வளைத்து விடுகணையால்
நண்ண வெய்து வீழ்த்தோர்க்கு
நங்கை யுரிய ளெனநகரின்
மண்ணு முரச மறைவித்து
மன்னர்க் கோலை போக்கினான் (221)

ஓலைப் பொருடஞ் செவியுறலு
மொலிக்குங் கடலி னுவகையெழா
மாலைக் குன்ற மெனத்தடங்தோள்
பணைத்து விங்க மான்றேரின்
வேலைப் புவியி லினிதமரும்
வேந்தர் யாரும் விரைந்தெழுந்து
காலைக் கதிர்வேன் மத்திரன்றன்
கடிமா நகரம் வந்தடைந்தார் (222)

வந்த வரச ரெல்லார்க்கும்
வழுவா தியைந்த வரன்முறையி
னந்த மறுவான் சிறப்பியற்றி
யிருந்த பின்ன ரணிசுமந்த
நந்தா விளக்கை யிருநிலத்தி
னடக்கு மின்னுச் சுடர்க்கொடியைச்
செந்தார்க் கிளியை மன்னருறை
செம்பொன் மாடந் தனிற்கொணர்ந்தார்
(223)

வேந்தர் யாருங் கேண்மின்கள்
விண்ணிற் சுழலு மிலக்குமிஃ
தேந்தற் கரிய வில்லுமிஃ
தம்பு மிஃதே யெய்தோர்க்குச்

சாந்தங் கோட்டிச் செம்மாந்து
தரளஞ் சுமந்து தனிவனப்பு
வாய்ந்த முலையா ளுரியளெனத்
தாதை யுள்ள மகிழ்ந்துரைத்தான் (224)

தண்ணங் கமல முகங்குவிய
வழகு விரிக்குந் தயங்கொளிய
வண்ண முகத்தி னிடைக்கிடந்து
வள்ளை புரட்டு மிருகயற்கும்
விண்ணிற் குலவு மொருகயற்கு
மாற்று ராகி விறல்வேந்த
ரண்ணல் வரிவி லெடுத்தெறினு
ணேற்ற லரிதென் றகன்றுயிர்த்தார் (225)

தரியார் வயிற்றி னெரிதவழ
வடிவாள் விதிர்க்குஞ் சராசந்தன்
வரிவி லெடுத்து நாணேற்றி
வாங்க லாற்ற துளமெலிந்தான்
பொருவேற் றடக்கைச் சிசுபாலன்
புரிநா ணொருநால் விரல்வாங்கி
மருவுந் தடக்கை மலர்போல
மனமுங் கன்றி வருந்துற்றான் (226)

சாந்த மூழ்கி யுலம்பொருத
தடந்தோட் டந்த வக்கிரனும்
வேந்தன் வரிவிற் புரிநாணி
லொருசாண் வாங்கி வெய்துயிர்த்தா
னேந்தற் கரிய வரிசிலையைக்
கன்ன னெளிதி னெடுத்தேந்திப்
பூந்தார் புரளுந் தோள்கழிய
வாங்கி யுள்ளம் புலர்ந்துயிர்த்தான் (227)

கோல்லுங் கூற்றுங் கண்புதைப்ப
 கொடித்தேர் நடவுந் திறல்வீமன்
வில்லின் வரிநாண் டோள்கழிய
 வாங்கி யுளத்தின் விக்கமற்ருன்
கல்லென் வேலை யுலகளிக்குந்
 துரியோ தனன்வெங் கார்முகத்தை
மல்லார் திரடோ ளுறவாங்கி
 மருடங் தெறிப்ப வீழ்ந்தொழிந்தான் (223)

மண்ணில் விசும்பிற் பாதலத்தில்
 வரிவிற் கொருவ னெனநின்ற
வண்ணல் விசயன் சிலைக்குடுமி
 குழைய வாங்கி யம்புதொடுத்
தெண்ணற் கரிதாய்க் கறங்கிலக்க
 நீரு ணோக்கித் திகிரியிவர்ந்
துண்ணின் றியங்குங் கயல்பொதுங்க
 வெய்தா னூழின் வீழ்ந்திலதால் (229)

குருகின் பகுவாய்க் கிழித்தெதிர்ந்த
 கொல்லே றடர்த்த கோபாலன்
வரிவெஞ் சிலைகால் குனித்ததும்பொற்
 றடந்தோள் கழிய வாங்கியதும்
விரைசெ றிகிரி யிவர்ந்ததுநீர்
 நிழலின் வெங்கோல் செலுத்தியதுந்
தெரியக் காணர் கயன்மறிந்து
 நிலத்தின் வீழ்ந்த செயல்கண்டார் (230)

விண்ணோ ரந்தண் மலர்மாரி
 பொழிந்தா ரரசர் வெள்கினு
ரண்ணுந் தெழுந்து செம்மாந்த
 வம்பொற் சுணங்கார் முலைசுமந்து

வண்ண மருங்கு விறுமென்னச்
சிலம்பு புலம்ப வந்தெய்திக்
கண்ணன் மார்பி லவண்மாலை
புனைந்தாள் கமல மனைதுறந்தாள் (131)

கரிசங் கலற முழவதிர
வள்வார் முரசந் துவைப்பவுயர்
கரைகொன் றிரங்கு கருங்கடலின்
மாதர் குரவை யொலிகலிப்ப
விரைகொப் பளிக்கும் பசுந்துளவோன்
விளரித் தீஞ்சொ லிலக்கணையைப்
பரிவின் வேட்டு வளர்பச்சைப்
பசுங்காம் புறழ்தோ ணலனுகர்ந்தான் (232)

தீம்பால் புளிப்பத் தித்திக்குஞ்
சில்லென் கிளவிக் கிள்ளையொடுங்
காம்பா லினிய விசைமுரலுங்
காயா மேனிக் கோபாலன்
பாம்பார் கொடியோன் வீமன்முத
லரசர் யார்க்கும் பணியருளி
யேம்பால் புரியு விசயனொடுந்
துவரை நகர மெய்தினன் (233)

சுரும்பு மூசா மலர்க்கோதை
சுடர்வே லுண்க ணுருப்பசியும்
விரும்புந் தடந்தோள் விசயனுக்குச்
சிறப்பி னோடும் விடைநல்கிக்
கரும்பு மமுதுங் கோற்றேனுங்
கலந்த கனிவா யந்தீஞ்சொன்
முருந்த மூரன் மகளிரொடுங்
கண்ணன் முயங்கி யுறையுநாள் (234)

### வேறு

புயல்போன் மதமா ரிபொழிந் துலவு
மயிரா வணமே லமரற் கிறைவன்
வெயிறும் மியவெங் கதிர்நெற் றியுறு
மெயில்சூழ் துவரைப் பதியெய் தினனால் (235)

எய்தா முனியைந் தசிறப் பினிதிற்
செய்தாய் பிழிதூற் றுசெழுந் துளவக்
கொய்தா ரினன்வந் தவைகூ றுகென
வையார் வயிரப் படைமால் பகர்வான் (236)

திருமார் பவெனன் னைதிருக் குழையிற்
குருமா மணிசேர்த் தியகுண் டலமும்
விரிமா மணிமா டமும்வெண் குடையும்
நரகா சுரன்வவ் விநடந் தனனால் (237)

என்னு முனிரும் பறவைக் கரசை
முன்னு முகில்வண் ணனினைந் திடலும்
மின்னுர் சிறைவிட் டுவிளங் குசெழும்
பொன்மால் வரைபோன் மெனவந் தனனே (238)

வந்தெய் துவணத் திறைவன் பிடரிற்
சந்தங் கமழ்சத் தியபா மையொடுங்
கந்தார் கரிகொன் றகருந் துளவத்
தந்தார் புனையண் ணலிவர்ந் தனனால் (239)

கள்ளூ றுகருந் துளவோ னுவணப்
புள்ளூர் தியெருத் தின்மிசைப் பொலியா
வெள்ளா னையிவர்ந் துயர்வின் னவர்கோ
னள்ளார் புரவா யிலினண் ணினனே (240)

நரகா சுரனன் னுபிலத் திடைபோய்
வரைசூ முரண்வான் கதைகொண் டுபுடைத்
தெரிசூ முரனே மியினெற் றிவிடா
முரபா சமறுத் துமுனிந் தனனால் (241)

எதிர்நீ ரரனெற் றிடுகோ லரணின்
தெறுவெம் படைசூ முரனுஞ் சிதைய
விறலோன் வடிவெங் கணை தூ வவெயிற்
பொறிசிந் தவொலித் ததுபோர் வளையே (242)

வரைகொன் றுயர்வச் சிரவாள் வலனேந்
துரவோன் மகிழ்வுற் றிடவும் பர்பிரான்
முரனு விமுடித் தவன்மைந் தரநெடுஞ்
சிரம்வீ ழவடிக் கணைசிந் தினனால் (243)

உருமுக் குரலோ டைமுகத் தழல்கட்
பொருவே ழமிவர்ந் துபொருப் புறழும்
வரிவெஞ் சிலைவா ளிகடூய் வெகுளா
நரகா சுரன்வந் தெதிர்நண் ணினனால் (244)

நண்ணு நரகா சுரனின் முடியும்
பண்ணுங் கரியேந் துபனைக் கரமும்
வண்ணத் திரள்வா லதியுந் துணியக்
கண்ணன் றிகிரிப் படைக்கட் டதுவே (245)

வேறு

சேணுறை யமரர் மலர்மழை பொழிந்து
திருமறு மார்பனை யேத்த
நீணில மடந்தை யதிதிபாற் கவர்ந்த
நிழலுமிழ் மகரகுண் டலமும்

வாணில வெறிக்கு முத்தவெண் குடையு
மளித்தடி வணங்கின னேகப்
பூணணி மார்பன் புரிசைசூழ் பார்க்குச்
சோதிட வளநகர் புகுந்தான் (246)

காய்சினத் தவுண ரிருஞ்சிறைப் படுத்த
காவலர் தமைவிடுத் தவர்த
மாயிரு ஞால முழுவதும் வழங்கி
மற்றவன் சிறையினில் வைத்த
சேயரித் தடங்கட் சுணங்குபூத் தலர்ந்த
வருமுலைச் செங்கனித் துவர்வா
யாயிழை மகளி ரொருபதி னாரு
யிரருநல் லணிபெறு கலையும் (247)

நிலந்தினக் கிடந்த நீணிதிக் குவையு
நிழல்சுளி கடாத்தநாற் கோட்டு
வலம்படு வேழத் தொகுதியுங் கடவுட்
கலினவாம் புரவியின் றிரளும்
பொலன்கொடித் தொடுத்த கொடிஞ்சிமான் றேரும்
பொன்செய்நன் புலவர்கை செய்யாக்
கலன்களும் பிறவு மதிவடிம் பிடறுங்
கடிமதிட் டுவரையின் விடுத்தான் (243)

துணிகதிர்ப் பருதி தழும்புற நிவந்து
தூச்சுடர் விரித்திருள் விழுங்கு
மணிநெடு வரையை மண்டபத் தோடும்
வள்ளுகிர்க் கலுழன்மே லேற்றித்
தனிவருங் கற்பி லருந்ததி யனைய
சத்திய பாமையோ டேகி
யணிகெழு விசும்பி னதிதியை வணங்கி
யாய்கதிர் குண்டல மளித்தான் (249)

கொடுத்தடி வணங்கு மைந்தனைத் தழுவிக்
குடங்கையி னெடியவாட் டடங்கட்
சுடர்த்தொடிக் களிவாய்ச் சத்திய பாமை
யுளமகிழ் தூங்கியெஞ் ஞான்று
மடுத்தகன் றிடாத விளமையுந் தெய்வ
வாசமு மளித்தன னுவப்பின்
விடுப்பவைந் தருவுங் கவர்ந்துபைந் துளவோன்
வேலைசூழ் துவரையி னடைந்தான் (250)

பொன்னெயி லுடுத்த பிலத்திடை நின்றுங்
கொணர்ந்திடும் புணர்முலைத் தடந்தோட்
கன்னியர் பதினா றுயிரர் தம்மை
கடிமண முடித்திடக் கண்ணன்
றன்னுருப் பதினா றுயிர முருவாய்ப்
பிரித்தவர் தங்களை மணஞ்செய்
தன்னலார் தம்மைக் கங்குலும் பகலும்
பிரிந்திடா தருநல நுகர்ந்தான் (251)

ஆலமு மமுதும் வென்றுவெங் கூற்றை
யமர்க்குநீ வல்லையேல் வருகென்
றேலைவிட் டுலவி மதர்க்கும்வேற் றடங்க
ணேண்டொடி வண்டுபாட் டயரு
மாலைதாழ் கூந்தற் செய்யவா யுருக்கு
மணியொடு மணிநிற வண்ணன்
கோலநீண் முடியுங் குலமுமற் றில்லா
வென்னைநீ விழைந்ததென் குறித்தே (252)

என்றலு முள்ள நடுங்கிவாய் புலர
வெழில்செய்வான் முகஞ்சவி மழுங்கப்
பொன்றினள் போலக் கையற வுற்றுப்
பொலன்கொடி வீழ்தலு மையன்
துன்றிருங் கூந்த லொருகையால் முடித்தங்
கொருகையான் மழைக்கணீர் துடையா
மன்றவோர் கையா லணைத்தொரு கையால்
வருந்தற வாசநீர் தெளித்தான் (253)

ஐயரி பரந்து குழைகிழித் தோடி
யநங்கனூற் குரையிடுங் கண்ணி
கையற வொழிய வுளஞ்சிறி துணர்ந்த
கண்ணன்வான் முகத்தினை நோக்கி
மெய்யினும் மெய்யாய் வெளியினும் வெளியாய்
வேதமு மறிந்திடா நினக்கு
மையன்மா னிடர்போல் வடிவமுங் குலமும்
வண்மையு முளகொலோ வுரையாய் (254)

என்றவ ளேத்த வசோதைபொற் குறங்கி
னெழுதரு மறையினு ளிலையி
னன்றுண ரன்ப ருளத்தினி னமரு
நாரண னினிதுள மகிழ்ந்து
மன்றலங் கமல மலர்மனை துறந்து
மன்னவர் மனையினில் வளரும்
பொன்றவிழ் முலையா ணன்னலம் பருகிப்
பொலிவுட னுவகைதரு நாளின் (255)

முப்பதாவது

கண்ணன் மணம் புணர்ந்த வத்தியாய முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 2032.

உ

## முப்பத் தொன்றுவது

## கண்ணன் சிவதீட்சை பெற்று நோற்றுச் சாம்பனைப் பெற்ற வத்தியாயம்

ஒள்ளிலை யுருக்கு மணியெனு மடந்தை
யுயர்பிரத் துய்ம்மனன் முதலா
மள்ளிலை வடிவேல் விறல்கெழு மைந்தர்
பதின்மரை யழகுற வுயிர்த்தாள்
கள்ளவிழ் மலரின் வண்டுவீழ்ந் தரற்றுங்
கருங்குழற் சத்திய பாமை
தெள்ளுநூற் கேள்விப் பானுவை முதலாஞ்
சிறுவரோர் பதின்மரைப் பயந்தாள் (1)

தாளதா மரையி னெழிலங் கவற்றும்
தளிரியற் சிறடிக் காளி
வாளமர் நீந்துஞ் சுதனையே முதலா
மைந்தரோர் பதின்மரை யீன்று
ணீளிருங் கூந்தன் மித்திர விந்தை
நிகரறு மிருகனை முதலா
மீளிமை மைந்தர் பதின்மரை யுலகம்
வியப்புற விழைவொடு மளித்தாள் (2)

வேனில்வேள் குனிக்கக் குனித்திடும் புருவச்
சத்தியை விறல்கெழு சுடர்வேற்
பானுவை முதலா யுரைத்திடு மைந்தர்
பதின்மரை யினிதினீற் றந்தாள்
தேனமர் கூந்தல் பத்திரை யென்பாள்
சங்கர சித்தனை முதாலாங்
கூனல்விற் றடக்கை மலையுறழ் தடந்தோட்
குமரரோர் பதின்மரைப் பெற்றாள் (3)

பானலங் கடந்த பனிமொழித் துவர்வாய்
படர்முலை யிலக்கணை யென்பாள்
தேனவிழ் தெரியற் பிரகோடனை யாதி
சிறுவரோர் பதின்மரை யீன்றா
ளேனைய பதினா றுயிரத் தொருநூற்
றேந்திழை மடந்தைய ரிகலும்
மானவேற் புதல்வர் பதின்மரோ ரொருவர்
மகிழ்வொடும் வயிறுவாய்த் தனரால் (4)

விரைகுழற் சாம்ப வதிதளர் நடைய
மைந்தரில் லாதுவெய் துயிர்த்துக்
கரைக்குறும் பெறியுங் கனைகடன் முகட்டிற்
கண்டுயில் முகுந்தனை வணங்கி
திருத்துயில் மார்ப மகவுயிர்த் திருக்குந்
தெரிவையர் மலடியென் றேசத்
தரைக்கொரு பொறையா யுயிர்சுமந் திருத்த
றகாதெனக் கலுழ்ந்துரைத் தனளால் (5)

தன்னுயிர் புரந்தோர் ஐதயலிற் றோன்றித்
தளர்ந்துநின் றழுதல்போற் கலுழு
மின்னிடைச் சாம்ப வதியினைத் தேற்றி
மெலிந்திடே லளிப்பனென் றருளிக்
கன்னவி றிரடோட் கண்ணனோர் பகலிற்
சென்றுப மன்னியு நாளு
மன்னிய சாலை மருங்கணைந் தவன்றன்
மலரடி வணங்கியி துரைப்பான் (6)

புண்டர மணிந்து தவளவெண் பூதி
புனிதமா மெய்யினிற் பூசிக்
கண்டிகை புனைந்து கடவுளிற் றோன்று
முனிவரர் மீடற்றுமுக் கண்ண

வண்டர்நா யகனைக் கண்ணுற நோக்கி
யரும்பெறன் மைந்தரைப் பெறுதற்
கெண்டருந் தவமே தியற்றிடிற் கூடு
மெளியனேற் கியம்புதி யென்றான் (7)

அரில்வழக் கொழிய நோற்று வெண்டிங்கள்
வணங்கிடு மந்தண னருளாற்
பிருகுமா முனிவன் வெள்ளியென் றுரைக்கும்
பெருந்தவ முனிவனைப் பெற்றான்
றிருமறு மார்ப நினக்கெவை யரிய
வாயினுஞ் செஞ்சடைக் கடவுண்
மருவருங் கொடிய தவமிழைத் தல்லா
னல்வரம் வழங்கல னென்னு (8)

வேறு

மறிபுனன் மீனி னோக்கி யாமைபோன் மனத்தி னுன்னிப்
பறவையிற் பரிசஞ் செய்து பழிப்பரு மொழிகள் கூறி
நறையவிழ் துளவி னோனை நண்ணிய பாச நீக்கி
யிறைவனஞ் செழுத்தி னுண்மை கண்ணனுக் கியம்பி னானே (9)

புண்டர மூன்று நெற்றிப் பொலிந்திட வினிது சாத்திக்
கண்டிகை மாலை சேர்த்திக் கதிர்நில வுறழும் பூதி
வண்டுள வோன்றன் மேனி வயங்குறச் சாத்தி யீசன்
றொண்டரிற் பொலிந்து தோன்றத் தூயவ னாக்கி னானே (10)

தண்ணறுந் துளவோன் சாற்று முனிவர னருளால் யார்க்கும்
நண்ணரு விரதம் பூண்டு நாவிலந் தன்னி லுள்ள
புண்ணியவி லிங்கம் யாவும் வலஞ்செய்து போற்றிப் பின்னர்
கண்ணுத றன்னைக் காண்பான் கருதருந் தவத்து நின்றான் (11)

வார்சடைக் கட்டித் தூய மருங்கிலிற் சீரை சுற்றிக்
கார்நிறத் தண்ணல் செய்யுந் தவத்தினைக் கருத்தி னேக்கி
யேர்குடி யிருந்து விங்கு மிளமுலைக் கவுரி யோடும்
போர்விடை யிவர்ந்து முக்கட் புனிதன்முன் ருேன்றி னுனே (12)

இந்திரன் முதல தேவர் நான்முக னெறிவேற் கந்தன்
கந்தடு புழைக்கை வேழ முகத்துடைக் கடவுண் மற்றை
நந்தியே முதல வாய கணங்கள்சூழ் போத நண்ணுஞ்
சந்திர மௌலி தன்னைத் தாமரைக் கண்ணன் கண்டான் (13)

காண்டலும் பருதி யெய்க்குங் கவுத்துவங் கிடந்த மார்பன்
சேண்டவழ் திங்கட் கண்ணிச் செல்வனை வணங்கி முன்ன
மாண்டகு பன்றி யாகி மாநில மளப்பில் காலங்
கீண்டுகண் ணுருத பொற்ருள் கிடைத்தலுந் தலைமேற்
கொண்டான் (14)

தொழுமகிழ் தூங்க நின்று துள்ளிமெய் சிலிர்ப்ப நோக்கி
யழும்வலஞ் செய்யுந் தூய வருமறை பாடித் தாளில்
விழுமிரு கமலப் பொற்ருள் விழிமலர் குளிர வொற்றி
யெழுமளி யோடு மீட்டு மிறைஞ்சுமீர்ந் துளவி னேனே (15)

அடுத்தடுத் தன்பி னேடு வணங்குமாய் துளவி னேனை
யெடுத்திரு கையா லீவி விழைந்ததென் னியம்பு கென்னுக்
கடுத்திகழ் மிடற்ருேன் கூறக் கண்ணன்வாய் புதைத்து
[நின்மேல்
விடற்கரு மன்பு மற்ருேர் சிறுவனும் வேண்டு மென்ருன்
(16)

மழகதிர் பருதி யெய்க்குங் கவுத்துவங் கிடந்த மார்ப
விழைவினீ கேட்ட வெல்லா விருப்பொடு மளித்தோ மென்னுக்
குழவிவெண் டிங்கட் கண்ணி மிலைச்சிய கூத்தன் கூறக்
கழையிசை வடித்த கண்ணன் கவுரிதாண் மலரிற் ருழ்ந்தான்
(17)

வணங்கிய கண்ணன் றன்னே யெழுகென வாழ்த்தி வண்ணச்
சுணங்கணி துணைமென் கொங்கை தொலேவிலா வரங்க
[ணல்க
வணங்கர வசைத்த வண்ண லாய்பிழித் துளவோ னேடுங்
கணங்கடாள் போற்றிச் செல்லக் கயிலேமால் வரையிற்
சென்முன் (18)

கயிலேயி னமர்ந்த பின்னர்க் கண்ணுத லருளாற் கண்ணன்
மயிலியல் விஞ்சை மாதர் கின்னரர் மாதர் நாளு
மியல்பெறு சித்த மாத ரியக்கிய ருரகர் மாத
ரயில்விழி யரம்பை மாத ரமர்ந்திடுஞ் சூழல் சேர்ந்தான் (19)

முருகவிழ் கமலக் காடு பூத்துமொய் துளவந் தாங்கும்
பருவமைம் முகிலிற் ருேன்றும் பண்ணவன் றன்பா லெய்துங்
கரியபைங் கூந்த லார்க்குத் தனித்தனி கண்ண ளுகி
யொருபகல் போலப் பன்ன ளுவப்பொடு மருவு நாளின் (20)

கண்ணனேக் கலுழன் றேடிக் காண்கலான் றுவரை யெய்த
வண்ணலம் புரிசை தன்னே யவுணர்சூழ்ந் திருப்ப நோக்கி
வண்ணவார் சிறையிற் ருளி ளுங்கவ ராவி மாட்டிப்
புண்ணிய நகரங் காத்துப் பொலிவொடு மிருந்தா னன்றே
(21)

புயறவழ் புரிசை சூழ்ந்த துவரையிற் பொலிவி னேடு
மியலிசை தெரியும் வீணே நாரத னெய்தத் தாழ்ந்து
வயமிகுங் கலுழன் கண்ண னெங்ஙனம் வதித்தா னென்னக்
கயிலேயின் வதிந்தானென்று யாழ்முனி கழறிப் போனன்
(22)

இருஞ்சிறைக் கலுழ னந்தண் கயிலேயி னிமைப்பி னெய்தி
யரும்பிள முறுவற் செவ்வாய்ச் சத்திய பாமை யாதி
மருந்துறழ் குதலேத் தீஞ்சொல் மனேவியர் வருத்தம் யாவுங்
கருந்துழாய் புனேயுந் திண்டோட் கண்ணனுக் குரைத்தா
னன்றே (23)

ஆங்கவை கேட்ட லோடு மரும்பிள முறுவற் செவ்வாய்க்
கோங்கிள முலையாள் பங்கன் குரைகழல் வணங்கி யேத்தி
வீங்குபே ரன்பி னேடும் விடைநல்கக் கலுழன் மேற்கொண்
*டோங்கிரும் புரிசை சூழுந் துவரைமா நகர முற்முன் (24)

ஏம்பலுற் றண்ண லோடுஞ் சிலபக லினிதுண் டாடிப்
பாம்பரை யசைத்த முக்கட் பரமனல் லருளாற் செங்கே
ழாம்பலங் கனிவாய்ச் சாம்ப வதியெனு †மணங்கேர் சாயல்
சாம்பனை முதலா மைந்தர் பதின்மரைத் தகவி னீன்முள் (15)

பந்தணி ணாந்தட் செங்கை மனைவியர் பரிவி னீன்ற
மைந்தர்தீங் குதலை யென்னும் வழக்கறு தேறன் மாந்தி
யிந்திர திருவி னின்புற் றிருக்குநா ளறிவை மூடும்
வெந்துயர் மாயை செற்ற மார்க்கண்டன் விழைவி னுற்முன் (26)

முப்பத்தொன்றுவது
கண்ணன் சிவதீட்சை பெற்று னோற்றுச் சாம்பனைப்
பெற்ற வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 2058.

---

உ

## முப்பத்திரண்டாவது
## கண்ணன் சிவபூசை பண்ணின வத்தியாயம்.

---

வந்தமார்க் கண்ட னென்று முனிவரன் மகிழ்வு கூர
வந்தமில் சிறப்புச் செய்யா வந்தணர்க் கமுத மூட்டிச்
சந்தநீர் மூழ்கி நீறு கண்டிகை மாலை சாத்திச்
செந்திரு மார்ப னன்பு வளர்சிவ பூசை செய்தான் (1)

---

* ஒங்கிரும் புரிசை சூழ்ந்த (பா. பே.)
† சாம்பவதியெனு மணங்கேர் ஷை.

தீங்கறக் கண்ணன் செய்யுஞ்
சிவலிங்கப் பூசை நோக்கிப்
பாங்கினி லினிது வைகும்
பழிப்பில்மார்க் கண்ட னென்போ
னீங்கரும் பிரம நீயே
நின்னிலு முயர்ந்தார் யாவ
*ரீங்குநீ பூசை செய்வா
யாவனை யியம்பு கென்றான் (2)

என்றலு மறியார் போல
முனிவர னிசைத்தா னென்னக்
குன்றினன் மாரி காத்த
கோவிந்தன் முறுவல் கோட்டி
மன்றலங் கமலத் தோனை
யென்னைமுன் மகிழ்வி னீன்ற
பொன்றிடாப் பொருளொன் றுண்டாங்
கதனிலைப் புகலக் கேட்டி (3)

ஆதியு நடுவு மற்றை
யந்தமு மின்றி யொன்றாய்ச்
சோதியாம் பிரமந் தானே
தூமதிக் கண்ணி யெந்தை
வேதமு மவனை யின்னும்
விளங்குற வறியா தென்றாற்
பேதமை மனிட ரேயோ
வவனிலை பேச வல்லார் (4)

இலிங்கமே யவ்வி யத்த
†மிலிங்கமச் சிவனே யாகுந்
துலங்குமவ் விலிங்கம் யானவ்
விலிங்கநீள் சுடர்வெண் டிங்க

* ரீங்குநீ பூசை செய்வ தியாவனை (பா. பே.)
† மிலிங்கியச்சிவனே ஷெ

ளலங்கலந் தாரோ னென்ன
வறிகுந ரறிஞ ரென்னும்
*புலன்கள்போம் வழியி னெஞ்சம்
போக்கிடா முனிவர் சொல்வார் (5)

அண்டகோ டிகளொன் றென்றே
டறைந்துறுண் டுகளிற் சிந்தத்
தெண்டிரைக் கரத்தா லேற்றுங்
கடலின்வெஞ் சேடன் மீதின்
முண்டக மலர்த்தாள் செங்கை
முடியொரா யிரம தாகக்
கண்டுயில் புரிதல் போல்யான்
யோகினிற் களிக்கு நாளின் (6)

புள்ளுவிழ்ந் தரற்ற வந்தண்
பொதியவிழ்ந் தமுதங் காலும்
வெள்ளிமண் டபத்தின் மேய
விளங்கிழை கொழுந னெய்திப்
பள்ளநீர் நாப்பண் வெய்ய
பாம்பணை மீதிற் றுஞ்சும்
வள்ளலி யாரை யென்ன
மனச்செருக் கோடுஞ் சொன்னான் (7)

உலகெலா மயின்று மீன்று
மோரடிப் படுத்துங் காத்து
மலகிலா மாயை செய்யு
மண்ணல்யா னென்றே னாக
மலரயன் முறுவல் கோட்டி
வகுத்துல களித்துப் பின்னர்
நிலையுறத் துடைக்கின் றேனும்
யானென நிகழ்த்தி னான் (8)

* புலன்கள்போம் வழியி னேசம் (பா. பே.)

என்றுசெங் கமலத் தோனு
 மியானுமேற் றிகலு மெல்லைப்
புன்றொழில் புரியு மெங்கள்
 புன்மைதீர்த் தடிமை கொள்வான்
மின்றவழ் சுடர்கள் வீசி
 விரிதழற் பிழம்பு போல
நின்றதோ ரிலிங்க மாகி
 யந்தநெஞ் சுணரா வண்ணம் (9)

மண்டுதீப் பிழம்பி னின்று
 வயங்குமிவ் விலிங்கந் தன்னை
யொன்சுடர் முடியுந் தாளு
 முலப்பிலா வலியாற் றேடிக்
கண்டவர் பெரியோ ரென்னக்
 கழறலுங் கமலப் புத்தேள்
வண்சிறை யெகின மாகி
 வானிடைத் துருவிப் போனான் (10)

குறுங்கழுத் தகல்வாய்ச் செங்கட்
 கூன்பிறை கோட்டு வெய்ய
மறங்கிளர் பன்றி யாகி
 மண்முழு தகழ்ந்து தாயிற்
சிறந்தவன் கமலப் பாத
 மளப்பினுட் டேடிக் காணா
திறங்கிய வுள்ளத் தோடு
 மீட்டும்வந் திறைஞ்சி னேனால் (11)

முடிவிலாப் பொருளின் றாய
 முடியினைக் காண்பா னேகு
மடலவிழ் கமலப் புத்தேள்
 வானக முழுதுந் தானே

தடையற வளப்பில் காலந்
தேடிமெய் தளர்ந்து காணு
தொடிவறு மன்பின் மீளா
வுவப்பொடுந் துதிக்க லுற்றான் (12)

தண்ணறுங் கமல மென்பூந்
தவிசினி லினிது வைகு
மண்ணலு மியானு மேத்தி
யருமறை முடிவின் வைகுங்
கண்ணுதற் சாமி பாதந்
தேலித்துக் களித்த லோடு
மெண்ணறு ம்வகை பொங்க
விங்கிவை புகல லுற்றான் (13)

முச்சுடர் கண்கள் பூத்த
முகமொரு கோடி மென்பூஞ்
செச்சைதாழ் புயமோர் கோடி
சேவடி கோடி யாகக்
கச்சையா னையின்றோல் போர்த்துக்
கனலுமுத் தலைய வாகு
மச்சணாங் கயில்வே றுங்கி
யாயிடைத் தோன்றி னானே (14)

தோன்றிய சுடரைத் தோற்றுஞ்
சராசரத் தொகுதி யாவு
மின்றிடுந் தந்தை தன்னை
யிறைஞ்சலு முயிர்கட் கொல்லாஞ்
சான்றென நின்ற வீசன்
தடக்கையா லெடுத்துப் புல்லி
யான்றபே ரன்பி னோடு
மீங்கிவை யறைய லுற்றான் (15)

என்னுடை யிடத்தோ டன்னில்
வலப்புறத் தினிது தோன்றி
மன்னுமென் மைந்தர் நீவிர்
வருந்தலீர் வருக வென்ன
வன்னையும் பிதாவு மாய
வந்தனை னுச்சி மோந்து
முன்னிய தளிப்பன் கேட்டி
ரெனமுக மலர்ந்து சொன்னன் (16)

குன்றவிற் குமகன் வார்த்தைக்
கேட்டலு குடந்தம் பட்டுப்
பொன்றவழ் கமல பாத
மெமதுபுன் றலைமேற் சேர்த்தி
நின்றுநின் றிரங்கி நின்மே
வீங்குதற் கரிய பேரன்
பின்றமக் களித்தல் வேண்டு
மென்றலு மிறைவன் கூறும் (17)

மைந்தர்நீர் விழைந்து கேட்ட
வரமினி தளித்தல் செய்தேஞ்
செந்திரு மார்ப வேத
னின்னுடைச் சிறுவ னுக
வந்தவ தரிக்கு மென்ன
மணிமிடற் றெந்தை கூறி
வந்தமு முதலு மில்லா
விலிங்கத்துண் மறைந்து போனன் (18)

அன்றுதொட் டின்று காறும்
யானுநான் முகனு மன்பாற்
பொன்றிடா விலிங்கந் தன்னைப்
பூசனை யாற்று கிற்பேம்

மன்றவெம் பிறவி நோய்க்கு
மருந்துமவ் விலிங்கந் தானே
நன்றறி முனிவ வென்று
நான்முகன் றந்தை சொன்னான் (19)

தண்ணறுந் துளவத் தண்டார்
துயல்வரத் தயங்கு திண்டோட்
கண்ணனைப் புகழ்ந்து போற்றிக்
கருதரு மறைக டேரு
மண்ணன்மா தவத்தின் மிக்க
மார்க்கண்ட னருளி னோடு
முண்மகிழ்ந் தீசன் பாத
முளத்திடை நினைந்து போனான் (20)

முப்பத்திரண்டாவது
கண்ணன் சிவபூசை பண்ணின வத்தியாயம் முற்றும்
ஆகத் திருவிருத்தம் 2078

---

உ

## முப்பத்து மூன்றாவது
## கண்ணன் பூமிபாரந் தீர்த்த வத்தியாயம்

போச கடத்துறை போர்வே லுருக்குமன்
மாசற நல்கிய சாரு மதிதனக்
காசில் சயமா மென்ன வறைதலு
மாசை பெறுமன்னர் யாரும்வந் துற்றார் (1)

கேடில் விழுச்சீர் கிருதவன் மாவொடு
பீடு கெழுதோட் பிரத்துய்ம னென்னுங்
கூடார்க் கடந்த குருசி லுருக்குமன்
மாட முடுத்த வளநகர் புக்கான் (2)

மன்ன ருறையுஞ் சயமா மண்டபத்
தன்னிகர் வேறிலாச் சாரு மதியெனும்
பொன்னங் கொடியிவன் பொற்றாள் விழைதலுந்
தன்னமர் தேரினிற் றையறனை யுய்த்தான் (3)

சாரும தியை தடந்தே ரினிலேற்றி
போர்விழச் சிர்ப்பிரத் துய்ம்மின னென்னும்
வீரன் றுவரையின் மேவி விரைமலர்க்
காரோ திதன்னைக் கடிமணஞ் செய்தான் (4)

மணவினை முற்றி மகிழ்ந்துறை நாளிற்
றணிவருங் கற்புடைச் சாரு மதியா
ளணியிழை வெள்வே லனுருத்த னென்னு
மிணையறு திண்டோட் புதல்வனை யின்றாள் (5)

அலங்கல் வடிவே லனுருத்த னென்னு
முலங்கெழு தோளாற் குருக்குமன் மைந்த
னலம்பெற வின்றரு ணங்கையை வேட்பத்
தலம்புகழ் கண்ணன் றமரொடுஞ் சென்றான் (6)

உருக்குமன் மைந்த னொருமக டன்னை
யரத்த வடிவே லனுருத்த னென்போன்
விருப்பொடு வேட்டபின் வெள்ளை நிறத்துப்
பொருப்பேறி சூதுப் போர்முயன் றிட்டான் (7)

ஓர்குழை வள்ள லுருக்குமன் றன்னொரு
மார்வ மிருந்திடச் சூதாட் டயர்வுழிப்
பார்புக ழும்பெல பத்திரன் றோற்றலுஞ்
சீர்சா லுருக்கும னெள்ளிச் சிரித்தான் (8)

சிரித்த வருக்குமன் சென்னி சிதற
விரித்த பலகையின் வெண்ணிறத் தண்ண
லுரப்பி யடித்தவ னுருயி ருண்ணுப்
பரித்த கலிங்கர்கோன் பல்லுதிர்த் திட்டான் (9)

அருமண முற்று மனுருத்த னேடும்
விரிதுள வப்புயல் விண்ணு டணவும்
புரிசை யுடுத்த துவரா புரியின்
மருவ வியப்பின் மகிழ்கூர்ந் திருந்தான் (10)

வேறு

இன்னணங் கண்ணனுக் கிளைஞரு மினிதினிற்
பொன்னகர்த் துவரையிற் பொற்புட னுறையுநாண்
மன்னுதோ ளாயிரங் கொண்டவா ணுசுரன்
றன்னருங் கயிலையிற் றனிவின்வந் தெய்தினன் (11)

திங்களங் கண்ணிதாழ் செஞ்சடைப் பண்ணவன்
பங்கயச் செய்யதாள் பர்விவா ணுசுர
னங்கண்மா ஞாலமும் விண்ணுமற் றமர்பெரு
திங்குவந் தெய்தின னெந்தையோ டமர்செய்வான் (12)

என்றுவா ணுசுரன் கூறலு மெறும்ழ்வலிக்
குன்றவில் லந்தணன் குறுநகை கோட்டியுன்
வென்றிசே ராயிரந் தோள்களும் வெட்டிட
மன்றவோர் மானுடன் வருவனீ மலைதியால் (13)

என்னலுஞ் செருநமக் செய்துமென் றுளமகிழ்ந்
தன்னவ னென்னுமை *யடைவதென் றுளென
வுன்னுடைத் துவசம்வீழ் போதெனு வுரைசெயத்
தன்னுடை நகர்வயின் வந்துசார்ந் தனனரோ (14)

---

* யடர்வ தென்றுளென (பா. பே.)

வள்ளல்வா ணுசுரன் பெற்றிடு மாண்புடை
யொள்ளிழை யுசையெனு மோங்கெழிற் பணைமுலைக்
கள்ளவிழ் கூந்தலாள் கண்டுயில் கனவினி
லள்ளிலை வேலனு ருத்தனைக் கண்ணுரு (15)

**வேறு**

கண்ட விளங்காளை கதிர்முகமுந்
தடந்தோளுங் கவினு மந்தோ
வுண்ட தெனதுயிரை யென்செய்கே
னமரங்கா ளுய்யே னென்று
வண்டு கிடந்துறங்கி மதுவருந்தித்
தேக்கெறியு மலர்ப்பூங் கோதை
கொண்ட பெருந்துயரங் கூறுது
நெடிதுயிர்த்துக் குழைந்து நைந்தாள் (16)

கொழுதி யினவண்டு கூட்டுண்ணுஞ்
சில்லோதிக் கொம்பர் காணப்
பழுதின் மதிமுகத்துத் தோழியர்போற்
*றுகிலிகையாற் படத்தின் மீது
முழுதுலகின் மன்னரையு முன்னெழுதி
யனுருத்தன் முழுவுத் திண்டோ
ளெழிலெழுதிக் காட்டுதலுங் காமவிடந்
தனைக்கொண்டாங் கினைந்து வீழ்ந்தாள் (17)

செந்தார்க் கிளிக்குதலைத் தலைக்கொண்ட
காமநோய் திறல்வேற் காளை
யந்தார் மணிமார்பம் புல்லினு
லல்லதையீங் ககலா தென்று
நொந்தாங் கருகிருந்த தோழியர்க
டுவரைநகர் நொய்தி னெய்திக்
கந்தார்வெங் களிறனைய காளைதனை
மாயையினுற் கவர்ந்து வந்தார் (18)

* றாரிகையாற் படத்தின்மீது (பா. பே.)

வந்தாங் கருகுய்த்த வயவா
ளனுருத்தன் வனப்பு வீங்குஞ்
சந்தார் தடந்தோளிற் றழுமுற்று
வாராத முலைக டாக்க
நந்தா விளக்கனைய வுசைமென்றோ
ணலம்பருகி நண்ணுங் காலைச்
செந்தா மரைமலரப் பகற்செய்வோன்
குணதிசையிற் சேர்ந்தா னன்றே (19)

வேறு

உலம்பொரு துயர்ந்த திண்டோள்
வாணனங் கதனை யோரா
வலங்கெழு மைந்த னோடும்
வாளம ரழுவத் தேற்றுப்
பொலங்கொடிப் புலம்பி னையப்
பொருப்புறழ் தடந்தோள் வீக்கி
யலங்கலங் குன்றன் றனை
யருஞ்சிறைப் படுத்தி னனே (20)

ஈங்கிவை யனைத்துந் தேரா
யாழ்முனி துவரை யெய்தி
வாங்குவில் விழுங்கு திண்டோண்
மணிநிற வண்ணற் கோதப்
பாங்கினிற் கடலந் தானைப்
பத்தரைக் கச்சத் தோடும்
பூங்கழற் குரிசில் வாணன்
பொன்னகர் வளைந்து கொண்டான் (21)

வெண்மதி நெற்றி தோய்ந்து
விழுத்தழும் பிருப்ப நீண்ட
கண்ணகன் புரிசை மூதூர்
கண்ணன்முற் றுதலும் வாணன்

வண்ணவிற் கூப கண்ணன்
முதலிய மறவர் சூழ
வண்ணலங் கொடிஞ்சி மான்றேர்
கடாவிவா ளமரி னேற்றான் (22)

ஏற்றெதிர் கூப கண்ணன்
முதலினோ ரிறப்ப வெய்ய
கூற்றெனத் தெழித்து வெள்ளை
மேனியோன் கொன்று வீழ்த்தா
னுற்றலுந் தேரும் வெற்றித்
துவசமு மறுத்துக் கண்ணன்
மாற்றமர் தொடங்கும் வாணன்
மார்பிலோர் பகழி தொட்டான் (23)

மைந்துடை முழவு திண்டோள்
வாணனை யின்ற கற்று
யந்துகி லின்றி வெய்ய
வமரிடைப் புகுத நோக்கிப்
பைந்துழாய் முகுந்தன் செங்கைப்
படையொழிந் திருப்ப வாண
னெந்திர மான்றேர் மற்றொன்
றிவர்ந்துவெம் போரி னேற்றான் (24)

கொடுஞ்சிறைக் கலுழன் மேலுங்
குவலயம் பொதிந்து பொற்றுண்
மடங்கலே றனைய கண்ணன்
மருமத்தும் வாணன் வெய்தாய்
விடங்கலும் பகழி தூண்ட
வெகுண்டுசெங் கமலக் கண்ண
னடங்கல ராவி யுண்ணு
மாழிகைக் கொண்டு சென்றான் (25)

காயெரி கவிழ்க்கும் வெம்போர்க்
கணிச்சியம் பெருமா னெய்தி
மாயிரு ஞால முண்டோய்
செருக்கினுன் மலையும் வாண
னுயிரம் புயத்தி னுன்கு
புயமொழித் தறுத்தி யென்னப்
பாயொளிப் பருதி தூண்டிப்
பகர்ந்தவா றரிந்திட் டானே (26)

அரிந்தபைந் துளவி னுனே
யாடமர் விலக்கி யாங்குப்
பரிந்திரு கன்றுக் குள்ள
மிரங்கிய பசுவே போலத்
திருந்து வெண்ணிலவு காலுந்
திங்களங் கண்ணிப் புத்தேன்
பொருந்துபே ரன்பர் தம்மைப்
போரொழித் துறவு செய்தான் (27)

சிறந்ததொண் டமைமற் றெண்ணிற்
சிறுவிரன் மடக்க வொட்டா
நறுந்துழாய் முகுந்தன் வெய்ய
நாமவேல் வாண னேடு
நிறைந்தபே ரன்பி னேத்த
நீற்ஞெளி பழுத்த மேனி
மறங்கிளர் கணிச்சிப் புத்தேள்
வரமளித் தகன்று னன்றே (28)

ஆடகச் செம்பொன் மேனி
யனுருத்தற் கன்பி னேடு
மோடரி நெடுங்கட் செவ்வா
யுசையினை யளித்து வாணன்

கோடிமேற் கோடி செம்பொன்
　　கொடுத்தடி போற்றக் கண்ண
வீடுயர் மாட மோங்கு
　　நகரெறி துவரை சேர்ந்தான் (29)

குண்டுநீர்க் கிணற்றின் மற்றோர்
　　குஞ்சரக் குழக்கன் றென்ன
மண்டுநீ ருலகங் காப்போ
　　னேந்தியாய்க் கிடப்ப மாயோன்
றிண்டிறற் கையாற் பற்ற
　　வவ்வுருத் திரிந்து வானி
னண்டர்கோ னுருவின் மற்றோர்
　　விமானத்தி னமர்ந்தா னன்றே (30)

யாரைநீ யென்ன லோடு
　　நிருபன்யா னளப்பில் பெற்றஞ்
சீர்கெழு மறையோர்க் கீந்தே
　　னவற்றிலோர் சேதா மீட்டென்
னூர்வயிற் புகுந்த வண்ண
　　முணர்கலா ததனைப் பின்னு
மார்வமோ டறஞ்செய் வான்போ
　　லந்தணற் களித்திட் டேனல் (31)

ஆயவெம் பாவந் தன்னு
　　லோந்தியா யமர்ந்தே னுன்றன்
சேயதா மரைக்கை தீண்டப்
　　பெற்றதால் வினைக டீர்ந்து
மீயுயர் விசும்பின் வைகும்
　　விண்ணவ னானே னென்னு
மாயனை வணங்கி யேத்தி
　　வானூ டதனிற் புக்கான் (32)

ஓர்குழை யொருவ னுயர்
   பாடியி னெல்லை யெய்தி
வாருணித் தேறன் மாந்திக்
   கோவியர் மகளி ரோடு
மார்வமோ டாட வாவென்
   றழைத்தலு மணுகா தாக
வேர்கெழு கலப்ப தன்னால்
   யமுனையை யிழுத்தா னன்றே (33)

வெருவொடு யமுனை யென்னை
   வலித்திடேல் விடுதி யென்னப்
பரிவொடும் வெள்ளை மேனிப்
   பண்ணவன் பாதம் போற்ற
வொருகுழை யொருவன் வாங்கா
   தொழிதலு முவப்பி னோடுங்
கரையெறி தொழுனை யன்னோன்
   கருத்துழி யொழுகிற் றன்றே (34)

பாவிற வண்ண னுயர்
   பாவைய ரோடு நண்ணித்
தூநதி யமுனைத் தெண்ணீர்
   தோய்தலுந் தொழுனை யாங்கு
நீனிறத் துகிலி ரண்டு
   நிலவுபொன் மாலை யொன்றும்
வேனில்வே ளனைய வெள்ளை
   மேனியோர்க் களித்த தன்றே (35)

பாவடிப் பருமயானைப்
   பவுண்டர வாசுதேவன்
றுவருக் தடக்கை யோடு
   சமைத்திரு கரங்கள் சேர்த்திக்

கோவடு நேமி சங்கங்
குருதிவாள் கதைவில் லேந்தி
யேவரு மருள மார்பின்
மறுவுமொன் றிலங்கத் திட்டி (36)

எந்திர வுவண மூர்ந்து
கொடியுமற் றதனை யேந்திக்
கந்தடு களிறு போலுங்
காசிவேந் தோடு கட்டுப்
பைந்துழாய் முகுந்தன் யானே
தானெனிற் படைஞ ரோடும்
வந்தம ருடற்று கென்று
வல்லையிற் றூது விட்டான் (37)

தூதுவ னுரைத்த மாற்றங்
கேட்டலுந் துளவத் தண்டார்
மாதவன் முறுவல் கோட்டி
வண்சிறைக் கலுழ னூர்ந்து
போதர வமரிற் புக்க
பவுண்டர வாசு தேவன்
மேதகு மவுலி நேமிப்
படையினால் வீழ்த்தி னானே (38)

பண்ணமைக் களிநல் யானைப்
பவுண்டர வாசு தேவன்
ணண்ணலந் திகிரி தன்னா
லற்றுவீழ்ந் திறந்த வாற்றாற்
கண்ணன துருவ மெய்திக்
கனைகடற் சுவேதத் தீவின்
விண்ணவர் தொழுது போற்ற
விற்றிருந் தின்பந் துய்த்தான் (39)

கூற்றென வருமே றென்னக்
குலவரை பெயர்க்கு மூழிக்
காற்றென வமரி னேற்றக்
காசிநா டாளும் வேந்தைப்
பாற்றினஞ் சுழலு நேமிப்
படையினுற் றடிந்து கண்ணன்
மாற்றல ரடுபோர் முற்றுத்
துவரைமா நகரிற் புக்கான் (40)

வண்டலர் துளவோன் செற்ற
வாரண வாசி வேந்தன்
றிண்டிறற் புதல்வன் கண்ண
னுருயிர் செகுப்பா னெண்ணித்
துண்டவெண் டிங்கட் கண்ணி
சூடிய பரனை யேத்தி
மண்டுசெந் தழலின் வெய்தாய்
மாரண மியற்றி னானே (41)

அழலுமிழ் தழல்கட் பேழ்வாய்ப்
பூதமொன் றதனிற் றோன்ற
மழவிடை யுயர்த்தோன் றொன்றி
மற்றுநம் மடியார் மேலிச்
சுழல்விழிப் பூதந் தூண்டிற்
றூண்டினோ ராவி துய்க்கும்
நிழலுமிழ் வேலோ யென்ன
நிகழ்த்தினன் மறைந்து போனான் (42)

நண்ணிய குறுத்தாட் பூதந்
தன்னையன் னமை வேலோன்
கண்ணனைக் கோறி யென்ன
விடுத்தலுங் கடிதி னேகித்

தண்ணளிப் பெருகி வேற்கட்
சத்திய பாமை யோடு
மண்ணல்கு நாடு மேல்வை
யடைந்துமுன் னின்ற தன்றே (43)

மண்டுவெந் தழலிற் றோன்றும்
வாளெயிற் றழல்வாய்ப் பூதங்
கண்டுநெஞ் சழிய நேமி
விடுத்தலுங் காசி யெய்தித்
திண்டிறல் வேந்த விசன்
சேவடிக் கன்பு செய்யுந்
தொண்டன்மேல் விடுத்த தென்னென்
றவனுயிர் தொலைத்த தன்றே (44)

கூன்பிறை யெயிற்றுப் பேழ்வாய்ச்
சுழல்விழிக் குறுந்தாட் பூதம்
வான்படர்ந் தேகி விட்ட
மன்னனைக் கோற லோடு
மூன்சுவைத் தொளிறு நேமி
யமர்பெரு தொல்லை மீண்டு
கான்படு துளவோன் செங்கை
கமலத்தி னுறைந்த தன்றே (45)

ஒருகுழை யொருவ னுயர்
பாடியி னுறையு நாளின்
* மருவிவேந் துவித னென்னும்
வானர வீரன் வெய்ய
செருமலைந் தேற்ப வன்றேன்
சிரத்தினை யலத்திற் சிந்தி
கருமுகில் வண்ணற் காண்பான்
றுவரையின் கடிதி னுற்றான் (46)

* மருவிவேந் துவித னென்னும் (பா, பே.)

வழங்குவிற் றடக்கை மன்னர்
மணிமுடி யுரிஞ்சித் தேய்ந்து
பழந்தழும் பிருந்த பொற்றாட்
சுயோதனன் பரிவி னீன்ற
செழுங்கனி துவர்ப்ப நாளுந்
தித்திக்கு மபிர்தத் தீஞ்சொற்
கொழுங்கயற் கண்ணி கன்னி
மாடத்திற் குலவு நாளின் (47)

காம்படு தோளி செவ்வி
கேட்டலுங் கலங்கி மாழ்கிச்
சாம்பனள் ளிருளிற் கன்னி
மாடத்திற் றனிச்சென் றெய்தி
யேம்பலின் யாழோர் கூட்டத்
திளமுலைப் போக மாந்திப்
பாம்படு மல்கு லோடுங்
கரந்தனன் படரு மேல்வை (43)

அன்னது கேட்டு வெம்பிச்
சுயோதனன் சகுனி யாடற்
கன்னன்விற் றுரோணன் வெம்போர்க்
காங்கயன் முதல வீரர்
பொன்னணி தடந்தேர் தூண்டிப்
புலிவளைந் தென்னச் சூழ்ந்து
மன்னெடுங் குமரன் றன்மேல்
வடிக்கணை மாரி பெய்தார் (49)

பெய்தவெம் பகழி யாவும்
பிறைமுகக் கணையான் மாற்றி
வெய்தின்மற் றவர்க டிண்டேர்
வெஞ்சிலைத் துணித்து வீழக

கொய்தகன் மார்புந் தோளுங்
கொடுங்கணைத் தூணி யென்ன
வெய்துவிற் சரம்பன் றிண்டோ
ளெறுழ்வழி காட்டி னனே (50)

ஆடமர்க் கொருவ னென்ன
வகனிலத் தோசை போய
விடுமன் சாம்ப னங்கை
வில்லினை யறுத்து வீழ்த்தான்
கூடலர் செகுக்குங் கன்னன்
†கொடுஞ்சியந் தேரை மர்ய்த்தான்
பீடுறு சகுனி செங்கைப்
பாசத்தாற் பிணித்திட் டானே (51)

புலியையாப் புறுத்த தென்னப்
போர்க்கெழு சாம்பன் றன்னை
வலியினிற் பற்றி மன்னர்
வன்சிறை படுத்த மாற்றங்
கலையுணர் கண்ணன் கேட்டு
வெகுளலுங் கடிதி னேகி
மலைதிற னெழிதி யான்போய்
மீட்குவன் வல்லை யென்னு (52)

பானிறப் படிவத் தண்ணல்
கதுமெனப் படர்ந்து போகி
வேனிறத் தானை மன்ன
னத்தின புரியின் மேவி
மானவேற் சாம்பன் றன்னை
வல்லையில் விடுக்கி லீரே
*ஊனமற் றவக்குண் டென்னு
வுக்கிர சேனன் சொன்னுன் (53)

*ஊனமற் றமக்குண் டென்னு (பா. பே.)
† கொடிஞ்சியந் தேரை ஷை

என்னவோர் தூது போக்க
வரவுயர்த் திட்ட வெற்றி
மன்னவர்க் கவன்சென் றோத
மறுத்தமை கேட்ட லோடுங்
கன்னியம் புரிசை மூதூர்க்
கங்கையிற் கவிழ்ப்ப னென்னக்
கொன்னுனைக் கலப்பை யாலோர்
குழையினன் வாங்கி னானே (54)

அத்தின புரியை யன்னோ
னலத்தினல் வாங்க னோக்கி
முத்தவெண் கவிகைச் செங்கோற்
சுயோதனன் முதல வேந்தர்
தத்துற வெய்தி வெளவுஞ்
சாம்பனைத் தைய லோடும்
வித்தகன் முன்ன ருய்த்து
விரைமலர்த் தாளின் வீழ்ந்தார் (55)

ஒருகுழை யொருவ னுள்ள
முவந்திடச் சாம்ப னென்னு
முருகவிழ் தாரி னூர்க்கு
முழங்கழல் சான்ற தாகத்
திருவமே கலையை நல்கி
யளப்பருஞ் சிறப்புச் செய்ய
பரிவுறு மைந்த னோடுந்
*துவரையம் பதியிற் புக்கான் (56)

**வேறு**

எண்ணிரண் டாயிர மகளி ரின்புற
நண்ணுதல் யாங்கென நாத யாழ்முனி
கண்ணுற நோக்கவோ ரொருவர்க் காழ்கடல்
வண்ணனே ருருவமாய் வதிதல் கண்ணுறு (57)

* துவரையம் பதிபுக்கானே (பா. பே.)

மனத்திறும் பூதுறு மகதி யாழ்முனி
புனத்துழாய் மார்பனைப் புகழ்ந்து போற்றுருக்
கனைத்துவண் டிமிர்தரு கற்ப காடவி
நனைத்துணர் நறைகமழ் நாட்டி னெய்தினன் (58)

திருந்தலர் தொழுஞ்சரா சந்தன் றீதுற
வருஞ்சிறைப் படுத்திய வரசர் யாவரும்
வருந்தற வெங்கனை வல்லி நீக்கிநீ
புரந்தருள் வாயெனத் தூது போக்கினர் (59)

தூதுவர் மன்னவர் சொன்ன யாவையு
மாதவன் சேவடி வணங்கிக் கூறலு
நாதயாழ் முனிவரன் றரும னன்மகந்
தீதறப் புரிவது செப்பி னனரோ (60)

தருமன தோலைப்* தண்டு ழாய்புனை
கருமுகி லனையமெய்க் கண்ணன் காண்கயான்
அருமகம் புரிகுவ னதற்கு வல்விரைந்
துரிமையாங் கிளையொடீங் குறுதல் வேண்டுமால் (61)

என்றிவை பொறித்திடு முடங்க லேடவிழ்
மன்றலந் துளவினேற் களித்து வல்லையி
னென்றிய தூதுவர் வணங்க யொண்மணிக்
குன்றனு னுவகையிற் குளித்திட் டானரோ (62)

*ஆறறி யமைச்சரோ டலங்கற் குன்றனன்
வேறிருந் தோலையின் பொருள்வி ரித்துணர்ந்
தூறுசெய் வேற்படை மிடைய வொக்கலோ
டேறனு னிந்திரப் பிரத்த மெய்தினன் (63)

* ஆறியனமைச்சரோ டலங்கல் (பா. பே.)

தருமன்வெந் திறலுடைத் தம்பி மாரொடுங்
கருமுகி றனையெதிர் கொண்டு கண்ணறுக்
கரியநற் பூசனை யாற்றி யன்பொடு
முரிமையி னளவளா யுவந்து புல்லினன் (64)

**வேறு**

ஆற்றரு மிராய சூய
மாற்றுவான் மைந்த னென்னப்
போற்றிவேற் றருமன் கூறப்
புயனிற வண்ணன் சொல்வான்
கோற்றொடிப் புரிசை சூழுங்
கொடிக்கிரி விரசங் காக்கு
மாற்றலர்ச் செகுத்தல் லாமன்
மகவினை முடியா தென்றான் (65)

ஈங்கிவை முடியும் வண்ண
மென்கொலென் றிசைத்த லோடும்
வாங்குவில் விசயன் வீமன்
றன்னொடு மென்னை வல்லே
யாங்குநீ விடுத்தி யென்னரி
லரும்பகை முடிப்பே மென்றான்
பூங்கழ லரச னீவிர்
போமினென் றுரைப்பப் போனார் (66)

கடகரி யனைய வெற்றி
மூவருங் கடிதி னேகிக்
கொடிமதிட் புரிசை தாவிக்
கோநக ரதனி லெய்தி
முடிகெழு வேந்தன் முன்போய்
மொய்யம ரிரந்து நிற்ப
வடையலர்ப் பரவி னோன்றாட்
சராசந்த னறிந்து சொல்வான் (67)

அந்தண ரல்லீர் நீவி
 ரருச்சுனன் சிறியன் மற்றை
நந்தகோன் சிறுவன் பல்காற்
 றேற்றவ னமை வெள்வேற்
கந்தடு களிநல் லியானை
 போன்றிடுங் கழற்கால் வீமன்
வந்தெதிர்ப் படுக வென்று
 வாய்மடித் துரப்பிச் சொன்னான் (68)

இருவருங் களத்தி னெய்தி
 யெறும்வலித் தடக்கை வேழம்
பொருவது போலச் சீறி
 புயவலி நோன்மை காட்டி
மருவுமூ வைந்து வைகல்
 கங்குலும் பகலு மாறு
வுருமிடித் தென்னக் குத்தி
 யுடன்றுவெம் பூசல் செய்தார் (69)

கண்ணினால் வீமன் காணக்
 கற்றிரள் சுண்ணஞ் செய்யு
*மண்ணமை முழவுத் திண்டோண்
 மணிநிற வண்ணன் மற்றோர்
நண்ணிய பசும்புல் நேரே
 கிழித்தலுங் குறிப்பு நாடிப்
பண்ணமை திணிதோள் வேந்தை
 வலியினாற் பாரின் வீழ்த்தான் (70)

தாப்புலி யனைய வெற்றிச்
 சராசந்தன் குறங்கைத் தாளா
லீப்பற மிதித்து மற்றை
 தாணெடுங் கையாற் பற்றிக்

* மண்ணெனு முழவு (பா. பே.)

கோப்பெருஞ் சிங்க மன்ன
ஞுடலிரு கூற தாகப்
பாப்பணைக் குருசி லேத்தக்
கிழித்துயிர் படுத்திட் டானே (71)

மற்றவன் புதல்வன் றன்னை
மணிமுடி சூட்டி யன்னோன்
செற்றுவெஞ் சிறையி லிட்ட
மன்னரைச் சிறையி னீக்கி
யொற்றவ ரோடும் வேந்தன்
பயந்தவேற் குமர ரோடும்
பொற்றடந் தேரி னேறி
யிந்திரப் பிரத்தம் புக்கான் (72)

நறைகமழ் துளவோன் வீம
னருச்சுன னுமை வேற்கை
யறைகழ லவனி வேந்த
னவையினி லமர்ந்த பின்னர்
திறையொடும் புகுத வேந்தர்க்
களப்பருஞ் சிறப்புச் செய்து
மறைபயில் ராச சூய
மகிழ்வுட னியற்றி னானே (73)

வீடுமன் றுரோணன் கன்னன்
சுயோதனன் விதர்ப்பர் கோமா
னுடவர் பணியு நோன்ற
ளடற் சிசுபாலன் வெம்போர்
பீடுசான் முழவுத் திண்டோள்
வழுதியர் பெருமா னுதி
நீடிரும் புவியில் வேந்தர்
யாவரும் நிறைந்தா ரன்றே (74)

எற்படு பருதி வைவேற்
றருமன்வீ டுமனை யேத்தி
முற்படப் பூசை யார்க்குப்
புரிவது மொழிகென் றேதக்
கற்பட நிவந்த திண்டோட்
கண்ணனுக் காற்று கென்ன
மற்பட நிவந்த தோளான்
வரன்முறை யாற்றி னனே (75)

ஆற்றிய பூசை நோக்கி
யடற்சிசு பாலன் சீறி
யேற்றின மேய்க்கும் புன்மை
யிடையனீ யிவர்கள் செய்த
மாற்றரும் பூசை தன்னை
மருததென் னென்று வைதா
னாற்றின்மேற் பட்ட தீஞ்சொல்
னொந்துளங் கொதித்து வைதான் (76)

மூன்றுகை மூன்று செங்கண்
முடியொரு மூன்றி னேடுந்
தோன்றயா னெடுப்ப வின்னோன்
மனிதர்போற் றிரிந்து தோன்ற
வின்றவள் பத்து வெஞ்சொற்
பொறுக்கென விசைத்த வாற்றாற்
சான்றுநீர் நூறு வெஞ்சொற்
றகவொடும் பொறுத்தே னென்றான் (77)

தாருக னடவுத் திண்டேர்
தாமரைக் கண்ண னேறிப்
போர்புரி களத்தின் வெய்திற்
புக்கறை கூவ லோடுங்

கார்முகங் குழைய வாங்கிக்
கட்கடை வடவை தூங்கச்
சேரலர்க் கிடியே றன்னச்
சேதிப னமரி னேற்றான் (78)

சீற்றமுந் தானும் வேறு
தெரிப்பருந் தகைய னாகி
யேற்றுரி முரச மார்ப்ப
வெரிமணித் தேரி னேறிக்
காற்றென வசனி யென்னக்
கனைகட லென்ன வார்த்துக்
கூற்றிரு கடைவாய் நக்கக்
கொடுங்கணை தூவி னானே (79)

ஆங்கவன் கடலந் தானை
யனைத்தையு நூழி லாட்டித்
தூங்கிருட் பிழம்பு நக்கத்
துறுகதிர் விரிக்கும் வெய்ய
வீங்கொளி நேமி தூண்டிச்
சேதிபன் வில்லி னோடு
மோங்கிருஞ் சென்னி தன்னை
*யொல்லையி னறுத்து வீழ்த்தான் (80)

முற்பவ மதனில் வெய்ய
விரணியன் முறையிற் றோன்றும்
பிற்பவத் துலங்கொ டிண்டோ
ளிராவண னாய பேற்று
லற்புட னிறந்த விந்தச்
சேதிப னாவி சோதி
வெற்பென வெழுந்து கண்ணன்
மலரடி மேவிற் றன்றே (81)

---

* யொல்லையி னறுத்தா னன்றே (பா. பே.)

விரைமலர் தூவி விண்ணோ
 ரார்ப்பவே யிசைக்கும் பச்சை
*முருகவிழ் துளபத் தண்டார்
 துயல்வரு முழவுத் தோளான்
றருமனல் வேள்வி முற்றத்
 தகவுட னினிதி னாற்றிப்
புரிசைசூழ் துவரை மூதூர்
 பொருந்திவீற் றிருந்தா னன்றே (82)

பெய்மலர்ப் பகழி யங்கை
 பிரத்தியும்ம னன்வந் தெய்தி
†யையகே ளகவுத் தோடுஞ்
 சாலுவ னணைந்து வெம்போர்
செய்துநஞ் சேனை யாவுஞ்
 செருக்களத் துழக்கிப் போனான்
வெய்தினி லென்னக் கண்ணன்
 வெருண்டுதேர் கொணர்தி யென்றான் (83)

தாருகன் கொணர்ந்த மான்றே
 ரிவர்ந்தட லாழி தாங்கி
யார்கலி நடுவ ணெய்தி
 யடற்கருஞ் சேனை யோடும்
பாரினின் றெழுந்து விண்ணிற்
 ‡பறந்திடுஞ் சாப மீது
சேருஞ்சா லுவனை வெய்திற்
 றிருமறு மார்பன் கண்டான் (84)

காண்டலு மவுணன் சீறிக்
 கப்பண முசுண்டி சூலம்
பாண்டவர் சகாயன் வெய்யப்
 பணைப்புயத் தெறிந்து நக்கான்

---

* முருகலர் துளவத் தண்டார் (பா. பே.)
† ஐயகேள் சவுபத் தோடும் (பா. பே.)
‡ பறந்திடுஞ் சவுப மீது (பா. பே.)

மாண்டகு வரிவில் வாங்கி
யவுணர்கோன் வரிவில் விழத்
தூண்டிவெந் தூணைக் கன்னப்
படையினுற் றெலைத்திட் டானே (85)

### வேறு

மல்லினன் மல்லரை மாய்த்த கண்ணனை
வில்லினுல் வெலற்கரி தென்று மீயுயர்
கல்லினு லமைத்தன கலவைத் தோளினு
னல்லல்கூர் மாயையொன் றமைத்தன் மேயினன் (86)

ஆனக துந்துமி யென்று மாற்றல்சால்
மானவே லரசனை மாயை யாலமைத்
தானுகர் நேமியோ னுள்ள மாழ்குறத்
தானவன் வாளினுற் றடிந்திட் டானரோ (87)

மாயனு மயங்கிவெம் மாயை யென்றுணர்ந்
தேயசா லுவனெடுஞ் சவுட மிற்றுவெந்
தீயெழ வடவையுந் தியத் தீய்த்தெழு
மாய்கதிர்ச் சக்கர மழன்று தூண்டினன் (88)

தூண்டிய சக்கரந் தொலைவில் சாலுவன்
மாண்டகு சென்னியு மியங்கு மானமு
மீண்டிய கிளையுட னிமைப்பிற் சிந்துறு
மீண்டது கண்ணனும் வெகுளி நீங்கினன் (89)

மாதவன் சாலுவற் செகுத்து மாண்பொடும்
போதரு நெறியினிற் பூசல் வண்டறைத்
தாதலர் பசுந்தொடை தந்த வக்கிரன்
காதிவெஞ் சிலையுமிழ் கணைக ளுவினன் (90)

தந்தவக் கிரனுட றரையின் வீழ்தரக்
கந்தடு கடாக்களி றனைய கார்முகின்
மந்தரக் கிரிநிகர் கதையின் மாட்டினன்
னெந்திரக் கலினமான் றேரி னேறினன் (91)

வம்பவி மூலங்கலந் தந்த வக்கிரன்
*றம்பிவேல் விடூரதன் சமரி னேற்றலுங்
கம்பவெங் கரிநிகர் கண்ணன் கார்முகத்
தம்பினு லவன்றலை யறுத்து வீழ்த்தினன் (92)

அங்கலும் மேனியர் முகத்தை யாய்கதிர்த்
திங்களென் ரும்பல்வாய் திறக்கும் வாவியும்
பொங்கரு முடுத்துயர் துவரை புக்கனன்
சங்கொடு சக்கரந் தரித்த கொண்டலே (93)

வேறு

பூண்டவெஞ் சமரின் முன்னம்
    புகுந்தெனை யழைத்த வெற்றி
மாண்டகு வரிவில் லாண்மை
    யருச்சுனன் றனக்கு மான்றேர்
தூண்டுவ னென்னக் கண்ணன்
    போதலு மிராமன் றாய்தா
யீண்டிய தெய்வ நன்னீ
    ராடுவா னியைந்து போனன் (94)

போதரு நெறியிற் சூத
    முனிவரன் புராணம் யாவு
மாதவர்க் கோது மேல்வை
    யிராமனை வணங்கா னாகத்

* தம்பிமேல் விடூரதன் (பா. பே.)

தீதுறு வெகுளித் தீயா
லவனுயிர் சிதைப்ப வெய்தி
யேதஞ்செய் பிரம கத்தி
யிராமனைத் தொடர்ந்த தன்றே (95)

பற்றிய பாவ நீங்க
மாதவர்ப் பணியா லையன்
மற்றவன் புதல்வன் றன்னைச்
சூதனுய் வைத்துப் போற்றி
யெற்றுதெண் டிரைநீர்க் கங்கை
யாதியாய்க் கன்னி யிரு
யுற்றநற் றீர்த்தம் யாவு
மொல்லையி னாடு மெல்லை (96)

கொல்சினக் கூற்ற மென்ன
வந்தண ராவி கொல்லு
மில்வலன் புதல்வ னைய
வலனமர்க் கெதிர்ந்து சீற
மல்லடு திணிதோள் வெள்ளை
மேனியோன் வலியிற் பற்றி
யொல்லையி னலத்தா லன்னோ
னுருயிரொழித் திட்டானே (97)

விடுமன் முதலா யுள்ள
வேந்தரை யைவர் தம்மா
லாடமர்க் களத்தின் வீட்டி
யடர்க்குமீ ரொன்பா னாளிற்
பீடுசால் வீம னேடும்
பெய்கழல் மன்னர் மன்ன
வீடமர் புரியு மெல்லை
யலாயுத னிமைப்பின் வந்தான் (98)

அரவுயர்க் கொடியோன் சென்னி
தகர்ந்திட வாடல் வீம
னுருமெனக் காலாற் சிறி
யுதைத்தலு மிராம னேனு
தெரியெழ விழிப்பக் கண்ணா
வீரந்துயர் வெகுளி மாற்றப்
புரிசைசூழ் துவரை தன்னி
லாங்கவன் போயி னானே (99)

பாரத முடித்துக் கண்ணன்
புவியுறு பாரந் தீர்த்து
வார்முர சுயர்த்த வெற்றித்
தருமனை மவுலி சூட்டி
நேரலர் பணிந்து போற்ற
வொருகுடை நீழ றன்னி
லார்சலி யுலக மியாவு
மவனடிப் படுத்தி னானே (100)

கச்சைமால் யானை போலுந்
தருமற்குக் களிப்பி னோடு
மச்சுவ மேத மோர்பத்
தினிதினி லாற்று வித்துச்
செச்சையந் துளவத் தண்டார்
திளைத்திடு முழவுத் திண்டோட்
பச்சைமால் துவரை யெய்திப்
பரிவின்வீற் றிருந்தா னன்றே (101)

விசயன்மான் றடந்தே ரூர்ந்த
கண்ணனை விழைவிற் காண்பான்
குசலமா முனிவ னெய்தித்
தருப்பண முதவக் கொண்டல்

நசையினோர் பிடிவாய்க் கொண்டு
 பின்னரு நயத்த னோக்கி
வசையறு கமல வீட்டின்
 மலர்மகள் விலக்கி னாளே (102)

அளவளாய் முகமன் கூறி
 யந்தணன் றன்னை யைய
னுளமகிழ்ந் தன்பி னோடும்
 விடைநல்க *வொல்லை யெய்தித்
தளர்வுறும் வினையா லொன்றுந்
 தந்திலன் றளர்ந்தோர் யார்க்குங்
களைகணுங் கண்ண னென்று
 கலுழ்ந்துநன் மனையிற் சென்றான் (103)

மதியக டுரிஞ்ச வோங்கு
 மாடத்தின் மகளிர் சூழத்
ததைமலர் செல்வி போலத்
 தன்மனை யாட்டி வைகும்
புதுமையு மளகை மூதூர்
 புரந்தரு ளியக்கர் வேந்தன்
நிதியறை திறந்தா லன்ன
 நீணகர் வளனுங் கண்டான் (104)

காண்டலும் வியந்து நோக்கி
 கண்ணனைப் போற்றி யன்பு
பூண்டிடு மனைவி யோடும்
 கிளையொடும் புதல்வ ரோடுஞ்
சேண்டகு சிறப்பின் மிக்க
 விந்திர திருவ னாகி
மாண்டகு மறையோ னுள்ள
 மகிழ்ந்துவீற் றிருந்தா னன்றே (105)

பருதியஞ் செல்வன் றன்னை
பாந்தள்வாய் படுத்துங் காலத்
திருநிலத் தரசர் யாருஞ்
சிமந்தக மடுவி னெய்தி
மருவினீ ராடு மெல்லை
வாள்வசு தேவ னென்போன்
அறியநல் வேள்வி யொன்றுங்
கினிதினி லாற்றி னானே (106)

முருகுறழ் தோற்றத் தைவர்
முதுமனைக் கிழமை பூண்ட
தருமனன் புதல்வ ராதி
மங்கையர் துளவத் தண்டார்க்
*கருமுகின் மன்ன வில்வாழ்
கரும்புறழ் குதலைச் செவ்வா
யரிவையர் தன்னைக் காண்பான்
சாலையி னடைந்தா ரன்றே (107)

கலவமா மஞ்ஞை யன்னார்
தழிஇக்கொள வெய்துங் காலை
மலையொடு மலைகள் சேரு
†மாறுபோல் மலைந்து வீங்கு
முலையொடு முலைக டம்மின்
மோதலு முயன்று புல்ல
விலகுபொற் றொடிக்கை நீள
மின்மையா லிறைஞ்சி நின்றார் (108)

தளரிடை மெலிய வீங்குந்
தடமுலைக் கோதை மாதர்
அளவளாய் முகமன் கூறிச்
சிலபக லமர்ந்த பின்னர்

* கருமுகில் வண்ண னில்வாழ் (பா. பே.)
† மாறுபோல் வளர்ந்து (பா. பே.)

வெளிறெறி கேள்வி மிக்க
தருமனை முதலாய் மேவு
நளிர்கட லவனி வேந்தர்
தத்தம நகரிற் போனார் (109)

கண்ணனு மூன்று திங்கள்
மதுரையிற் களிப்பின் வைகி
நண்ணுசீர் நந்த கோனைப்
பாடியி னண்ணு கென்ன
வெண்ணருஞ் சிறப்பி னோடும்
விடைநல்கித் துவரை யென்னும்
புண்ணிய நகரி னெய்திப்
பொலிவின்வீற் றிருந்தா னன்றே (110)

இடங்கர்வாய்ப் பட்ட வுன்றன்
குருமக விளிதி னெய்தத்
தடங்கட லதனிற் புக்குந்
தந்தனை யதுபோற் றுவு
மடங்கலே றனைய கஞ்சன்
மாட்டிய மைந்தர் தம்மை
யடங்கலர்ச் செகுத்த வேலோ
யளித்திட வேண்டு மென்றாள் (111)

தேவகி யுரைத்த மாற்றங்
கேட்டலும் பிலத்திற் சேர்ந்து
மாவலி முன்ன ரெய்தி
மரீசிதன் மைந்தர் வேந்த
னேவறு சாபந் தன்னா
லிரணியர்க் குதித்தா ரன்னோர்
மேவுமென் முன்னோ ராகிக்
கஞ்சனு லாவி விந்தார் (112)

ஆங்கவர் நின்பான் மேவு
மறுவரு மளித்தி யென்னப்
பூங்கழற் குமரர் தம்மை
மாவலி புகழ்ந்து நல்கித்
தேங்கொள் பனந் துளவோன் பாதம்
வணங்கலுஞ் செங்கண் மாய
னேங்கெழிற் புதல்வர் தம்மைத்
தேவகி முன்ன ருய்த்தான் (113)

மைந்தரைக் காண்ட லோடும்
வனமுலை சுரந்து தீம்பால்
சிந்திட வுச்சி மோந்து
தேவகி மகிழ்ச்சி கூர
வெந்திறற் புதல்வர் கண்ணன்
* மென்கரத் தணைத்த பேற்று
லந்தமில் சாப நீங்கி
யமரராய் விசும்பிற் போனர் (114)

சுருதிநூன் மறையோ னுய
சுவேதனு மமரிற் றுன்னர்
வெருவவாள் விதிர்க்கும் வெற்றி
விறல்வெகு லாச்சு வப்பே
ரரசனு மினிது வைகு
மிதுலையி னுயர் பாடி
மருதிறத் தவழ்ந்த கண்ணன்
மாதவ ரோடும் புக்கான் (115)

இருவரு மொருங்கு புக்கு
விருந்துரைத் திருப்ப வையன்
மருவுதன் னுருவம் போல
மறையவ ருருவை யெல்லா

* மென்கரத் தமைந்த பேற்றால் (பா. பே.)

முருவிரண் டாக்கிச் சென்றோர்
காலையி னிருவ ரில்லிற்
பொருவரும் விருந்துண் டன்னோர்க்
குயர்கதி யளித்துப் போனான் (116)

முப்பத்து மூன்றுவது
கண்ணன் பூமிபாரந் தீர்த்த வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 2194.

---

உ

## முப்பத்து நான்காவது
## கண்ணன் வைகுந்த மடைந்த வத்தியாயம்

---

சுருதியோர் நான்கு வேத
*முனிவர ருருவிற் றுன்னிக்
கருமுகி லனைய மேனிக்
கண்ணனை வணங்கி யேத்தி
முருகவிழ் துளவோன் வேதன்
முக்கணெம் பெருமா னென்ன
மருவிய மூவர் தம்மி
லளியுள ரெவர்கோன் மாதோ (1)

என்னலுங் கண்ண னென்னை
நான்முகன் றன்னை யீன்ற
முன்னவன் கருணைக் கெல்லா
முதலவ னரனு மன்றோன்
றன்னுடைக் கருணை தன்னைச்
சாற்றுவன் கேட்டி ரெனனுக்
கன்னியந் துளவத் தாரோர்ன்
கருத்திடை வணங்கிச் சொல்வான் (2)

---

* முனிவர குருவிற் றேன்றி (பா. பே.)

வெந்திறற் சகுனி ஷமந்தன்
விருக்கன்வெவ் விடத்தை யொப்பா
னந்தமு முதலு மில்லா
வண்ணலைப் பணிந்து போற்ற
வெந்தைமுன் னின்று வேண்டு
நல்வரங் கேட்டி யென்ன
முந்தியார் சிரத்தைத் தொட்டே
னவனுயிர் முடிதல் வேண்டும் (3)

என்றலு மளித்தே மென்ன
நின்சிரத் தென்கை வைத்தாற்
பொன்றினு யென்ன லீது
சரதமென் றுரைத்துப் பொங்கிக்
குன்றவில் லவன்முன் செல்லக்
கூற்றின்வெங் கூற்ற மோடப்
பின்றொட ரவுண னுள்ள
மயக்கியான் பேதித் தேனல் (4)

மத்தமு மறுகுஞ் சூடிப்
பேயுடன் மயானத் தாடும்
பித்தன துரையைக் கேட்டுப்
பின்றொடர்ந் திடுவ தென்னே
முத்தலைச் சூல மேந்து
மவுணநின் முடிமேற் செங்கை
வைத்திடு கென்ன வைத்தான்
மணிமுடி சிதர்ந்து வீழ்ந்தான் (5)

ஆங்கவன் மாய யான்போ
யவிர்மதி முடித்த வண்ணல்
வீங்கிய கருணை நோக்கி
மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர்

தாங்கிட வலஞ்செய் தன்பிற்
றுறுமலர் தூவி யன்னோன்
பூங்கழல் பணிந்து போற்ற
விடைகல்கிக் கயிலை புக்கான் (6)

ஆதலாற் பணிந்து போற்று
மடியவர்க் கெளிய னாகு
மாதுமை பங்க னல்லான்
மற்றுமோர் தெய்வ முண்டோ
யேதமற் றவன்பொற் றாளே
யிறைஞ்சுமி னென்று செப்பத்
தீதறு மறைகள் யாவுந்
தெளிவொடும் போய வன்றே (7)

பொன்றிணி துவரை மூதூர்ப்
பொருந்துமோர் மறைவ லாள
னொன்றொழி பத்து மைந்தர்
பிறந்துழி யொல்லை வியக்
கன்றிய வுளத்தி னோடுங்
களியிளா வண்டு பாடு
மன்றலந் துளவ மாயன்
மணிநகர் வீதி புக்கான் (8)

யானுமென் மனையும் பாவ
மிழைத்திலே நறுந்தே னூற்றுங்
கானமர் துளவோன் செங்கோன்
முறைமையிற் காத்தி டாம
லீனம திழைத்த றன்னா
லெய்திய தென்று மாழ்கிக்
கோனகர் வாயில் தன்னிற்
குறுகினன் முறையிட் டானே (9)

கண்ணனை முதலா யுள்ள
யாதவர் காக்கொ ணுதென்
றெண்ணின ரிருப்பத் தெண்ணீ
ரெழுகடன் ஞாலம் போற்று
மண்ணலங் தனிவில் லாண்மை
யருச்சுனன் மறையோன் முன்னர்
நண்ணிவெஞ் சிலையை நோக்கி
நகைத்திவை யுரைக்க லுற்றுன் (10)

மாயிரு ஞால மேத்து
முனிவருன் மனைவி யுற்ற
தூயநற் கருப்பந் தன்னை
யுயிர்ப்புழி முன்னர்த் துஞ்சும்
சேயென நினையல் வெய்தாச்
சினவுவெம் பாசம் வீக்கி
யாயிரங் கூற்றம் போதந்
தழிப்பினு மழிக்கொ ணுதால் (11)

என்றுவில் விசயன் கூற
விரங்கிய மறையோன் றேறி
மன்றநன் மனையி னெய்தி
மகிழ்வுட னிருக்கு நாளிற்
றுன்றிருங் கூந்த றாய
கருமுதிர்ந் தகடு நொந்தா
ளின்றுயிர்த் திடுவ ளென்ன
வருச்சுனர்க் கியம்பி னுனே. (12)

மறையவ னுரைத்த மாற்றங்
கேட்டலும் வரிவி லேந்தி
நறவுகொப் பளிக்கும் பைந்தார்
நாறிடுங் கூந்தற் பேதை

பொறையுயிர்த் தருளுஞ் சாலே
கணையினற் பொதிந்து காவா
வறைகழ லவனி வேந்த
னருந்துயி லின்றி நின்றான் (13)

காற்றும்வெம் பொறிகள் சிந்துங்
கனலியுந் தறுகட் பேழ்வாய்க்
கூற்றுமுன் னுறுத லஞ்சக்
கொடுமரங் குழைய வாங்கி
யேற்றிய விசயன் காத்து
நிற்பவு மீன்ற மைந்தன்
றேற்றமு மற்ற தாழின்
சூழ்ச்சியார் காக்க வல்லார் (14)

ஈன்றசே யாவி யன்றி
யுடலமுங் காணு தேங்கி
யான்றநூற் கேள்வி போய
வந்தண னழுது விம்மி
மூன்றுல கத்தி னுள்ள
மூரிவிற் கொருவ னென்னுந்
தோன்றலீ காத்த வண்ண
நன்றென்று வழன்று சொன்னான் (15)

அவ்வுரை கேட்ட லோடு
மருச்சுன னழன்று சீறிப்
பவ்வா ருதியோ ரேழும்
பாதல மேழு மெய்தாச்
செவ்வனே திசைக ளெட்டுந்
திசைமுக னுலக மாதி
யெவவெலா வுலகுந் தேடிக்
காண்கலா திணைந்து சொல்வான் (16)

வஞ்சின மிழுக்கிற் றுவி
வாழ்கலே னெரியின் வீழ்ந்து
துஞ்சுவே னென்னப் பார்த்தன்
றுணிதலுங் கண்ண னெய்தி
நெஞ்சழிந் திரங்கி நையே
லிகரெறி முனிவ னீன்ற
மஞ்சனைத் தருவல் சேறு
மைத்துனத் தோழ வென்றான் (17)

இருவரும் விரைவி னெய்தி
யிரவிதேர்த் திகிரி செல்லும்
பொருவரு நேமி வெற்பைக்
கழிந்துபோ யிருளின் பொம்மல்
மருவிய வுலகி னெய்த
நெறிமயங் குற்ற வாற்றால்
விரிகதிர் கவிழ்க்கு மாழி
நினைத்தனன் மேக வண்ணன் (18)

பாய்கதி ரிரவி கோடி
யெழுவபோற் பருதி யெய்தி
மேயநல் லிருளின் குப்பை
விழுங்கிமுன் செல்ல வேகி
யாயிரஞ் சுடிகை நெற்றி
யரவணைப் புறத்திற் றுஞ்சு
மாயிரு ஞால முண்ட
மரகதக் குன்றங் கண்டார் (19)

காண்டலு மகிழ்ச்சி யெய்திக்
கருந்துழாய் புனைந்த கண்ணன்
பாண்டவ னோடு மெய்திப்
பதமலர் பணிந்து போற்றச்

சேண்டிக ழிரவி யேய்க்குந்
திருமணி கிடந்த மார்ப
ஞண்டகை யினிநி ஞேக்கி
வந்தவா றறைதி யென்ருன் (20)

மறைவிளை யாடுஞ் செந்நா
வந்தணன் மகிழ்வி னின்ற
சிறுவரைத் தேடி வந்தேந்
திருமறு மார்ப வென்ன
வறைதலுஞ் சிறந்த மைந்த
ரையிரு வரையு நல்கி
நறைகமழ் துளவத் தண்டார்
நாரணன் புகல லுற்ருன் (21)

தகவுட னம்மை யீண்டுக்
காண்பது தலைக்கி டாகப்
புகரெறி மறையோ னின்ற
புதல்வரைக் கொணர்ந்தே னீவிர்
நிகரறு புவியின் பார
நீக்கினிர் சிறிது நீக்கி
யுகமுடி வதனி லீண்டுப்
புகுதுக வொல்லை யென்ருன் (22)

மணியெழு வணைய திண்டோ
ளிருவரும் வணங்கி யேத்திப்
பணியணைப் புறத்திற் றுஞ்சு
பரமனல் விடைகொண் டேகி
வணிகெழு துவரை யெய்தி
யரும்பெறற் குமரர் தம்மைப்
பிணியுறு மறையோர்க் கீந்து
பெட்பின்வீற் றிருந்தா ரன்றே (23)

பண்ணமைக் குதலைத் தீஞ்சொற்
பவளவாய்ப் பரவை யல்குல்
வெண்ணறு மகளிர் கொம்மை
யிளமுலைப் போக மாந்தி
மண்மகள் பார நீக்கி
வண்டுழா யலங்கற் றிண்டோட்
கண்ணனெவ் வுலகு மேத்த
களிப்புட னிருக்கு நாளில் (24)

பிருகுவை முதலா யுள்ள
பெருந்தவ முனிவர் யாருங்
குருகின்வாய் கிழித்த வெற்றிக்
கொண்டன்முன் னெய்தி வெய்தாய்க்
கருகுவெந் தீமை செய்யுங்
கலியுகம் வருத லெண்ணி
வெருவொடு முள்ள மாழ்கி
வெய்துயிர்த் துரைக்க லுற்றார் (25)

அறந்தலை மயங்க வெய்துங்
கலியுக மணைந்த தைய
மறந்துமிவ் வுலகத் தியாங்கண்
மருவுவ தொல்லா தாவி
யிறந்திட வேண்டு மென்ன
வியம்பலு மீன்ற தாயிற்
சிறந்திடு கண்ண னுள்ளந்
தெருட்டிமற் றிதனைச் சொல்வான் (26)

சீர்கெழு யுகங்க டம்மில்
பலபகல் தவஞ்செய் தாலுஞ்
சார்வரு முத்தி யெய்தார்
*கலியுக மதனிற் றாழா

* கலியுக மதனிற் றாழ்ந்தோர் (பா. பே.)

தோர்கணந் தவஞ்செய் தானு
முத்தியி னுறுவ ரென்றாற்
பாரினில் யுகங்கள் யாதே
கலிக்கிணை பகர்வ தம்மா (27)

திங்களங் கண்ணிப் புத்தேள்
சேவடிக் கமல முண்டு
கொங்கவிழ் மலரு முண்டு
குளிர்தரு புனலு முண்டு
தங்குமஞ் செழுத்து முண்டு
தவளவெண் ணீறு முண்டு
*வெங்கலிக் குடைவ தென்னீர்
வெளிற்றறி வுடையர் போல (28)

ஆவண மலத்தை யாதி
மலங்களென் செய்யு மன்றேற்
காணவா வீண்டு புக்க
கலியுகம் புரிவ தென்னோ
மாணமர் கமலத் தேவை
யென்னைமுன் வயிறு வாய்த்துத்
தானுவா யுலக மீன்றோன்
*றுளிலன் புளதேன் மன்னோ (29)

என்னையுங் கமல வீட்டி
லிறையையு மடிமை கொண்ட
முன்னவன் றன்னை யேத்தி
யும்மின்கண் முனிவி ரென்ன
வந்தநான் மறையோர் யாரு
மகந்தெளிந் தாசி கூறிக்
கன்னியந் துளவோன் செய்ய
கழலிணை வணங்கிப் போனார் (30)

தகைபெறு துருவா சன்றன்
சாபமே தலைக்கீ டாக
வகைபடு கிளைக டம்மை
வாளுமு ரழுவத் திட்டுப்
புகர றுகண்ண னென்னும்
புண்ணிய மூர்த்தி சோதி
நகைநிலாத் தழுவுந் தூய
வைகுண்ட நண்ணி னானே (31)

**வேறு**

ஆயிரஞ் சுடிகை மணிவிளக் கெடுப்ப
வரவவெம் பாயலி னமர்ந்து
சேயிதழ்க் கமலப் பொகுட்டுவீற் றிருக்குந்
திருமக டன்னொடுஞ் சிறந்த
மாயிரு ஞால மடந்தையுந் தழுவ
வானவர் பணிந்துபோற் றிசைப்ப
பாய்திரை சுருட்டும் பாற்கட லதனிற்
பங்கயக் கண்ணன்வீற் றிருந்தான் (32)

கண்ணனன் மரபி லுதித்தவச் சிரனைக்
கழிபெருங் கேள்வியின் றுறைபோ
மண்ணலந் தரும ரிந்திரப் பிரத்தத்
தணிகெழு மணிமுடி சூட்டி
எண்ணருந் திறல்கூ ரடற்பரிச் சித்தை
யத்தின புரத்திறை யாக்கி
யுண்மகிழ் தூங்கத் தம்பிய ரோடுந்
துரோபதை யோடும்வீ டுற்றான் (33)

வச்சிரன் பிரதி வாகுவைப் பயந்தா
னவன்மகன் சுவாகுமற் றவன்சே
யச்சணாங் கயில்வே லுக்கிர சேன
னவன்றனக் கருட்சத சேன

ளிச்சைகூர் புதல்வ னிளமதி முடித்த
வெந்தைதன் ருெண்டரிற் சிறந்த
செச்சையங் கண்ணித் திங்கணன் மரபின்
மன்னரைத் தெளிந்துரைத் தனமால் (34)

இன்னநற் காதை புகன்றவர் கேட்டோர்
படிக்குந ரெழுதிவைத் தோர்கள்
கன்னலங் குதலைத் தளர்நடைப் புதல்வர்
பயந்துதங் கிளையொடுங் களித்துப்
பொன்னகர் புரக்கும் புரந்தர னென்னப்
புவியினி லளப்பிலுள் வாழ்ந்து
பன்னக மணிந்த முக்கணெம் பெருமான்
பதநிழ லுறைகுவ ரென்றுன் (35)

முப்பத்து நான்காவது
கண்ணன் வைகுந்த மடைந்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 2229

---

உ

## முப்பத் தைந்தாவது
## யுகதன்ம முரைத்த வத்தியாயம்

---

தகைபெறு முகங்க ளுன்கி
னடந்திடுந் தருமம் யாவும்
வகைபட வுரைத்தி யென்ன
மகதியாம் முனிவ னேடும்
புகரறு விசும்பு காக்கும்
புரந்தரன் கேட்ப முன்ன
மகனில முண்ட வாமை
யுருவுறு மண்ணல் சொல்வான் (1)

விற்றொழில் விசயன் கேட்ப
  வியாதமா முனிவன் முன்னஞ்
சொற்றவா றுரைப்பக் கேண்மின்
  றாய்ச்சிறை யெகினப் பாகன்
கற்பத்தி னணித்தா முன்னே
  யுகமுதல் கலியி றுக
வற்புறும் யுகத்தின் செய்தி
  வழுவுறு தனைத்து மாதோ (2)

முந்தைய யுகத்தின் றெய்வம்
  பிரமனு முக்கட் டேவைச்
சிந்தைசெய் திருப்பர் நான்கு
  பதத்தொடு தருமஞ் செல்லு
மந்தமில் கானம் வெற்பு
  நகரமென் றையு றுது
மைந்தர்விற் றிருப்பர் தம்மில்
  பிரிந்திடா மகளி ரோடும் (3)

நினைந்தவை யாவு மங்கை
  நெல்லியின் முன்னர்த் தோன்று
நனந்தலை யுலகம் விண்ணோர்
  நாடெனப் பிரிக்கொ ணாது
மனங்களி கூரப் போக
  மகிழ்வர்யா னெனதென் றேதுஞ்
சினங்கொளாங் கார மின்றி
  மலமெறி சித்த ராகி (4)

வருந்தற முன்ன ரெய்தும்
  யுகத்தினை வகுத்துச் சொன்னோந்
திருந்திரண் டாம்யு கத்தின்
  செய்தியுந் தெளிந்து சொல்வாம்

விரிந்தநள் ளிருளின் குப்பை
விழுங்கிவெண் கதிர்க ணீட்டு
மிருங்கதிர்ச் செல்வ னந்த
யுகத்திலிற் றெய்வ மென்பார் (5)

முன்பயில் யுகத்தி னுற்ற
முதுக்குறை வின்றித் தோன்று
மன்பதை யதனுன் முன்போல்
நினைத்தவை மருவல் செய்ய
வன்பொடும் வேருேர் சித்தி
யணைதலின் மழையுண் டாகப்
பொன்பயில் தருக்கள் யாவும்
புவியினிற் ருேன்று மன்றே (6)

வியன்சினைத் தருக்க ணல்கும்
விழுத்தகு சிறப்பு வாய்ந்த
பயன்படு போக மாந்திப்
பண்ணவர் போல வாழ்வர்
நயம்படு தரும மூன்று
கால்கொடு நடக்கும் வேள்வி
முயன்றினி தாற்றி முக்கட்
பரமனை முன்னு கிற்பார் (7)

யானென தென்னு முள்ளச்
செருக்குறாத் தருக்கள் யாவு
மாலிலத் தொளிக்கு மைந்தர்
மகளிர்பாற் புணரத் தோன்று
மூனுடை யாக்கை மாக்க
ளொளித்தமற் றவையு மெய்தும்
பான்மையச் சித்தி முன்னப்
பரிவுடன் சேரு மன்றே (8)

கைபுனைந் தியற்றுப் பைம்பூண்
கடைந்திடா வமிர்த மன்ன
நைபடு கனிக ளாடை
நண்ணிய தருக்க ளல்கப்
பைபடு மல்கு லாரு
மைந்தரும் பயன்க டுய்த்து
மைபடு விசும்பு காக்கும்
வானவர் போல வாழ்வார் (9)

காமநோய் வெகுளி வெய்ய
மயக்கமுள் கவற்ற மாந்தர்
பூமலித் தருக்கள் யாவு
மெனது னதென்று பொங்கி
யேமுற வெப்திச் சீறி
யிகலொடு மலைத றன்னால்
நாமறக் காக்கு மாங்க
ணல்குர வுழப்பர் மாதோ (10)

நயக்குறு மின்ப துன்பந்
தட்பநண் ணரிதாம் வெம்மை
மயக்குறு மான மான
மின்மைவண் கொடையு லோபம்
பயக்குற வில்லந் தூசு
பழிப்பில்பொன் முதல யாவும்
வியப்புட னுஞற்றி நீட்டி
மெலிவொடும் வாழ்வ ரன்றே (11)

கருவிமா மேக மீண்டிக்
கனைபெயல் பொழிய யாரும்
பொருவரு பகடு பூட்டிக்
கூன்கொழுப் புதைய வூன்றி

யிருநிலங் கிளைப்ப வந்திங்
கனிபடு மரங்கள் யாவு
மரிவொடு மெங்குந் தோன்றி
யருஞ்சுவை யளிக்கு மன்றே (12)

கான்படு பசுக்க ளேழுங்
கனைகதிர் தடுப்ப நீண்டு
வான்படர் மாட மோங்கும்
*வளநகர் தருக்க ளேழுந்
தோன்றலு மாந்த ருள்ளந்
துற்றிய நசையா னுஞ்
மேன்றென துனதென் றேதி
யிகலுற வியாவும் போன (13)

பிருதுவென் றுரைக்கும் வேந்தன்
பெட்பினிற் புவியி னுள்ள
வரியநல் வளங்க ளியாவுங்
காத்தினி தளித்த வாற்றல்
மருவிய மக்கள் யாரும்
பண்டையின் மகிழ்ச்சி யெய்தி
யொருவர்வாழ் வொருவர் வவ்வி
யுடற்றிவெம் பூசல் செய்வார் (14)

†ஆசற நிமிர்ந்த வாசைச்
சிமிழ்ப்புறு முலகம் யாவுந்
தேசற வெண்ணி வேதன்
சிறந்திடு வருண மற்றை
மாசிலாச் சிரமம் யாவும்
வகுத்திவை நிலையிற் காக்க
வோசைபோ மன்ன ரோடு
மகத்தினை யுவப்பிற் செய்தான் (15)

* வளநகர் பசக்கள் ஏழும் (பா. பே.)
† ஆசற நிமிர்ந்து வாசை ஷை

தெளிகுரு ருணர்தி ரேதா
 யுகத்தினைத் தெளிந்து சொன்னேங்
களிமிகு துவாப ரத்தின்
 செய்தியுங் கருதிக் கூறி
னளிகெழும் விண்டுத் தெய்வ
 மறமிரு பாதத் தெய்து
களிகட லவனி யெங்கும்
 நன்மக நடக்கு மன்றே (16)

ஆசையாலு லோபந் தன்னு
 *லருஞ்சமம் புரிவர் யாரு
மாசிறத் துவத்தை யெண்ணித்
 தெளிகலர் மயங்கல் செய்வார்
தேசுடை வியாதன் வேதந்
 தெளிகுற நான்க தாக
வேசறு முலகந் தன்னிற்
 பிரித்தினி தியற்றி னானல் (17)

துவாபர யுகத்தின் செய்தி
 சொற்றனம் புன்மை கோப
மவாவுறு கலியு கத்தின்
 †முறையினை யறையிற் றெய்வந்
தவாதுயர் மகேச னருந்
 தருமமோர் காலிற் செல்லுங்
குவாலுறு நிதியம் யாவுங்
 ‡கொடுப்பதே கரும மாமால் (18)

வெளிற்றறி வுடைய புல்லர்
 மேதகு சான்றோர் தம்மைக்
களிப்பொடுந் தடிவர் பொய்ம்மைக்
 கடும்பசி மூப்புத் துன்பங்

* அருஞ்சமர் புரிவர் (பா. பே.) † முறைமையை பா. பே.
‡ கொடுப்பதே தரும மாமால் (பா. பே.)

தளிப்புயல் வறத்த லெய்துந்
தம்பொரு ளளியா ரேனு
மொளித்துமற் றொருவர் கையி
னுருபொருள் கவர்வ ரன்றே (19)

ஒழுக்கமு மளியும் போரி
*னுடற்றுவெந் துப்பு மின்றி
யிழுக்குவ ரறத்தி னின்று
மிருமிறப் பாளர் யாரும்
விழுத்தகு மறைக ளோதா
ரருமகம் விழையா ரென்று
மழுக்குடை மனித ராகி
யருநர கதனில் வீழ்வார் (20)

நெறியினர் போலக் கற்றோய்
கலிங்கமெய் நிலவச் சுற்றிக்
கறையெறி வெண்பல் லோடும்
பின்னவர் காலே யேகி
யறைபுனல் படிந்து நீதி
யந்தணர் தம்மை யெள்ளி
மறையினை மறையோர் தம்பாற்
கற்பர்மா நிரைய மெய்த (21)

ஆறறி மறையோ ரில்வாழ்
மனைவியொ டழுங்கப் போகிக்
கூறுபின் னவர்தம் மாதர்
குவிமுலை திளைப்பப் புல்லி
யூறுய ரின்ப மாந்தி
யாங்கவர் தம்மோ டுண்டு
வீறுயர் விஞ்சை விற்று
நரகிடை வீழ்வர் மாதோ (22)

* உடற்றுவெந் துயருமின்றி (பா. பே.)

கொலைகள வுறுகள் ளுண்டல்
குருநிந்தை யுடன்பா டென்று
மலைவுறு கொடிய பாவ
மலிந்திடுந் திறல்கொள் வேந்தர்
கலைபயின் மறையோர் னோவக்
கடிவர்கற் றறியாப் புல்லர்
நிலைபெறு திருவ ராவர்
நீதியோர் வறிஞ ராவார் (23)

அந்தணர் மறைக ளோதார்
பஞ்சராத் திர நூ லாய்ந்து
நிந்தனை வாம மோர்ந்து
நீற்றொளி பழுத்த மேனி
யெந்தையை வழுத்தா ராகி
கவுதம விசைத்த சாபந்
தந்ததீ வினையால் வெய்ய
ரவுரவ நரகிற் றாழ்வார் (24)

கொடுவரி முதல வாய
விலங்கினாற் கமஞ்சூற் கொண்ட
படுமழை வறந்த வாற்றாற்
படுபுனற் சோலை தன்னாற்
கடுவளி யதனால் வெய்ய
வெயிலினாற் கலங்கி மாந்தர்
விடலருந் துன்ப மெய்தி
வெந்துய ருழப்ப ரன்றே (25)

இன்னவெங் கலியின் மூக்க
ணைந்ததா ளிமைப்போ தேனு
தன்னம ருள்ளத் தெண்ணிற்
றழலிடை யளப்பி னாணின்

றுன்னரும் யோகந் தன்னி
    லுறங்கினேர் தமக்கு மெய்தா
மன்னரு முத்தி விட்டின்
    மருவிவிற் றிருக்க லாமால் (26)

*எற்றுநீர் வேலை ஞால
    மீன்றரு ளேகினப் பாகன்
பொற்றதா மரையின் கேள்வன்
    பூமகள் கொழுந னென்று
முற்றுமூன் றுகத்திற் றேவுங்
    †கலிக்குந்தே வாய முக்கட்
கற்றையஞ் சடையோ னென்ன
    நான்மறை கழறு மன்றே (27)

என்றுநான் குகத்தின் செய்தி
    யாவையு முறையி னேதி
மன்றலந் துளவி னேறு
    மலரினன் முகனுங் காணக்
குன்றவிற் குழகன் றன்னைக்
    கண்டனை குமர வுன்போல்
நன்றறி வோரில் யாரே
    நற்றவ முடைய ரென்று (23)

விற்றொழில் விசயற் கன்பின்
    விடையினி தருளி வேதங்
கற்றுணர் வியாத னென்போன்
    கழிமலந் தன்னி னூரு
முற்றிடு புழுவு மாங்கு
    மாய்வுறி னுலவா முத்தி
பெற்றிடுங் காசி தன்னிற்
    பெட்பொடு மடைந்தா னென்றான் (29)

முப்பத் தைந்தாவது
யுகதன்ம முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவித்தம் 2258

---

* எற்றுநீர் வேலி ஞாலம் (பா. பே.) † கலிக்குந் தேவாய ஷை

உ

# முப்பத் தாருவது
# காசிச் சிறப்புரைத்த வத்தியாயம்

---

கதிர்பிணைங் தாடுஞ் செங்நெற்
　　கழனிசூழ் காசி யெய்து
முதுமறை வியாதன் செய்தி
　　மொழிகென முனிவ னேடுங்
தகைமலர் தருவி வீழற்
　　பண்ணவன் சாற்ற முன்ன
மதமலை மூல மென்ன
　　வந்தகார் வண்ணன் சொல்வான் (1)

சயிமினி விச்சு வேசன்
　　றுளிணைப் பணிந்து போற்று
மயர்வறு வியாதற் போற்றி
　　*வழங்குசாங் கியமி யோகம்
பயில்வுறு தியானந் தீர்த்த
　　மந்திரம் பழிப்பில் மெய்ம்மை
யியல்புறு மறங்கொல் லாமை
　　ஞனமிந் தியம டக்கல் (2)

ஈங்கிவை கொல்லோ மற்று
　　முளகொலோ வுயர்ந்த விசன்
பூங்கழ லடைதற் கென்னப்
　　புகறலும் வியாதன் சொல்வா
ணுங்கவை யுயர்ந்த வல்ல
　　முத்திவீ டடைய வேண்டிற்
றீங்கெறி காசி தன்னிற்
　　சேர்தலே யுயர்ந்த தாமால் (3)

---

* சாங்கிய வியோகம் (பா. பே.)

இன்னவா றுலக மியாவு
　　* மீன்றசிற் றுதரக் கன்னி
முன்னவ னோடுங் கேட்ப
　　விங்கியான் மொழிந்த வாறே
பன்னினன் கடவுட் காசி
　　மாநக ரன்றிப் பார்க்கி
னுன்னரி தாகு முத்தி
　　வீட்டின்ப முதவற் பாற்றே (4)

தந்தைதாய் குரவ ரின்சொன்
　　மறுத்தவர் தணப்பி லாத
வெந்துயர் நரகின் வீழ்வர்
　　மறுத்தும்வெண் ணீற்று மேனி
யெந்தைவாழ் காசி தன்னி
　　லெய்தினோ ரிறைவன் போல
நந்தலி லுருவ மெய்திப்
　　பேரின்ப நண்ணு வாரே (5)

தவளையை மற்றோர் பாம்பு
　　கொல்லவத் தவளை யோங்கு
குவளையங் களமு மூன்று
　　கண்ணும்வார் குழவித் திங்கட்
பவளவார் சடையு மாயப்
　　பாந்தளை யணிந்த தென்றால்
நவையறு காசி போல
　　நன்னகர் பிறிது முண்டோ (6)

காசியே கடவுட் டீர்த்தங்
　　காசியே யவ்வி யத்தங்
காசியே முத்தி னவப்புக்
　　காசியே களிகொண் ஞானங்

* ஈன்றசித் துதரக் கன்னி (பா. பே.)

காசியே யுமையோ டீச
 னுறைவிடங் கங்கை சூழுங்
காசியே பிறவி நோய்க்குக்
 கருதரு மருந்து மாமால் (7)

எனவுள மகிழ்ச்சி தூங்கச்
 சயிமினிக் கினிதி னோதி
வினையறு தவத்தின் மிக்க
 வியாதமா முனிவ னென்போன்
தனதருள் பெறுமா ணாக்கர்
 களிப்புறத் தகவி னோடு
நினைவறு மோங்கா ரேசன்
 சிறப்பினை நிகழ்த்த லுற்றான் (8)

கங்கைநீர் பெருகி மச்ச
 வுதரம்போற் கலக்கு மேல்வைத்
தங்கிய வோங்கா ரேசன்
 றுளினை வழுத்தி னோர்கள்
திங்களங் கண்ணி வேய்ந்த
 செஞ்சடைத் தாங்கு முக்கட்
புங்கவ னாகித் தேவர்
 போற்றவீற் றிருப்ப ரென்று (9)

விருப்பொடு மற்றோர் கோயின்
 மேவியவ் விலிங்கந் தன்னைக்
கிருத்திவா கேச னென்பா
 ராங்கது கிளப்பன் கேண்மி
னருத்தியிற் பூசிப் போரை
 யடர்கயா சுரன்றன் மேனி
யுரித்துமேற் போர்த்த றன்னா
 லிப்பெய ருற்ற தன்றே (10)

ஆயிரங் கோடி சென்ம
 மருந்தவம் புரிந்திட் டாலு
நேயநன் முத்தி யெய்தார்
 நிகழ்த்தருங் கிருத்தி வாசன்
கோயிலி னெய்தி னோர்தங்
 குரைகழல் வணங்கி னோரு
மோய்வரு முத்தி வீட்டி
 னுறைந்துவிற் றிருப்ப ரன்றே (11)

என்றருங் கிருத்தி வாசன்
 புகழினி தெடுத்துக் கூறி
மன்றமா ணுக்கர் கேட்ப
 மறைதெரி வியாத னென்போன்
துன்றிவா னவர்கள் போற்றித்
 தொழுகபர்த் தீசன் காதை
யொன்றிய வுவகை யோடுந்
 தெளிதர வுரைக்க லுற்றுன் (12)

பொறிவரி மடங்கல் பற்றப்
 புள்ளிமான் வெருவி மாழ்கிக்
கறைமிடற் றெந்தை கோயில்
 வலஞ்செயாக் கலங்கி யோடி
யிறைவன்முன் னெய்துங் காலத்
 தெறும்வலி யோடும் பற்றிப்
பிறைநிக ருகிரால் நெஞ்சம்
 பிளந்துயிர் குடித்த தன்றே (15)

ஈசன்முன் னீறந்த வாற்று
 லிளம்பிறைக் கண்ணி சூடித்
தேசுடை மழுமா னேந்திச்
 சிறந்தமுக் கண்ணி னேடும்

வாசவன் முதலோர் போற்ற
மழவிடை யுயர்த்தோ னுகி
யாசறு கயிலை வெற்பி
னடைந்துவீற் றிருந்த தன்றே (14)

*புதுப்புனல் வெறியா மான்றேல்
புனைந்திடுஞ் சங்கு கன்னன்
மதித்தரு டருபி சாச
மோசன வாவி தன்னுள்
விதிப்படி தவஞ்செய் காலை
வெள்ளெயிற் றலகை யெய்தித்
துதித்தலு மாரை யென்னச்
சுழல்விழிப் பசாசு சொல்லும் (15)

முற்பவ மதனில் யானோர்
முனிமுதுக் குறைவின் றாகப்
பொற்பினை வியந்து வெய்ய
பொருள்குவித் தறஞ்செய் யாம
லற்புடை மனைவி நோவ
வயலவர்ப் புணர்ந்து வீய
வெற்பெழுந் தியங்கும் யாக்கைப்
பேயுரு வெய்தி னேனல் (16)

இவ்வுரு வொழியும் வண்ண
மருள்புரிந் திடுதி யென்ன
வவ்விய மவித்த சிந்தை
யந்தணன் பாதம் போற்றக்
கவ்வைநீர் வாவி யாடிற்
கழியுமிவ் வுருவ மென்னத்
தெய்வநீ ரதனிற் றோயப்
பசாசுருத் தீர்ந்த தன்றே (17)

* புதுப்புல வெறியுமான்றேல்

கங்கையு மறுகும் வாசக்
கடுக்கையு மயிர்தந் தூற்றுந்
திங்களுந் தரித்த நீல
கண்டமுஞ் சிறந்து தோன்ற
வங்கையின் மழுமா னேந்தி.
யவிர்மணி விமான மூர்ந்து
வெங்கதிர்ச் செல்வ னுப்பட்
சிவனுமை மேவிற் றன்றே (18)

ஆங்கது நோக்கி மாயை
யறுத்துயர் சங்கு கன்னன்
கோங்கிள முலையாள் பங்கன்
குரைகழல் பணிந்து போற்ற
வோங்கொளி யிரவி கோடி
யுதித்தபோ லிலிங்கந் தோன்ற
றீங்கற நோற்ற மேலோ
னதனுழைச் சேர்ந்தா னென்றுன் (19)

மருவருங் காசி தன்னின்
மத்திமேச் சுரனைப் போற்றிப்
பொருவருங் கங்கை யாடி
நித்தலும் பூதி பூத்த
வுருவொடு மருள்கூர் பாசு
பதரவ னுற்ற விஞ்சை
திருவமர் வியாதன் செய்ய
சேவடி வணங்கி நின்றார் (20)

ஆங்கவர் தெளிந்து முத்தி
யடையவஞ் செழுத்தி னுண்மைத்
தீங்கறு முனிவ னேதச்
சிற்பர மாகி யோங்கிப்

பூங்கதி ரெறிக்குஞ் சோதி
    தோன்றலும் புனித மாகி
விங்குபே ரன்பிற் பாசு
    பதரதின் மேவி னரே (21)

பேரொளி மறைத லோடும்
    பேசருந் தவத்தின் மிக்க
வாரிய வியாதற் போற்றி
    யருமறை முனிவர் கேட்பக்
கார்வயி றுடைய நீண்டுக்
    கதிர்மணி முகடு வேய்ந்த
சிர்கோளா லயத்தின் மேவி
    யிக்கதை தெரிக்க லுற்றான் (22)

தண்ணறுந் துளவத் தாரோன்
    கண்டிகை மாலை சாத்தி
வெண்ணிலா வெறிக்குந் தூய
    நீறுமெய் விளங்கப் பூசி
பண்ணவர் பழிச்சும் பாசு
    பதருயர் விரதம் பூண்
டெண்ணருங் காலம் வைகி
    யிருந்தவ மியற்றி னானே (23)

புரிவருந் தவத்தி னோன்மை
    நோக்கிவெண் ணீறு பூசிக்
கரியுரி போர்த்த மேனிக்
    கண்ணுதற் சாமி யேத்தத்
திருமறு மார்ப னுள்ள
    மகிழ்ந்துசே வடியின் வீழ
வருள்புரிந் தெழுதி யென்ன
    வுரைத்தலுந் தறைய லுற்றான் (24)

உன்னையா குகப் பாவித்
துவப்பொடு பணிந்தோர் யாரு
மென்னிரு தாளிற் சேர்வ
ரெனவர மளித்தா னென்னப்
*பன்னரு மறைகள் கோர்த்துப்
பாரதம் புகன்ற மேலோன்
துன்னருந் தீர்த்த மியாவுந்
தோய்ந்தவ னுறைந்தான் மன்னோ (25)

மையறு பிரயாகை யாதி
மகாலய தீர்த்த மீரு
யெய்திய தீர்த்தம் யாவு
மினிதினி னுடி முக்கட்
டையலோர் பாகன் பாதந்
தாழ்ந்துநான் மறைவி யாத
னையமேற் றுண்டு காசி
யமர்ந்தினி திருக்கு நாளின் (26)

இடுபலி யேற்ப யாரும்
வழங்குந ரின்றி யோர்நாட்
கடவுணன் மறைவி யாதன்
காசியைச் சபிக்க வெண்ணி
யடைதலு முலக மீன்ற
வன்னைமுன் வந்து தோன்றித்
தொடிவளைக் கையா லையங்
கடிஞையிற் சொரிந்திட் டாளே (27)

அய்யமுண் டிருக்கும் வேலை
யருந்தவ வெகுளி மிக்கோய்
மய்யறு காசி தன்னின்
மருவலை யென்ன வன்னை

* பன்னரு மறைகள் சேர்த்துப் (பா. பே.)

செய்யதாள் வணங்கித் தீதி
    லட்டமிப் பதினுன் கென்ன
வெய்துகற் றிதியிற் போதந்
    திறைஞ்சுவ னருள்க வென்றான் (28)

என்னலு முருக வேளை
    யைங்கரன் றன்னை யின்றுங்
கன்னிமை நீங்கா தைய
    னிடப்புறங் கவர்ந்து கொண்ட
வன்னையாங் கதனை நேர்ந்து
    மறைதலு மறைந்த வண்ணந்
தன்னிக ரிலாதோன் முக்கட்
    டாணுவைப் பணிந்தா னென்றான் (29)

தவலருந் தவத்தின் மிக்க
    மார்க்கண்டன் றகவி னோடு
முவவு வெண்மதிய மானு
    மொருகுடை நீழ றன்னி
னவையறு முலகங் காக்கு
    நாமவேற் றருமன் கேட்ப
பவமறுத் துயர்பி ரயாகை
    மான்மியம் பகர்ந்தா னன்றே (30)

அரும்பெறற் பிரயாகை தன்னி
    னுவினை யளித்தோ ராவிற்
பொருந்துநுண் மயிர்க ளெண்ணி
    லெத்துணைப் புகன்ற தாகுந்
திருந்தவத் துணைய காலந்
    தெய்வவான் றருவி னீழல்
முருந்தவெண் ணகையார் கொம்மை
    முகிழ்முலைத் திளைப்ப வாழ்வார் (31)

கருதரும் பிரயாகை தன்னிற்
கன்னியை விதியி னீங்தோ
ருநவவா னுதலா ரோடு
முத்தர குருவி னெய்தி
இரவுநன் பகலும் விள்ளா
திளமுலைப் போக மார்ந்தி
விரைகமழ் தருவி னீழல்
விண்ணவர் போல வாழ்வார் (32)

புண்ணிய நன்னீ ராடப்
போகுந ரேற்றி னேறி
நண்ணுறுந் தீமை யேனை
யூர்தியு நவைய தாகு
மண்ணலம் பிரையாகை தன்னி
னடந்துசென் ருடி னோர்கள்
விண்ணிடை யளப்பில் காலங்
கிளையொடு மேவு வாரே (33)

பொருப்பெழில் கவற்றி வீங்கும்
புணர்முலைக் கழைகொண் மென்றோ
ளுருப்பசி புளினந் தன்னி
லாருயி ருலந்தோர் யாருங்
கருப்புரங் கமழுஞ் செவ்வா
யரம்பையர் கவின்கொண் டோங்கு
மருப்பிள முலையின் மேவி
யமரர்நாட் டிருப்பர் மாதோ (34)

கங்கையம் புனலிற் றோய்ந்தோர்
கருதினோ ரதனில் வீய்ந்தோ
ரங்கதி னடைந்து மாக
மாடினோ ரடைந்த பேறு

பொங்குநீர் யமுனை யாடப்
　　போலிவொடும் பெறுவ ரென்று
லிங்கதன் சிறப்பை யாரே
　　யெளிதினி னிசைக்க வல்லார் (35)

ஆன்றமூ வுலகத் துள்ளு
　　மறைந்திடு கடவுட் டீர்த்த
மூன்றரைக் கோடி யென்ன
　　மொழிகுவ ரவைகள் யாவுஞ்
சான்றென வெங்கு நின்று
　　சராசர மனைத்து முன்ன
மீன்றவன் சடையிற் சூடுங்
　　கங்கையோ டிணைக்க லாகா (36)

என்றுமார்க் கண்டன் கூற
　　மனுமுத லிறைவர் தோற்றந்
துன்றுசெங் கதிரோன் மாட்சி
　　சுடர்மதிப் பதத்தி னெல்லை
*குன்றின தியற்கை யண்டத்
　　தளவைநீ கூறு கென்ன
மன்றநற் றருமன் கேட்ப
　　மறைமுனி யுரைத்தா னன்றே (37)

முப்பத்தாறுவது

காசியின் சிறப்புரைத்த வத்தியாய முற்றும்

ஆகத்திருவிருத்தம் 2295

---

* குன்றின தளவை யண்டத் தியற்கைநீ (பா. பே.)

உ

# முப்பத்தேழாவது
# மனுமர புரைத்த வத்தியாயம்

குடுமி வரைவிற் கால்குழைத்துப்
*புரமூன் றெரிக்குங் குறுநகையோ
னடியின் மலர்தூய் வெங்கூற்றை
வென்றோன் றருமற் கறைந்தபடி
கடவுண் முதுமோட் டாமையுரு
வெடுத்தோய் கழறு கெனவயிரப்
படையோ னேடு மியாழ் முனிவன்
கேட்ப வினிதிற் பகர்ந்தனனால் (1)

ஆலக் கருஞ்சே றுமிழெயிற்ற
வரவின் சுடிகை மேற்கிடந்த
ஞாலம் புரக்குஞ் சுவாயம்பு
மனுவாம் நாம வடிவேலோன்
மாலைக் கதிர்வே லுத்தான
பாதன் றனையு மறிதிரைநீர்
வேலைப் புவிபோற் றிடும்பிரிய
விரதன் றனையு மினிதளித்தான் (2)

அரசு விழுங்கி வாய்காய்ந்த
வைவே லாக்கி வீத்தானும்
புரசை யானை யடல்வேந்தர்
போற்றுங் கழற்கா லக்கினியும்
விரைசெய் மான்றே ரவ்வியனென்
றுரைக்கும் வேந்தர் பெருமானுங்
கரைசெய் கடலந் தானையுடைக்
கழற்கால் வாகு வெனும்வேந்தும் (3)

* புரமூன்றெரித்த குறுநகையோன் (பா. பே.)

*ஒன்னா ரம்பொன் முடியுரிஞ்சிப்
பறைந்த வொளிர்பொற் கருகழற்கான்
மன்னர் போற்றும் வடிவாட்கை
வபுட்டு மானுந் துதிமானு
மின்னுக் கதிர்கால் நெட்டிலைவேல்
விறல்கூர் மேதை யெனும்வேந்துங்
கன்னற் சிலைவே ளெனவெவருங்
கழறு மெழின்மே தாதிதியும் (4)

உலக மனைத்தும் பொதுநீக்கி
வுரவுச் செங்கோ றிசையளப்ப
நிலவுக் கவிகை தனிநிழற்று
நிகரில்சவன னெனும் வேந்தும்
புலவுக் கதிர்வேன் மாற்றரசர்
புண்ணீர் மாந்தித் தேக்கெறியுங்
கொலைவாட் டடக்கைச் சோதிடுமா
னென்னுங் குவவுத் தோளானும் (5)

வேறு

ஆயிரஞ் சுடிகைப் பணுடவிக் கிடந்தாங்
கலையெறி கடல்களே ழுடுத்த
மாயிரு ஞால நிழற்றுசெங் கோலின்
மனுமுறை நிறுத்திய குருசில்
பாயவண் புகழ்சேர் திறலுடைப் பிரிய
விரதனும் பார்த்திப னளித்த
நேயநற் புதல்வ ராங்கவர்க் கிறைவ
வீணிலம் புகுத்தமை யுரைப்பாம் (6)

வேறு

உரைத்த புகழ்சால் மைந்தர்தமி
லொளிர்வேன் மேதை யுலம்பொருத
வரைத்தோட் டிறலக் கினிவிறல்கூர்
வாகுவென்னு மடல் வேந்தர்

* ஒன்னா ரம்பொன்முடி யுரிஞ்சிப்பரந்த (பா. பே.)

நிரைத்த புலனைந் தையும்பொறியி
　　னிகழா வண்ண நிலைநிறுத்தி
யருத்தி யோடு மரசுரிமை
　　யிகழ்ந்து முனிவ ராயினரால் (7)

சம்புத் தீவுக் கிறையாகத்
　　தழல்வே லாக்கி னீத்தானைச்
செம்பொன் மவுலி சூட்டியுல
　　கேத்துந் திறன்மே தாதிதியை
யைம்பொற் பிலக்கத் தீவின்முடி
　　சூட்டு வபுட்டு மானையரு
ணம்பும் புகழ்ச்சான் மலித்தீவி
　　னுத னுக முடிகவித்தான் (8)

அலகில் சீர்த்திச் சோதிடுமான்
　　றன்னைக் குசத்தீவி னுக் கரசா
யிலகு மவுலி புனைந்தரச
　　ரேத்துங் கழற்காற் றுதிமானை
நிலவு புகழ்சேர் கிரவுஞ்சத்
　　தீவுக் கிறையா கெனநிறுத்தி
யுலகம் புகழ்சா கத்தீவின்
　　னுயரவ் வியனைமுடிக வித்தான் (9)

சான்றோர் புகழ்புட் கரத்தீவைச்
　　சவனற் களித்தா னவ்வேந்தன்
மான்றே ருடைத்தா தகிதனையு
　　மாவீ ரனையு மகிழ்வினுட
னீன்று னுயர்புட் கரத்தீவை
　　யியன்மா வீர வருடமிக
வான்ற புகழ்த்தா தகிவருட
　　மாகப் பிரித்தாங் கவர்க்களித்தான் (10)

தரியார் புகழுவவ் வியனென்போன்
சலதன் குமாரன் சுகுமார
னெரிவே லங்கை மணிசகன்விற்
சுகுமோ தரன்ம தாதியெழி
லுருவங் திகழ்மாத் துருமனையும்
பயந்தா னுரைக்கு மவர்பெயரால்
மருவுஞ் சாகத் தீவதனைப்
பகுத்தாங் கவர்க்கு வழங்கினன் (11)

துதிமா னென்போன் மனோகரன்றுங்
துபிநீள் பிரபைவான் கண்ணன்
மதிசே ரந்த காரன்முனி
நகுல னிவரை மகிழ்ந்தளித்தா
னுதவு மைந்தர் நாமத்தால்
வருடமாக்கி யுவப்பி னெடும்
விதியி னன்றிற் பெயர்த்திவை
விற்றுவிற்றுய்ப் பகுந்த ளித்தான் (12)

தூம வடிவேற் சோதிடுமா
னென்போன் றுகடீ ருதபிதன்விற்
காம னனைய வேனுமான்
கபிரன் றிருதி *சுவயிரதன்
றும வடிவேற் பிரகாமனோ
டிலம்போ தரனைத் தந்தவர்த
நாம வருட மாய்ப்பிரித்துக்
குசத்தீ வவற்கு நல்கினன் (13)

வைவேற் றடக்கை வபுட்டுமான்
சுவே னரிதன் சிமூத
னெவ்வாச் சிர்த்தி யுலோகிதன்சுப்
பிரபன் மானன் வயிற்றுதனும்

---

* காரன் றிருதி சுவையிந்தன் (பா. பே.)

தெவ்வேத் தெடுக்குஞ் சிறுவரையின்
றவர்நா மத்திற் றிகழ்வருடம்
வெவ்வே ருகச் சன்மலித்தீ
வதனைப் பகுந்து வியந்தளித்தான் (14)

மேதா திதியென் றுரைத்திடுவோன்
விளம்பும் சிசிரன் சாந்தபைய
னேத வரிய சுகோதயன
னந்தன் சிவன்கே மகனெளிறுந்
தீதில் வேற்கைக் கஞ்சனெனுஞ்
சிறுவற் பயந்தாங் கவர்பெயரா
லோதும் பிலக்கத் தீவதனை
வருட மாக்கி யுவந்ததளித்தான் (15)

வென்வே லாக்கி லித்தானும்
வேந்தர் வேந்த னடுகளத்தி
னென்னுர் செம்பொன் மணிமவுலி
யுழுத கழற்கா னுபியையுங்
கன்னற் சிலையு மலர்க்கணையு
மொழித்த காம னெனும்பொற்பார்
மின்னுஞ் சுடர்வாட் கிம்புருட
னென்னும் விறல்கூர் வேந்தனையும் (16)

உடலுஞ் சமத்திற் பகைவருயி
ருண்ணும் வடிவா னரியினையும்
நெடுநல் யானை வயவேந்தர்
நிணம்வாய்த் துடைப்பி னல்லாது
தடறு புகுதா வழல்வடிவேற்
குருசித் தனையுந் தரியலருர்
மடியச் சிறிது விழிசேக்கு
மிரண்ணு வாஞு மன்னனையும் (17)

---

* வயித்ததனுந் (பா. பே.)

ஒன்னார் மகளிர் மங்கலநாண்
வாங்க வாங்கு முயர்சிலைக்கை
மன்னர் திறல்கூ ரிரமியனும்
வேந்தன் றனையு மருவலரைத்
தென்னம் புலத்திற் குடியேற்றி
யன்றிக் கடைக்கண் சிவப்பொழியாப்
பொன்னங் கழற்கா லிளாவிருத
னென்னும் போர்வே லரசனையும் (18)

கூடா தூங் குறுதுந் தெனுதுமுயர்
குடுமிப் பொன்னங் குன்றுறையும்
வடா துந் தனது கைப்படுத்தும்
வயங்கூர் கேது மான்றனையுங்
கடாமுற் றிருக்குந் திசைக்களிறு
கவிக்குங் கொடைப்பத் திராச்சுவனும்
விடாத சீர்த்தி மன்னனையும்
வியப்பி னினிதி னீன்றனனால் (19)

இமைய வரைத்தென் புலவருட
நாபிக் கீந்தான் கிம்புருடர்க்
கமைவி லேம கூடமெனும்
வருட மதனை யுவந்தளித்தான்
கமலப் பொகுட்டு வட்டவணைக்
கன்னிப் பிரியா வரிகாக்க
விமல மாகு நயிடதப்பேர்
வருடம் வியப்பி னல்கினனால் (20)

மேரு கிரிசூ ழிளாவிரத
வருடந் தன்னை யிளாவிருத
னுர்வ மொடுகாத் திடுகவென
வம்பொன் மவுலி சூட்டினுன்

கார்தோய் நீல வரையுடுத்த
வருட மீரமி யன்காக்கச்
சீர்சால் கடவுண் மணியிமைக்குந்
திருமா மவுலி சூட்டினன் (21)

வான்றோய் குடுமிச் சுவேதவரை
யுடுத்த வருட மதிவல்ல
சான்றோர் புகழு மிரண்ணுவான்
றனக்கு நல்கிக் குருவென்று
மான்ற கேள்வி யரசற்குச்
சிருங்க வரைக்குத் தாமாகத்
தோன்றும் வருடந் தனியாளச்
சுடர்மா மவுலி சூட்டினன் (22)

மேரு வரைக்குக் கிழக்காகும்
வருடம் விறற்பத் திராச்சுவனுக்
கார்வ மோடு மீனிதளிப்ப
வறைந்த வரையின் மேற்காய
சீர்சால் கந்த மாதனமாம்
வருடங் கேது மானென்னும்
போர்வே லரசர்க் கினிதளித்துப்
புனைமா மவுலி சூட்டினன் (23)

இன்ன வாறு தான்பயந்த
விகல்வே லரச ரொன்பதின்மர்க்
கொன்னார் குடங்கைத் தலையணையா
யுறங்கு மம்பொன் மணிமுன்றில்
மன்ன னுக்கி வீத்தானும்
வடிவேற் காளை தனையளிக்குந்
தன்ன துலகம் பகுத்தளித்துத்
தளரா முத்தி யெய்தினன் (24)

இமையப் பொருப்பின் றென்பாலம்
வருடங் காக்கு நாபியென்போன்
கமலப் பொகுட்டு வீற்றிருக்கு
மேரு வென்னுங் கனங்குழையின்
குமுதச் செவ்வாய் நலம்பருகி
யிடபற் பயந்தான் கூறுமவ
னமையா வென்றிப் பரதன்முத
லரச ரொருநூற் றுவர்ப்பயந்தான் (25)

அரசர் மவுலி மணியுரிஞ்சப்
பறைந்த வம்பொற் கனைகழற்காற்
பரத னுலகந் தனிகாக்கப்
பைம்பொற் கதிர்மா முடிசூட்டி
யுரனுத் திரைநீர்க் கடல்வலய
மொருகோ லோச்சி யினிதளிக்கும்
விரைகொப் பளிக்கு நறுந்தெரிய
லிடபன் முத்தி வீடடைந்தான் (26)

வேறு

கப்புவாய்ச் சூல நெருப்புவீட் டெறிக்குங்
கண்ணுதற் சாமியை வணங்கித்
தப்பறு வாய்மைக் கொருவனென் றுரைக்கும்
பரதனின் றருதிரு மைந்த
னெப்புவ னத்தி னரசரும் வணங்க
வெதிர்மணிக் கதிர்முடி யுரிஞ்சித்
துப்புறழ் கமலப் பதந்தழும் பிருந்த
சுமதியென் றுரைத்திடுந் தோன்றல் (27)

வேறு

மலையுஞ் சமத்தி னென்னலர்தம்
　　மருமம் முகந்தோள் வாளிகண்மேய்ந்
தலையுங் குருதி நிணச்சேற்றிற்
　　பருஉத்தா ளாழ்ந்து கரியலறச்
சிலைகால் குழைக்குஞ் சுமதியருண்
　　மைந்தன் றெருண்டோர் தீபமெனக்
கலைமுற் றுணரித் திரத்துய்ம்மன்
　　னென்னுங் கதிர்வேற் படையுழவன் (28)

குருதிப் பெருக்கா றுவட்டெடுத்துக்
　　கொழிக்கும் வென்வே லாங்கவன்ற
னரிய புதல்வன் பரமேட்டி
　　யவன்றன் புதல்வ னருந்துப்பிற்
செருவேற் றெழுந்த வொன்னலர்தஞ்
　　சென்னி பிடுங்கிப் பந்தடிக்குங்
கரடக் களிற்றின் பெரும்பாகன்
　　பிரதிகார னெனுங்காளை (29)

வேறு

வெளிறெறி கேள்விப் பிரதிகா ரப்பேர்
　　வேந்தனின் றருளிய மைந்தன்
களிறெடுத் ததுக்கி கருங்கவுட் கிடக்குந்
　　தார்த்தெரி கனற்றுகட் பேய்கள்
அளறுபட் டொழுகும ரத்தநீர்க்கடலு
　　ளாடவெங் களத்திடை யெய்தி
யொளிறுவே றிரித்து வாகைகொண் டுலவும்
　　பிரதிகர்த்தாவெனு முரவோன் (30)

விண்படர் கீர்த்திபிரதிநர்த் தாவின்
விலங்கெழு வேலுடை மைந்தன்
கண்படா முரசங் கவிழ்ந்துகண் படுப்பக்
கறையடிக் களிற்றினங் கோடு
மண்படா வீழ்ந்து கருங்கலிற் கிடப்ப
வாளமர்க் களத்திளி லொன்னூர்
புண்பட விதிர்க்கும் புலவுவே லுழவன்
பவனெனும் போர்ப்புலி யனையான் (31)

ஆங்கவன் புதல்வ னுயர்பவோ கினித
னவன்மகன் பொற்பிதி ரணிந்த
கோங்கிள முலைகள் சாடலுங் கிழிந்த
குங்கும மழிந்துவீழ் குழம்பு
தேங்கிடு மாந்த ரகலமான் யானை
திரண்மருப் பொடித்திடுந் திறல்கூர்
வாங்குவிற் கொருவ னெனும் பிரத்தாப
னென்றிடும் வயங்கெழு வேந்தன் (32)

மற்றவன் புதல்வன் வாகைவேர் றுவட்டா
வாங்கவ னளித்திடு மைந்தன்
பற்றலர் மகளிற் கருங்குழர் கற்றைப்
படர்தருமுள ரியல் பரந்து
சுற்றுகின் றிரப்ப கெடிபடு காட்டி
ஞெளித்திடத் துணைவிழி செருக்கும்
வெற்றிவேல் விரச னுங்கவன் புதல்வ
னரனென வுரைத்திடும் வேந்தன் (33)

விரிகடற் றிரைதாழ் வெண்மணற் குன்றின்
மேவுசூன் முதிர்ந்தகூன் புறத்து
வரிவளை யேறி யிளவெயிற் காயும்
வளங்கெழு நெய்தலஞ் சேர்ப்ப

னரனுடை மைந்த னுயர்சத சித்தாங்
கவனிவி தளித்தருண் மைந்த
னிரசசித் தென்ன வுலகெலாம் புகழ
வீறுல கத்தினைப் புரப்போன் (34)

முருந்திள முறுவல் முதுகுகு குதலை
மங்கையர் முலைநலம் விரும்பிக்
கரும்புறப் போந்தைக் கருக்குவா ளறுத்த
புரைதொறுங் காமநீ ரொழுக
விருந்தெனப் புகுந்து தேவரு மடன்மா
வேறிடும் வியனகர் காக்குந்
திருந்துசீ ரிரச சித்தருண் மைந்தன்
திறல்கெழு விச்சுவச் சோதி (35)

வெள்ளிவெண் முளைய வாம்பியு மரிலும்
வெண்ணிலா முன்றிலிற் பூப்பப்
பள்ளநீர்க் கரையிற் சுள்ளியி னெழுந்து
வெள்ளெருக் கெங்கணும் படர
நள்ளலார் புரங்கள் பாழ்படத் துரக்கும்
விச்சுவச் சோதிநன் மைந்தன்
புள்ளவாய்க் கிடந்து புகைந்தழல் கொழிக்கும்
புலவுவே லுடைச்சயத் திரதன் (36)

## வேறு

என்று மனுவின் குலத்துதித்த
வெறிவே லரசர் மரபுமவர்
நன்று புரியுஞ் சரிதமும்யாம்
நவின்றே மிதனைக் கேட்டோர்கள்

துன்று பாவத் தொடரகற்றித்
தொலையாச் செல்வந் தனினுரு
மொன்றி வாழ்ந்து கடைமுறையி
னுலவா முத்தி யுறுவரென்முன் (37)

முப்பத் தேழாவது
மனு மரபுரைத்த வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 2332

---

உ

## முப்பத்தெட்டாவது
## மண்டல வளவை யுரைத்த வத்தியாயம்.

---

பாய தெண்டிரைப் பரவைசூழ் புவிமுத லாக
வேய நல்லுல கனைத்தின தளவையு மிசைக்கென்
முய்க திர்ப்பசும் பொன்னகர்க் கரசும்யாழ் முனியு
மேய வன்பொடு கேட்டலும் நாரணன் விளம்பும் (1)

கரிய கூரிரு டுடைத்தவெண் டிங்களங் கதிரோ
டருண மெல்லிதழ்ப் பங்கய வாண்முக மலர்த்து
மிரவிசெங்கதி ரெத்துணை நடக்குமத் துணையும்
பரவை மாநிலத் தளவெனப் பகர்ந்தனர் மேலோர் (2)

குவல யத்தின்மேற் கூரிருட் பிழம்பெடுத் தருந்து
மவிர்செ ழுங்கதி ராதவன் மண்டலத் தளவும்
புவரு லோகமேற் றுருவமண் டலத்துணை பொருந்தல்
சுவரு லோகமென் றுரைத்தனர் மறைபொரு டுணிந்தோர் (3)

ஆங்க ணுகவன் பிரவகன் னுதவகன் சிறப்பின்
விங்கு சங்வக னிவகன்மேற் பராவக னதன்மே
லோங்கி நின்றதோர் பரிவக னெனும்பெய ருடைய
தீங்கில் வாயுசக் கரங்களே ழுந்தனி சிறக்கும். (4)

உரைத்த பாரினா ருயிரம் யோசனை யுயர்ந்த
தரத்த வெங்கதி ராதவன் மண்டல மதன்மேல்
விரித்த யோசனை துணையுயர்ந் தத்துணை விளங்க
வரைத்த சாந்தினுங் குளிர்மதி மண்டல மாமால் (5)

சொன்ன மண்டல மீதுநா ருயிரத் தொகையின்
மன்னு யோசனை யுயர்ந்ததவ் வுடுவின்மண் டலமா
மன்ன தற்குமே லிரண்டுநா ருயிரத் தளவை
முன்னும் யோசனைக் கிரகமண் டலமென மொழிவார் (6)

அதனி னேங்குநா ருயிரம் யோசனைக் கப்பால்
மதியின் மேம்படு மேழ்பெரு முனிவர்மண் டலமா
மிதனின் மீதுநா ருயிரம் யோசனை யெழுந்து
துதியின் மேயது துருவமண் டலமெனச் சொல்வார் (7)

அலகி லுரகை மண்டலங் கிரகங்க ளனைத்து
நிலைபெ றும்படி நிறுத்துவன் றுருவன்மற் றவன்பா
லிலகு மைம்படை யேந்திய வெறும்வலித் தடந்தோ
ளலர்ப சுந்துழாய் மாயனுந் தருமமு மமரும் (8)

அலர்செ ழுங்கதி ராதவன் மண்டலத் தகல
முலைவி லொன்பதி னுயிரம் யோசனை யதனிற்
குலவு மும்மடங் கதிகமென் றுரைக்குவர் கோதில்
நிலவு கான்மதி *மண்டலத் தளவையை நெறியின் (9)

* மண்டலத் தளவையி னெறியின் (பா. பே.)

மருவு பூமியின் சாயையா மிராகுமண் டலமற்
றிரவி மண்டலத் திங்கண்மண் டலமெனு மிரண்டி
னுரைசெய் கின்றதோ ரளவதா யவற்றின்கீ ழுலவுங்
கரிய தாகுமற் றதனிற மென்பர்கற் றுணர்ந்தோர் (10)

இந்து மண்டலந் தனிற்பதி *னறிலோன் றிமைக்கு
மந்தில் சுக்கிர மண்டல மதனையெண் கூறு
தந்த வற்றினொன் றொழியவேழ் கூற்றினிற் றயங்கு
நந்த லில்லதோர் வியாழமண் டலமென நவில்வார் (11)

நவில வியாழமண் டலத்தினை நான்குகூ றுக்கி
யவையி லொன்றொழித் தியன்றமுக் கூற்றின தளவாங்
குவல யந்தரு கோதில்செவ் வாயின்மண் டலமுந்
தலவ ருந்திறற் போகுயர் மணியின்மண் டலமும் (12)

வான்ப டர்ந்திடு சனியின்மண் டலத்தள வதனி
னுன்கி லோரள வாம்புதன்மண் டலம் நகை வான்
மீன்கண் மேவிய மண்டலமியாவையும் புதன்வா
மூன்ற மண்டலத் தளவையுங் குறைந்தவு மாகும் (13)

அந்த நற்சனி வியாழமங் காரக னவிலின்
மந்த சாரியர் மற்றையர் நால்வரும் விரைவி
னுந்து மூர்தியி னுலவுவர் தக்கணு யனத்தி
னந்து வெங்கதிர் கோட்கெலாங் கீழுற நடக்கும் (14)

சேட்டு வெங்கதிர்ப் பருதிமேல் மதிசெலு மதன்மே
லீட்டு தாரகைக் கணஞ்செல வயருமற் றதன்மேற்
றீட்ட ரும்புதன் செலவுறும் புதன்றடந் தேர்மேன்
மோட்டு வார்கதிர்ச் சுக்கிரன் முறையினி னடக்கும் (15)

---

* ஆறிலொன் றியையும் (பா. பே.)

அறைந்த வெள்ளியின் மீதிலங் காரக னடக்கு
முறைந்த மற்றவன் மேலுய ரந்தண றுலவும்
பிறங்கு மற்றவன் மேற்சனி மெனமெல பெயருஞ்
சிறந்த வேழ்பெரு முனிவர ரவர்க்குமேற் றிரிவார் (16)

துருவ னேழ்பெரு முனிவர்மே லுறைந்திடுஞ் சுடர்கா
லிரவி வானவ னடவுறு மேழ்பரித் தடந்தேர்
பரவு மொன்பதி னுயிர யோசனைப் பரப்பாம்
புரவி பூட்டிய தண்டகற் றிரட்டியாய்ப் புகழ்வார் (17)

அவர்செ ழுங்கதிர்ப் பருதிதே ரச்சின தளவை
யுலவு கின்றநூற் றைம்பத்தே ழிலக்கம்யோ சனையா
நிலவு நாபிமூன் றுரமைந் தாறுநே மியதாய்த்
தொலைவில் யாண்டுருக் காலசக் கரமதிற் சுழலும் (18)

பச்சை வாம்பரித் தேரினிற் பதிந்திடு மற்றை
யச்சின் யோசனை நாற்பத்தை யாயிரத் தைஞ்னூ
றுச்ச மெய்திய துருவன்மே லுறையுமுன் னச்சின்
வைச்ச நேமிநீண் மானசேர்த் திரவரைத் திரியும் (19)

வேதச் சந்தச்சோ ரேழுமத் தேரினில் விசித்த
நீதில் வாம்பரி யீரறு பருதியஞ் செல்வ
ரேத மற்றமூ வுலகமும் விளக்குவ ரென்னி
லாதி மூர்த்தியா மூவரு மவருரு வென்றார் (20)

முப்பத்தெட்டாவது
மண்டல வளவை யுரைத்த வத்தியாய முற்றும்
ஆகத்திருவிருத்தம் 2352.

---

உ

# முப்பத்தொன்பதாவது
# ஆதவர்ச் சிறப்புரைத்த வத்தியாயம்.

---

உரைசெய் பன்னிரண் டாதவர் நாமமு மொழுக்கும்
விரைசெய் தேரினி லேறுநர் நாமமும் விளம்பென்
றரச ஞகிய விந்திரன் முனியொடு மறையத்
தரையொ ரேழையு மளந்தமா றகவொடுஞ் சாற்றும் (1)

**வேறு**

விளங்குறுந் தாதா வரியமா வொளிரு
மித்திரன் வருணன்வெங் கதிர்க
டுளங்குசக் கரனீள் விவச்சுவான் பூடாத்
துகளில்பர்ச் சன்னிய னஞ்சன்
கள்ங்கமில் பகனள் ளிருளெறி தொட்டா
விட்டுனு வென்னநன் கதிரோ
ருளங்கவர் நாமம் பன்னிரண் டுழிற்
றிங்கள்பன் னீரண்டினு முதிப்பார் (2)

புலத்தியன் புலக னத்திரி வசிட்ட
னங்கிராப் புலனெறி பிருகு
நலத்தகு பாரத்துவாசனல் லறஞ்சேர்
கவுதமன் காசிபன் கிருது
வுலப்பில்சீர்ச் சமதக் கினிதவ மொழியாக்
கவுசிகன் முறையினு தவரைச்
சொலப்படுந் திங்க டோறுமோ ரொருவர்
றொன்மறை பாடியேத் துவரால் (3)

வருசதக்கிருத்து ரவுதசன் சுவாருக்
கிருதன்வேற் சுரதனீள் வருண
னருடருஞ் சுசேனன் சேனசித் தொடுதா
ரரக்கனல் *லரிட்டநே மியினே
டொருவரு மிரசசித்துவாட் டடக்கைச்
சத்திய சித்தெனு முரவோர்
பருதிதேர்க் கயிறு பற்றியும் முறையின்
மதிதொறும் பயில்கிரா மணியர் (4)

அரத்தவேற் கேதி திகழ்பிர கேதி
யடற்பவு ருடேயனீ ரளிதன்
விரித்தசீர்ச் சற்பன் வியாக்கிரன் வடிவேற்
றனனிய லாதன்வித் தியுத்தோ
டிரைத்துவண் டறைதார்த் திவாகரன் பிரம
தேவனீ ளெக்கிரோ பேதன்
உரைத்தவா தவர்தந் தேர்முனோர் திங்கட்
கொருவரா யுலவுவா ளரக்கர் (5)

வாசுகிக்கங்க ணுளன்வெஞ் சீற்றத்
தக்ககன் வளைந்துமுள் ளெயிற்றுத்
தேசுடைச் சரப் புங்கவ னேலா
பத்திரன் சங்பா லன்சீ
ராசறு மயிரா பதன்றனஞ் செயன்மா
பற்மன்காற் கோடக னழல்வா
யேசில் கம்பளனச் சுவரதன் முறையி
னிரவிதேர் மதிதொறும் பரிப்பார் (6)

மன்னுதும் புருயாழ் நாரத னஞ்சன்
வழா திசை நலன்றிடு மகரப்
பன்னுசீர் விசுவா வுரயசே னன்ன
சுசியரு வாவசுப் பழிப்பில்

* வரிட்ட நேமியினு (பா, பே.)

*துன்னருங் கேள்விப் பராவசத் துகமர்
சித்திர சேனனா ரனையு
வின்னிசை யிரவி வாச்சனென் றவர்க
†ளிருதுவுக் கிவர்கள்பாட் டயர்வார் (7)

பட்டுடைக் காஞ்சிப் பாவைநீ ளல்குற்
பணைமுலை சுமந்தற வருந்து
மிட்டிடைக் கிருத்த லையெனு மணங்கு
மேர்குடி யிருந்தற விங்கி
மட்டவிழ் நறுந்தார் வானவ ருடலங்
கோட்டுமண் கொண்டற வளர்ந்து
விட்டொளி விரிக்கும் பிறைவடஞ் சுமந்த
**வெம்முலைப் புஞ்சிகத் தலையும் (8)

யானென தென்னுஞ் செருக்கறுத் துயர்ந்த
விருந்தவ முனிக்குறும் பகற்றும்
பானலங் கருங்கட் செய்யவாய் வெண்பற்
பாசிழைப் ††பொலங்கொடி யனைய
மேனகை யென்னும் வெம்முலை யணங்கும்
விண்ணவர் மடலிவர்ந் திரங்கும்
தேன்மொழிச் சகசன் னியையென வுரைக்குந்
திருவுறழ் தோற்றமா மயிலும் (9)

‡வண்டுவீ ழொலியன் மாலிகை சூழ்ந்த
வணிரிருங் கருங்குழற் செவ்வாய்க்
கெண்டையோ டிகலுஞ் சில்லரி நெடுங்கட்
கிளர்முலைப் பிரமலோ சனையுங்
குண்டலஞ் சுடரும் வள்ளைவார் காதுங்
குவிமுலைச் சந்தனந் துடைக்கு
மண்டரேக் கறவு புரிந்திடு மனும
லோசையென் றுரைத்திடு மணங்கும் (10)

---

* துன்னருங் கேள்விப் பார்வசத் (பா. பே.)
† இருதுவுக் கிருவர்பாட் டயல்வார் ஷை.
‡ வண்டுசூழ் ஒலியின் ஷை.
** வெம்முகப் புருசிகத் தலையும் ஷை.
†† பொலங்கொடி வனைய ஷை.

இலைத்தொழிற் புறத்த வெயிலுமிழ் மதாணி
யிறைவட மணிக்தெழில் சுமந்த
மலைக்கவின் கொண்ட முலைக்கிரு தாசி
யென்றிடு மதர்விழி யணங்குங்
கொலைத்தொழின் மறலி கற்றிடப் பயிற்றிக்
குழையொரு தலைக்கும்வாட் டடங்கட்
சிலைக்கரும் புருவ விச்சுவா வசியென்
றுரைத்திடுந் தேமொழித் திருவும் (11)

முழுநிலா வட்ட மணிவடஞ் சுமந்து
மூரிவேட் கரசிய லளித்துத்
தழுவுதற் கடங்கா வனமுலைச் செவ்வாய்த்
தளரிய லுருப்பசி யென்னுங்
கழையுறழ் பசுந்தோண் மரகதக் கொடியுங்
கவின்சிறைக் கிடந்தமென் கொங்கைக்
குழைமுகம் பூத்த குளிர்மதி வதனப்
பூருவ சித்தெனுங் கொடியும் (12)

அணுவினை வரையி னெண்ணுமென் மருங்கு
லாட்கப் பொலங்கிரி யிணையை
யணுவென வரைப்ப வனர்ந்தநீள் கொங்கைத்
திலோத்தமை யென்றிடு மணங்குந்
துணிகதிர்த் திங்கள் பொருவும்வா ணுற்றித்
துடியிடைக் கரியமென் கூந்தற்
பணியர வல்குற் சிரேட்டையென் றுரைக்கும்
* பசுங்கொடி யனையபெண் கொடியும் (13)

என்னுமீ ரறுவ ரின்னிள வேனில்
முதலிய பருவமோ ராறும்
பொன்னவிர் குடுமி யாழியம் பொருப்பைப்
பொலிவொடும் வலங்கொடு திரியு

* பசங்கொடி யனைய பைந்தொடியும் (பா. பே.)

மின்னுவெஞ் சுடர்கா லிரவிமுன் னிருவ
ரிருவராய் முறையினின் மேவிக்
கன்னலி னமிழ்திற் கனிந்திடப் பாடிக்
கண்மணி குளிர்ப்புற நடிப்பார் (14)

இன்னண முரைத்தோர் யாவருங் கதிர்கா
லிரவியோ டிசைந்துநா ளூ
மன்னுயி ரளித்து மறைவளஞ் சுரந்து
மாற்றருந் தீவினைக் கடிந்துந்
துன்னும்வெம் பனியிற் றுளங்குத லொழியச்
சுடருமிழ் வெயிற்கதிர் விரித்துப்
பொன்னவிர் குடுமிப் பொலங்கிரி
தன்னை வலங்கொடு போக்கயர்ந் திடுவார் (15)

மக்கள்வா னவர்கள் பிதிர்க்ககண்மற்றிவரை
வளர்ப்பதும் வயங்குமுச் சுடரா
முக்கணெம் பெருமான் முதலமுத் தேவ
ராயதூஉம் வேதத்தின் முடிவாய்த்
தொக்கவெவ் வுலகி னகம்புறந் தழுவிச்
சுடர்க்கொழுந் தாய்வெறு வெளியாய்
மிக்கபே ரொளியாஞ் சதாசிவன் றானும்
வெங்கதி ரெனமறை விளம்பும் (16)

முப்பத்தொன்பதாவது
ஆதவர்ச் சிறப்புரைத்த வத்தியாய முற்றும்
ஆகத்திருவிருத்தம் 2368.

---

உ

## நாற்பதாவது

## ஆதவர் கதிர்ச்சிறப்புரைத்த வத்தியாயம்

---

ஆதவன் கதிரி லேழ்கதிர் சிறந்த
வவற்றினீற் சுசுமுணைத் தோடு
மேதமற் றெளிரு மியலரி கேச
மிரண்டுவான் புதற்கொளி வழங்கு
நிதறு விசுவை விசமெனுங் கதிர்வான்
கேழொளி வெள்ளியை விளக்கு
மேதகு வசுரம் விளங்குகங் கியமண்
மகள்தனை விளக்குறு மாமால் (1)

வயங்கொளி யறுவா வசுவெனுங் கதிர்கல்
வியாழத்தை மறுவற விளக்குந்
தயங்கொளிச் சுவராட் டெனுங்கதிர் மிக்க
சனிதனை யொளியுற விளக்கு
மியம்பிய வுடுக்கண் முழுவது மிரவிக்
கதிரினல் விளங்குமெப் புனலும்
பயந்ததன் கதிராற் கவர்ந்துடன் மீட்டும்
படுமழை யுலகினிற் பொழிவான் (2)

வெய்யவன் கதிர்க ளாயிர மவற்றின்
விளங்கொளிக் கதிர்கனு னூறு
பெய்ம்மழை பொழியும் பின்னுமுன் னூறு
பிறங்கொளிக் கதிர்வெயில் விரித்து
வையக முழுது மழைவளஞ் சுரக்கும்
வயங்குமுன் னூறுவெங் கதிர்கள்
ஐயசெங் கமல மலர்முகங் கருக
வாரிபனிக் குறுந்துமி விசும் (3)

மாசிநீள் வருணன் பங்குனி பூடாச்
சித்திரை யஞ்சன்வை காசிக்
காசறு தாதா வானி யிந்திரனு
டியிற்சவி தாநவா வணிக்கு
நாசமில் விச்சு வான்புரட் டாதி
பகனலைப் பசிபருச் சனிசிர்
விசு கார்த் திகைதொட் டாகன்மார் கழிக்கு
மித்திரன் றைக்குவிட் டுனுவே (4)

இலகொளி விரிக்கும் பகற்செய்வோர் தூய
வேழ்பரித் தேர்மிசை யிவர்ந்து
மலர்தலை யுலகின் பனியிரு விசும்பிற்
பாதலத் தினிற்றனி மருவிக்
குலவுபே ரிருளின் குறும்பெறிந் தோட்டிக்
கொழுங்கதிர்க் கற்றைகான் றோங்கும்
பொலனெடுங் குடுமி வரைவலஞ் செய்து
புங்கவ ரேத்திடத் திரிவார் (5)

ஒற்றைநே மியந்தேர் வருணனோ ரையா
யிரங்கதி ருமிழ்ந்திரு டுருவுங்
கற்றையங் கதிரா றுயிர முமிழ்ந்து
கனையிருள் சீய்த்திடும் பூடாச்
செற்றுவெங் கதிரே ழாயிரம் பரப்பிச்
செறியிருள் பருகிடு மஞ்சன்
முற்றுவெங் கதிரெண் ணுயிரம் விரித்து
முழங்கிருள் விளங்கிடுந் தாதா (6)

இந்திர னென்பா ணுயிரங் கதிர்கான்
றெண்டிசை முழுவதும் விளக்கு
நந்தலில் விவச்சு வானொரு பதினு
யிரங்கதிர் விரித்தன நடக்கு

மைந்துடைப் பகன்வெங் கதிர்பதி ஞேரா
யிரந்தனி வழங்கினன் றிரியும்
வெந்திறல் புனேந்த மித்திர ஞேழா
யிரங்கதிர் திசைதொறும் விடுக்கும் (7)

அலங்கொளித் தோட்டா விரிகதி ரெண்ணு
யிரத்தொடு மந்தரத் துலவு
மிலங்கொளிச் சவிதாச் செழுங்கதி ரொன்பா
னுயிரத் தொடுமிரு டுரக்கு
நலங்கொள்பர்ச் சனியன் கதிரொரு பதினு
யிரத்தொடுங் கீழ்த்திசை நண்ணுந்
துலங்குவிட் டுணுவெங் கதிர்பதி ஞேரா
யிரத்தொடுந் துனேவினிற் றிரியும் (8)

மாந்தளிர் கொழுதி வரிக்குயில் கூவ
வருமிள வேனிலின் வெய்யோ
னேந்தெழில் கபில வன்னமாம் வேனிற்
காலத்தி னிருட்குறும் பெறிந்து
காந்துவெங் கதிரோ ரொளிபசும் பொன்னுங்
கனேமழை பொழிந்தகார் காலத்
தாய்ந்துவெங் கதிரோர் தன்னிறஞ் சுவேத
மாகுமென் றுரைப்பர்கற் றுணர்ந்தோர் (9)

கூதிரி னுதித்தோர் மெய்ந்நிறம் பாண்டு
வன்னமாங் குளிர்பனிக் காலத்
தாதவன் வண்ணந் தாம்பிர நிறமா
மணுகிய பின்பனிக் காலத்
தேதமில் கதிரோர் நிறமுலோ கிதமா
மென்றெடுத் தியம்புவர் மேலோ
ரோதிய கிரக மெட்டையுங் கதிரோ
ரொளிபெற விளக்குவ ரன்றே (10)

திங்களஞ் செல்வன் கொடிஞ்சியந் தேரிற்
றிரிதரு சில்லியோர் மூன்று
மங்கதிற் பிணித்த வாம்பரி பத்துங்
குருந்தின்மென் மலர்நிற மாகும்
வெங்கதிர்ப் பருதி சுசுமுனை யென்னுங்
கதிரினல் வளரும்வெண் டிங்கள்
புங்கவர் தினமோர் கலையருந் துதலாற்
பொழிகதிர் மழுங்கமெய் தேயும் (11)

வெள்ளிதிண் டேரிற் புரவியோர் பத்து
மேதினி பிறந்தன வாகு
மொள்ளொளிச் செவ்வாய்க் கொடிஞ்சியந் தடந்
பரியிரு நான்கென வுரைப்பார் [தேர்
தெள்ளுசீர்ப் புதன்றேர்ப் பரிகளோ ரெட்டுந்
தீம்புன லகடுனீந் தீன்ற
வெள்ளருங் குருவின் றேர்பரி யெட்டு
மெரிபசும் பொன்னிற மாகும் (12)

நீனிறக் கலிங்கம் புனைந்தவெஞ் சனியின்
பரியிரு நான்குடை நெடுந்தேர்
மானிற விரும்பி னியன்றதா மிராகுக்
கேதுவின் மணிநெடுந் தடந்தே
ரூனமின் றியங்கும் வாம்பரி யவ்வா
றுமென வுரைப்பர்மற் றிவரைப்
பான்மையிற் றுருவன் காற்றெனுங் கயிற்றிற்
பனிவரை வலம்வர வியக்கும் (13)

நாற்பதாவது
ஆதவர் கதிர்ச் சிறப்புரைத்த வத்தியாயமுற்றும்.
ஆகத்திருவிருத்தம் 2331.

---

# நாற்பத் தொன்றுவது
# உலகநிலை யுரைத்த வத்தியாயம்.

---

துருவமண் டலத்தின் மேலொரு கோடி
யோசனை யளவையிற் றுலங்கும்
பொருவரி தாகிச் சிறப்புவீற் றிருக்கும்
பொங்கொளி திகழ்மக லோக
மருவியங் குறைவோ ராயுளோர் கற்ப
மென்பர்மற் றதற்குமே லாகி
விரிதரு மிரண்டு கோடியோ சனைமேல்
விளங்கிடும் வியன்சன லோகம் (1)

தாமரைப் பொகுட்டி னரசுவீற் றிருக்குஞ்
சதுமுகன் முகத்திடைப் பிறந்த
வேமுறு சனகன் சனந்தன னியைந்த
சனாதன னியற்சனற் குமார
ஞமநூல் முனிவ ராங்கினி துறைந்வ
ரதற்குமே னண்ணும்யோ சனைகள்
காமுறு மூன்று கோடியி னளவை
கருதுதற் கருந்தவ லோகம் (2)

மழகதிர்ப் பருதி யொளிகெட விமைக்கு
வனப்புடைத் திறலவி யிராசர்
விழைவுட னதனிற் கடவுளர் போற்ற
விண்ணவ ராகிவீற் றிருப்பா
ரழகுவீற் றிருக்கு முலகின்மே லுயர்ந்த
யோசனை யாறுகோ டியதாய்த்
தழைவுறு முலகந் தண்மறை தெரிந்தோர்
சத்திய லோகமென் றுரைப்பார் (3)

*ஆங்கதிற் கமலப் பொருட்டுறை மேலோ
னரகவிற் றிருக்குமாங் குறைவோர்
தீங்கறு வேத னுயுவெத் துணைய
வத்துணை சிறப்பின்விற் றிருப்பா
ரிங்கிதன் மீது சொலற்கரி தாகு
மெரிகதிர்க் குப்பைகான் றிலங்கி
யோங்குசி ருலகந் திருமறு மார்ப
னுவந்துறை யுலகென வுரைப்பார் (4)

அவ்வுல கடைந்தோர் சகட்டுருள் போல
வலம்வரும் பிறவியி னடையா
ரிவ்வுல கினுக்கு மேலதா யொளிரு
மெரிகதிர் கற்றைக ளுமிழுஞ்
செவ்விசே ருலக முளததன் மீது
திங்களங் கண்ணியெம் பெருமான்
கோவ்வையங் கனிவாய்ச் சுணங்குபூத் தலர்ந்த
குவிமுலைக் கொடியொடு முறைவான் (5)

ஐந்தவித் தடங்கு முனிவர ரிலிங்க
பூசனை மகிழ்வினுற் றுநர்க
ளிந்தியத் துழலா துளத்தறு கரண
மொடுக்கிநல்லி யோகினி லிருப்போர்
நந்தியை முதலா மெண்ணுறு கணங்கள்
நான்முகன் முகுந்தனோ டெய்தி
வந்தனை புரிந்து மழவிடை யுயர்த்தோன்
மலரடி நீழல்வீற் றிருப்பார் (6)

மேலுல கேழும் விளம்பினஞ் சுருக்கி
மேதகு கீழுல கேழு
மேல்புற வுரைக்கின் மகாதலம் பொன்மை
யெறிமணிக் குப்பையோ டியையும்

* ஆங்கதிக் கமலப் பொருட்டு

பாலுறு சுதல வுலகமும் பொன்னம்
பவளநல் லுருவமாம் விதலஞ்
சாலவு நிதலம் வெண்ணிற மாகுந்
தலநிறங் கருமைய தாமால் (7)

இலகொளி விரிக்கும் மகாதலம் வயிடு
ரியநிற மெனவொளி பரப்பு
முலைவற விளங்குந் தராதலஞ் சிறந்து
பதுமரா கத்தொளி பரப்பு
மலைவற முன்னஞ் சொல்லிய விதலத்
தயக்கிரீ வன்மகா சம்ப
ளிலவுமி ழெயிற்றுக் கம்பள வானும்
நமுசியர் தயாநிறைந் திருப்பார் (8)

தலத்தினி லளப்பிற் சர்ப்பம்விற் றிருக்குந்
திகழிர சாதலந் தன்னி
னலத்தகு கருடன் வாசுகி கால
நேமிநற் றவம்புரி கிலாதன்
சொலப்படுந் தார காதியர் முதலோர்
துன்னுவர் தராதலந் தன்னில்
வெலற்கரு மிரணி யாக்கன்வெவ் விடவாய்
தக்ககன் விரோசன னுறைவார் (9)

சங்கிதன் கீழி னளப்பரு நிரைய
மிவைவிரித் துரைத்திடிற் பெருகு
மாங்குறு முலக மனைத்தையுந் தாங்கிச்
சேடனுங் கமர்குவ னமுன்று
விங்குவெங் கதிர்க டிசைத்திசை யளப்ப
விளங்குகா லாக்கினி யீச
னேங்குவெந் துப்பின் மானுட மடங்கல்
மகிழ்விணுங் குறைவரென் றுரைத்தான் (10)

நாற்பத்தொன்றுவது
உலகநிலை யுரைத்த வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 2391

உ

# நாற்பத்திரண்டாவது
## சம்புத்தீவின் சிறப்புரைத்த வத்தியாயம்

---

நவையி லுலகம் பதினான்கு
நவின்று மின்னும் விரித்தெமக்குப்
புவியி னளவை யுரைத்தியெனப்
பொன்னு டளிக்கும் புத்தேளுந்
திவவு நல்யாழ் முனிவரனும்
பணிந்து கேட்பத் திரைகடல்கு
மூவனி யருந்தி யுமிழ்ந்தளித்த
திருமா லினிதி னறைகுவனல் (1)

சம்பு பிலக்கஞ் சான்மலிநீள்
குசஞ்சிர் தணவுக் கிரவுஞ்ச
மம்பொற் சாகம் புட்கரமென்
றறையு மோரேழ் தீவினையும்
நம்பு முவரி கன்னல்சுரை
நெய்வெண் டயிர்பா னன்னீராம்
பம்பு திரைய கடலேழு
முறையிற் பரந்து சூழ்ந்திடுமால் (2)

உரைத்த நடுந்தி வோரேழுங்
கடல்க ளேழி னெடுமளவை
வரைத்துக் கூறின் யோசனையோ
ரைம்பொன் கோடி யெனவகுப்பர்
தெரித்தீண் டுரைத்த தீவெவைக்கு
நடுவாஞ் சம்புத் தீவதனைத்
தரித்து நடுவண் மேருவெனுஞ்
சயில மதனிற் றனிதுலங்கும் (3)

மேரு வுயர்ச்சி யெண்பத்து
நாலா யிரம்யோ சனைவிளம்பும்
பாரிற் ருழ்ந்து பதினறு
யிரம்யோ சனையா மேல்விரிவை
யோரி னென்னுன் காயிரம்யோ
சனையேன் றுரைப்பர் கிழ்ப்பருமை
தேரிற் பதினு ருயிரம்யோ
சனையென் றெவருஞ் செப்புவரால் (4)

பூமி யென்னுங் கமலத்தின்
பொகுட்டுப் போலும் பொலங்கிரிசூழ்
நாம வருட வரையனைத்து
நவிலின் மேல்கிழ் கடலளவுந்
தாமம் போலு நிடதவரை
தென்பாற் சாரு மதன்றென்பா
லேம கூடங் கிடக்குமதன்
றென்பா லிமயங் கிடக்குமால் (5)

பொன்னங் கிரியின் வடபுலத்து
மேல்கிழ் புணரி யளப்பதற்கு
மன்னுங் கோல்போ னீலவரை
கிடக்கு மதற்கு வடபுலத்திற்
றன்னே ரில்லாச் சுவேதவரைச்
சாரு மதனின் வடபுலத்திற்
பன்னுஞ் சிருங்க வரைகிடக்கு
மவற்றி னளவைப் பகுத்துரைப்பாம் (6)

மேரு வரையின் றென்பாலும்
வடபாற் றிசையு மிகவணித்தாய்ச்
சாரு நிடத நீலவரை
கிழ்மே லினங் தனிப்பகரி

ஞேரொன் றிலக்கம் யோசனையா
மேம கூட முரைத்ததனுக்
கிரைந் தாம்யோ சனைகுறையு
மிமய மதற்கத் துணைகுறையும் (7)

வடபாற் கிடந்த நீலவரை
யளவை யதனி னதன்வடபா
லடையுஞ் சுவேதம் யோசனையி
ரைந்து குறையு மதன்வடபாற்
படருஞ் சிருங்கஞ் சுவேதவரை
யதனிற் பத்தோ சனைகுறையு
மொடிவி லுயர மகலமிவைக்
கிரா யிரம்யோ சனையென்பார் (8)

மேரு வரைக்குத் தென்பாலும்
வடக்கு மேல்கீழ்க் கடலளவாய்ச்
சாரு நிடத நீலமெனும்
வரையைத் தழுவி மிகவோங்கிச்
சேரு மேரு வரைதனக்குக்
கிழக்கு மேற்குஞ் சிறந்தோங்கு
மாரி படியு மாலியவான்
வரையுங் கந்த மாதனமும் (9)

வழுதிக் கொடிச்சே லெழுதியமால்
வரையின் கிழக்கா மாலியவான்
றழுவிக் கீழ்பா லுறைகண்டந்
தயங்கும் பத்தி ராச்சுவமாம்
பழுதில் மேரு வரைமேல்பாற்
பயிலுங் கந்த மாதனத்துக்
கழிவில் மேல்பா லுறுகண்டங்
கேது மால மெனவறைவார் (10)

**வேறு**

துலங்குமா லியவா னெனும்வரைக் கீழ்பாற்
றுன்னிய சோடமால் வரையு
மலங்கொளித் தேம கூடமும் நீல
நிடதத்தை யணவிய கிடக்கும்
விலங்கிவில் லுமிழுங் கந்தமா தனத்தின்
மேக்குறு நிடதமால் வரையு
மிலங்கொளிப் பாயத் திரமுமக் நீல
நிடதத்தை யெய்திய கிடக்கும் (11)

**வேறு**

எண்பதினா யிரமளவாம் யோசனைத்தாய்க்
கீழ்க்கடன்மேல் கடலை யெய்திக்
கண்கவரும் வனப்பமைந்த கயிலைவெற்புங்
கந்தமா தனமு நாளும்
விண்புரக்கு மகமுதல வினைபுரியும்
பரதகண்ட மதனின் மேவித்
தெண்டிரைகள் கொழித்தெறியுந் தென்கடலை
மிகச்சார்ந்து திகழு மன்றே (12)

திரிசிருங்கஞ் சாருதியென் றுரைசெயுமால்
வரையிரண்டுங் கிழக்கு மேற்கா
மிருகடலுந் தனிதழுவி யெண்பதினா
யிரமாம்யோ சனைய வாகி
மருவிரியுங் கற்பகநா டெனத்திகழுத்
தரகுருவை மருவி யோங்கி
விரிதிரைய சுறவமெறி வடகடலை
யணியவாய் மேவு மாதோ (13)

**வேறு**

நிடத வரைக்கு நிகழ்த்தேம
கூட வரைக்கு நடுக்கண்ட
மிடரின் றுயர்ந்த வரிவருட
மேம கூட வரைக்குமுயர்

குடுமி யிமைய வரைக்குநடுக்
கோதின் றுயர்கிம் புருடகண்ட
மடையு மிமைய வரைத்தென்பாற்
பரத கண்ட மெணவறைவார் (14)

மேரு வடபா லிலவரை
தனக்குஞ் சுவேத வெற்பினுக்குஞ்
சாரு நடுவ ணிரம்மியக
வருடஞ் சுவேத வரைதனக்கு
நேரில் சிருங்க வரைக்குநடு
நெறிசேர்ந் திரண மியவருடஞ்
சீர்சால் சிருங்க வரைவடபாற்
சிறந்த புகழுத் தரகுருவே (15)

சிறந்த வுயர்மே ருவின்வடபாற்
றென்பா லுரைத்த கண்டங்கட்
கறைந்த வளவை யோரொன்றுன்
பதினு யிரம்யோ சனையாகும்
பிறங்கு மேரு வரைசூழ்ந்த
கண்டம் பேசி னிளாவிருத
முறைந்த திசைநான் கோரொன்றுன்
பதினு யிரம்யோ சனையாமால் (16)

கீழ்பா லுயர்மந் தரங்கிளக்குந்
தென்பாற் கந்த மாதனமேற்
குழூங் குடபால் விபுலவரை
வடபாற் றயங்குஞ் சுபாரிசமாம்
பாழி வரைக ளிளாவிருத
கண்டத் துறையுஞ் சுடர்ப்பருதி
சூழும் வரையின் கீழ்பாலிற்
றுகடீர் கடம்ப மரநிற்கும் (17)

மேரு வரையின் வடபுலத்தின்
வியன்பொற் சிலைய வால்நிற்கு
மார்வ முறுமவ் வரைக்குடபா
லலங்கு சிலைய வரசோங்குஞ்
சீர்சால் தென்னம் புலமதனிற்
றிசைக ளளக்குஞ் சிலைபோக்கிக்
கார்வெங் களிற்றின் மிகப்பருத்த
கனிதாழ் நாவ லின்றிடுமால் (18)

பனிசேர் விசும்பின் முகடளக்கும்
பராரை நாவற் பழமிகவுங்
கனியப் பழுத்து வழிதேறல்
கல்லெ னருவி யெனவீழ்ந்து
துனைவின் மேருச் சூழ்போதந்
தோடுந் துகடீர் பேர்யாற்றை
வனைபொற் றிரைகள் கொழித்துலவி
வயங்குஞ் சம்பு நதியென்பார் (19)

காற்றின் வெயிலி னன்னதியின்
கரையி னுலந்த கொழுஞ்சேற்றை
மாற்றெப் பில்லாச் சாம்பூநதப்
பொன்னென் றமர ரணிந்திடுவார்
தோற்று நீருண் டவணுறைந்தோர்
தொழுநோய் மூப்பு நரைதிரைபோ
யாற்ற லமரர் கண்டுவப்ப
வம்பொன் னுருவி னமர்ந்துறைவார் (20)

### வேறு

மேருமால் வரையின் கீழ்பால் விரைகமழ் நறையின் வண்டு
சோர்வுறுஞ் சோலைதன்னை சயத்திர ரதமா மென்பர்
பார்புகழ் தென்பாற் சோலை கந்தமா தனமா மேல்பா
லேர்திகழ் சோலை தன்னைத் திகழ்வயிப் பிராச மென்பார் (21)

அந்தர மளக்கு மேரு வடபுலத் தமருஞ் சோலை
நந்தன வனமா மென்பர் நவின்றவவ் வரையின் கீழ்பா
லுந்துநீர் வாவி தெண்ணீ ரோங்கரு ணோதந் தென்பாற்
சந்தநீர் வாவி மாபத் திரமெனச் சாற்று வாரால் (22)

அவ்வரைக் குடபால் வாவி தனையசி தோத மென்பர்
செவ்விதின் வடபா லுற்ற தீம்புனல் வாவிதன்னைக்
கொவ்வைவா யமிர்தத் தீஞ்சொற் குழைகிழித் துலவும் [வாட்கண்
மவ்வலங் குழலாராடு மானச வாவியென்பார் (23)

வேறு

பானலங் கருங்கட் குறத்தியர் முகத்தைப்
பான்மதி யெனவுளத் தெண்ணி
மீனின மருள வொற்றையா ழியங்தேர்
வெய்யவன் பரிக்குளம் பிடறிக்
கானவிற் பராரைச் சந்தனக் கோட்டிற்
கதிர்செய்பொற் பலகையிற் றொடுத்த
தேனிறா லுடையா வருவியிற் றூங்கி
வழிதருஞ் சிதாபநீள் குன்றம் (24)

மேலுயர் பளிக்குப் பாறையிற் றோன்றுந்
தன்னிழல் வேழமென் றெண்ணி
மாலொடும் பாய்ந்து மருப்பிறத் தோன்றுந்
தன்னிழல் பிடியென மருண்டு
கூலமீ துயர்த்திப் பணைக்கைமே னீட்டிக்
கூன்புறத் தசைத்திட நோக்கிப்
பால்புரை தீஞ்சொ லியக்கியர் மயங்கிப்
பரிவுறுங் குமுத்துவான் குன்றும் (25)

முத்தரீச் சிலம்பு முழுவினிற் றதும்ப
முகிழ்முலைத் தரளமேற் றுக்கக்
கத்திகைக் கருமென் கூந்தல்வாழ் வண்டு
மிடற்றெடுங் காமர மிசைப்ப
தத்தரி நெடுங்க ணியக்கியர் காமக்
கூத்தயர் சாலையிற் பிடித்த
சித்திர வெழினி போன்முகி றவழுஞ்
சிறப்புடைக் குசரமால் வரையும் (26)

பகல்கெட விமைக்கும் பருமணி வரன்றிப்
பாய்ந்துவீழ் மாலைவெள் ளருவி
யகில்சுடு புகையிற் றண்மைதீர்ந் தொழுக
வலர்கதிர்த் திங்களங் கோடு
முகில்வயி றுடைப்பக் குறுந்துளி பிலிற்று
முகம்புலர்ந் திடாததண் சாரல்
நகைமதி முகத்திற் சூரர மகளிர்
நயப்புறுங் கனகநீள் குன்றும் (27)

கவிழ்தலை யருவிக் குழித்தநீளறையிற்
கதிர்மணி நித்திலங் குறுவார்
துவர்நெடுங் கொடியிற் செய்தநல் லுலக்கைச்
சுருள்விரி யரம்பையிற் றூங்கு
நவையில்கூன் புறத்த புலியடிச் செங்காய்
நயக்கவிழ் கனிகருந் திணைமே
* லவலிடிப் பவர்தம் மமலையை யிவிப்ப
விழ்தரு மேகநீள் குன்றும் (28)

கல்லென வொலிக்குங் கவிழ்முலையருவிச்
சாரலிற் கண்டுயி லுழுவைக்
கொல்புலி படுக்கும் பெருங்கல் நீளடர்வெங்
குறவர்விழ்ந் திடுதலும் வெருவிப்

பல்பொறிப் பறழ்தன் வாயினிற் கவ்வி
யிறுவரை முழைஞ்சினிற் படர
மல்லன்மால் யானை பிடியொடுந் துயிலு
மாவிய வானெனுங் குன்றும் (29)

உளிகுடைந் துறுத்த வுரற்றலை கேழ
லுழுநிடுங் குழிதொறும் பொன்னு
நளிகதிர் விரிக்கும் வயிரமு மிமைக்கு
நாண்முதிர் கவலைகொள் குழியிற்
களிறுகோட் படுத்துக் குறவர்கின் றூனுங்
கம்பலை வெள்ளுளை யரிமான்
*பிளிறொலி யவிக்கும் விண்டொடு குடுமிப்
பிறங்குமா லிலவான் குன்றும் (30)

கொடிச்சிய ருவலைக் கூரைதா ழொழுகு
தெருத்தொறுங் குறுநடைப் புதல்வர்
துடித்தலை யடிய கயமுனி யோடுஞ்
சூழ்ந்தன ராட்டயர்ந் துலவ
வொடிப்பமென் கதிர்நீட் டொழுகொளி மணியும்
பேரொலி யகழ்ந்தவொண் பொன்னு
மிடித்துவெண் டுளிகா லருவிகொண் டிறங்கு
மிருக்கிச வானெனுங் குன்றும் (31)

மானுடம் பழுக்குங் கிலுத்தநீள் வனத்தின்
வாலுளை மடங்கல்கோட் படுப்ப
வூன்விளிம் பெறிந்து விளங்குபல் லெயினர்
களிற்றின்வெண் மருப்பகழ்ந் துடுத்த
பானிலா முத்தம் வீழ்சுவ டொற்றிப்
படர்தருங் கல்லதர் மருங்கிற்
றேனிறால் தொடுத்த கழைவிசும் பளக்குஞ்
சிறப்புடை விந்தவான் குன்றும் (32)

* பிளிறொலி விரிக்கும் (பா. பே.)

மைமெழுக் கெறிந்த முகத்தினிள மந்தி
குடச்சுனை மருங்கினிற் பூத்த
செம்மலர் காந்த டீயென வெருவிக்
கல்லெனத் தேனிருல் தொடுத்த
கைம்மலை யருவிக் கவுளினிற் பாயக்
கரடநீர்க் கலுழிகொண் டிறங்கி
பெய்ம்முகி றவழுஞ் சாரலின் விடுக்கு
மந்தர மெனும்பெருங் குன்றும் (33)

கூந்தலம் பிடிக ளிற்றுளைந் தலறு
மோதையுங் குழவிவெண் டிங்க
ளேந்துகோ டுழக்கத் தேனிரு ளிழியா
விழுமென வீழ்தரு முழக்குங்
காந்தளஞ் செவ்வி முகிழ்விரல் சிவப்பக்
கவுரிமுண் டகத்தயாழ் தெறிக்குஞ்
சாந்தமென் முலையார் பாடலு மொழியாத்
தகைபெறு நிடதமால் வரையும் (34)

பாற்குட முடைந்து சொரிதல்போ னிலவு
சொரிதரு பளிக்குநீ ளறையிற்
சூற்பிடி மருட்டத் துணைக்கரி துஞ்சுந்
தண்ணறுஞ் சாரல்க டோறுங்
கூற்றெரளி யிட்டுக் கொறுகொறுத் தன்ன
படர்முலை யியக்கியர் குருதி
வேற்றடஞ் செங்கை யியக்கரோ டாடும்
வேணுமா னெனுநெடு வரையும் (35)

பொரியரைச் சாந்தப் பகந்தழை தெவிட்டும்
பூணுதற் கூந்தலம் பிடிக்காங்
கெரிகதிர்ப் பசும்பொன் விண்ணக நாட்டி
னிலைகுழைத் துயர்ந்தபொற் றருவின்

விரிதழை யொடித்து மென்குள கருத்தி
　　வியனுடைச் சாரல்க டோறு
மரசுவா வழுங்குஞ் சிறப்புவிற் றிருக்கு
　　முருசக மாகுநீள் வரையும் (36)

செம்மயிர்க் குறுந்தாட் பேரொலி யகழ்ந்த
　　பொற்பிதிர்ச் செழுந்துக ளிறைத்துக்
கைம்மலை கதிர்சூழ் பொன்மலை நான்கு
　　கால்கொடு நடந்தெனத் திரியு
மைம்முகி றவழுஞ் சாரலி லியக்கர்
　　வருபனிக் குளிர்கெட மாதர்
கொம்மைவெம் முலையைத் தணந்திடா தொழுகு
　　முயர்மணிச் சயிலவான் குன்றும் (37)

விரியல்வெண் டோட்டுப் பாசடைக் கமலப்
　　பள்ளியின் வியன்பெடை தழுவி
யரசிள வன்னங் கண்படை கூர
　　வாய்சிறைத் தும்பிதா லாட்டும்
பொருதிரை புரட்டி முழங்கரு ணோத
　　வாவியின் கீழ்புல மதனி
னுரையுணர் விறந்த யோகிய ரியக்க
　　ரும்பர்தம் முறையுளா வதியும் (38)

வேறு

கள்ளூற் றிருக்கு நறுந்தெரியற்
　　குறவர் கலவி தனிலுடைந்த
வெள்வாய்ச் சங்கத் துணியதனை
　　விரிநீர்ச் சார லிடைத்தவழும்
பிள்ளை மதியோ டிணைத்துவளை
　　யணிக வென்னப் பெய்வளையா
ருள்ள மயக்கும் பெருவளத்தோ
　　டுயர்ந்த வம்பொற் றிரிகூடம் (39)

அண்ணுந் தெழுந்து செம்மாந்த
வம்மென் முலைய குறத்தியர்தம்
வண்ணம் வாய்ந்த முகமென்ன
மதிமேற் குறவர் பொட்டணியுந்
தண்ணெண் சார லிடந்தோறும்
வளர்ந்த முல்லைக் கொடிதவழ்ந்து
விண்ணோர் தருவின் மேற்படரும்
பராங்க மென்னும் வியன்குன்றும் (40)

விழுது போக்கு நள்ளிருளில்
விரிந்த வைம்பால் வட்டித்துக்
கொழுநிச் *சுரும்பர் கறிகறிக்குஞ்
சுனைவாய்க் குவளை மலர்குற்றுத்
தழுமுற் றெய்தா முலைமீதிற்
றரளம் புனையு மரமகளி
ரெழுது பாவை யெனத்தோன்று
மெழில்சே ருசகமெனுங் குன்றும் (41)

கொண்டை கிடந்து குழைபுரட்டு
மதிவாண் முகத்துக் கிள்ளைமொழி
யண்டர் மகளி ருயர்வேங்கை
யூழ்த்த செம்மற் பூவதனைக்
கண்டு புலிவன் பறழெனவே
வெருவித் தமது கண்புதைக்குங்
கொண்ட றவழு முகம்புலரா
நிடத மென்னு முயர்குன்றம் (42)

வேறு

துய்த்தலை மந்தி யாசினிப் பலவின்
சூழ்சுளை யுகிரினற் போழ்ந்து
கைத்தலத் தேந்திச் சூலிள மந்திக்
களித்துளங் களிப்புறச் சேர்தல்

* சும்பர் கறிகற்குஞ் (பா. பே.)

பைத்தபாம் பல்குற் குறத்தியர் நோக்கிக்
கணவர்தம் வரவுபார்த் துயங்கு
மைத்தவழ் சாரற் ருேம்பிரா தகப்பேர்
வான்ருேடு குடுமிவான் குன்றம் (43)

புண்ணியத் திங்கள் பொழியும்வெண் ணிலவைப்
பூநுதற் பிடியினம் வழங்குந்
தண்ணிறுஞ் சார லருவியென் றெண்ணித்
தழைசெவிச் சிறியகட் பருஉத்தா
ளண்ணன்மால் யானைத் தடக்கையால் வாரி
யண்மையி னுனுபு திரியும்
விண்ணுயர் பஞ்ச சையமென் ருேதும்
மேக்குயர் குடுமியங் குன்றம் (44)

முற்படு களிற்றின் கடாந்திறந் தோடுங்
கலுழியம் பெருக்கினில் மூழ்கிப்
பிற்படு பிடியு மடிசெவிக் கன்று
நீந்துபு மென்மெலப் பெயரும்
பொற்புவிற் றிருந்த சாரலி னெண்கா
முகில்சுடு குருஉப்புகை தவழக்
கற்பக நாட்டி லரம்பையர் குழலுக்
கூட்டிடுஞ் சிறப்புடைக் கலிங்கம் (45)

வரிப்புற வணில்வாற் செந்தினை காக்கு
மிதணிலிற் ருேடுத்தவான் கொடியுங்
கருப்புர வாழைச் சுருள்விரி குருத்துங்
காற்றினுன் மென்மெல வசைந்து
விருப்புறு விண்ணுட் டரம்பையர் கலவிப்
பூசலி னரும்புவேர் புலர்த்துந்
திருத்தகு மல்லல் வளங்கிடந் தோங்குஞ்
சிறப்புடை வேலுநீள் குன்றம் (46)

காம்படு பராரைச் சந்தனக் கோட்டிற்
றெடுத்தகே ளிருலினைக் கஸ்துரிப்
பாழிவாய்ச் சுடிகைப் பொறியணற் பாந்தள்
பைத்துவெங் கதிரெனத் தீண்டுந்
தாழ்புன லருவிச் சாரல்க டோறுஞ்
சண்பக நறுமலர் கொய்வான்
மாறைமென் னேக்கி னரம்பையர் வழங்கும்
வளங்கெழு குரவவான் குன்றம் (47)

பொரிமருப் பெருமை கன்றுளிச் சுரந்து
பொழிந்திடு மறைவறட் டைம்பால்
விரைகமழ் கூந்தற் கொடிச்சிய ரோங்கும்
வியன்சினைக் கற்பக நாட்டுப்
பருகுதேன் ளமுதிற் களித்திடும் வளங்கூர்
சாரலிற் பருமணி வரன்றி
யருவிகண் டுயிலா நிழுமென வொழுக
வகன்விசும் பணவுவான் குமுதம் (48)

களிறுகோட் படுக்குங் கானவ ருவகைக்
கம்பலை முழக்கினிற் கலந்து
துளிமுகில் படிகக் கோளிரைத் தனபோற்
றாயநீர்த் தாரைகள் சொரியும்
வெளிமுக டளந்து மேக்குயர் குடுமிச்
சாரலின் மென்றினை காக்குங்
கிளிகடி மகளிர் கம்பலை யொழியாக்
கேடில்சீர் சிந்துரக் குன்றம் (49)

காய்க்குலைக் கமுகும் பழக்குலைத் தெங்குங்
கதிர்பிணங் தாடுமை வனமும்
வேய்த்தலைத் தொடுத்த பலிறலை யிருவு
மென்றுணர் பசுங்கறிக் கொடியும்

வாய்த்தமென் பயறு முழுந்தும்வெள் ளௌ்ளும்
வயின்வயி னெங்கணு மலியா
வேத்தரும் வளங்கூர் தண்ணறுஞ் சார
*வெரிமணி யிமைக்குநீ ளுதாரம் (50)

பரந்துவீ முருவி யெனவிரு புடையும்
பாய்மதக் கலுழிநீர் சொரிந்து
கருங்கவுட் சாரல் பரந்துமெய் சுரும்பின்
கடும்புறு கடும்பசி தணிய
விருந்தினி தளித்து வீழ்பிடி யோடும்
வெங்கரிப் பகட்டினம் வழங்க
நரந்தமா வெருவுஞ் சாரல்சூ ழேக
சிருங்கமா நவையறு குன்றும் (51)

முகிழ்த்திடுங் கடைக்கண் வடவையை மூட்டி
முறச்செவிக் காற்றெறிந் தலையப்
புகைக்கன லவிய வொழுகுவெம் மதத்திற்
புவிநெகிழ்ந் திடவுய ரடுக்க
ணகப்பிணை ரடியிற் பாதலத் தொளிப்ப
நடந்திடுங் களிறுகோட் படுத்துப்
பகற்கதி ரென்ன விரவெரி மரத்திற்
பிணித்தனர் பயிற்றுமா சயிலம் (52)

கருங்கொடி மிளகுஞ் செங்கொடித் துகிருங்
கவலையங் கொடியொடு மிடைந்து
விருந்தின ருள்ள மயக்குறு சார
லிடந்தொறும் †வேல்புரை நெடுங்க
ணரம்பைய ரோடும் விண்ணவ ரெய்தி
யகன்கனை நறும்மலர் குற்று
வருந்தற வுருள்பூந் தாரவற் போற்றும்
வளங்கெழு பசாசநீள் குன்றம் (53)

* வெயின்மணி யெறிக்குநீ ளுதாரம் (பா. பே.)
† வேல்புரை தடங்கண் ஷை.

மண்டுநீ ரெறியு மென்சிறு புழைக்கை
மடிசெவிக் கயமுனி யோடும்
கொண்டலம் புளிற்றுக் கன்றினங் தவழுங்
குறத்தியர் முன்றில்க டோறும்
பண்டரு கிளவிக் கின்னர மிதுனம்
பாற்சுவை மருட்டுபாட் டயரும்
விண்டொடு குடுமி வெயிற்செல வகற்றி
மேக்குயர்ந் திடும்வசு தாரம் (54)

செங்கயல் கிடந்து கருங்குழைத்தாவும்
வெண்ணகை யியக்கியர் செறிந்து
குங்குமச் சேறு மெழுக்கெறிந் தென்னச்
*சேப்புறுங் குடபுல நோக்கிக்
கங்குல்வாய்க் காமங் காழ்கொள நெஞ்சங்
†கணவர்பால் நடப்பவேற் றுடலாய்த்
துங்கியோ கியரின் மூச்சவித் திருக்குந்
தகைபெறு விலாசநீள் குன்றம் (55)

கூன்முது கணில்வா லிறடியம் பெரும்போர்ப்
பழித்துயர் குஞ்சரக் கன்றூற்
கானவர் துவைப்பப் பாசவ லிடிக்குங்
குறத்தியர் கையகத் துலக்கை
வானுயர் பலவின் முட்புறக் கனிகள்
வழன்றிடத் தாக்கநூ முடைந்து
தேனவிர் சுளைகள் சுடுபொனின் வீழுஞ்
சிறப்புடைத் தந்தியங் குன்றம் (56)

கற்றையங் கவரி மயிரினின் வேய்ந்த
சிறுகுடிக் கானவர் மகளிர்
குற்றசெங் கழுநீ ரனந்தரில் விழித்த
கண்ணெனக் குறுவிழி கொள்ளு

* சேப்புறக்குடபுல் நோக்கி பா. பே.
† கனவர்பால் நடப்ப வேறுடலாய் ஷை

முற்றமெங் கணுநீள் பராரைமென் கோட்டுச்
*சண்பக மூழ்த்தமொய்ம் மலர்கள்
பொற்றக டிழைத்துப் பரப்பிய போலப்
பொலிந்திடு முயர்திரி சிருங்கம் (57)

படுமணி வரன்றிப் பரந்துவீ ழருவி
காழ்படு மகின்முரு டுருட்டித்
துடியடிக் கயவாய்க் குஞ்சரக் கன்றுந்
துறுமயிர்க் கவீழ்தலை யெண்கு
மடுபுலிப் போத்தின் பறழையும் வாரி
யருவிகொண் டிறங்குதண் சாரல்
மடமயி லால வழுகுகண் படுக்கும்
வான்றொடு குடுமியங் கயிலை (58)

பளிக்கறை முன்றிற் பசுந்தினை யுணக்குங்
குறத்தியர் பழிப்பில்வாணீண் முகத்தைத்
தளிப்புனற் சுனையின் முழுநெறி யாம்ப
றண்மதி யெனமுக மலர
வளிக்குல மனைத்துந் தாமரை யென்ன
வீழ்தரு சாரலி னருவி
துளித்துநின் றொழுகச் சிறப்புவீற் றிருக்குந்
தோமறு மிமையநீள் குன்றம் (59)

ஆயபொற் குடுமி மால்வரை யனைத்து
†மளியிருந் தூட்டுபூங் கமலஞ்
சேயிதழ் கழுநீர்க் கருநெறிக் குவளைத்
தேத்துளிப் பிலிற்றரக் காம்பன்
மேயசிர் மாலைத் திரமென வுரைக்கு
மேதகு வாவியின் றென்பாற்
காய்கதி ரிரவி யோட்டற நிவந்து
கண்கவர் வனப்பொடு மிருக்கும் (60)

---

* சண்பக முகிழ்த்த மென்மலர்கள் (பா. பே.)
† அளிவிரிக் தூட்டும் ஷை

வேறு

சிறுதினைப் படுபுள் ளோப்பக் குறத்தியர் கவணிற் சேர்த்தி
யெறிதரு கோட்டு முத்த மெரிந்துவீ ழுடுவின் வீழு
நறியதண் சார ரேறு நகைமதி நுதலென் றெண்ணிக்
கறையினை யியக்கர் கையாற் றுடைத்திடுங் கபிலக் குன்றும் (61)

கோழரை யரம்பை யீன்ற கொழுமடற் குருத்து நீண்டு
சூழ்கடர்க் கற்றை காலுந் தூய்மதி யகட்டிற் றேய்தல்
பாழியந் தடந்தோண் மன்னர் வெண்குடைப் பசுங்காம் [பேய்க்கும்
வீழ்சிறப் போங்குங் கந்த மாதன மென்றும் வெற்பும் (62)

பொருசின மடங்க லேறு புளிற்றிளங் களிறென் [றெண்ணிக்
கிரிசரத் தெய்திக் கேழ்ல் கிளைத்திடுங் குலிகந் தோய்ந்த
வருவிநீர் மாந்திச் சேர்ந்த முகிலினத் தகடு கீண்டு
குருதியென் றுண்டு வெள்குங் கோடுயர் சுகந்த வெற்பும் (63)

கைத்தலம் போலத் தூங்குங் கமழ்பசுந் தேனி ருலின்
மொய்த்தவி யிரியப் பாய்ந்து முசுக்கலை யுடைப்ப வீழுந்
தத்துதே னருவி பாயக் கவைக்கதிர் வரகு சாமை
துய்த்தலை யேனல் காய்க்குந்தோயில்சீர் சிருங்க வானும் (64)

வேறு

பராரைமாத் துதிர்ந்த தீங்கனி மேய்ந்து
கதலிமென் படுபழங் குதட்டி
விராய்மலர்ப் பொதுளுங் குடச்சுனை யுழக்கி
விரைகமழ் பந்தின மணிந்த
மராவமுன் றுரூசியப் பிணர்முது குரிஞ்சிச்
செங்கணு மான்றிரள் வழங்குங்
குராமணங் கமழுஞ் சாரல்சூழ் கிடந்த
பாரிச மென்றுநீள் குன்றும் (65)

வரைநடந் தென்னப் பிடியொடுந் திரியு
மழைமதக் களுழிமால் யானை
வெருவரச் சிலைக்கு மடுபுலிக் குருளைப்
படுத்திட வேட்டுவச் சிறுவர்
நிரைநிரை யமைத்த கல்விடார் தோறு
நரந்தமான் கோட்படு நெறிய
பொருவருஞ் சாரல் விளிம்புடுத் தோங்குஞ்
சுதகமாம் புண்ணியக் குன்றும் (66)

கடுங்கழை மிடறு காய்ந்துற வெடித்த
விடர்பிளிற் கால்புகுந் திரைத்தல்
குடங்கையி னெடிய வாள்புதைத் தடங்கட்
குறத்தியர் குறிஞ்சிபா டுதற்கா
யடங்குறப் பிடித்த சுருதியி னிசைப்ப
வாய்மயிற் கணங்கணின் ருலு
மடங்கலர் விழுச்சிர் கண்படை கூருஞ்
சுரசமாம் வான்பெருங் குன்றும் (67)

கோங்கின மிடைய விங்கிய கொங்கைக்
குறத்திய ரிதண்டொறு மிருந்து
தூங்குறிச் சேக்கைக் குரீஇயினங் கடியு
மின்மொழிச் செழுந்துணர் தூக்கு
மாங்குயி லினத்தின் கூக்குர லேய்க்கும்
வளங்கெழு சாரல்சூழ் கிடந்த
திங்குறு குடுமி வான்முக டளக்குந்
திகழ்சிகு நாடநீள் குன்றும் (68)

மாதர்மென் கோட்டுப் பொறியரைப் புன்கின்
கறையணல் வெண்பொரி மானும்
போதுவாய் திறந்து தாதுமேய்ந் துறங்கும்
பொறிவரிப் பெடையிள வண்டைக்

காதலாற் சுரும்பர் சிறகராற் றடவிக்
கழிதுயி லெழுப்பிமேற் புணரு
மேதகு வோங்கு சாரல்சூழ் கிடந்த
விழுத்தகு சகடநீள் குன்றம் (69)

பூந்துடுப் பீன்ற காந்தண்மென் கமலம்
பொன்பொதி யவிழ்த்தபூங் கொன்றை
யேந்திளம் பாவை தூக்கிய குரவஞ்
சந்தனங் காழகி லிலவங்
கூந்தலங் கமுக மடந்தையர் முலையிற்
*கொழுமடற் குடக்கனி தூக்கும்
பொங்தைசூழ் கிடந்த தண்ணறுஞ் சாரற்
பொருவறு பிங்கலக் குன்றும் (70)

வள்ளைவார் காதி னணிந்தபொற் குழைகள்
வருமுலைக் குங்குமந் துடைப்பக்
கொள்ளைவண் டரற்றுங் குளிர்மலர்க் கூந்தற்
சொருக்குமென் கயிற்புறத் துலவக்
கள்ளவிழ் நறும்பூஞ் சண்பகக் கோட்டி
ளியக்கியர் வீழ்தருங் கணவ
ருள்ளமுந் தாழ வூசலாட் டயரு
மோங்குசீர்ச் சேணநீள் குன்றும் (71)

மழைமுது குரிஞ்சு மசோகின்மேற் பாய்ந்த
கருமுக மந்திகள் பறிப்பப்
பழமிள குதிர்ந்த பளிக்கறை சார
லிடந்தொறும் வானவர் மகளிர்
நிழலுரு மெய்யின் வருமுலைப் போகம்
நீப்பற விண்ணவர்க் களித்த
தழைபடு மென்பூஞ் சேக்கைகள் கிடந்த
தாவில்சீர்ப் பத்திர வரையும் (72)

---

* கொழுமடற் குடகனி (பா. பே.)

*கறங்கினிற் சுழலு கனலுறு கருங்கட்
    காய்சின வாலுளி மடங்க
லுறங்கலா வென்றி வேட்டுவச் சிறுவர்
    தொண்டகச் சிறுபறை யொலியேற்
றிறங்கருங் குடுமி விறுவரை முழையிற்
    பிணவொடு மிருந்துயில் புரியுந்
துறந்தவ ருளமும் விழைநல் வளங்கூர்
    †தொழிலமர் மேகநீள் குன்றும் (73)

அறையினி லுறக்குங் களிறுகல் லென்ன
    வமர்ந்திடுங் குறத்தியர் விழித்துக்
கறையடி பெயர்த்து நடத்தலுங் கருங்கல்
    கால்கொடு நடந்ததென் றெண்ணி
யுறைதரு கணவர்க் காங்கதை யுரைப்ப
    வுவந்துதம் மனைவியர்த் தாங்கிச்
சிறுகுடிப் பளிக்குப் பாறையிற் றுவுஞ்
    சிறப்புடைப் பிஞ்சரக் குன்றும் (74)

உரல்முகக் கேழல் கிளைத்திடு பயம்பு
    மொண்ணிறப் பேரெலி யுகிரிற்
றரைபிதிர்த்த கழ்ந்த தாழ்சிறு குழியுந்
    தறுகண்மால் யானைகோட் படுப்ப
நிரைநிரை யெயினர் தொட்டவான் கிடங்கு
    நெடும்பணை வேங்கைவீ தூர்க்கும்
விரைகமழ் சாரல் விளிம்புடுத் தோங்கும்
    வணங்குபுண் டரீகமால் வரையும் (75)

கூன்புறச் செவ்வாய்ப் பசுங்கிளி நிறத்த
    கொய்யுளைப் புரவியேழ் பிணித்த
வான்றலைத் திரியு மொற்றையா ழியங்தே
    ரோட்டற நிவந்தவான் குடுமி

---

* கறங்கினிற் சுழலும் கனலுறு குறுங்கட் (பா. பே.)

† தோமில்மா மேகநீள் குன்றம் ஷை.

தேன்கறி கற்கு நறுமலர்க் கூந்தற்
றேமொழிக் குறத்திய ரிவர்ந்து
கான்படு தருவினறுமலர் கொய்யும்
வளர்கபி லோதமால் வரையும் (76)

நெடுமுடம் பழுத்த விரிதலைத் தெங்கு
நெட்டிலைப் போந்தையுஞ் சுமந்த
படுபழ மூழ்த்துப் புலியடிக் கொடுங்காய்க்
கதலியம் பசுங்குலை யொடிக்கக்
கடுவன்வீழ்ந் துழக்கி யள்ளிலைப் பலவின்
கனியிணைப் போழ்ந்துசூழ் சுளைகள்
சுடுபொனிற் சிதறு மழுகுகண் படுக்குந்
துளங்கொளிப் பாண்டர வரையும் (77)

நெடுநல்மால் யானை நீர்ச்சிறை யழிப்ப
விருகரை பாரைநீண் மாத்துத்
தொடரும்வேர் பறிய வீழ்தலும் வரையிற்
றெடுத்தசோற் றேனிரு ளுடைந்து
கடன்மடை திறந்தா லெனவிரைந் தோடிக்
கானவ ருவலைவேய் குறுத்தாட்
குடிலலைத் தொழுகுஞ் சாரல்சூழ் கிடந்த
கிட்டிண மென்னுநீள் குன்றும் (73)

பொன்செயுங் கடவுட் புலவர்கை செய்யாப்
பூண்கிடந் தோங்கிள முலைகண்
மின்புரை மருங்கு லலம்வரப் பணைப்ப
விரிகதிர்க் கோவைமேற் புடைப்ப
மன்பெருஞ் சிறப்பின் வரையர மகளிர்
குரவையாட் டயர்தலு மயில்கள்
வென்கொடுத் திரியும் விழுச்சிறப் போங்கும்
பாரியாத் திரமெனும் வெற்பும் (79)

கோடுயர் சாரற வழூமைம் முகிலைக்
கூந்தலம் பிடியென வெண்ணி
நீடுறுங் கையாற் களிறுதை வருந்தல்
நோக்கிய நெடுஞ்சிலை வெற்பன்
சேடமை பொருள்மேற் பிரிகுத லொழிந்து
தீங்கரும் பெழுதிய கொங்கை
பாடமைத் தடந்தோண் மகளிர்பா லெய்து
மகிழ்மணிக் குமுதநீள் குன்றும் (80)

பிறைவளர் மருப்பிற் கவிழ்தலை யேனம்
பெரும்புலிப் போத்தழத் தாக்கச்
சிறுகண்மால் யானைச் சீயமோ டேற்றுச்
செருச்செயும் வளங்குலாய்க் கிடந்த
வறைவள ரந்தண் சாரல்க டோறு
மாய்கதிர்க் கருந்தினை யுணக்குங்
குறவர்தம் மகளிர் மின்னெனத் தோன்றுங்
கோடுயர்ல குடமாங் குன்றும் (81)

இரவல ரென்னக் காந்தள்கை விரிப்ப
வள்ளியோ ரெனமுக மலர்ந்து
பருதிபோக் ககற்றி யுயர்ந்தநீள் பராரைக்
கொன்றைபைம் பொன்னணி சொரியும்
விரைகமழ் சார லிடந்தொறும் வேடர்
சுட்டிடுஞ் சந்தனச் செழுங்கோ
டருவிகொண் டிரங்குஞ் சாருதி யென்ன
வலங்கொளி விரிக்குநீள் குன்றும் (82)

இற்றிடை தேய மேக்குயர்ந் தோங்கி
யிளம்பிறை பொருவுகா முணிந்து
பொற்றகம் பேய்க்கும் பொம்மல்வெம் முலைய
குறத்தியர் பொற்புறு முகமுங்

கற்றைவெண் கதிர்கால் மதியமு மறியா
துடுக்கணங் கலங்குபு நிரியு
மொற்றையா ழியங்தே ருரிஞ்சுபொன் குடுமி
யுயர்மது மானெனுங் குன்றும் (83)

பாவடிக் கவிறு பிணர்முது குரிஞ்ச
வழுன்றிடு பராரைமென் சாந்து
நாவியங் கடுவ னுற்றிய புழுகு
முளவுமா னடங்துமேற் பாய
வேவர விழ்ந்தக் கருப்புரக் கதலி
விரைகமழ் விரியல்வெண் டோடுங்
காவதங் கமழுஞ் சாரல்சூழ் கிடந்த
வாயிரங் குடுமிநீள் கல்லும் (84)

வேறு

பாம்புபைத் தாவித் தன்ன
பங்கயப் பருமவல்குற்
காம்புறழ் பசிய மென்றோ
ளியக்கியர் கலவிப் போரி
லாம்பல்வா யமிழ்த மாந்தி
யைங்கணைக் குமர னன்னு
ரேம்பலுற் றிருக்குஞ் சார
லிருந்திரை மணிவான் குன்றும் (85)

வலம்புரி யுயிர்த்த முத்தங்
கருவென வளைக்கை நல்லார்
சிலம்பென வரற்று மன்னஞ்
சேர்ந்தடை கிடக்குந் தூய
வலங்கிதழ்க் கமலம் பூத்துத்
திகழுசி தோத மென்னும்
புலம்புநீர் வாவி மேல்பாற்
பொருந்திய கிடக்கு மன்றே (86)

கணைகுரற் சுரும்பு வீழ்ந்து
கடாக்கருஞ் சேறு நாறப்
பணையுறழ் தடக்கை நீட்டி
யேழிலைம் பாலை யந்தண்
சினையற முருக்கிப் பாய்ந்து
சினக்கரி யுலம்புஞ் சாரற்
பனிமதி தவழுஞ் சங்க
ருசமாம் பவளக் குன்றும் (87)

குமரியம் பிடிக ளாடுங்
குன்றுகட் சினையின் மாருத்
தமரவெண் டிரைகள் சிந்துந்
தாமநீ ளருவி தன்னிற்
கமழலந் துறைசூழ் தூய
கலுழிமா நதியி னேடு
மமரர்வந் திளிதி ைடு
மங்கச மென்னுங் குன்றும் (88)

நறவுதேர் வாழ்க்கை வண்டு
நாகிளஞ் சுரும்பி னேடுங்
கறையடிப் பணைக்கை வேழக்
கவுட்புடை யிளிதுண் டாடி
யுறைமதித் துளிக்கு மந்தண்
டருவிடை யொளித்து வாழ
நிறைதரு மல்ல லோங்கும்
*நிடபமால் நீல வெற்பும் (89)

†குழைபுனை சிற்றிற் சிறா
ருறுகுறு மாக்க ளோடு
மழைவிளை யாடுஞ் சார
லிடந்தொறு மலர்ந்த காந்தள்

* விடபமால் நீல வெற்பும் (பா. பே.)
† குழைபுன் புனத்திற் ஷை

புழையெயிற் றகல்வாய்ப் பாந்தட்
படமெனப் பொறிக்கோ டோகை
எழின்மயில் குத்த வாறு
மாகமென் றியம்புங் குன்றும் (90)

தாளதா மரையின் மேய தாக்கணங் கெண்ணச் சார
வீளிரு மிதணிளின்று குரீஇயின நெறியி னுைப்பும்
வானமர் வந்த கண்ணுர் மொழியின்மாங் குதலைத்தீஞ்சொற்
கேகல மென்றுதேவர் கிளத்திடு நேமிக்குன்றும் (91)

அனிச்சமென் மலரிற்றுயிற் கப்பண மிதித்தாலென்னப்
பனித்திடுஞ் செய்யமெல்லென் பஞ்சடிச் சிலம்புபம்பக்
கனிப்பொறை சுமந்தகாம வல்லிபோ லமரர்மாதர்
பனிப்பிறை தவழுஞ் சாரற் பயிறரு நீல வெற்பும் (92)

ஐதெழில் பரந்த வல்கு லம்பலைத் தகன்ற கண்ணுர்
மைதவழ் சாரருறு மயிலொடு முலவ மைந்தர்
வெய்தடு புழைக்கை நால்வாய் வேழமோ டினிதினுடுங்
கொய்தழை யாரச் சாரற் கலாஞ்சன மென்னுங் குன்றும் (93)

திரளரைத் தெங்கி னெண்காய் முசுக்கலை சிந்த வீழ்ந்து
பரியநீள் பலவி னெற்றிப் படுபழஞ் சிதறிச் சூழ்ந்த
விரிதலை யரம்பை யீன்ற கூன்புறக் கனிகள் வீழ்த்த
வருவிகொண் டிறங்குஞ்சாரற் சுமேதமென்
[றறையுங் குன்றும் (94)

வடவர்தங் கிட்ட வான்கேழ் வட்டத்து மறுகச்சந்தத்
தடமுலை முகட்டிற் கோட்டித் தக்கவர் கைசெய் யாத
விடுகதிர் பைம்பூண் யாவும் பருமித்து விண்ணுேர்மாதர்
மடமயி லாலவாலும் வராகமென் றுரைக்கும் வெற்பும் (95)

சலங்குநீர்க் கரையி னின்ற பலவினின் பசுங்காம்புக்கு
நிலம்பக வீழ்ந்து சிந்துங் குடக்கனிச் சுளையுநீண்ட
பொலங்கல விலங்கல் சிந்து மிதழியுஞ் சுடுபொன்னென்ன
விலங்கொளி விரிக்குஞ்சாரற் புட்கர மென்னுங்குன்றும் (96)

காந்தண்மென்போதி னாழ்த்த கடம்பின்மென் போதுதங்கண்
மாந்தளிர் பொருவுமேனி யியக்கியர் மலர்க்கை மீதி
லேந்திய பந்து போன்மென் றியக்கர்மா னுழந்து நோக்குங்
கூந்தலம் பிடிவாழ்சாரற் பிரசமென் றுரைக்குங்குன்றும் (97)

பூங்கழை யுகுத்தமுத்தும் புழைக்கைவெண் மருப்பின்முத்துந்
தீங்கதிர் நெற்குநேராய்ச் சிறுமிய ரினிது மாறும்
கோங்கெழி லந்தண்சாரற் பூந்துக ளொழியக் கோட்டிற்
றூங்குதேற் றிவலைதூற்றுந் துகளின்மா கபிலக்குன்றும்
(98)

இறுவரைச் சார ருேறு மீர்மலர் கொய்யு மாத
ருறைமுகில் பிலிற்றத் தோய்ந்த வுகிருழ துதறு மைம்பா
லறையுயர் குடுமியேறி யகில்சுடு புகையி னுற்றப்
பொறியிள மஞ்ஞை யாலும் பொற்புடை மயூரவெற்பும்(99)

துறந்தவே லரசர் நீத்த சுடர்மணிக் கலன்கள் யாவு
நிறங்கிளர் கதிர்க ணீட்டி நீளிரு விசும்பினுப்பட்
கறங்கெனத் திரியும் வெய்யோன் கனைகதி ரிருளிற்செய்யு
முறங்கலர் வளங்குலாய வோங்குசீர்க் கபில வெற்பும் (100)

எரிமணிக் குடுமி யீன்ற விலகுசெங் கதிரிற் றேய்ந்து
விரிகதிர்த் திங்கள்சேந்து வெங்கதி ரென்னத் தோன்ற
வரியளி துதைந்துபாடக் குடச்சுனை மருங்கிற்பூத்த
முருகவிழ் கமலம்விள்ளு மொய்யொளிக் கனகக்குன்றும்(101)

கானலங் கூந்த லார்தங் கையும்வெண் கழங்கும் போலக்
கூனல்வெண் சுரிசங் கீன்ற குளிர்கதிர் முத்தினேடுந்
தேனவிர் கமல மென்பூ வெங்கணுஞ் சிறந்து தோன்று
மானத வாவிசூழ்ந்து வடபுலத் தியங்கு மன்றே (102)

நாற்றிசை தோறுஞ் சொன்ன வரைகளி னவின்றவெற்பின்
வீற்றுவிற் றுகத் தோன்றும் வெள்ளிடை யதனிற் றேவர்
போற்றுறு மியக்கர் சித்தர் கின்னரர் புலவு வாட்கட்
கோற்றெடி மாத ரம்பொற் குவிமுலை திளைப்பவாழ்வார்
(103)

நாற்பத்திரண்டாவது
சம்புத்தீவின் சிறப்புரைத்த வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 2494.

---

உ

## நாற்பத்து மூன்றுவது
## மேருவின் சிறப்புரைத்த வத்தியாயம்

---

காசுகண் படுக்கு மேருவி னுப்பட்
கதிர்மணி விளிம்புடுத் தோங்கு
மோசனைப் பதினு றுயிர முடைத்தா
மனேவதி யென்னுமோர் நகரிற்
பாசடைப் புழைத்தாட் பொன்னிதழ் விரிக்கும்
பனிமலர்க் கமலமென் பொகுட்டின்
மாசறு படிகக் கொடிபுரை மேனி
மயிலொடு நான்முக னுறைவான் (1)

சனகனற் றவஞ்செய் சனந்தனன் சிறந்த
சனதன னுயர்சனற் குமார
முனிவரர் முதலா மருந்தவக் கிழவர்
முக்குறும் பறவெறிந் துயர்ந்தோர்

விண்யற நோற்று மெய்ப்பொரு ளுணர்ந்த
விழுமியோர் மகம்பல புரிந்தோ
ரினையர்மற் றெவரு மனோவதி நகரின்
மலரயன் மருங்குவி ற் றிருப்பார் (2)

அத்திரு நகரின் குடபுல மதனி
ஞயிரங் கோடியா தவரின்
மொய்த்தவெங் கதிர்கான் றிலகொளி பரப்பு
முழுமணி முகடுவேய்ந் துயர்ந்து
சித்திரங் குயின்ற நெடுநிலை மாடஞ்
சிறந்தொளி வைகுண்ட நகரிற்
பைத்தபாம் பணையின் றிருமக ளோடும்
பசுந்துழாய் முகுந்தன்வீற் றிருப்பான் (3)

பாயொளி பரப்பிப் பகலிர வழைக்கும்
பருதியொண் சேவடி பணிந்தோ
ராயவன் றனது நாமமா யிரமும்
நவின்றுளோர் நன்மகம் புரிந்தோர்
காயமுந் தாமும் வேறென வுணர்ந்தோர்
கங்கையங் கடவுணீர் படிந்தோர்
மாயவ னுருவ மருவிமே வரிய
வைகுந்த மதனில்வீற் றிருப்பார் (4)

நான்முகக் கிழவ னரசுவீற் றிருக்கும்
நலங்கெழு மனோவதிக் கீழ்பாற்
பானிலாக் கதிரு மங்கியுங் கதிர்கால்
பருதியும் பற்பல கோடி
மேனிவந் தெழுந்த தெனச்சுடர் பரப்பி
விழிகவர் வனப்புவீற் றிருக்குங்
கோநக ரொன்றுங் கசோவதி யென்னுங்
கோதறு பெயரொடும் விளங்கும் (5)

வெண்ணிறப் பூதி கண்டிகை யணிந்தோர்
மேதகு சிவநிசி யதனிற்
றண்மலர் தூவித் துயில்துறந் திருந்தோர்
சாமநன் மறைபயில் தக்கோர்
புண்ணியக் கடவுட் காசி யினுவி
போன்றினோர் புலன்வழி யுள்ள
நண்ணுரு தடக்கித் தற்பரத் தடைந்தோ
ரசோவதி நகரி னண்ணுவரால் (6)

அன்னக ரதனி லெண்டிசைப் பால
ரரக்கிதழ் தாமரைக் கிழவன்
மின்னுவிட் டெறிக்கு நேமியங் கடவுள்
விரைமலர்ச் சேவடி போற்றப்
பொன்னவிர் நிதலை பூத்தவெங் கருங்கட்
புணர்முலை யுமைமருங் கிருப்ப
முன்னதின் முன்னு யுரையுணர் விறந்த
முக்கணு னினிதுவிற் றிருக்கும் (7)

மற்றிதன் கீழ்ப்பா லொழுகொளிச் சிந்தா
மணியிரு நதியம்வான் சுரபி
பொற்றரு வோடும் புணர்முலை சுமந்து
போயிறுங் கொடிமருங் கென்னச்
சிற்றடிச் சிலம்பு பூசலிட் டேங்கத்
திரிதரு மரம்பையர் நெருங்கி
வெற்றிட மின்றித் திருத்துயி லமரா
பதியெனும் வியனக ருளதால் (8)

உரைத்தவந் நகரிற் றிலோத்தமை யரம்பை
யுருப்பசி மேனகை முதலோ
ரத்தமென் பஞ்சி யூட்டிய பொன்னஞ்
சேவடி பெயர்த்துநின் றுடுங்

திருத்தகுதேவர் பணிந்துநின் றேத்தச்
செந்துவர்க் கடிகைவாய் வேற்கண்
விரைகுழற் றிஞ்சொற் புலோமிசை யோடு
மிந்திர னரசுவீற் றிருப்பான் , (9)

வாளம ரழுவத் தாருயிர் துறந்த
மன்னவர் மன்னவர்க் காக
மூளிருஞ் சமத்தி விறந்துசெஞ் சோற்றுக்
கடன்கழித் திட்டவர் முறையே
நீளிருந் தத்த மொழுக்கினி னின்றோர்
நிகரெறி பத்தினிப் பெண்டீர்
நாளுநல் லறத்தி னொழுகினோ ரமரா
பதியிடை நண்ணியின் புறுவார் (10)

புகலருந் தென்கீழ்த் திசையினிற் றேசோ
வதியெனும் புண்ணிய நகரிற்
சிகையழல் விரிக்கு மாரழற் கடவுள்
சிறந்துவீற் றிருக்குமற் றதனில்
மகவினை புரிந்தோர் மூச்சவிந் திருந்து
மறைபுகல் மந்திரம் நவின்றோர்
தகரிவர் கடவுள் பேருரு வெய்தி
தயங்கொளி யோடும்வீற் றிருப்பார் (11)

தென்புல மதனி லோசைபோஞ் சைய ,
மினியெனுந் திருநக ருளதாங்
கன்புமீ தூரப் பிறையெயிற் றகல்வா
யந்தக னரசுவீற் றிருக்கு
மன்பெருங் கற்பிற் சிறந்திடு மகளிர்
வாய்மையின் வழாதுநன் குணர்ந்தோ
ரென்பெழுந் தியங்க நோற்றவர் யாரு
மன்னக ரிகிதுவீற் றிருப்பார் ( 12)

விளங்கிய தென்மேற் றிசையினி லிரக்கோ
வதியெனும் வியனக ருளதாங்
கிளம்பிறை யெயிற்ற வரக்கரேத் தெடுப்ப
வெறுழ்வலி நிருதிவீற் றிருக்கும்
வளங்கொண்மேற் றிசையிற் சபாவதி யென்று
நகரிடை வானவ ரியக்கர்
உளங்களிக் தேத்தக் கோட்சுற வுயர்த்த
வுயர்புகழ் வருணன்வீற் றிருக்கும் (13)

சிறந்துயர் வடமேற் றிசையினிற் கந்த
வதியெனுந் திருநக ரதனி
லுறைந்துகந் திருவ ரரம்பைய ரேத்த
வுலவை வேந் தமர்ந்தர சியற்றும்
பிறங்கொளி வடபாற் றிசையினிற் கீர்த்தி
மதியெனும் பெருநக ருளதாங்
கறங்கிளர் முனிவ ரியக்கரேத் தெடுப்ப
வருளொடு மியக்கர்கோ னுறையும் (14)

இலகொளி வடகீழ்த் திசையிடை விளங்கு
மசோவதி யென்னுநன் னகரிற்
கலைமதிக் குழவி யின்னமு துறைப்பக்
கங்கையோர் புடையலை கொழிப்பக்
குலவுசெஞ் சடைய முக்கணீ சானன்
குண்டுகட் செம்மயிர்க் குறுத்தா
ளலகில்பல் பூத கணங்களின் றேத்த
யரியணைப் புறத்துவீற் றிருக்கும் (15)

உயர்தரு மண்ட முகட்டின்மா னவரீ
ரூற்றிருந் தொழுகிய கங்கை
முயலடை கிடக்குந் திங்களஞ் செல்வன்
*முழுமெயு நனைத்துவார்ந் தொழுகி

* முழுமெயு நனைந்து (பா. பே.)

*வெயில்கெட விமைக்குஞ் சத்திய வுலகின்*
*விரிதலை யருவியின் வீழ்ந்து*
*செயிரறு சீதை சக்குசை யளக*
*நந்தை பத்திரையெனத் திரியும்* (16)

*ஆங்கவர் தம்மிற் சீதைவான் றடவு*
*மலங்கொளி மேருவின் குணபால்*
*விங்குநீர்ப் பெருக்கி னிருகரை தேய்த்து*
*விண்டொடர் வரையகங் கிழித்துப்*
*பாங்கெழி றிகழும் பத்திராச் சுவமாங்*
*கண்டத்தை வழிக்கொடு படரா*
*வாங்குதெண் டிரையின் குணகட லகடு*
*கிழிதர வல்லையி னடக்கும்* (17)

*தெளிபுன லளக நந்தையென் றுரைக்குந்*
*திரையெறி திருவநீள் கங்கை*
*யொளிதிகழ் செம்பொன் மேருமால் வரையின்*
*றென்புலத் திழுமென வொழுகி*
*வெளிமுக டளக்கும் வரைமுகங் கிழித்துப்*
*பரதகண் டத்திடை மேவித்*
*துளிமுகில் படியுங் கீழ்க்கடன் முகட்டி*
*ளுயிர முகத்ததாய்த் தோயும்* (18)

*எண்ணுறு தரங்கங் கொழித்துமேற் படரும்*
*சக்குசை யெனும்பெயர்க் கங்கை*
*யண்ணலங் குடுமி மேருமால் வரையின்*
*குடபுலத் ததிர்ந்துமே விழிந்து*
*மண்மகண் மூலையி னுத்தரீ கத்திற்*
*கந்தமா தனவரு டத்தி*
*னண்ணிவெஞ் சுறவந் திமிங்கிலத் தோடு*
*மிரியமேல் கடலிடை நடக்கும்* (19)

முத்தமுந் துகிரும் வரன்றிநீண் மேரு
முகட்டினில் வடபுலத் தொழுகும்
பத்திரை யொன்றுங் கங்கைநீள் குடுமிப்
பாழிமால் வரைபல கிழியா
வுத்தர குருவி னெல்லைவந் தெய்தி
யோங்கிருங் கரைக்குறும் பெறிந்து
தத்துநீர்த் தரங்க மலையெனப் புரளும்
வடகடல் சாருமென் றுரைத்தான் (20)

நாற்பத்து மூன்றாவது
மேருவின் சிறப்புரைத்த வத்தியாய முற்றும்.
ஆகத்திருவிருத்தம் 2514

---

உ

## நாற்பத்து நான்காவது
## நவகண்டத் துறைவோ ரியற்கை யுரைத்த வத்தியாயம்.

---

உரைத்தபல கண்டத்தி னுறைகுந
ருணுயுணிற முரைத்தி யென்ன
வரைக்குறும்பு கெடவெறியும் வச்சிரத்தோன்
மகதியாழ் முனிவன் போற்றி
விரைக்கமலப் பொகுட்டினுறை விண்ணவனே
டுலகீன்ற வுந்தி யான்றன்
திருக்கிளர்சே வடிவணங்கிக் கேட்பமகிழ்
வோடுமிவை செப்ப லுற்றான் (1)

ஓசைதிசை முழுதளப்ப வுயர்கேது
மாலகண்டத் துறையு மாந்தர்
மாசெறிநீ னிறவுருவ ரிருப்பரவர்
மங்கையர்தம் வடிவும் நீலம்

யோசனையுற் பலமணக்கு மவர்மேனி
பலவினறுங் கனியூ ணுகும்
பாசிழைமா மகளிரொடு மொருபதினு
யிரம்பருவம் பரிவின் வாழ்வார் (2)

பண்ணவர்கள் புகழ்ந்தேத்தும் பத்திராச்
சுவவருட மேவு மாந்தர்
வெண்ணிறமா குவரவர்கண் மருவியிடும்
விளரியஞ்சொன் மடநல் லாருந்
தண்ணிலவு *கதிரெறிக்கு நிறமுடைய
ருணவர்க்குச் சாற்றிற் றேவ
ருண்ணமிர்த மதுநுகர்ந்தாங் கொருபதினு
யிரம்பருவ முவந்து வாழ்வார் (3)

தள்ளருஞ்சீ ரிரமியக வருடத்தின்
மாந்தருநற் றைய லாரும்
வெள்ளியற வைத்தனைய நிறத்தர்வியன்
சினையா லின்கனிக டுயப்பர்
ருள்ளபர மாயுளெல்லை பதினோரா
யிரத்தைஞ்ஞூ றுளதா மென்பர்
கள்ளவிழி மகளிரொடு மிளமைதண
வாமலென்றுங் களித்து வாழ்வார் (4)

இன்னிசைய பாட்டயரு மிரண்மயமாம்
வருடத்தி னிருந்து வாழு
மன்னநடை மடந்தையரு மாடவரு
மாயிரக்கா லறவைத் தோங்கும்
பொன்னிறத்தர் தித்திக்கு மெலுமிச்சங்
கனிநுகர்ந்து பொற்பி னேடும்
பன்னீரா யிரத்தைஞ்ஞூ றுண்டுநரை
திரையன்றிப் பரிவின் வாழ்வார் (5)

---

* கதிரெறிக்கும் பளிக்குநிறமுடைய ருஞ்சாற்றின் (பா. பே.)

குருவருடந் தனிலுறையுங் கோதையரு
மாடவருங் கூடத் தோன்றி
மருவுவர்மற் றவர்மேனி மரகதமா
மணிபோல வயங்கித் தோன்றும்
பொருவருமூ ணன்பாலாஞ் சதாசிவனைப்
போற்றுவர்மற் றவர்தம் வாணாள்
பருவமொரு பன்னீரா யிரத்தைஞ்ஞூ
றெனவினிதிற் பகர்வ ரன்றே (6)

கிம்புருட வருடத்தி னினிதுறையு
மடந்தையர்தங் கேள்வ ரோடுஞ்
செம்பொனிற மாயிருப்ப ரொருபதினா
யிரவருடஞ் சிறந்து தேன்சோர்
வம்பவிழு மிறளிநறுங் கனிநுகர்ந்து
மலரோனை வழுத்தி நாளு
மும்பரும்வீழ் வனப்பினெடு மொழியாத
வின்னலந்துய்த் துறைவ ரன்றே (7)

அரிவருடந் தனிலுறையு மரிவையரு
மாடவரு மலங்கு சோதி
எரிபசும்பொன் னிறமாகி யிருப்பவர
ருண்கரும்பின் றீஞ்சா றென்பர்
முருகவிழுந் துளவோனைப் பணிந்திடுவ
ராங்கவர்க்கு மொழிந்த வாயு
ளொருபதினா யிரம்பருவ மெவ்வளவு
மிளமையுட னுறைவ ரன்றே (8)

ஏமகிரி சூழ்கிடந்த விளாவிருத
கண்டத்தி னினிது வாழுங்
காமநிக ராடவருங் கன்னல்புளித்
திடமொழியுங் கரும்பன் னாருந்

தாமரையி னகவிதழ்போ லீறத்தினருண்
சம்புநறுங் கனியின் சார
மாமவர்த மாயுளிலே பதின் மூவா
யிரம்வருட மாகு மென்பர் (9)

**வேறு**

பரவருந் திறத்த தாகும்
பாரத கண்டந் தன்னின்
மருவுவேற் றடங்கண் மாதர்
வலியுடை மைந்தர் யார்க்கு
முருவமுந் தொழிலு மூனும்
பற்பல வுளவா மாயு
*டெரியுறி னூறு மென்ன
மறையொரு நான்குஞ் செப்பும் (10)

இருவினைச் சிமிழ்ப்பி னெய்தி
யியம்பிய வாயு ளூறு
மருவினு மருவு மன்றி
மலக்குழி யுற்று வீங்கிக்
கருவுறு முன்னம் வீந்து
கழியினுங் கழியுங் காலைப்
பருவமுற் றிடுமு னவீ
பாறினும் பாறு மன்றே (11)

பாரத வருட மொன்பா
னுயிரம் பகர்ந்த வெண்ணிச்
சேரும்யோ சனைத்தா மேனைக்
கண்டங்க டோறுஞ் சேர்வோர்
ஏர்கெழு திருவ ராகி
வாழ்வரிக் கண்டந் தன்னி
லார்வமோ டினிதி னுற்று
நல்வினைப் பயத்தி னுமால் (12)

---

* தெரிவரு நூறு மென்ன (பா. பே.)

80

பாரத வருட மொன்றே
பழிப்பருங் கரும பூமி
யோருமிவ் வருடந் தன்னி
லுலப்பினல் வினைகள் செய்தோ
ரேர்கெழு துறக்க மெய்தி
யிருப்பர்தீ வினைகள் செய்தோர்
சேர்வரு நரகி னெய்தித்
தீவினை யுழப்ப ரன்றே (13)

பங்கமில் சிறப்பு வாய்ந்த
பாரத வருடந் தன்னிற்
றுங்கநீண் மலயஞ் சையஞ்
சுத்திமா னிருக்கம் விந்த
மங்குல்கண் படுக்கும் பாரி
யாத்திர மயேந்தி ரப்பேர்
தங்கிய வரையி னேடுஞ்
சையமோ ரேழுண் டென்பார் (14)

இந்திரத் தீவு நாகத்
தீவுவா ருணத்தீ வேய்ந்த
தந்துகாந் திரவத் தீவு
சவுமியத் தீவு நன்கு
தந்திடுங் கபத்தி மானுந்
தீவுதாம் பிரமாந் தீவு
பந்தமில் கசேட்டு மானுந்
தீவுபா ரதப்பேர் தீவே (15)

உரைத்ததீ வொன்பான் றீவொன்
றேசனை யீரைஞ் ஞூறுய்
வரைத்துமுன் பகுத்த தாகும்
பாரத வருடந் தன்னிற்

றரைக்கொரு திலக மான
பரதகண் டத்திற் சார்ந்து
நிரைத்திடு நான்கு வன்னத்
தவர்களு நெறியின் வாழ்வார் (16)

குடக்கினில் யவனர் வாழ்வர்
குணக்கினிற் கிராதர் வாழ்வ
ரடுத்திடு நடுவண் வேத
மறையவ ரரசர் நாய்க
ரொடிப்பில்சீர்ச் சதுர்த்தர் யாருந்
தத்தம வொழுக்கின் வாழ்வார்
தடுப்பரு நதிகள் குன்றப்
பெயரிவை சாற்ற லுற்றும் (17)

புனிற்றிளந் திங்கட் கண்ணி
புனைசடைப் பவளக் காடுங்
கனைத்துவண் டிமிருங் கொன்றை
மாலையு நுதன்மேற் கண்ணும்
பனைக்கைமால் யானை வன்றோற்
போர்வையும் படிந்து நெஞ்சி
னினைப்பவர்க் கினிது நல்கு
நிகரெறி கங்கை யாறும் (18)

கூன்முது கிப்பி வெள்ளி
வாய்விடக் கொழித்த முத்தும்
பானிறப் பவளச் செங்காற்
படர்சிறைச் செஞ்சுட் டன்னஞ்
சூன்முதிர்ந் தீன்ற முட்டைத்
தொகுதியு மலைகொண் டுந்தி
வானுயர் கரையி னுய்க்கும்
வளங்கெழு சோணை யாறும் (19)

முகிறவ மெருத்த யானை
　　மூரிவெண் கோட்டு முத்துப்
பகல்கெட விமைக்குஞ் செய்ய
　　பன்மணி வரன்றிக் காழ்த்த
வகில்முரு டுருட்டிச் செய்ய
　　பேரொலி யகழ்ந்த செம்பொன்
மகரவா ரிதியி லுய்க்கும்
　　வாலுவா கிளிப்பேர் யாறும் (20)

பொருந்திறற் சிய மாய்ப்ப
　　யோசனை கமழ்ந்து பொங்கு
நரந்தமா ஷிரத்தச் சேறு
　　நாகிள வரிவண் டார்க்குஞ்
செருந்தின்மென் போதுந் தெய்வச்
　　சாந்தமுந் திரையி னுய்த்துக்
கருங்கடற் புலவு போக்குங்
　　கவுரியென் றுரைக்கும் யாறும் (21)

வண்டொடு ஞிமிறுந் தேனு
　　மணிநிறச் சுரும்பு மாப்பக்
கொண்டையுண் கண்ணி னோக்கிக்
　　கேழ்கிள ராரந் தாங்கி
விண்டெழு குமிழி யென்னு
　　மென்முலைத் ததும்பத் தெய்வ
வொண்டொடி யவரிற் போந்து
　　கடலுறும் விதிசை யாறும் (22)

வேறு

இமிழ்கடன் ஞாலம் பூத்தசிற் றுதரத்
　　திளங்கொடி யேந்திள முலையி
னமிழ்துறழ் தீம்பா லினிதினி னுகர்ந்த
　　வரும்பெறற் காழிமா முகிலின்

றமிழினி துவந்தாங் கேடெடிர் போக்கிச்
சாக்கியர் தமிழ்க்குறும் பெறியுங்
கமழலந் துறையின் வலம்புரி தவழுங்
கடவுணீர் வைகைமா நதியும் (23)

சித்திரச் சபையி னடம்புரி கடவுள்
வார்சடைத் திங்களி னமுதுந்
தத்துவெண் டிரைதாழ் கங்கைமென் றுளியுந்
தாதளந் தளியினமுரலுங்
கொத்தலர் கொன்றை பிலிற்றுதேத் துளியுங்
குறும்பல வீன்றபொற் சுளையும்
முத்தமுங் கொழித்துக் கரையலைத் தொழுகு
முழங்கு நீர்ச் சித்திர நதியும் (24)

தென்றலங் குழவி யுயிர்த்ததென் மலையிற்
றிரையெறி மணிபல வரன்றி
நன்றறி கேள்விக் குறுமுனி யாடப்
பெற்றதாற் கங்கைமா நதியி
னென்றுநற் புனித மாய்நிலாக் கதிர்செய்
நித்திலந் துறைதொறு மீன்று
பொன்றவழ் நறும்பூந் தாதளந் தொழுகிப்
புணரிசேர் பொருநைமா நதியும் (25)

வேறு

மண்ணமை முழவுத் திண்டோண்
மணிநிற வண்ணன் முன்னம்
பெண்ணலங் கடந்த வாயர்
மகளிரை பெட்பி னேடு
நண்ணியின் புறுத னேக்கி
நங்கைய ருருவிற் றேன்றிக்
கண்ணனைப் புணருந் தூய
காளிந்தி யென்னும் யாறும் (26)

வடமலை பிறந்த வான்கேழ்
    வட்டத்து மறுகா துற்ற
கடவுண்மென் சாந்தம் வெய்யக்
    கதிர்முலைத் திமிரி யாடிப்
படவர வல்குற் செவ்வா
    யரம்பையர் பரிவிற் றோய
விடலருந் தெய்வ வாசங்
    கமழ்தரும் விவாதை யாறும் (27)

திங்களங் கண்ணிப் புத்தேள்
    சேவடிக் கன்பு பூண்டு
கங்கையிற் சிறப்பு வாய்ந்த
    கரையலைத் தொழுகு நீருட்
டங்கிய கற்கள் யாவுந்
    தாணுவி னிலிங்க மாகி
யெங்கணு மோசை போய
    நருமதை யென்னு மாறும் (28)

தெளிவினோ டாழ்ந்து தீதிற்
    சிறப்புடைத் துறைகள் வாய்ந்து
நளிகட லமிழ்தி னன்ன
    சுவையுடைத் தாகி நன்கின்
வெளிறெறி கேள்வி வல்லோர்
    கவியென விளங்கித் தோன்றுந்
துளியெறி தரங்கஞ் சிந்துந்
    துற்கையென் றுரைக்கும் யாறும் (29)

கந்தடு புழைக்கை வேழங்
    காலினின் மருப்பிற் றுக்கிச்
சிந்துகா ரகிலு மாரச்
    செழுநறுந் துகளும் வாரி

யுந்துதெண் டிரைக்கை தன்னு
லுவரியங் கடலி னுய்த்துச்
சந்தனக் கொழுஞ்சே ருக்குந்
தாமிஎன் றுரைக்கு மாறும் (30)

ஆடுந ராட நெஞ்சி
னெண்ணியோ ரடியிட் டோர்கள்
பீடுசால் புனலின் சீர்த்தி
பேசியோர் துளிய தேனு
மூடுறு பாவந் தீர
வருந்தின ரொல்லை யாடக்
கூடினோர் பாவந் தீர்க்குங்
குமரியென் றுரைக்கும் யாறும் (31)

மட்டவிழ் கரிய கூந்தல்
வானவர் மகளி ரெய்தி
யிட்டிடை மெலிய வோங்கு
மிளமுலைத் திமிரி யாடப்
பட்டதாற் றெய்வ வாசந்
திசைதிசை பரந்து வீசுங்
கிட்டிண வேணி யென்னக்
கிளர்த்திடுங் கடவுள் யாறும் (32)

வள்ளவாய்க் கமலஞ் செந்நெல்
மாதுளங் கனிநீள் வாசக்
கள்ளவிழ் நீலப் போது
கரும்பொடு நேமி யேற்ற
வெள்ளைவெண் கோடு தாங்கித்
துதிக்கைமே லெடுத்த வாற்று
லுள்ளுநர்ப் பாவந் தீர்க்குங்
*களிறுதே ருருமை யாறும் (33)

---

* களிறுநே ருருபை யாறும் (பா. பே.)

அள்ளிலைப் பலவு சாடி
 யந்தளிர்த் தேமா வீழ்த்தி
வள்ளவாய்க் கமலம் பூத்த
 வான்பெருங் குளங்கண் மோதிக்
கொள்ளைவண் டார்க்கு மென்பூங்
 குளிர்மலர்ப் படப்பை சாய்த்து
வெள்ளம்வந் திடலால் வேழம்
 போன்றிடும் வித்தை யாறும் (34)

கோற்றொடிப் புரிசை முற்றிக்
 குளிர்நிறப் படப்பை சாய்த்துத்
தோற்றிடு நாட்டி னுள்ள
 பல்பொருள் சூறை யாடி
யேற்றம ருடற்றும் வேந்தர்
 நாட்டினி விகலி னோடும்
வேற்றர சிறுத்தா லென்ன
 மேவுமவை தரணி யாறும் (35)

கடைசெல வளர்ந்து நீண்டு
 கருவிள மலர்கள் சிந்தி
மடலவிழ் கமலப் போது
 நீலமும் வருந்த மோதித்
தடையறக் குழைகள் சாடி
 நடத்தலாற் றடமென் கொங்கை
மடவியர் கண்ணிற் செல்லும்
 வந்தனை யென்னு மாறும் (36)

ஓர்பக லாடி னோர்க்கு
 முளத்திடை யெண்ணி னோர்க்கு
மேர்கெழு துறக்க வீட்டி
 னினிதுவிற் றிருந்து வாழுஞ்

சீர்கெழு பலத்தை நல்கும்
தீம்புனற் பெருக்கத் தாது
வார்திரை கொழிக்குஞ் செம்மண்
ணுவதியாம் வளங்கொள் யாறும் (37)

சித்திர நதியிற் கங்கை
யாற்றினிற் சிறப்பு வாயா
வெத்தலத் திருந்தே யானு
மெண்ணினோர் பாவந் தீர்க்கும்
பத்தினிப் பெண்டிர் செய்த
பாதபங் கயத்திற் றோய்ந்த
தத்துநீ ரதனை யொக்குஞ்
சத்துரு வென்னு மாறும் (38)

புரவிமா மகங்கள் செய்தோர்
பொன்றிடுங் கணவ னோடு
மெரிபுகுந் திறந்தோ ரெய்துந்
துறக்கவிட் டதனி லோர்நாள்
விரிபுனற் றிவலை தோய்ந்தோ
ரெளிதினின் மேவ வுய்க்குந்
திரையினின் மணிகள் சிந்தித்
திகழ்திரு விநதை யாறும் (39)

பாலைநீள் குறிஞ்சி வைகுங்
கானவர் பலகை யொள்வாள்
கால்வளை விரிவில் வெய்ய
கடுங்கொடும் பகழி நேமி
வேலிவை யேந்திச் செல்லும்
வாற்றினல் வேலை மீது
மாலொடு மமர்க்குச் செல்வோர்
போலுமந் தகையா மாறும் (40)

வேறு

இரும்பு திரட்டு முடற்போர்ந்தை
யெரிவாய் மலர்ந்த விதழ்முருக்குக்
குரும்பை தூக்குங் குலைத்தெங்குங்
குமரிப் பாளைப் பசுங்கமுகுஞ்
சுரும்பு குடைந்து தாதுதிர்க்குஞ்
சூதம் பிடுங்கித் திரைக்க ரத்தால்
விரைந்து கடற்கு விருந்தளிக்கும்
வேதச் சுருதி யெனுநதியும் (41)

பலவின் சுளையும் பசுந்தாதும்
பாளைப் பசும்பூ மிடறுடைந்து
நிலவிற் சொரியும் மலர்ப்பூவு
நெடுநல் வாடை யெறிந்துகுப்ப
குலவுந் திரைக்கை தனில்வாரிக்
கொழுநற் களிப்பான் கையுறைகொண்
டுலவு மகளி ரெனக்கடல்வா
யோடுந் தெண்ணீ ரிருடிசையும் (42)

விரிந்து செழும்பூந் தொடைவேய்ந்து
வெண்ணித் திலத்தின் பூணணிந்து
நரந்தங் கொட்டிச் செம்மாந்த
முலைபோற் புளின நனிதோன்றப்
பரந்த திரைக்கைப் பலகாட்டிப்
பாயுங் கயற்கண் விழித்தொல்கி
யரங்கக் கூத்தி யெனச்செல்லுந்
*தோகை யென்னு மகன்யாறும் (43)

அரந்தின் றுகுத்த பசும்பொன்னிற்
றுது தூற்றி †யளிகுடைந்து
விரிந்த செழும்பூங் கொன்றைமலர்
தாங்கச் சடையின் மிலைச்சுதலாற்

*தோயை யென்னும் பா. பே.
†அளிகுடைய பா. பே.

பரந்த வினைதீர்த் திடவடைந்தோர்
 பாவக் குறும்பு மாற்றுதலாற்
புரங்கண் மூன்றுங் கெடநகைத்த
 புத்தேள் போலத் தாமசியும் (44)

கொம்பு குழைய மலர்சுமந்த
 குளிர்மென் தேமா மலர்கோதி
நம்பு குயில்வாய் விடுமோதை
 யுழவர் கழனி நாட்கொண்டு
பம்பு மோதை மதகோதை
 யுடைநீ ரோதை பரந்தார்ப்ப
வம்பி வழக்குங் கடற்புகுந்து
 மலைநீர்ப் பொன்னிப் பேர்யாறும்

கூனற் பசுங்கா யிலவுமுயர்
 கொம்மைக் குடக்காய் முடத்தெங்கும்
வானக் கதிர்க்குங் கவரியென
 வயங்க வோங்கு நெற்குலையுந்
தேன்மொய்த் துடைந்த படுபழமுந்
 திரைக்கை யதனு லெடுத்துந்தி
மீனக் கடலைக் கிழித்தோடும்
 விபாசை யென்னும் வியனதியும் (46)

வேறு ருலகு மிந்திரனும்
 படைப்ப னென்ன வெகுண்டெழுந்த
மாறி றவத்துக் கவுசிகனும்
 வண்மைக் கடவுண் முனிவனொடு
மூறில் கேள்விக் காதியெனும்
 விறல்கூர் வேந்த னீடத்துதித்த
பாருய் திரைய கவுசிகையாம்
 பரவற் கரிய பேர்யாறும் (47)

### வேறு

தெய்வ யானையும் வள்ளியுந் தோய்தலாற் சிறந்த
மையில் வெண்பிறைக் குடுமியங் குன்றிடை வரலாற்
செய்ய தாதவிழ் செழுமலர்க் கடம்பணிந் திடலான்
மொய்கொள் வேலுடை முருகனை நிகர்பயோட் டிணியும் (48)

அன்ன மேவலாற் ருமரை மீதமர்ந் திடலான்
முன்னி னேர்பவந் துடைத்தலான் முழுதுல கீன்ற
பன்ன ரும்புகழ் நான்முக னெனத்தனி படருந்
துன்னு தெண்டிரைத் துங்கபத் திரையெனு நதியும் (49)

### வேறு

குலைபொரு தலையுங் கொழுமடற் றெங்குங்
குயில்குனிந் திருந்துபூக் கொழுது
மலர்சினை போக்கும் போரியரை மாவு
மறுபதம் புட்குர லொழியாத்
தலைவிரிக் கன்னிக் கமுகிளம் பூவுஞ்
சாடிநீள் கரையலைத் தொழுகிக்
கலையுணர் நெஞ்சிற் கூத்திய ருளம்போற்
கவர்ந்துசெல் பாகுதை நதியும் (50)

நிலைத்தலைப் பழுத்த பலவின்முட் கனியி
வீள்சுளை கையரிக் கொண்டாங்
கிலைத்தலைப் பானைக் கமுகின்விழ் பழுக்கா
யிருகரை மருங்கினுஞ் சிதறிக்
குலைத்தலைத் தெங்கின் படுபழம் வாரிக்
கோழரை யரம்பைவேர் பறியா
வலைத்தலைக் கடலி னுய்த்திடு மந்தச்
சலாதலி யென்னுமா நதியும் (51)

தண்ணறுஞ் செழும்பூ மருதிறத் தவழ்ந்து
முல்லையம் புறவிளிற் சார்ந்து
வண்ணவாட் டடங்கட் பொதுவியர் தோய
வண்டுகில் கையரிக் கொண்டு
வெண்ணெய்பெய் குழிசி யுருட்டிநீள் சினைய
மென்மலர் பூங்குருந் தொசித்துக்
கண்ணனிற் செல்லுஞ் சுசோபனை யென்னுங்
கடும்புனற் கடவுண்மா நதியும் (52)

மங்குல்கண் படுக்குங் கருப்புரக் கதலி
வான்றொடர் சண்பகந் தமாலங்
கொங்கவிழ் கோங்கங் கோடுயர் வேங்கைக்
குங்குமங் கையரிக் கொண்டு
தங்கிநீண் முல்லைக் குறிஞ்சியிற் செய்து
தழலர சிருக்கும்வெம் பாலை
பொங்குநீர் மருதம் பொன்ம்மெனச் செய்து
புணரிதாழ் தோயைமா நதியும் (53)

சுவைப்படி வருடை பாய்ந்திட வுடைந்த
பலைறுளை யிருல்கவித் திடுதேன்
றுவர்நிறச் செங்காய்க் கமுகிளம் பாளைச்
சூன்மிட றுடைந்துபாய் தேறல்
குவிமுகி முரம்பை களிகனிந் துகுதேன்
யாவையுங் கொணர்ந்தெதிர் மடுத்தாங்
குவரியங் கடலுந் தேன்கட லாக
வொழுகிடு முலோகித நதியும் (54)

முடங்குளை யெடுத்த மடங்கலஞ் சிற்றத்
திராகவன் முன்னர்வை குந்த
மடைந்திடு நாளி லணிநக ரயோத்திப்
பறவைவல் விலங்குமென் புழுக்கள்

தொடர்ந்திடுங் கவிகண் *மங்கையர் மைந்தர்
தொக்குமென் புனிதநீ ரதனுட்
படிந்தவ ரெவர்க்குந் துறக்கவீ டளிக்கும்
பாய்திரைச் சரயுமா நதியும் (55)

நெறிமருப் பெருமைக் கவட்டிடை யடங்கா
நீர்க்குட முறழ்மடி பொழிந்த
வறைவறட் டீம்பாற் றிரைக்கையின் வாரி
முல்லையம் புறவினி லடைந்து
குறுநெறிக் கூந்த லாய்ச்சியர் காய்ச்சுங்
குழிசிபெய் நறியபால் கவர்ந்து
செறியுவர்க் கடலைப் பாற்கட லாக்குந்
தெசாணையென் றுரைக்குமா நதியும் (56)

உந்தியிற் கமலம் பூத்தலாற் சங்கந்
தரித்தலா லோங்குநே மியம்புள்
மைந்துற வினிது தாங்கலாற் கடவுண்
மணிதரித் தொழுகிய வாற்றுல்
வந்தினி தடைந்தோர் வினையகற் றிடலால்
வண்டுழாய் மாயனைப் பொருவுஞ்
சிந்துதென் டிரைய சிக்குரோ ததியென்
றுரைத்திடுந் தெய்வமா நதியும் (57)

கருங்கழுத் தீன்ற வெள்ளிவெண் பாளை
விரிதலைக் கமுகற வெறிந்து
குருந்திளஞ் சாய்த்துக் கோழரைப் பலவின்
கொழுங்கனி முழுவதுஞ் சிந்திப்
பரந்ததென் டிரைய கருங்கடற் புகுந்து
கவர்ந்திடும் பலகனி யனைத்தும்
விருந்தினர் தளியா வலைமிழித் தொழுகும்
வேத்திர வதியெனு நதியும் (58)

* மங்கை யரங்கை தாக்கு நீரதனுண் (பா. பே.)

ஒள்ளொளி யுமிழு நிலாக்கதிர் விரிக்கு
முத்தமு மொளிர்செழுந் துகிரு
தெள்ளுபன் மணியும் யானைவெண் கோடுந்
திரளரைச் சந்தனத் துணியுங்
கள்ளவிழ் மலருந் திரைக்கையா லெடுத்துக்
கணக்கறப் பொழிந்திடுஞ் செயலால்
வள்ளியோர் போலு மெனநிலம் போற்றும்
வளங்கெழு மந்தா கினியும் (59)

உட்டெளி வோடுந் தண்ணென வொழுகும்
வாற்றினு லொருவழிப் படாது
தட்டகற் சிறையாம் பந்தன மறுத்துத்
தரிப்பற நடந்திடுஞ் செயலான்
மட்டவிழ் மலரு மணிகளும் பொன்னுந்
திரைக்கையா லெறிதலால் மாயை
விட்டுயர் வனஞ்செல் ஞானியிற் செல்லும்
*விபாசியென் றுரைத்திடு நதியும் (60)

சுரும்புநீள் கரும்புங் கமலநாண் மலருஞ்
சூதமுஞ் சோகமென் போது
மரும்பவிழ் முல்லை மலருநன் கழுநீ
ரலரும்வெண் டிரைக்கரத் தேந்திப்
பொருந்தலாற் கண்டோர் கண்கவர் வனப்பி
னடத்தலாற் பொலிவொடு முளத்தின்
விரும்பின ருள்ளங் கவர்தலா லங்க
வேணிகர் கோமதி நதியும் (61)

கலந்திடு மகளிர் சிலம்பென வொலிக்கு
மெகினமென் புள்ளொலி கழனி
யலம்புகுந் துழக்க வுழுதிடு முழுநர்
ரார்ப்பொலி யாலைபாய் துழனி

* விபாதியென் றுரைத்திடும் (பா. பே.)

மலங்கினங் கவரும் வலைஞரார்ப் போதை
வயின்வயி னெங்கணுஞ் சிறப்பப்
புலம்புதெண் டிரைய கடற்புகும் பூதப்
பாவையாம் புண்ணிய நதியும் (62)

எல்லுறழ் மணியு முத்தமுந் துகிரு
மெறுழ்வலி யானைவெண் மருப்புங்
கொல்புலி நகமுஞ் சந்தமென் றுணியும்
கோட்டமு முதிர்பழ மிளகு
மல்லலங் கிரியி னேலமும் பூவுங்
குலிகமுங் கொணர்ந்துவந் திடலாற்
பல்பொருள் பகரும் வணிகரிற் றோன்றி
யொழுகுபன் னுசைமா நதியும் (63)

கன்னிமந் தார நாண்மலர்ப் படப்பைக்
காடுசாய்த் திலகமு டுருட்டி
பொன்னிணர் தொடுத்த பூஞ்சுனை யிதழி
பொரியரைச் சந்தனந் தமாலம்
பின்னுதெண் டிரைக்கை தனினெடுத் தெறிந்து
மற்றுமோர் கடலெனப் பெயருந்
தன்னிகர் தன்னை யன்றிவே றில்லாச்
*சந்திரப் பதாகைமா நதியும் (64)

கதுப்பென வார்ந்த காரறல் சரிய
நடத்தலாற் கவின்சிறந் திடலான்
மதுக்களி யாடும் விரிச்சிறை சுரும்பு
வண்டுவிழ் மலர்புனைந் திடலால்
விதிர்ப்பொடுங் கயற்கண் விழித்துட
லொல்கி வருதலால் விழைதருகணவர்
புதுக்கடி நயந்த மகளிரைப் பொருவுங்
†குருவெனும் புண்ணிய நதியும் (65)

* சந்திரப் பாகைமா நதியும் (பா. பே.)
† குருவெனும் புண்ணிய நதியும் ஷை

காவதங் கமழு முல்லையுங் கோங்குங்
கடிகமழ் செண்பகப் போதுஞ்
சேவல்வண் டரற்றுஞ் செருந்திலுஞ் செய்ய
கமலமுந் திரைக்கையி னேந்தித்
தூவிவெள் ளெகினஞ் சிலம்பென வொலிப்பச்
சேரலாற் றுவரிதழ்க் கனிவாய்ப்
பூவிலை மகளிர் போன்ம்மெனத் தோன்றிப்
*புணரிதா முரித்திரேம் பலையும் (66)

உட்டெளி வின்றிக் கலங்குநீர் மையினூற்
செவ்வனே வொழுகிடா வாற்றூற்
றட்டநல் லொழுக்க வரம்பிகந் திடலா
லுளத்தினைத் தளர்வுற மயக்குங்
கட்டெளி வருந்து மாந்தரிற் போந்து
கதிர்க்குலைப் பழனநா டுழக்கி
மட்டவிழ் படப்பை டசாயமே னடக்கும்
வளர்திரி சாமைமா நதியும் (67)

வெள்ளைவா ரணமூர்ந் தொழுகலால் விண்ணோர்
தொழுதனர் வியந்துபோற் றுதலா
லொள்ளொளி விரிக்கும் வச்சிர மேந்தி
யுயர்விசும் பளக்குநீள் குடுமிச்
சுள்ளிநீள் வேலி வரைபொரு தலைக்குந்
தொழிவினு லாயிரஞ் செங்கண்
வள்ளலை நிகர்க்கும் புளிதவெண் டரங்க
வான்புனல் வானைமா நதியும் (68)

எண்ணரு மகளிர் தோய்தலி னவர்த
மிளமுலைக் குவட்டினி லணிந்த
கண்ணறுங் கலவை காவதங் கமழ
வருதலாற் றனையவிழ் செழும்பூ

* புணரிதாழ் சித்தி ரேற்பலையும் (பா. பே.)

வண்ணமென் குவளை மலர்வனைந் திடலால்
　　வனப்பொடு நடந்திடு மாற்றுற்
பெண்ணலம் விழைந்த விடரெனத் தோன்றும்
　　பிரத்திநை யென்றுமா நதியும் (69)

ஒருவழிப் படரா தொழுகலா லுள்ளந்
　　தெளிந்திடா தாழ்ந்திடும் வாற்றுற்
பொருவருங் குமிழி முலையசைத் திடலாற்
　　பொதியவிழ் மலர்வனைந் திடலால்
முருகவிழ் நரந்த மான்மதஞ் சாந்தந்
　　தாங்கலான் முலைவிலை பகரு
மரிவைய ரென்ன வொழுகிடும் வேத
　　வதியென வறைந்திடு நதியும் (70)

மற்றுமோர் கடல்போற் கடல்வயிற் புகுந்து
　　மண்டையூ வென்றுநீ ணதியு
மெற்றிய தரங்கந் துகிர்க்கொடி சிதறுந்
　　தேவிகை யென்றுமா நதியுங்
கற்றவ ருள்ள மெனத்தெளிந் தோடிக்
　　கரையெறி யிரேபதி நதியும்
பற்றறப் பாவந் தோய்ந்தவர்க் ககற்றும்
　　பலாகையென் றுரைத்திடு நதியும் (71)

உலகெலா மேத்தும் புண்ணிய நதியென்
　　றுரைப்பர்மற் றீங்கிவை யன்றி
யலகறு நதிக ளுளவவை யுரைக்கிற்
　　பெருகுமென் றறைந்தில மறைந்த
குலவுநீர்க் கங்கை முதலவா நதியி
　　னுடினேர் குறுகிடும் பேற்றை
மலைவற விந்த வத்தியா யத்தைக்
　　கேட்டவ ரடைகுவர் மாதோ (72)

**வேறு**

அற்புடைப் பரத கண்டத்
 தளப்பறு தேய முண்டாற்
பற்பல பாடை மாக்கள்
 பயில்வர்மற் றிதற்கே நான்காய்
சொற்படு முகபே தங்கள்
 தொழிற்பல வியற்றல் கூடு
மற்றைய வருட மெட்டு
 மீன்னவை மருவி டாவாச் (73)

நாற்பத்து நான்காவது
நவகண்டத் துறைவோ ரியற்கை யுரைத்த
வத்தியாய முற்றும்.
ஆகத்திரு விருத்தம் 2578.

---

உ

## நாற்பத் தைந்தாவது
## வானவர் வாழ்க்கை யுரைத்த வத்தியாயம்

---

பொன்னவிர் குடுமி மதியக டுரிஞ்சும்
 போகுய ரேம கூடத்திற்
கின்னர ரியக்கர் சித்தர்கிம் புருடர்
 கிளர்முடி யமரரேத் தெடுப்ப
மின்னுவிட் டெறிக்கு மணிவிளிம் புடுத்த
 மேக்குயர் வியன்சிலை கரத்திற்
கன்னலிற் கனிந்த வின்மொழித் துவர்வாய்க்
 கவுரியோ டிறைவன்வீற் றிருக்கும் (1)

முயலடை கிடைக்கு முழுமதிக் கதிரின்
 முழங்குநீர்க் கங்கையா றொழுகுங்
கயிலையம் பொருப்பிற் கடையளந் தறியாக்
 கண்கவர் வனப்புவீற் றிருக்கும்

புயறவம் குடுமி நெடுநிலை மாடத்
　　தியக்கர்கோன் பொலிவின்வீற் றிருந்தாங்
கயிலையிற் றயில்வா யரவகங் கணத்தோ
　　னடிமல ரிணைவழி படுவான் (2)

கவிழ்தலை யருவி வீழ்ந்துகற் குழிக்குஞ்
　　சிறந்தமால் வரையினிற் கமலத்
தவிசின்வீற் றிருக்குந் திருமகள் கொம்மைத்
　　தடமுலைக் களிறுபாய்ந் துழக்கு
மவிரொளி நீல வரையுறழ் தடந்தோ
　　ளோம்படைக் கடவுள்விண் ணோந்தி
*யிவர்பொலங் குடுமிச் சினகர மதனு
　　ளிமையவர் போற்றவீற் றிருக்கும் (3)

ஒன்னல ருளத்திற் கருதினுங் கரத்தி
　　னொளிறுவாள் விதிர்ப்பினு மறியா
வின்னுயிர் கவருங் கூற்றெனத் தெழிக்கு
　　மெந்திரப் பல்பொறி கிடக்குங்
கன்னியம் புரிசை சூழ்வசு தார
　　வரையினிற் களிமகிழ் தூங்க
மன்னிய வசுக்க ளெண்மருந் தத்த
　　மனைவிய ரோடும்வாழ்ந் திருப்பார் (4)

இலகொளிப் பருதி யோட்டற நிவந்த
　　விரத்தின சார்ப்பொலங் கிரியிற்
புலனவித் திருந்த முனிவ ரெழுவர்
　　வயிரவர் பொங்கொளி வயிர
மலர்கதி ரெறிப்ப முகடுவேய்ந் துயர்ந்த
　　வம்பொனீள் சினகர மதனுண்
மலரயன் பளிக்குப் பாவைபோன் றிருக்கும்
　　வாணியோ டினிதுவீற் றிருக்கும் (5)

* யவிர்பொலங் குடுமி (பா. பே.)

சுற்றுளேங் தலறும் பிடிகளுங் கமஞ்சூன்
மேகமு மெதிரெதிர் சிலைக்கு
மாற்றெறி யேக சிருங்கமால் வரையிற்
சயிமிலி வழுத்திடக் கரிய
கூற்றின தாவி குடித்தருஞ் சிதத்தாட்
பொன்னிதழ்க் கொன்றைதாழ் சடைவெண்
ணீற்றொளி படர்செம் பவளவான் குன்றம்
பச்சிளங் கொடியொடு நிலவும் (6)

கையினுற் பற்றி யொடித்திடப் பொன்னங்
கதிருமிழ் சுமேதமால் வரையி
லையசெங் கதிரோ ராயிர மெழுந்தாங்
கவிரொளி மாடமொன் றுளதால்
*வையமோ ரேழும் பொதிந்திடச் சமைத்த
மணிநிறச் செப்பென வோங்குந்
தொய்யில்வெம் முலைய சசியொடு மகவான்
விண்ணவர் சூழவிற் றிருப்பான் (7)

சந்தனக் கோட்டிற் பருதிதே ருரிஞ்சி
வழன்றெழு தண்ணறுந் துகளா
லுந்துநீ ரருவிச் சந்தனக் குழம்பி
னெழுகிடு மிராசமால் வரையி
னந்தமில் வனப்பிற் சத்திகளேத்த
வாய்கதிர் மணிச்சின கரத்திற்
பைந்தளிர் பொருவச் சீறடித் துர்க்கை
பரமனை நினைந்துவிற் றிருக்கும் (8)

இந்திர கோப நிறத்தபன் மயிரப்
பேரெலி யகழ்ந்தொளி யெறிக்குஞ்
சுந்தரச் சுண்ணம் புகைத்தலின் மாயோன்
பொன்னிறத் துகிலசைத் தென்ன

தந்தொளி விரிக்கு நீலமால் வரையிற்
றமனியத் தகடுவேய்ந் துயர்ந்த
நந்தலில் பொன்னஞ் சினகர மதனி
னண்ணிவெங் கலுழன்விற் றிருக்கும் (9)

இன்னிளந் திங்கட் கோடுழ விருல்விண்
டிழுமெனப் பாய்ந்ததே னருவி
பொன்வரை விழுது விட்டெனத் தூங்கும்
புகழ்கிரி சிருங்கமால் வரையிற்
கன்னியந் துளவோ னிறத்திடைச் சிறந்த
கமலவீ டென்னவிற் றிருக்கு
மின்னிடைத் துவர்வாய்த் தடறுவிட்டொளிரும்
வேல்விழிக் கமலையாங் கிருக்கும் (10)

ஓங்குநீ ரருவிச் சுத்திர சிகர
மென்றுயர் திருவநீள் வரையிற்
றீங்கதிர் மணியின் முகடுவேய்ந் துயர்ந்த
செழுநக ரெட்டுள வவற்றின்
மாங்குயிற் குதலை மடந்தைய ரோடும்
விஞ்சைய ருறைவரம் மீருங்கிற்
கோங்கலர் வனத்துச் சினகரத் தீசன்
குவிமுலை யணங்கொடு முறையும் (11)

கனைகடாஞ் செருக்கிக் கண்படை பெறுத
களிற்றெருலி கார்முழக் கென்னப்
பனைநிகர்ப் பாந்தள் விரித்தவெம் படங்கள்
சுருக்கிடும் பாரியாத் திரத்தில்
வனைகழ லியக்கர் சித்தர்கந் தருவர்
வானவர் மகளிரேத் தெடுப்பப்
புனையுமுக் கண்ணுஞ் சூலமு மேந்திப்
பூமக ளினிதுவிற் றிருக்கும் (12)

அமிழ்தினைக் குழைத்து வாக்கிய தென்ன
வவிர்மணி யறைமுகங் கிழிய
விமிழிசை யருவி கல்லென விழுஞ்
சுவாரிச மென்னுமால் வரையிற்
றமிழிறு மினிய மேன்மைய வாகித்
தளிரியல் கவற்றுசி றடியக்
கமழ்நறுங் கூந்தற் கருப்புர மேனிக்
கலைமக ளினிதுவிற் றிருக்கும் (13)

பான்மதிக் குழவிக் கூன்முது குரிஞ்ச
வுயர்ந்தெழு பாண்டவர் வரையின்
வானவ ருலகு நிரையமென் றெண்ண
வளங்கெழு நகரநூ றுளவா
லானவவ் வுலகி னமைந்தகந் தருவ
ரைம்புலக் குறும்பெறிந் தோரை
வேனிலாற் கடிமைப் படுத்தும்வாட் டடங்கண்
வனிதைய ரோடும்வீற் றிருப்பார் (14)

அஞ்சன வரையி லனிச்சமென் மிதிப்பி
னளியவாய் முண்மிதித் தனவாய்ப்
பஞ்செனச் சிவக்குஞ் சீறடித் துவர்வா
யரம்பையர் பழிப்பரு மமுது
நஞ்செனத் திரிக்கு மின்மொழி யியக்கர்
நங்கையர் நாகர்கந் தருவர்
விஞ்சைய ரளப்பி னல்வளங் கிடக்கு
நகர்தொறு மினிதுவீற் றிருப்பார் (15)

குமுதமால் வரையி னுருத்திர கணங்க
ளிருக்கும்வான் குலவு பிஞ்சரத்தி
னெமதுளத் துறைவோன் கணங்கள்வீற் றிருக்கு
நகரமூன் றுளவவற் றிடையி

னுமையொரு பாக னடியர்வீற் றிருப்ப
ருயர்ந்தெழு கபிலமால் வரையி
ளிமயவில் வாங்கு மந்தணர்ப் போற்று
மீர்ஞ்சடை நந்திவீற் றிருப்பான் (16)

தளிமுகி லுறங்குஞ் சாருதி வரையிற்
றகைபெறு சினகர மதனு
ளளிகதிர்ப் பருதி வானவ ருறையு
மதன்வட புலத்தினி னண்ணித்
துளியமு துறைக்கு வெண்கதிர்ப் படத்திற்
றுன்னிரு டுகளறத் துடைக்குந்
தெளிசுடர்த் திங்கள் வானவ னுரோணி
முகிழ்முலை திளைப்பவீற் றிருப்பான் (17)

அஞ்சமால் வரையின் மணிவிளிம் புடுத்த
வாயிர யோசனைப் பரப்பின்
மஞ்சிவர் குடுமிச் சினகர மதனுண்
மலரயன் வாணியோ டிருப்பா
னெஞ்சலில் வரையின் றென்புல நகரிற்
சனகனை யாதியோ ரிருப்பார்
பஞ்சசை லத்தி னகரமூன் றுளவாங்
கெறுழ்வலித் தானவர் பயில்வார் (18)

அன்னமால் வரையின் றென்புல மதனி
னருந்தவக் கருத்தம னுறைவா
னன்னதன் றென்கீழ்த் திசையினி லியம்புஞ்
சனற்குமா ரனைமுதல் முனிவர்
மன்னுவ ரெடுத்து விரித்தினி துரைப்பின்
வருடநூ றகன்றிடு மதனுன்
முன்னிமற் றதனை விரித்துரை யாமற்
றெருக்தியா மொழிந்தன மென்றான் (19)

நாற்பத்தைந்தாவது
வானவர் வாழ்க்கை யுரைத்த வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 2606.

உ

## நாற்பத்தாறுவது
## பிலக்கமுதலான தீவுகளி னியற்கை யுரைத்த வத்தியாயம்.

---

தேனினி னமிழ்தி னல்லிசை பயிலுந்
திவவியாழ் முனிவர னோடும்
பானலங் கடந்த பனிமொழித் துவர்வாய்ப்
பணைமுலைப் புலோமிசைக் கணவ
னேனைய தீவி னடுக்கினை விரித்துக்
கூறுதி யெனவிளம் பிடலுங்
கூன்முது காமை மோட்டுரு வமைந்த
குளிர்பசுந் துளவினோன் மொழிவான் (1)

உரைத்தநா வலந்தீ வளவினித் தீவை
யுவரியங் கடலுடுத் தோங்கும்
வரைத்திடும் பிலக்கத் தீவுவர்க் கடலை
வளைந்ததற் கிரட்டியோ சனைத்தாய்
நிரைத்தபல் கேள்வி விஞ்சையின் றுறைபோ
நிகரறு விழுமியோர் குழுமித்
திருத்தகு துறக்க வீடடை வோரும்
* விழ்வுறுஞ் சிறப்புடைத் தாமால் (2)

அகில்வயி ரூர்ந்த கருங்குழற் செவ்வா
யம்பகட் டிளமுலை மாதர்
சுகிர்புரி நரம்பிற் காந்தளஞ் செங்கைத்
தொகுவிரல் சேப்புற நடப்ப
மகதியாழ் முனியு நாணுரைப் பயிற்று
மகரயா ழிசையினில் வெய்ய
பகலவன் கதிருந் தண்கதி ராகும்
பண்புடைச் சோமநீள் குன்றும் (3)

---

* விழைவுறுஞ் சிறப்புடைத்து (பா. பே.)

கவிழ்தலை யுளிய மகழ்ந்திடும் புற்றுங்
குரும்பியைக் கையினு லள்ளித்
தவலரும் பிணவுக் கருத்தியின் புறுத
ஞேக்கிய வியக்கியர் தணந்த
திவவியாழ் கேள்வித் துறைபடி தலைவர்
செலவயர் பிரிவினை யெண்ணி
யுவவுவெண் மதித்தீ யுட்புகுந் திறப்ப
வுன்னிடுந் துந்துபி வரையும் (4)

கள்ளயர் வுயிர்க்குஞ் செழுமலர்க் கூந்த
லியக்கியர் கதிர்முலைக் கோட்டிற்
பிள்ளைவெண் மதிய மலையெனத் தவழ்தல்
பிறைவடங் கிடந்ததென் றெண்ணித்
தெள்ளிதி னியக்க ராங்கதன் களங்க
நானமென் சேறென நெஞ்சத்
* துள்ளுபு துடையா வளமையி னுனு
மோங்குசி ரிடபமால் வரையும் (5)

கனைகதிர்ச் செல்வன் கொடிஞ்சியந் தேரிற்
கூந்தன்மாக் கவிக்குளம் பிடறிச்
சினைவிசும் பளக்கும் பொரியரைச் சந்தச்
செழுங்கதி ரெங்கணு முதிராத்
துணைவிரி லோடுங் கலுழிநீ ராற்றிற்
சந்தனத் தொய்யிலின் விழ்ந்து
பணைநெடுந் தடக்கைக் களிற்றினம் வருந்துஞ்
சந்திர மெனும்பருப் பதமும் (6)

சந்திர காந்த வரையினிற் றிங்கட்
டண்கதிர் பரப்பலு நெகிழா
வுந்துநீர்த் தரங்க மெறிந்தலைத் தொழுகிப்
பாய்தலு மூயர்சினை மரத்துக்

* உள்ளுபு துடையா வன்மையினுனும் (பா. பே.)

கொந்தவிழ் நறும்பூஞ் சந்தனந் தமாலங்
கோங்கிளந் தழைகுழைத் துயரு
மந்தணற் சாரல் விளிம்புடுத் தோங்கு
மகன்வயிற் பிராசநீள் குன்றும் (7)

வேறு

கடுஞ்சூன் மேதி யிற்றுள்ளோந்து
கனைத்துக் கமல மலர்மேய்ந்து
நெடுந்தாட் குதலை வாய்க்குதட்டி
நெடுமூச் செறியுங் குடச்சுனைவாய்
வடந்தாழ் கொங்கைக் கொடிச்சியர்வான்
மகளி ரோடு நீராடு
மடங்கா விழுச்சி ருவமேத
மென்னுஞ் செம்பொன் னருவரையும் (8)

மாவி ழோதி யரமகளி
ராடும் வண்டா மரைச்சுனையிற்
காவி மேய்ந்து கள்ளொழுகுங்
கடைவாய் மேதி முலைமுறுகி
யோவா தொழுகு மறைவறட்பா
லொழுகு தேனிற் கரைந்தோடித்
தாவா தருவி யெனவிழுஞ்
சார லுடுத்த நாரதமும் (9)

ஆய வோரேழ் தடவரையு
மரந்தின் றுகுத்த பசும்பொன்னின்
மேய சுணங்கு கொப்பளிகரும்
வெங்கண் முலைய மதர்நெடுங்கட்
பாய வல்கு லரமகளி
ரமர ரியக்கர் பதியாகி
தூய துறக்க நகருறழும்
* பிலக்கத் தீவி னிடைதுலங்கும் (10)

---

* பிலக்கத்தீவு மிடைத்துலங்கும் (பா. பே.)

வேறு

அன்னமால் வரையிற் சித்தர்கந் தருவ
ரடிமலர் போற்றின ரிசைப்பப்
பொன்னிதழ்க் கமலப் பொகுட்டில்வீற் றிருக்கும்
புங்கவன் கடவுளாய் வதியு
மன்னியாங் குறைவோர் நரைதிரை யுருது
வருத்திவை யாயிரம் பருவங்
கன்னன்மென் மொழியார் முலைநல நுகர்ந்து
களிப்பொடு மினிதுவீற் றிருப்பார் (11)

வெண்டிரை கொழிக்குஞ் சுகுருதை யமிர்தை
விபாவைநீள் சுகையசந் தத்தை
மண்டுநீர்க் கிலமை திரிதிவை யென்னு
மேழ்நதி யவ்வுழி வயங்கு
மெண்டரும் யுகங்க ளுன்கென வுரைக்கும்
வரையறை யவ்வுழி யில்லைத்
தண்டலிற் சோமற் றெழுதவ னுறைவோர்
மகம்புரிந் தவனுழைச் சார்வார் (12)

அன்னநற் றீவின் மறையவர் தம்மை
யாரிய ரென்பராய் கழற்கான்
மன்னவர் தம்மைக் குரார ரென் றுரைப்பர்
வணிகரை விதிச்சிய ரென்பார்
பின்னவர் தம்மைப் பவ்விய ரென்பரு
ளைத்தவிப் பிலக்கதீ வளவிற்
கன்னலஞ் செழுஞ்சாற் றிமிழ்திரை கொழிக்குங்
கடலதற் புடையுடுத் தோங்கும் (13)

கண்கவர் பிலக்கத் தீவினுக் கிரட்டி
யோசனைத் தாய்ச்செழுங் கன்னற்
றண்கட லதனை யுப்புறஞ் சூழ்ந்து
தடஞ்சினைக் கற்பகச் சோலை

விண்படு வளனும் நிரையமோ டிணைப்ப
விழுத்தகு வான்சிறப் போங்கும்
பண்புகண் படுத்துப் பகர்வதற் கரிய
சன்மலித் தீவெழில் பயக்கும் (14)

களிமதஞ் செருக்கிக் கண்படை புரியா
துழிதருங் காய்சின வுழுவை
தளிமுகிற் றெண்ணீர் புழைக்கையால் வாரிச்
சூன்முதிர் தளர்நடைப் பிடிக்காங்
களியுட னருத்தி வெவ்விடா யகற்றி
யாரமென் பூந்தழை யொடித்துக்
குளகினி தருத்திக் கூன்புறந் தடவுங்
குமுதமென் றுரைக்குநீள் குன்றும் (15)

போகுயர் சினைய பராரைநீள் புன்னைப்
போதென நெஞ்சக மருண்டு
மேகமீப் பொடித்த வுடுவின்மேற் குருதிக்
காந்தண்மென் மலர்க்கரம் வைக்குந்
தோகையர் மடமை யெள்ளிய தலைவர்
தூமதி யவர்முக மென்ன
வோகையிற் றிலதந் தீட்டுதண் சார
லுன்னத மென்னுமால் வரையும் (16)

கற்பகத் தருவின் வியன்சினை யதனிற்
கவலைமென் பூங்கொடி பிணித்து
பொற்புற வினிதி னூசலாட் டயரும்
பூங்குழை யெயிற்றியர் தம்மை
வெற்பினி னுடங்கு மின்கொடி யென்ன
வெள்ளெயுற் றரவினம் வெருவி
*யற்படு மணியி னொளித்திடுஞ் சார
லருவிதாழ் துரோணமால் வரையும் (17)

* அற்படு மழையி னொளித்திடும் (பா. பே.)

காசுகண் படுக்குங் கைவள ரல்குற்
குறத்தியர் கதிர்முலைக் கோடும்
விசுதெண் டிரைய வானயா றெழுகும்
விண்டொடர் மால்வரைக் கோடுந்
தேசில்வேற் றுமைக டெரிக்கலா வாற்றுற்
சித்தர்கந் தருவர்தம் முள்ள
மூசலாட் டயரு மோங்குயர் சாரல்
வலர்க்கமா மெனுமுயர் வரையும் (18)

குண்டுகட் சுனைவா யலர்ந்தபைங் குவளைக்காற்
குவளையி னூறுதே னருந்தும்
வண்டுவான் றருவின் மென்மலர்த் தேறல்
வாய்மடுத் தருவருத் துமிழா
வுண்டுமுன் கழிந்த சுனைமலர்த் தேறன்
மீட்டும்வந் திளிதினி னுண்ணும்
விண்டொடர் குடுமிக் குமித்துவா னென்னும்
விழுச்சிறப் புறங்குநீள் வரையும் (19)

கொங்கவிழ் மலர்த்தே னியினங் கூட்டும்
பலிறுளை யிருல்விளை கோற்றேன்
றீங்களங் குழவிக் கோடுழச் சிதையா
வறைவறட் பாலினிற் சிந்திப்
பங்கமூற் றிடலும் பாவடிக் களிறு
பிடியொடு மளறுபாய்ந் துழலுங்
கங்கமென் றுரைக்கு மாயிர முகத்த
கவிழ்தலை யருவிதாழ் வரையும் (20)

நிழன்றிடுஞ் செங்கோ லிணில வேந்தர்
நீத்திடு முடிமுதற் கலன்க
ளழன்றெழு கதிரோன் மின்மினி யென்ன
வாய்கதிர் விரித்திடு மொருபால்

குழன்றவார் கூந்தற் குறத்தியர் விழியுங்
குவளையு மறிந்திடா தறுகால்
சுழன்றிடு மொருபா லிவ்வளங் கிடக்குந்
*தோமறு மயிடமால் வரையும் (21)

ஆகிய வோரேழ் குடுமிமால் வரையு
மம்பகட் டிளமுலைத் துவர்வாய்ப்
பாகடுந் திஞ்சொ லியக்கிய ரியக்கர்
பண்ணவர் சித்தர்கந் தருவர்
சேகெறி முனிவர்க் குறையுளாய்க் கமலச்
செங்கணு னுலகுறை வோரு
மோகையின் விரும்புஞ் சன்மலித் தீவி
னுலகெலாம் வியப்புறக் கிடக்கும் (22)

தோயசந் திரைநீள் விமோசனி நிவர்த்தி
நிதட்டினை *யோனிசுச் கிலையென்
றேயநன் னுமத் தேழ்நதி யுளவாங்
குறைபவ ரிருங்கலை கடவும்
வாயுவின் சேய பொலன்கழல் வழுத்தி
மருவருங் கதியினி னுறுவா
ரசயுளி னளவை யாங்கவர்க் குரைப்பின்
வருடமை யாயிர் மாமால் (23)

ஆறறி புலமை யந்தணர் தம்மைக்
கபிலரென் றவைர்மன் னவரை
மாறெறி வடிவே லருணரென் றுரைப்பர்
வணிகரைப் பீதரென் றுரைப்ப
ரூறுசால் கேள்விப் பின்னவர் தம்மைக்
கிட்டின ரென்னவோ திடுவார்
வீறுய ரிலவத் தீவின தளவின்
மறுக்கடல் விளிம்புடுத் தோங்கும் (24)

---

*தோமாறு மிடபமால் வரையும் பா. பே.
*யோனிருசக் கிலையென்று (பா. பே.)

மதுக்கட லளவைக் கிரட்டியோ சனைத்தாய்
மதிப்பரு மருமறைக் கேள்வி
முதுக்குறை வுடையோர்க் குறையுளாய்ச் செறிந்த
மொய்யிருள் குடியிருந் தனைய
கதுப்புடை மகளிர் மொழிக்குடைந் தியறேர்
நாரதன் கரமல ரெடுத்து
விதிர்த்திசை வீணை முனிந்திடும் வளங்கூர்
வான்குசத் தீவுற விளங்கும் (25)

கொங்குதேர் வாழ்க்கைப் பல்பொறிச் சுரும்பர்
கோங்கின்மென் பூந்துக ளாடி
மங்குல்கண் படுக்குஞ் சண்பகப் போதின்
வதிந்திடும் பேட்டின்முன் வரலும்
மீங்கது நோக்கி யயற்பெடை யணைந்த
கோலமென் றாடிநீண் மாலைக்
கங்குலிற் கமலம் புகுந்திதழ்க் கதவ
மடைத்திடும் வளங்கொண் மந்தரமும் (26)

மைம்முகி றவழுஞ் சாரலிற் றுயின்று
மடிசெவி மழலைவண் டோச்சக்
கைம்முகில் வருத னோக்கிய கரடக்
கறையடிக் கூந்தலம் பிடிமற்
றம்மவோர் பிடியோ டிணைந்திவண் வருத
றகாதென ஆடியந் தளிர
கொய்ம்மலர்ச் சோலை மருங்குபுக் கொளிக்குஞ்
சிறப்புடை யரியெனுங் குன்றும் (27)

துகிர்படு செங்காய்ப் பழுக்குலை யிந்தின்
றாங்கிலாக் கதிர்விழு தோட்டும்
வகிர்மதிக் கோடு தவழ்தலு முதிர
வூடிய மங்கையர் தளிர்க்கை

தகவொடுங் கணவர் பற்றவற் றுதிர்ந்த
தயங்கொளிச் செந்துகிர் கடுக்கு
மகின்முரு டுருட்டி யருவிதாழ் துதிமா
னெனும்பெய ரண்ணலங் குன்றும் (28)

மீயுயர் கோட்டுக் குரவிளம் பாவைப்
பராரைமென் சந்தனம் வேட்ப
வாயிரப் பெருந்தீச் சுடர்விளக் கெடுத்தா
லென்னமென் கோடல்வா யலரச்
சேயுயர் கழைக்கண் வெடித்துகு முத்தம்
வெண்பொரிச் சொரிந்தெனச் சிறக்கும்
பாயபல் வளங்கூ ரேமமென் றுரைக்கும்
பனிவிசும் பணவுநீள் வரையும் (29)

மணிதெளித் தனைய வாசநீர்ச் சுனையுள்
வலம்புரி யீன்றவெண் முத்தம்
பிணிமுறுக் கவிழ்ந்த தாமரைப் பொகுட்டிற்
பிறங்குதல் சுனையெனும் பேதை
யணிவளைக் கரத்தான் முத்தமென் கழங்காட்
டாடுதல் போன்ம்மெனச் சிறக்குந்
தணிவரு மல்லல் கண்படை கூர்ந்து
தயங்கும்வித் துருமவான் குன்றும் (30)

* ஆய்திணை யவையயி லிடிப்பவ ருலக்கை
யாசினிற் பலாவினிற் றூக்கச்
சேயபொற் சுளைய குடக்கனி யுடைந்து
திசைதிசை காவதங் கமழும்
பாயபல் வளத்த சாரல்க டோறுங்
குறத்தியர் பசியதேன் வவ்வி
மீயுயர் விசும்பின் மங்கைய ரயிர்த
மளித்திடும் புட்பவான் வெற்பும் (31)

* ஆய்திணை யவையயிடிப்பவர் (பா. பே.)

மணிவிளிம் புடுத்த நுண்டுகிற் றேருகை
　　மண்ணிடைப் பூந்துகடு டைப்பத்
துணிகதிர்த் திங்கண் மணிவடங் கிடந்த
　　துணைமுலை விசும்பளந் தோங்கப்
பிணிமுறுக் கவிழுஞ் சண்பகப் போது
　　கொய்பவர் பேரெழில் நோக்கி
யணிமயி லுனி யாட்டொழிந் தகலுங்
　　குசேசய மெனுமரு வரையும் (32)

என்னுமேழ் வரையுஞ் சுணங்குபூத் தலர்ந்த
　　விளமுலை யியக்கிய ரியக்கர்
வன்னமே கலைய வரம்பைய ரமரர்
　　மாண்புடைச் சித்தர்கந் தருவர்
துன்னியெஞ் ஞான்று முறையிடமாகத்
　　துறக்கமா நகரெனத் துலங்குங்
கன்னியஞ் சிறப்பா ருயர்குசத் தீவி
　　னுலகெலாம் வியப்புறக் கவினும் (33)

பவித்திரை யம்பை மகிசிவை தாத
　　பாவைசம் மதைபழிப் பில்லாப்
புவிக்கொரு தரள வடமணி ந்ததுபோற்
　　புணரிதாழ் வித்தியுத் தென்ன
வுவப்புறு நதிக ளேழுள வாங்க
　　ணுறைபவர் நான்முகற் போற்றித்
தவத்தின தளவி னயனுல கடைந்து
　　தணப்பில்பே ரின்பமுற் றிருப்பார் (34)

அந்தணர் தூய திரவிடர் வென்வே
　　லரசர்சுட் டுமியர்நல் வணிகர்
மைந்துடைச் சிநேகர் பின்னவர் தம்மை
　　வயங்கொண்மாந் தேகரென் றுரைப்பார்

நந்தலி லாயு ளாங்கவர் தமக்கு
    நவிலினை யாயிரம் பருவம்
வெந்துயர் நோய்மூப் பிகந்துவேற் றடங்கண்
    மடவிய ரோடும்வீற் றிருப்பார் (35)

அறைந்தவத் தீவை யத்துணைப் பரப்பி
    னெய்க்கடல் வளையுமத் தீவிற்
சிறந்திடு மிரட்டி யோசனைத் தாகிக்
    கிரவுஞ்ச மெனுஞ்செழுந் தீவும்
பறைந்திடக் கரைதோ ணெய்க்கட லதனைச்
    சூழ்ந்திடும் பகர்ந்தவத் தீவிற்
பிறந்தவ ரையா யிரமுயர் பருவம்
    பெட்புடன் வாழ்குவ ரன்றே (36)

விழிவாய் மகளிர் கணவர்பால் விடுப்ப
    வுகிரினுற் பாசுரம் வரைந்த
தாழைமென் றோடு பொற்றக டென்ன
    வருநெறித் தலைதொறுங் கிடத்தன்
மாழைமென் னோக்கி னியக்கியர் நோக்கி
    மகிணர்பான் மனஞ்செல விடுக்குங்
கோழுரை யரம்பைச் சாரல்சூழ் கிடந்த
    துந்துமி யென்னுநீள் குன்றும் (37)

வேறு

கறையடிப் பிடியி னோடுங்
    களிறுகோட் படுத்துச் செல்லு
மறவர்வெண் பளிக்கு வட்டப்
    பாறையின் மருங்கு மற்றோர்
குறுமுயல் கிடந்த தென்னக்
    குளிர்மதி முயல்கைப் பற்றச்
சிறுகண்வார் வலையின் வீசுஞ்
    சீர்கொள்புண் டரீகக் குன்றும் (38)

வேறு

கங்குல்வாய் விழுங் கணவர்பாற் களவி
 னேகுறுங் கதிர்முலைத் துவர்வா
யங்கலும் மேனிக் குறத்தியர் முகத்தை
 யாய்கதிர் மதியமென் றெண்ணித்
திங்கள்வெண் மணிக்கற் சிகரியுள் ளுருகி
 யொழுகிய தெளிபுனற் பேர்யா
றெங்கணுங் கடத்த லரிதென மயங்குஞ்
 சாரல்சூ ழிரதன வெற்பும் (39)

வான்புகத் தெறிக்கு மிரலைநீண் மருப்பின்
 *மறிந்துவீழ்ந் தாடிவெம் மறவ
ரூன்றலைப் பொடித்தா லன்னசெஞ் சூட்டு
 வாரண மொலிக்கும்வை கறையிற்
கான்படு வேட்ட மாடுவோர் செந்நா
 மடிவிளி கேட்டலுங் கலங்கிக்
கூன்பிறைக் கோட்டுக் களிற்றின மிரியுஞ்
 சலதர மென்னும்வான் குன்றும் (40)

நிவவியாழ் மருட்டு மென்மொழிக் கருங்கட்
 குறத்தியர் செய்யமென் கரத்தாற்
கவலையங் கிழங்கு வாரிய குழியிற்
 கதிருமிழ் செம்மணி யிமைக்கு
நவையறு சார லிடந்தொறு மியக்கர்
 நங்கையர் முலைநலம் விரும்பி
யுவவுவெண் டிங்க ணிலாப்பயன் கொள்ளு
 முயர்கிர வுஞ்சமால் வரையும் (41)

வேறு

தேங்கமழ் நறிய கூந்தற்
 சிலம்பென வதிர வோங்கி
விங்கிள முலையிற் சேர்த்த
 வுத்தரா சங்கம் விழப்

---

* மறிந்து விழ்தாடி வெம்மறவர் (பா. பே.)

பாங்கினி லமரர் மாதர்
பந்தெறி யமலை நீங்கா
மாங்குயி லகவுஞ் சோலை
மருவுவா மனக வெற்பும் (42)

பைந்தொடிக் குறவர் மாதர்
பல்லினுற் சுகிர்ந்த நாரிற்
கொந்தவிழ் கோடற் போது
கட்டிய குழுங்கன் மாலை
சிந்திய கணவ ரோடு
மூடினர் செல்லுந் தோற்ற
நந்தலின் மின்னிற் றென்று
நற்றிவா துகுவாங் குன்றும் (43)

ஆகுமேழ் வரையும் பொன்னங்
குன்றென வழகு வாய்ந்து
போகிதழ் பொருவு முண்க
ணரம்பையர் பொருவி றேவர்
சேகெறி முனிவர் சித்த
ருறையுளாய்ச் சிறப்பி னேடு
மோகையி னன்றி னுமத்
தீவினி னுறையு மன்றே (44)

சந்திகைப் புண்ட ரீகை
மனேசெவை கவுரி சாதி
முந்திராத் திரிகு முத்து
வதியென *மொழியு மோரே
மூந்துதெண் டிரைநீர்ப் பேரா
றுளவவண் முக்கட் டேவின்
வந்தனை விரதம் வேள்வி
வரன்முறை வழாது செய்வார் (45)

* வதியுமோரேழ் (பா. பே.)

மறையவர் சிறப்பு வாய்ந்த
புட்கலர் வடிவேன் மன்னர்
விறல்கொள்புட் கரர்சீர் மிக்க
வணிகர்தன் னியரெங் நாளும்
பொறையுடைச் சதுத்த ரோங்குந்
தநிச்சிய ரென்னப் பொற்பி
னிறைபெருந் திருவி னோடு
நோய்நிரப் பின்றி வாழ்வார் (46)

மண்டுசீர்க் கிரவுஞ் சத்தி
வளவையின் மதியை மானும்
வெண்டயிர்க் கடல்சூழ் போமவ்
விரிகடற் கிரட்டி யாகத்
*தண்டலில் சரகத் தீவுந்
தழீஇப்புறங் கிடக்கு மாங்க
ணெண்டொடி மடவார் மைந்தர்
நரை திரை யுருது வாழ்வார் (47)

ஏட்டைவெம் பசியிற் பாய்ந்த
முடங்குளை மடங்கல் யானைக்
கோட்டினை யகழ்ந்து மெல்லென்
குருத்துவாய்க் குதட்ட விழ்ந்த
மோட்டொளி முத்தஞ் சிந்தி
மொய்கதி ருடுக்கள் பூத்த
சேட்டுயர் வானிற் றோன்றுஞ்
சாரல்சூழ் சியாம வெற்பும் (48)

அரந்துடைத் தொளிரும் வேற்கட்
குறத்திய ரந்தண் சாரற்
செருந்திருழ் நறிய கூந்தல்
செங்கையா லுள்ர்த லோடும்

* தண்டலி னுகத் தீவுந் (பா. பே.)

பொருந்திய பேடை மஞ்ஞைத்
தோகையென் றெண்ணிப் புல்லும்
விருந்தின ருள்ளம் வவ்வும்
வளந்திக ழுதைய வெற்பும் (49)

கைத்தள மென்னப் பூத்த
கருஞ்சினை வழையிற் றூங்கு
மொய்த்ததே னிருலிற் பாய்ந்து
முசுக்கலை யுடைப்ப வீழ்ந்து
தத்துதே னருவி பாய்ந்து
சந்தனப் படப்பை சாய்க்கு
மத்தமென் றுரைக்குந் தூய
வணிமணிக் குடுமிக் குன்றும் (50)

கூடிய கலவிப் போரி
னுடைந்திடுங் கொம்ப ரன்ன
ரூடலும் பிழைத்த தென்கொ
லுரைக்கென நாணி நக்குக்
கோடிய முகத்தை நோக்கிக்
குறவர்வெண் மதியை யென்னு
நீடிருஞ் சாரல் சூழு
நிகரில்கே சரியாங் குன்றும் (51)

வேறு

பாம்புபைத் தாவித் தென்னமென் காந்தட்
பருமுகை யவிழ்ந்துதோன் றுதலு
மேம்பலிற் றேறுகை மயின்முகை குத்தி
*யனம்மயி னென்னெடு மேகுந்
தூம்புடைத் தடக்கைக் கறிவளர் சாரல்
சுற்றுபு கிடந்தொளி தயங்குங்
காம்புசேர் குடுமி யோங்கிடு மாம்பி
கேயமாங் கவின்வளர் குன்றும் (52)

* யன்மையி னென்னெடு (பா. பே.)

அரையிருட் பொழுதிற் கணவர்பாற் களவிற்
செலவய ராய்தொடி மகளி
ரிரவெரி மரத்தீ யொளியினுல் வெருவி
மற்றுமோர் நெறியினே குழியில்
விரிகதி ரென்னச் செம்மணிக் குடுமி
வெயில்செயக் கண்டுபோக் கரிதாய்க்
கனரயெறி காமங் காழ்க்கொள மயங்குஞ்
சாரல்சூழ் காமிய வெற்பும் (53)

வேறு

பொன்சுமந் தோங்கு கொங்கின்
முலையுறழ் பொலம்பூக் கொய்யு
மின்சுனை மருங்கு கண்போன்
றெழிறிகழ் குவளை குற்று
மின்குழாந் திரிவ வென்னக்
குறத்தியர் வழங்கும் விண்டோய்
மன்பெருஞ் சாரல் சூழ்ந்து
வயங்குரே வதமாம் வெற்பும் (54)

வேறு

எனுமுயர் குடுமி வரைகளோ ரேழும்
விஞ்சைய ரியக்கர்கந் திருவர்
வினையற நோற்று மும்மலங் கடிந்த
முனிவரர் மேவுறு மிடனுய்ப்
பனியிரு விசும்பின் மேவிவாழ் குநரும்
*விழைவுறு பலவளங் கிடந்து
புனிதமாஞ் சாகத் தீவினில் வீற்று
†வீற்றதாய்ப் பொற்புடன் மருவும் (55)

வேறு

வேணுகை பெலிநீ தாய
சுகுமாரி குமாரி மிக்க
ரேணுகை கபர்த்தி செய்ய
விகருகை யென்று மீரேழ்

* விழவுறும் பல்வளங் கிடந்து (பா. பே.)
† வீற்றதாய்ப் பொற்புடனமரும் (பா. பே.)

மானுடை நதிக ளாங்கு
மருவுமவ் விடத்து வாழ்வோர்
யாணர்நற் பருவ மையா
யிரமென விசைப்பர் மாதோ (56)

வேதியர் மாயர் வேந்தர்
மகதர்நல் வணிக ராஞேர்
தீதின்மா னரசர்பின்ஞேர்
மந்தக ரென்பர் செய்ய
வாதவன் கமலப் பொற்ரு
ளருச்சனை புரிந்து போற்றி
யேதமற் றன்ஞேன் றாய
மண்டலத் தெய்தி வாழ்வார் (57)

உரைபெறு சாகத் தீவி
னளவையி னெலித்து வீங்குந்
திரைகுலாய்க் கிடந்து தூயப்
பாற்கடல் செறிந்து சுற்றும்
விரவுமக் கடலி னுப்பண்
விண்ணவர் முனிவர் சித்தர்
பரவிடுஞ் சுவேதத் தீவொன்
றுளதுபான் மதியிற் ருேன்றும் (58)

ஆங்கவ தரித்தோர் யாரு
மவிர்மதி நிறத்தர் நாளும்
வீங்குகேள் வியர்தீ தற்ற
மெய்யினர் வெகுளி செற்ருேர்
நீங்கருந் தவத்தோர் நீதி
காழ்கொண்டு கிடந்த நெஞ்ச
ரோங்குநோய் துன்ப மூப்பு
நரைதிரை யொழிந்து ளாரால் (59)

அங்குவம் துதித்தோர் யாருந்
திருமறு மார்ப ராகிச்
சங்கமுல் கவிழ்க்கு நேமித்
தாரைவாள் கதைவில் லேந்தி
கங்குல்சித் தொளிருஞ் செய்யக்
கவுத்துவ மணிந்து நீண்ட
செங்கண்மா லுருவு தாங்கித்
திருவின்வீற் றிருப்பர் மாதோ (60)

தண்டலின் சுவேதத் தீவின்
வாழுநர் தயங்கு தெய்வக்
கண்டிகை மாலை சாத்திக்
கடவுள்வெண் ணீறு பூசிப்
புண்டர மூன்று நெற்றிப்
பொலிவுறத் தீட்டி யீசன்
றொண்டரா யளப்பி லின்பந்
துய்த்தினி திருந்து வாழ்வார் (61)

கண்கவர் சுவேதத் தீவிற்
கணிப்பரு நகர முண்டாங்
கெண்டிசை புகழு நாரா
யணன்புர மென்ன வோங்குந்
தண்டுழாய் முகுந்தன் வைகத்
தகைபெறு நகர மற்றென்
றுண்டதன் றலைமை யாரே
யிற்றென வுரைக்கற் பாலார். (62)

காய்கதிர் மணியிற் செய்து
கவின்சிறைக் கிடந்து வான்றோய்
மீயுயர் மாட கோடி
யுடுத்துவெண் ணிலவுத் திங்கள்

பாயநீள் சதுக்கஞ் சந்தி
தேற்றிகள் பலவுஞ் சூழ்ந்தோ
ராயிர கோடி வெய்யோ
னலர்ந்தெனக் கதிர்கள் வீசும் (63)

பளிக்குமே லிலங்கள் யாவும்
பான்மதிக் காணிற் றெண்ணீர்
துளித்திடு முகடு வேய்ந்த
சுடர்மணி யிரவி யென்ன
வளிக்குலம் விழுஞ் செய்ய
கமலங்க ளலர்ந்து காட்டும்
வளைக்கையார் முரல் காணின்
மதியென வாம்பல் விள்ளும் (64)

மங்கையர் பாடல் தெய்வ
நாரதன் மகதி வீணை
செங்கையா லுளருங் கானந்
தீங்குழ லிசைக்கு மோதை
யங்கலும் மேனி நல்லா
ருடிய வமிர்தத் தீஞ்சொ
லெங்கணு மமிர்த மாரி
பொழிந்தென விசைக்கு மன்றே (65)

வெயில்சுரந் தொழுகுஞ் செய்ய
மணிவடங் கிடந்து விங்கித்
தொயில்வரைந் தோங்கும் வெய்ய
துணைமுலைச் சுமக்க லாற்று
மயிலியன் மாத ரோடு
— மாடவர் மதுவுண் டாடிக்
குயில்குடைந் தாடுஞ் சோலைக்
கொழுநிழல் வைகு வாரால் (66)

வெள்ளிவெண் ணிலவு தாங்கும்
வெண்ணகை யமிர்த மன்னூர்
கள்ளமுங் கொலையுங் கற்று
கழிக்கயன் மருட்டுங் கண்க
ளள்ளிலைப் பூண்செய் திண்டோ
ளாடவர் கமலம் போழ்ந்து
கொள்ளைகொண் டாவி யுண்டு
கூற்றென வுலவு மன்றே (67)

மின்பொதி யவிழ்க்குஞ் செய்ய
மணிவிளிம் பெறியுஞ் சேலம்
பொன்புனைக் கொடியி னெல்கும்
பொய்யிடை யதனில் வீக்கிக்
கொன்படு பருதி வைவேற்
கொலைவிழி மாதர் கண்டோ
ரென்புநெக் குருகி மாழ்க
விருநடம் புரிவ ரன்றே (68)

உருப்பசி யரம்பை வேற்கட்
டிலோத்தமை வுருவப் பைம்பூண்
கருப்புரங் கமழுஞ் செவ்வாய்
மேனகை கதிர்த்து வீங்கும்
பொருப்புறழ் முலைக டாங்கிப்
*பூஞ்சிலம் பரற்றி யார்ப்பத்
தெருத்தலை தோறு மின்னிற்
றெரிவில திரிவ ரன்றே (69)

மரமெலாங் கடவுட் பொன்னங்
கற்பக மலர்வாய் விண்ட
வரவுநீர் நதிகள் யாவுங்
கங்கையா ருழுகு தீம்பாற்

* பூஞ்சிலம் பார்த்தி யார்ப்ப (பா. பே.)

*சுரபிக ளியாவுந் தேனுத்
தூநகைப் பவளச் செவ்வா
யரிவையர் யாரும் வானத்
தரம்பைய ராவ ரன்றே (70)

கடையளந் தறியா வின்ன
வளம்படு நகரிற் காமர்
படுமணி மாடத் தங்கட்
பாப்பணை மீதிற் பூமி
மடலவிழ் கமலை செய்ய
மலரடி வருட வெய்ய
வுடல்சினத் திகிரி மாயோன்
யோகினி லுறங்கு மன்றே (71)

உலகெலாங் கமலத் தோனே
டுந்தியங் கமலம் பூத்த
மலர்செழுங் கதிர்க ணீட்டு
மரகத மணிக்குன் றன்ன
வலர்கதிர் பருதி நேமி
யாய்பிழித் துளவி னோனே
நிலைபெறும் பிரம மாகு
நிருமல மூர்த்தி யாமால் (72)

இமிழ்திரை கொழிக்குந் தூயப்
பாற்கடற் கிரட்டி யாகி
கமழலம் பொழில்கள் சூழ்ந்து
கவின்செய்புட் கரத்தீ வோங்கி
யமைவுறச் சூழு மன்ன
கண்டத்தை யிருகூ றுக்கிச்
சிமையவா னணவு மான
சோத்திரஞ் சிறந்து வைகும் (73)

* சுரபி கடாலுஞ் (பா. பே.)

## வேறு

ஐம்பதினு யிரமாய யோசனைமற்
றவ்வரையி னுயர்ச்சி யாகு
மும்பரின்மேற் றலையகல மத்துணையோ
சனையாகு முரைத்த வெற்பிற்
கம்பமறு முப்புறத்திற் கணடத்தை
மாவித கண்ட மென்பா
ரிம்பருறு மிப்புறத்திற் கண்டந்தா
தகிகண்ட மென்ப ரன்றே (74)

விழைவுறுமக் கண்டத்தின் விண்டொடர்போ
குயர்சினைகள் விழுது காக்கும்
பழுமரமொன் றுண்டதற்பாற் பங்கயத்தோ
ளினிதமர்ந்து பவள மேனி
முழுமுதலை நாரணனைத் தேவரொடு
முதுமறைகள் பாடி யேத்துங்
குழுமியவ னுறைவோர்க ளொன்பதினு
யிரம்பருவங் குலவி வாழ்வார் (75)

கல்வினைதீ வினையன்றி நரைதிரைமூப்
பொழிந்துண்மை பொய்ம்மை யின்றிச்
சொல்லரிய வாச்சிரம வருணமின்றி
யானந்தந் தொக்கு ஞானம்
வல்லுநரா யெல்லோரு மொருதன்மை
யுடையராய் மலத்தி னீங்கி
*யல்லற துன்பமின்ப மிவையின்றி
யமரரின்வீற் றிருப்ப ரன்றே (76)

தெரிதருபுட் கரத்தீவி னளவையிற்றெண்
ணீர்க்கடல்சூழ்ந் தொழுகு மிந்த

* யல்லறரு துன்பமின்ப பா. பே.

விரிபுனற்றெண் கடற்கிரட்டி விளங்கியபொன்
 விலஞ்சூழ மதனைச் சூழ்ந்து
பொருவருவோ காலோகச் சக்கிரவா
 ளப்பொருப்புப் புடையிற் சூழ
* மருவியபுட் கரத்தீவுக் கப்புறத்தி
 லிருட்பிழம்பு மலியு மன்றே (77)

ஒளிர்மேமி வரைப்பரப்போ ரிலக்கம்யோ
 சனையாகு முயர்பு மற்றே
களிசேரெண் டிசைப்பால ரவ்வரையெண்
 டிசைப் புலனுங் காத்துவாழ்வார்
வெளிமூடு மவ்வரையி னப்புறத்தி
 லிருட்பிழம்பு மிடைந்து சூழ
† நளியார்ந்த விருட் பிழம்பை
 யண்டகடா கம்புதைத்து நண்ணுமன்றே (78)

இத்தகைய வண்டங்க ளளவிறந்த
 கோடியவா மிவைகள் யாவுங்
கைத்தலத்தி னெல்லியென வுரைத்திடுமிவ்
 வண்டம்போற் கருதிக் காண்டி
ருய்த்திதனைச் சூழ்போது மாவரண
 மோரேழு மொன்றுக் கொன்று
பத்துமடங் கதிகமா மனந்தனிவை
 யனைத்தினையும் பரிப்பர் மாதோ (79)

அவ்வியத்தந் தனைக்கடந்து பேரொளியாய்
 மகேசுர னுண் டமர்வனந்தத்
திவ்விய மவவியநதத்தினிலண்டஞ் சிறந்
 துதிக்கு மதனுண் மிக்க

---

* மருவியவுட் புறத்தின் வெயில் அப்புறத்தின் (பா. பே.)
† நளியாரவ் விருட்பிழம்பு ஷை

வெவ்வமறு மேருமுகட் டியன்மறைதேர்
நான்முகத்தோ றுதிப்ப னன்னேன்
பவ்வமுறை சூழ்கிடந்த வுலகனைத்தும்
வரன்முறையிற் படைப்ப னென்றான் (80)

நாற்பத்தாறுவது
பிலக்க முதலான தீவுகளினியற்கையுரைத்த
வத்தியாய முற்றும்
ஆகத்திருவிருத்தம் 2686

உ

## நாற்பத்தேழாவது
## மன் வந்தர முரைத்த வத்தியாயம்

இறந்திடுமன் வந்தரத்தோ டெதிர்ந்திடுமென்
வந்தரத்தி னியல்பு மாங்குச்
*செறிந்ததுபா பரந்தோறும் வியாதமுனி
வருதிறனுங் கலிக டோறும்
பிறந்தறியாத் தனிப்பொருளின் மாணுக்கர்
வரன்முறையும் பேசு கென்ன
வறம்புரியும் நாரதனு மகபதியுங்
கேட்பமா லறைய லுற்றான் (1)

உலகுபுகழ் சுவாயம்பு வெய்யசுவா
ரோசிடன்பே ருத்த மன்சி
ரலகில்திறன் ருமசன்வேலிரேவதன்சாக்
குடனென்ன வறுவ ராகி
விலகும்வடி வேன்மனுக்கள் காலங்க
ளிறந்தவின் டிருந்து வாழ்வோன்
புலவுவடி வாட்கைவைவச் சுதமனுவா
மெனவெடுத்துப் புகல்வர் மேலோர் (2)

* செறிந்தது வாபரந்தோறும் (பா. பே.)

ஆதியுறு சுவாயம்பு மனுகாளிற்
றேவதைக ளமரர் கோமா
வீதிபுரி யேழ்முனிவர் பேரனைத்தும்
வழாதுமுன்ன நிகழ்த்தி னோமா
லோதுமிரண் டாமனுச்சீ ரோங்குசுவா
ரோசிடன்மற் றவன்கா லத்தின்
மேதகுவா னவர்தம்மை பராதவநற்
றுடிதரென விளம்பு வாரால் (3)

அக்காலத் திந்திரனை விவச்சித்தென்
றறைகுவரேழ் முனிவர் தம்மை
முக்காலங் களுமுணரு மூர்ச்சனியற்
றம்பமுனி பிராணன் றாந்தன்
றக்கோர்சொல் பிரிடதனற் றிமிரனிய
லறுவரிவ ரென்று தாவில்
பைக்கோல மணிச்சுடிகை பாந்தண்மிசைக்
கிடந்தநிலம் பகரு மன்றே (4)

சொன்னவிரண் டாமனுவின் றேமில்மைந்தர்
சயித்திரன்கிம் புருட னென்பார்
பன்னியமூன் றுமனுவின் பழிப்பில்பெய
ருத்தமனு மவன்றன் காலத்
துன்னருஞ்சீ ரிந்திரன்பேர் சுசாந்தியா
மிராசனூ ஷூர்த்து வாகு
மன்னுசுத பன்சவனன் மகன்சுக்கி
ரனெனவேழ் முனிவர் வண்பேர் (5)

அன்னகா லத்தமரர் சுதாமருயர்
சத்தியர்நீள் *சிவர் சிர்த்தி
மன்னுபிர மார்த்தனர்பொன் மவுலிவச
வர்த்திகளென் றைந்து கொத்தாய்ப்

* சிவரஞ் சிர்த்தி (பா. பே.)

பன்னிருவ ராயிருப்பர் பகர்ந்திடுநான்
　　காமனுவின் பழிப்பி னும
மென்னிலமும் புகழ்ந்தேத்துந் தாமசனு
　　மிந்திரனைச் சவியென் பாரால் (6)

விண்ணவரக் காலத்திற் சத்தியர்நற்
　　சுரர்மருவி யரரின் மேன்மை
நண்ணுபுகழ்ச் சுதையரெனு நான்குகோத்தா
　　யிருபதின்மே லெழுவ ராகிக்
கண்ணகன்வா னத்துறைவர் சோதிதா
　　மன்பிருதுக் காவி யன்சி
ரெண்ணரிய சயித்திரனரி·தனதனிகன்
　　வானெனவேழ் முனிவ ராவார் (7)

சிறப்புடையைந் தாமனுவின் றிருநாம
　　மிரேவதனு மகவா னும
மறத்துறைபோஞ் சுகனுகு மயிர்தரறந்
　　தருபாக நிரதர் நாளுந்
துறக்கருஞ்சீர் வைகுண்டர் சுமேதரெனு
　　நான்குகோத்தாய் தோயில் விண்ணோர்
பெறற்கரிய துறக்கத்தி னிருபதின்மே
　　லெண்மராய்ப் பெரிது வாழ்வார் (8)

இரணியரோ மன்றிகழுந் தேவார்த்தி
　　யிலங்கொளிசே ரூர்த்த வாகுக்
*கருணைபுரிந் திடுதேவ வாகுவிய
　　னற்சுதமன் பர்ச் சனியன் காம
ரருள்புரிமா முனியென்ன வேழ்முனிவர்
　　பெயராறு மனுவி னுமம்
பொருவருஞ்சாக் குடனுகு மிந்திரன்பேர்
　　மனேசவனென் றுலகம் போற்றும் (9)

---

* கருணைபுரிந் திடுதேவ்வா குவியனற்சுதாமன் பர்ச்
சனியன் காமர் (பா. பே.)

ஆர்த்தியர்நற் பிரபாசர் பவியரருட்
    பிரதானர் மாநு பாவர்
வாய்த்தவிலேக் கியரென்னு மாறுகொத்தாய்ப்
    பத்தொன்பான் பெயராய் வானோ
ரேத்தவுறை குவரறங்கூர் சுமேதனிய
    *றேர்விரிசன் விட்டு மான்சீர்
காத்தருளுத் தமன்மதுவத் திரிகருணைச்
    சயிட்டுணுவேழ் முனிவ ராவார் (10)

முழு துலகு மதிக்கவிகை நிழற்றுசுவா
    ரோசிடனை முதலாய்ப் பைம்பொ
னெழுவுறழ்தோ ளிரேவதனை யிருநால்
    வருங்கமலத் திறையை மானு
மழையுறழுங் கொடைத் தடக்கைச் சுவாயம்பு
    மனுவினருண் மதலை யாய
†தொழுதருசி ருலகேத்தும் பிரியவிர
    தன்குலத்திற் றோன்றி னாரே (11)

வேறு

(சந்தவிருத்தம்)

ஏழாமனு வைவச்சுத னென்றோதுவர் மகவான்
றாழாதுயர் பொன்னாடினி தளிக்கும் புரந்தரனுஞ்
சூழ்செஞ்சுட ராதித்தியர் வசுக்களுருத் திரர்சொல்
வாழ்வாமருத் துவரென்றிவ ரொருநால்வகை யாவார் (12)

அன்னோர்கண்முப் பதின்மூவர்க ளாவரருள் வசிட்டன்
றன்னேரெறி புகழ்த்திரி சமதக்கினி யருள்கூர்
பன்னூலுரை தெளிகோதமன் பாரத்துவ முனிவன்
றென்மாமறை தேர்காசியன் றுகடீர்கவு சிகனே (13)

* றேர்விரசன் (பா. பே.) † தொழுதகு சிருலகேத்தும் (பா.பே)

எனுமாதவ ரிக்காலையி னேழ்மாமுனி வரர்வெம்
மனுவாயசு வாயம்புவின் மன்வந்தர மதனிற்
களிவாயித மாகூதி வயிற்றிற்கடல் வண்ணன்
வினைதீர்வரு சசிகேச னெனத்தோன்றினன் விழைவின் (14)

சுவரோசிட மன்வந்தர மதனிற்றுடி தப்பே
ரவரோடக லல்குற்குயில் வயினஞ்சன வண்ணன்
றவர்நண்புறு துடிதப்பெய ரிமையோரொடு தானு
மவர்வெண்மதி போலத்துடி தப்பேரினு தித்தான் (15)

புகழுத்தம மன்வந்தர மதனிற்புயல் வண்ணன்
மகிழ்சத்திய ரெனும்வானவ ரொடுசத்தியை வயினி
* லிகலுற்றெழு மவுணர்க்கிட ரெய்தத்திற லோடுந்
தகைபெற்றுயர் தருசத்திய னெனவந்தவ தரித்தான் (16)

முன்னும்புகழ் பெறுதாமச மன்வந்தர மதனிற்
பின்னற்றிரை தவழ்பாற்கட னடுவட்டுயில் பெரியோ
னுன்னற்கரு மரியேறினி லுயர்வானவ ரோடும்
பன்னற்கரு மறைதேடிய வரியாகவுற் பவித்தான் (17)

மானுத்திசை பெறுரேவத மன்வந்தர மதனி
னணிற்பொலி சம்பூதித னன்மாமக வாகச்
சேணிற்பொலி சம்பூத ரெனுந்தேவர்க ளொடுமா
லேணுற்றுயர் சம்பூத னெனத்தோன்றின னன்றே (18)

மல்லற்றிரு வளர்சாக்குட மன்வந்தர மதனின்
வில்லிற்றிகழ் புருவக்கொடி யிகுண்டைக்குயில் வயினிற்
சொல்லற்கரும் வைகுண்ட ரெனுந்தேவர்க டொகையுள்
வெல்லற்கரும் வைகுண்ட னெனத்தோன்றின னன்றே (19)

* இகலுற்றிடு மரிணர் (பா. பே.)

வைவச்சுத மன்வந்தர மதனிற்புவி வாழக்
கோவ்வைக்கனி யிதழ்வாயதி திக்கோர்குல மகவாய்ப்
பவ்வக்கட லிடைக்ண்டுயில் பச்சைப்புய லனையான்
செவ்விக்குற ளுருவாக வுதித்துப்பகை செற்முன் (20)

**வேறு**

பொருவருமெட் டாமனுவைச் சாவன்னி
யென் றுரைப்பர் புகலுங் காலை
மருவியசீ ரிந்திரனை மாவலியென்
றினிதுரைப்பர் வானோர் யாரு
முருகவிழ்தார்ச் சுதபர்திற லமிதருயர்
முக்கியரா மூன்று கொத்தாய்
தெரிவருஞ்சீ ரோரொருகூ றிருபஃதாய்
விண்ணினிடைச் சிறந்து வாழ்வார் (21)

**வேறு**

கீர்த்திமான் காவலனே டிராமன் சீர்த்திக்
கிருபனொடச் சுவத்தாமன் வியாதன் யாரு
மேத்தருஞ்சீர் மிருகசிரங்க னென்னு நாமத்
திருந்தவத்தோ ரேழ்முனிவ ராகி வாழ்வார்
வாய்த்ததிற லொன்பதா மனுவினுமம்
வழங்குதக்க சாவனனன் மகவா னுமங்
கோத்தபுகழ்ச் சுதையுலக முழுதுந் தீற்றுங்
குணமுடையற் புதனென்றுங் கூறுவாரால் (22)

பாரவிறன் மரீசிகற்பன் சுதகம ரென்று
பகர்ந்திடுமூ வகையராய் விண்ணோர் யாரு
மோரொருகொத் தொருபதின்மே லிரண்ட தாகி
யும்பருல கினிஸ்வாழ்வர் சவண னெங்கு
சீர்கெழுநற் றுதிமானவ் வியன்றன் னேடும்
வசுமேதா திதிதிறற்சோ திட்டு மான
பேர்புனைசத் தியனென்னு முனிவ ரேழு
பிறங்கொளிசேர் மாதவராய்ப் பெரிது வாழ்வார்
(23)

பழிப்பறுபத் தாமனுவெவ் வுலகும் போற்றும்
    பணிபிரம சாவனனன் மகவா னும
மொழிப்பரிய புகழ்ச்சாந்தி யென்பர் னாளு
    மோங்குசுகர் மனோவிருத்த ரெனவி ரண்டாய்ப்
தழைத்தபுக ழமரரிரு கொத்தாய் நூறு
    பகுதியாய் விண்ணகத்திற் சார்வ ரென்ன
விழைத்தமறை யொருநான்கு மங்க மாறு
    மிதிகாச புராணமுட வியம்பு மன்றே (24)

அறம்புரியும் விடடுமான் சுகிர்தி சத்தி
    * யறைதருமம் பேர்மூர்த்தி ஙரபா கன்சீர்
சிறந்தபுக ழப்பிறிதி மோச னேடுங்
    நீதிறவச் சத்தியகே தென்ன வோதுங்
துறந்ததவக் கிழவரெழு முனிவ ராகத்
    தோன்றிடுவர் பதினொன்று மனுவி னும
மறங்கெழுபேர்த் தருமசா விளிய னென்பர்
    மகவானை விரிடனென வழங்கு வாரால் (25)

தேவர்விகங் கமர்செறிந்த காம கோபர்
    நிர்வாண ருசிகரென மூன்று கொத்தாய்
மேவியொரு கொத்தினுக்கு முப்பா னுகி
    விளங்குவர்நிச் சானொடுமக் கினிதேசன்றுல்
பாவமறும் வபுட்டுமன்விட் டிணிதி வேள்வி
    பயிலுமறை யாருணிங்ல் விட்டு மான்சீர்
தாவில்புக ழனகனெனு முனிவர் தாமே
    தகைபெறுமேழ் முனிவரெனச் சாற்று வாரால்
(26)

பன்னிரண்டா மனுவிசன் புதல்வ னுன
    பழிப்பறுசீர் சாவன்னி மகவா னுமம்
பொன்னுலகு தனியளிக்கு மிருது தாமன்
    புகலமர ரரிதருரோ சிதர்பொற் பார்ந்த

---

* பறைதருமர் பேர்மூர்த்தி (பா. பே.)
† புகலமர ரரிதருரோ கிதர்பொற் லை

மன்றுதமோ விசர்சுகன்மர் சுராப ரென்ன
வைந்துகொத்தாய்ப் பத்துவகை யாகவாழ்ந்து
கன்னல்புளித் திடமொழியு மரம்பை மாதர்
கவரிதழ்கூட் டுண்டிவிதிற் களித்து வாழ்வார் (27)

தாவில்புகழ்த் தவசியொடுஞ் சுத்தன் வெய்ய
தபோமூர்த்தி பொதிநீடு துதிதீ வேள்வி
யோவருஞ்சீர்த் தபோதிருதி தபோத னப்பே
ரூர்வோனே டிங்கிவரேழ் முனிவ ராவார்
மேவுதிறற் பதின்மூன்று மனுவினும
முரோச்சியனு மிந்திரன்பேர் விளங்கக்கூறி
தேவர்புகழ் திவோற்பதியென் றுலக மேழுந்
தெளிந்துமறை பகர்ந்ததென செப்பு மன்றே (28)

விண்ணவர்சுத் திரர்மாவிறற் சுதர்மர் வீங்கு
சுதன்மரென மூன்றுகொத்தாய்ப் பிரிந்து பின்னு
கண்ணுவரோர் முப்பத்து மூன்று பாலாய்
நிருமோகன் தத்துவத்தை நயந்து கண்டோன்
புண்ணியநற் பிரமகம்ப விருச்சு கன்சீர்ப்
பொங்கொளிசேர் நிதிமானவ் வேயன் ஞானங்
கண்ணியிடுஞ் சுதபனெனு முனிவன் விண்ணிற்
கலந்திடுமேழ் முனிவரராய்க் கலந்து வாழ்வார் (2)

பரவுபுகழ் பதினன்கா மனுவி னுமம்
பவுமியனு மிந்திரன்பேர் சுசிவிண் ணோர்கள்
விரவுதிறற் சாக்குடர்நற் பவித்த ரோடு
கனிட்டர்பிரா சிரவாசர் விருத்த ரென்ன
வரைபெறுமோ ரைந்துகொத்தா யுறைவர் நீளக்
கினிவாகுச் சுசியுடன் சுக்கிரனெண் சீர்த்தி
மரகதனுக் கினீத்தாவீ ளுத்த னோடு
வாமுசித னெனவேழு முனிவர் வாழ்வார்(30)

உரைத்திடுமிப் பதினன்கு மனுவும் வியி
னெருபகற்போ தொழிந்திடுமோண் [கமலத்தோற்கவ்
வரைத்தகங்குல் பகற்போல வீரைஞ் ஞூறு
சதுரயுகம் மருவியிடும் வாசு தேவ
னிரைத்தபொறிப் படச்சேடன் வேனில் வேளா
நேமியுடைப் பிரத்துமினன் பிராமி யென்ன
விரைத்துளவோன் சதுரவியூ கராகு மந்த
மெய்ப்பொருளை வியாதனென விளம்பு வாரே (31)

நாற்பத்தேழாவது
மனுவந்தர முரைத்த வத்தியாய முற்றும்
ஆகத்திருவிருத்தம் 2717

---

உ

## நாற்பத்தெட்டாவது
## வியாதர் வரலாறுரைத்த வத்தியாயம்

---

பொருந்திய வைவச் சுதமனு வுலகம்
புரக்குநாள் முதற்றுபா பரத்தில்
வருந்துறு சுவாயம் பூமனு வியாதன்
மற்றைய துவாபரந் தன்னிற்
றிருந்திய வுயர்சீர் பிரசாபதி வியாத ன்
சிறந்தமூன் றுந்துவா பரத்தி
லருந்தவ வுசனும் வியாதனுன் காகுந்
துவாபரத் தந்தணன் வியாதன் (1)

அறைந்திடு மஞ்சாந் துவாபர மதனி
லாதவன் வியாதனு ருகச்
சிறந்தொளி தயங்கத் திகழ்த்துவா பரத்தின்
மிருத்தியு வியாதனே ரேமாய்

